மோகத்தினல் செய்துவரும் பாவத்திரளால் பற்பல வியாதிகள் உண்டாகவே, அவ்வித வியாதிகளைத் தணிக்கும் பொருட்டு ஒரு சாந்தி யாகம் செய்யவேண்டும் என்னும் விஷயத்தை அகஸ்திய முனிவர் வஸிஷ்டர் முதலானவர்களிடம் எடுத்துரைத்தார்.

அகஸ்தியருடைய விருப்பத்தையறிந்துகொண்ட அம் மஹரிஷிகளெல்லோரும் அவ்வித சாந்தி யாகம் செய்வதற்குத் தகுந்த ஸ்தலத்தைத் தேடிக்கொண்டே தென் திசை நோக்கிச் செல்லுகையில் நடுவழியில் எதிரில் வந்த நாரதர் உபதேசப்படியே அம்மஹரிஷிகள் எல்லோரும் புண்யபுரி க்ஷேத்திரத்தையடைந்து தியாகேசரைக் கண்டு துதித்து அசைவற்ற மனநிலைமையை அடைந்தவர்களாய்க் கொண்டு கமலாலயக்கரையில் சிறந்ததொரு யாகவேதிகை ஏற்படுத்தி ஸ்வாஹாதேவியுடன் கூடிய அக்கினிதேவனை அதில் ஆவாஹனம்செய்து முறைப்படி அச்சாந்தி யாகத்தைச் செய்யத் தொடங்கினார்கள். இவ்விஷயத்தையறிந்த ச்ரோத்ரியர்களும் கணக்கற்றவர்களாய்ப் புண்யபுரியில் வந்து கூடினர். வஸிஷ்டர், அகஸ்தியர் முதலான மஹரிஷிகள் செய்யும் யாகத்தின் சிறப்பைக் கண்டும், ஈசனையும் பணிந்து ஆன்மாவுக்கு நற்கதியைப் பெறலாம் என்று எண்ணி எண்திசைப் பூபாலரும் வந்தனர். தியாகேசன் அருளால் அவ்வித சாந்தி யாகமானது எவ்வித இடையூறுமின்றி மூன்றுநாள் வரையில் நடந்தேறுகையில் ஹோமதூமத்தின் பரிமளத்தை முகர்ந்துகொண்டு செல்லும் தேவர்கள் அந்த யாகச் சிறப்பைப் புகழ்ந்து சொல்வதை மாயையினல் ஓரிடத்தில் ஒளிந்து கேட்டுக்கொண்டிருந்த விசாலகர்ணன் என்னும் ராக்ஷஸன் ஒருவன் கடுஞ்சினங்கொண்டு அந்த யாகம் நடக்குமிடத்தைத் தேடலானன்.

வெகு வேகமாய் ஆகாயத்தில் பறந்துகொண்டுவரும் அந்த ராக்ஷஸன் கீழ்நோக்கிய முகத்துடன் பூமி பாகங்களை உற்றுநோக்கி வருகையில் அந்தக் கமலாலயக் கரையையும்

அதில் அநேக மஹரிஷிகளும் பிராமணர்களும் ஒன்று சேர்ந்து வேதகோஷத்துடன் அந்த யாகம் செய்யும் சிறப்பையும் கண்டு மனக்கொதிப்படைந்தவனாய்த் தான் தனது மாயையினால் மூன்று விருஷபமாய்த் தோன்றினன். ராக்ஷஸ மாயையினால் விருஷபமாய்த் தோற்றிய அம் மூன்று எருதுகளும் ஒன்றுக்கொன்று சீறி முட்டிச் சண்டை செய்துகொண்டு அக்கமலாலயக் கரையில் விளங்கும் அம்முனிவர் குழாத்தையழிக்கக்கருதி விரைவாய் ஓடிவந்தன. அவ்விதமாய் அவ்விருஷபங்கள் சீறி எக்காளம் செய்துகொண்டு பாய்ந்துவருகையில் படபடவென்னும் பயங்கரவொலியைச் செவியுற்ற பலர் பயந்தோடித் தியாகேசா என்று அலறினார்கள்.

அத்தகைய தருணத்தில் தயாநிதியாகிய தியாகேசர் அந்த யாகத்தையும், ஜனங்களையும் காப்பாற்றக் கருதி ஒரு வீரபுருஷனாய்த் தோன்றி அவ்வெருதுகளின் முன்னோடி நின்று அவைகளின் துஷ்டத்தன்மையை யடக்கக் கருதித் தனது கையில் ஏந்திச்சென்ற ஒரு முறத்தின் அரிசியை ஒரு விருஷபத்துக்கும், மற்றொரு முறத்திலுள்ள புல்லை மற்றொரு விருஷபத்துக்கும், மற்றொரு முறத்திலுள்ள தீனிப் பொருளை மற்றொரு விருஷபத்துக்குமாகப் பங்கு செய்து தனித்தனியாய் அவைகளுக்கு வைத்தார்.

இவ்விதமாய்த் தியாகராசனாகிய அப்புருஷன் அத் துஷ்ட மிருகங்களை மாய்க்கவெண்ணி உணவையளிக்கை யில் அவ்வெருதுகள் அவைகளைச் செருக்குடன் உட்கொண் டிருக்கையில் வீர புருஷனாகிய தியாகேசர் அவ்வெருதுகளின் கொம்புகளைக் கைகளால் பிடித்துக் கீழே வீழ்த்தினார். அதனால் பொறுக்கமுடியாத துன்பத்தையடைந்த அவ் வெருதுகள் உதிரத்தைக் கக்கிக்கொண்டு மலைபோல் பூமியில் வீழ்ந்து உயிரையிழந்தன. அத்தருணத்திலேயே வீர புருஷனாய்த் தோன்றிய தியாகேசரும் மறைந்து விட்டார்.

இவ்விதமாய் அம்மூன்று விருஷபங்களும் மலைபோல் மாய்ந்து வீழ்ந்ததையும் அங்கு ஒரு வீர புருஷன் தோன்றி மறைந்ததையும் தமது மெய்ஞ்ஞானத்தினால் கண்ட முனி ச்ரேஷ்டர்களெல்லோரும் அவ்விதம் தோன்றி மறைந்தவர் ஸோமசுந்தரபதியாகிய தியாகேசரென்பதை அங்குள்ளவர்களுக்குரைத்து ராக்ஷஸ பயமற்றவர்களாய் மனக்களிப்புடன் எவ்வித குறையுமின்றி அந்த யாகத்தை முடித்து அவப்ருத ஸ்நானம் செய்தார்கள். மஹரிஷிகள் ஸ்நானம் செய்து கரையேறிய பிறகு மற்றவர்கள் அக்கமலப் பொய்கையில் அவப்ருத ஸ்நானம்செய்து மகிழ்ச்சியுடன் ஈசனைத் துதித்து மேன்மை எய்தினர். அதுமுதல் பூவுலகில் துர்வியாதிகள் யாவும் அடங்கின. எல்லோரும் சிறப்புடன் வாழ்ந்துவந்தார்கள்.

## 222 சர்ப்பங்களின் சாபத்தை நீக்கிய லீலை

வியாக்கிரபுரியில் சந்திரபூஷன் என்னும் பெயருடைய ஒரு வேதியர் இருந்தார். அவர் பால்யம்முதல் அதிகாலையில் எழுந்து கர்மானுஷ்டானம் செய்துவருவதையும், வேதம் ஓதிவருவதையும் சத்தியமுறையில் நிலைபெற்று வருவதையும் நெடுநாளாய்ப் பார்த்துக்கொண்டிருந்த ஒரு பாம்பாட்டியானவன் அவ்வேதியரைக் காணும்பொழுதெல்லாம் வணங்கிச் செல்வான். கொடிய வனங்களிலும் மலைகளின் சார்புகளிலும் சென்று தான் சர்ப்பங்களைக் கவர முயலும் தருணத்தில் தனது மந்திரசக்தியானது முறைப்படி பலிக்காவிடில் அவ்வித சமயங்களில் அவ் வேதியரது பாதகமலத்தை மனதில் தியானித்துப் பிறகு மற்றொரு தடவை மந்திரத்தை உச்சரித்துச் சர்ப்பங்களைப் பிடித்து அவைகளுள்ளவிடங்களில் சிதறிக்கிடக்கும் மரகத மணிகளைச் சேகரித்துவருவான்.

இவ்விதமாய் அப்பாம்பாட்டியானவன் அவ்வேதிய ரிடத்திலும் பரமேசனிடத்திலும் மந்திர சாஸ்திரத்திலும் ஒப்பற்ற பக்தியையடைந்து அதனுல் மந்திரசித்தியை யடைந்து நன்நாகமணிகளைச் சேகரித்துவருகையில் ஒரு நாள் அப்பாம்பு பிடிப்போன் காட்டிற்குச்சென்று குழல் ஊதி மந்திரப் பிரயோகம் செய்தான். அதனுல் கவரப் பட்ட மனமுடைய இரண்டு சர்ப்பங்கள் ஒன்றன்பின் ஒன்ருக விரைவாக ஓடிவந்து அம்மந்திரமுள்ள இடத்தை யடைந்து சக்தியையிழந்து காணப்பட்டன. அவ்வித சர்ப்பங்களின் வடிவையும் தோற்றத்தையும் கண்டு வியந்த பாம்பாட்டியானவன் 'இந்நாகங்களிரண்டும் பாதாளத்தில் வசிக்கும் நாகராஜகுமாரர்களோ; பூலோக நாகங்களோ; தெய்வலோக நாகங்களோ; நான் இதுவரையில் இத் தகைய வடிவுள்ள பாம்புகளை எங்கும் கண்டதில்லையே; இவைகள் இப்பொழுது நமது அற்ப மந்திரசக்திக்குக் கட்டுப்பட்டதாய் நிற்கின்றனவே' என்று நெடுநேரம் வரையில் அவைகளை உற்றுநோக்கியிருந்து எவ்வித நிர்ண யத்தையுமடைய சக்தியற்றவனுய் அவைகளை எடுத்துத் தனது பெட்டியில் நுழைத்து அப்பெட்டியை தலையில் வைத்துக்கொண்டு அவ்வேதியரிடம் சென்ருன்.

அவ்வேதியரது பாதத்தில் வணங்கி எழுந்த அப் பாம்பாட்டியானவன் "ஓ அந்தணோத்தமரே! இதுவரை யில் நான் கண்டறியாத லக்ஷணங்கள் நிறைந்த இரண்டு சர்ப்பங்களை நான் இங்கு உமதருகில் கொண்டுவந்திருக் கிறேன். இவைகளில் எது ஆண் ஸர்ப்பமோ! எது பெண் ஸர்ப்பமோ! இவைகளின் அடையாளங்களே என் மனதில் தோற்றவில்லை. என்மீது கருணைசெய்து இவ் வகுப்பை நீரே பகுத்துக் கூறவேண்டும். நெடுநாளாய் உமது பாதமலரில் பக்திசெலுத்திவந்த நான் இன்று உமது ஸந்நிதியில் சரணம் புகுந்தேன்; எனது விருப்பத்தை நிறைவேற்றுவீரென்றுரைத்து நின்ருன். அம்மொழியைக்

கேட்ட அவ்வேதியரும் சற்றுநேரம் வரையில் தீர்க்காலோசனைசெய்து எவ்வித சக்திக்கும் உறைவிடமாய் விளங்கும் தியாகேசனை நாடியே இப்பாம்பாட்டியின் விருப்பத்தை நிறைவேற்றிவைக்க வேண்டுமென்று நினைத்து அவனையும் தன்னுடன் அழைத்துக்கொண்டு திருவாரூர் நகரையடைந்து தியாகேசனது ஸந்நிதானத்தில் பணிந்து துதிசெய்து தனது இருப்பிடம் திரும்பினார்.

கருணாநிதியாகிய தியாகேசர் அன்றிரவில் அவ்வேதியரது கனவில் தோன்றி "முன்பு இரண்டு கந்தர்வர்களாயிருந்தவர்கள் கைலாசத்தில் ஈசனைத் துதித்துத் திரும்பிய துர்வாஸ முனிவரைக்கண்டு பணியாமல் காமத்தினால் மயங்கிக் கிடக்கையில் வெகுண்ட அம்முனிவரது சாபத்தினால் அவ்விரு கந்தர்வர்களுக்கு இவ்வித விசேஷ லக்ஷணங்கள் நிறைந்த பாம்பு உருவம் ஏற்பட்டது. அவ்வித சர்ப்பங்களை எனது முன்னிலையில் விடுவீராகில் அவர்களது சாபமும் நீங்கிவிடும்" என்று கூறி மறைந்தார். கண்விழிப்பையடைந்த அவ்வேதியர் ஈசனது நற்குணங்களைத் துதித்துக்கொண்டே அன்றிரவைக் கழித்து மறுநாட் காலையில் புண்ணிய தீர்த்தத்தில் நீராடி ஈசனது சன்னிதானத்தையடைந்து அப்பாம்பாட்டியின் மூலமாய் அப்பாம்புகளை எதிரில் விட்டார். அவ்வாறு விடப்பட்ட ஸர்ப்பங்களிரண்டும் வெகு விநோதமாய்ச் சற்று நேரம் படம் எடுத்தாடி விலையற்ற நன்மணிகளைக் கக்கிவிட்டுத் தமது அச்சர்ப்பவுடலையுமொழித்துப் பூர்வ கந்தர்வ சரீரத்தையடைந்து ஈசனைப் பிரதக்ஷிணம் செய்துவிட்டு விமானமேறி அளகாபுரியை நோக்கிச் சென்றனர். அத்தருணத்தில் அவ்விடத்தில் துர்வாஸமுனிவரும் வந்து தோன்றினார். துர்வாஸமுனிவர் சங்கிரபூஷன் முதலானவர்கள் அச்சர்ப்பங்களினால் உமிழப்பட்ட நன்மணிகளை ஈசனது திருமார்புக்கழகாக அணிவித்து சிறந்த காவிரி ஆற்றின் தீர்த்தத்தினால் அபிஷேகமும் செய்துவைத்துத் தியாகேசனைப் பலவாறு துதித்தார்கள்.

## 223. மணலினுல் கயிறு செய்வித்த லீலை.

கோகர்ண க்ஷேத்திரத்தில் சிவயோகீசர் என்ற யோகி ஒருவர் இருந்தார். அவர் குருவினிடத்தில் சாஸ்திரப் பயிற்சி செய்கையில் ஸம்ஸாரத்தில் உண்டாகக்கூடிய பற்பல துன்பங்களின் இயற்கையை அறிந்துகொண்ட படியால் இவ்வுலக வாழ்க்கையை யிகழ்ந்து வானோர்க்கமுதென விளங்கும் ஈசுவரனது பக்தியையடைந்து அங்கங்கு விளங்கும் புண்ணிய நதிகளிலும், புண்ணிய க்ஷேத்திரங் களிலும் சென்று தங்கியிருந்து ஈசுவரத் தியானம் செய்து யோகத்திலமர்ந்திருப்பார். அப்படிப்பட்ட சுத்த மன முடைய சிவயோகியானவர் ஒருநாள் தக்ஷிண தேசத்தில் விளங்கும் மகாலிங்கமூர்த்திகளின் தரிசனத்தை விரும்பிக் காடக வனத்தை அடைந்தார்.

அவ்வனத்தில் விளங்கும் யமதீர்த்தம், அக்னிதீர்த்தம் ஈசானதீர்த்தம், பார்வதிதீர்த்தம் முதலான புண்ணிய தீர்த்தங்களின் கரையில் வீற்றிருந்து ஸ்தலயோகம் செய்து முடித்த பிறகு திருக்காளத்தி க்ஷேத்திரத்தையடைந்தார். அங்கு விளங்கும் ஈசனைப் பணிந்து துதிசெய்து காஞ்சீ நகரை யடைந்தார். அந் நகரிலிருந்து சோணசைலத்தைக் நோக்கிச் செல்லுகையில் அவர்செல்லும் வழியில் ஓர் ஆகாயவாணி உண்டாயிற்று. அவ்வித ஆகாயவாணி யினுல் இழுக்கப்பட்ட மனமுடையவராய் விரைவாய்ப் பாடலி வனத்தையடையும்பொழுது அங்கு அநேக தொண் டர்கள் அவ்வனத்தின் அருகில் நின்றுகொண்டு அங்குப் பாடலி மரத்தின் அடியில் விளங்கும் லிங்கேசமூர்த்தியைக் கண்டு களிப்பையும், அவ்விடத்திலிருக்கும் துஷ்ட மிருகத் தைக் கண்டு பயத்தையும் அடைந்து துயரப்படுவதை அறிந்துகொண்டார்.

இவ்விதமாய் அங்குள்ள தொண்டர்கள் லிங்கமூர்த்தி யின் தர்சனத்தினுல் களிப்பையும் துஷ்டமிருகத்தின் சேர்க்

கையினால் துக்கத்தையுமடைந்து வாடுகையில் அவர்களது அருகில் விரைவாய்ச் சென்ற சிவயோகியானவர் தனது சென்னியில் அஞ்சலி செய்துகொண்டே அங்குள்ள லிங்க மூர்த்தியின் தோற்றுதலை அறிந்துகொண்டபடியால் அப் பாடலீ மரத்தினருகில் நெருங்கி அவர்களது மனக்கருத்தையு மறிந்துகொண்டு அத்துஷ்ட மிருகத்தை வெளிப்படுத்த பலவித முயற்சி செய்யலானார். மகாராஜனது கட்டளையி னால் பல யுத்த வீரர்களாலும் அந்தத் துஷ்ட சிங்கமானது வெளிப்படுத்தவும் முடியாமல் வதைக்கவும் முடியாமல் கேட்போர்மனம் துடிக்குமாறு சிங்கநாதம் செய்துகொண்டு ஜனங்களுக்கு மிகவும் பயத்தையளித்து வந்தது. அத்தரு ணத்தில் கருணாநிதியாகிய தியாகேசர் அங்கு ஒரு வேட்டை யாடும் வில்லிபோல் தோன்றி அச்சிவயோகியின் அருகில் வந்து "ஓ சிவயோகியே! தொண்டர்களே! நீங்கள் இச் சிங்கத்தைக்கண்டு பயமடைய வேண்டாம். இவ்விடத்தில் விளங்கும் சோதிர் லிங்கமூர்த்தியின் கருணையினால் உங்களுக்கு நன்மையே உண்டாகும். மணலினால் கயிறு செய்யக்கூடியதாய் அப்படிப்பட்ட சத்தியம், அப்படிப் பட்ட பரமேசுவரபக்தி, அப்படிப்பட்ட தூயமனது யாருக்குஉளதோ, அவர்கள் மணலால் கயிறு செய்தளிப்பீ ராகில் அவ்வித கயிற்றைக் கழுத்தில் சுற்றி இச்சிங்கத்தை வதைக்கலாமேயொழிய மற்றெவ்வித முயற்சிகளும் பயன் படாதென்று வெகுநாளாய்ப் பூர்வதவத்தினர் சொல்லக் கேட்டிருக்கிறேன்" என்றுரைத்தார்.

இவ்விதமாய் அவ்வேடனுரைத்ததைச் செவியிற் கொண்டதொண்டர்கள் பெரும்பாலும் வெட்கிநின்றார்கள். சிலர் எமக்கு அவ்வித மனத்தூய்மை ஏது என்று திகைத் தார்கள். இவ்விதமாய் அங்குள்ள சிவபக்தர்களனைவரும் மனக்கலக்கத்தையடைந்து வாடுகையில் கோகர்ணக்ஷேத்திர வாசியாகிய அச்சிவயோகியானவர் ஈசனை மனதில் தியானித்துக் கொண்டு மணலால் கயிறு செய்ய முயற்சி

செய்கிறேன். ஈச! நீரே இக்காரியத்தை நிறைவேற்றி வைக்கவேண்டும். நான் புண்ணிய ஸ்தலங்களில் உமது பாதமலரைக் குறித்தே தியானம் செய்தது சத்தியமாகில் இக்காரியம் நிறைவேறவேண்டும். லோகநாதா! நீர் இத தருணத்தில் எனது மனவிருப்பத்தை நிறைவேற்றுவிடில் நான் உயிரைமாய்த்தே விடுவேன் என்று இவ்வாறு மனதில் நினைத்துக்கொண்டு ஆசமனம் செய்து பிராணுயாமத்தை யும் நிறைவேற்றி பரமேசனுடைய பஞ்சாக்ஷரமந்திரத்தை உச்சரித்துக்கொண்டே தனது இருகைகளாலும் அங்குள்ள மணலை வாரி எடுத்துத் தனது வலது துடையின் மீது வைத்துக் கயிறு திரிக்கத்தொடங்கினுர். அத்தருணத்தில் அவரது சத்தியத்தின் சிறப்பினுலும், தியாகேசனது கருணை யினுலும் அம்மணலும் கயிறுபோல் நீண்டன. அதைக் கண்டு சகல ஜனங்களும் ஆனந்தக்கண்ணீருடன் நின்று கொண்டிருக்கையில் அச்சிவயோகியிடமிருந்து அம்மணற் கயிற்றைப்பற்றி அவ்வேடன் அக்கயிற்றிஞல் அச் சிங்கத்தையிழுத்துப் பூமியில்தள்ளி வைத்த பிறகு திடீ ரென்று மறைந்து விட்டான்.

வேடன்போல் தோன்றி மணலினுல் கயிறு செய்து வைத்து அதனுல் அச்சிங்கத்தை வதைத்துத் திடீரென்று மறைந்துசென்ற அற்புதத்தைப் பார்த்திருந்த சகல தொண்டரும் இவ்வற்புதலீலை தியாகராஜனுடையதே என்று நிச்சயித்து இனி செய்யவேண்டிய காரியங்களை அறியும்பொருட்டுத் தியாகேசனைப் போற்றித் துதிக்கையில் ஓர் ஆகாயவாணியின் மூலமாய் மேற்கொண்டு செய்ய வேண்டிய காரியங்களையறிந்து மனக்களிப்பையடைந்த சகல தொண்டர்களும் அச்சிவயோகியின் மூலமாய் அப் பாடலீச்சுவர லிங்கத்தை அங்குப் பிரதிஷ்டை செய்து வைத்து முக்காலத்திலும் பணிந்து பூசித்து நன்மை எய்தினர். மணற் கயிற்றினுலிழுக்கப்பட்ட சிங்கமானது உயிரை நீத்தபிறகு முன் ஜன்மத்தில் பார்வதிதேவியி னிடத்தில் பரிகாசம் செய்த நாகதேவனே மறுபடியும்

ஜன்மத்தையடைந்து அப்பாடலீவன லிங்கத்தையும் தியாகராஜனையும் தர்சித்துச் சிறப்புடன் தனுலகு அடைந்தான்.



## 224. பத்மராகத்தின் நிலைமையுரைத்த லீலை.

புண்யபுரவாசிகள் அனைவரும் முக்காலத்திலும் தியாகராஜனின் கருணையினால் சிறப்புடன் வாழ்ந்து வருகையில் அப்புண்ணியபுரத்தில் இருக்கும் கமலாலயத்தின் ஜலமானது ஒருநாள் ஓரிடத்தில் மருதாணி ரஸம்போல் சிவப்பாயும், மற்றோரிடத்தில் முத்துக்காந்திபோல் வெண்மையாயும், மற்றோரிடத்தில் மயிலின் கழுத்துப்போல் நீலமாயும், இவ்வண்ணம் பலவித காந்தியுடையதாய்த் தோற்றக்கண்டு அத்திருவாரூரில் உள்ள ஜனங்கள் யாவரும் ஒன்றுகூடி இஃதென்ன ஆச்சரியமென்று சிலர் நினைத்தனர். சிலர் நற்சகுணகுறியோ என்றையப்பட்டனர். சிலர் அபசகுனக்குறியோ என்று மனக் குழப்பத்தையடைந்தனர்.

இவ்விதமாய் அந்நகரிலுள்ள ஜனங்கள் எல்லோரும் கமலாலயத் தீர்த்தத்தின் தோற்றத்தைக் கண்டு பயந்து உலகிலுள்ள சகல ஜீவராசிகளுக்கும் நன்மை உண்டாகும்படி அருள் புரிவீரென்று ஒன்று சேர்ந்து ஈசனது சன்னிதானத்தில் தியாகேசனது திவ்விய சக்திகளைத் துதித்து நிற்கையில் ஓர் ஆகாயவாணி உண்டாயிற்று. “கேளீர் பக்தர்களே! வேதக்கொழுந்தென விளங்கும் தியாகேசர் உலகிலுள்ள துஷ்டர்களையும், மாயாவிகளையும் வஞ்சகர்களையும் மாய்த்துக்கொண்டு வரவே அதனால் பாரம் குறைந்த ஆதிசேஷனென்னும் நாகராஜன் தியாகேசனைத் தர்சிப்பதற்காக சிராவண பஞ்சமியிலிங்கு வரப்போகிறான். ஆதலால் அந்நாகராஜனுடைய அந்தப்புர மாதர்களும் மற்றுமுள்ளவர்களும் தமது கைகளில் ஏந்துவரும் பத்மராஜ ரத்தனங்களின் காந்தியினால் கமலாலய ஜலமானது

இவ்வாறு பற்பல நிறத்தை அடைந்திருக்கிறது. இக் கமலாலய ஜலத்தின் வழியாகவே நாகலோகத்திலிருந்து நாகராஜனும் நாககன்னியரும் அளவற்ற நவரத்தினங்களைக் கையில் ஏந்திக்கொண்டு சீக்கிரமாய் இவ்விடம் வரப் போகிறார்கள். அவர்களுடன் சேர்ந்து நீங்களும் ஈசனைப் பணிவீர்கள் '' என்றது.

இவ்விதமாய் அப்புண்ணியபுரவாசிகள் அனைவரும் அசரீரியைக்கேட்டு மனக்களிப்புடன் நாகராஜனது வரவை எதிர்நோக்கியிருக்கையில் அக்கமலாலய ஜலத்திலிருந்து அநேக நாககன்னியர் புடைசூழ நாகராஜன் கிளம்பி வெளி வந்து தியாகேசனது பொற்கோயிலைப் பிரதக்ஷிணம் செய்து எதிர் நின்று பணிந்து விலையற்றதாயும் இரவிச்சுடர்போல் காந்திகளை வீசும் பத்மராகம் முதலிய நவரத்தினங்களைத் தியாகேசனது திருவடியில் காணிக்கை மலரென அளித்து ஆனந்தக் கூத்தாடி எதிர் நின்று துஷ்ட வசுரர் கணத்தையும் ராக்ஷஸர்களையும் அழித்து எனது பாரத்தை நீக்கி என்னையாண்ட பரஞ்சுடரே! பூலோக பாக்கியமே! தேவர்களின் விளக்கொளியே! என்று இவ்வண்ணம் போற்றுகையில் ஆகாயத்திலிருந்து மலர்மாரியுண்டா யிற்று. தேவதுந்துபி வாத்தியவொலியும் அவர்கள் காதில் அமுதைப் பெருக்கியதுபோல் இருந்தது. இவ்விதமாய் நாகலோகத்தாரும், பூலோகத்தாரும் ஓரே காலத்தில் பேதமின்றித் தியாகராஜனது அருள்பெற்றுப் பரமானந்த மடைந்து தமது இருப்பிடம் சென்று வாழ்ந்திருந்தார்கள்.



## 225. தம்பதிகளின் சேர்க்கை வழக்கை வெளியிட்ட லீலை

வீரகேதுவென்னும் சோழ மகீபாலன் அரசாட்சி செய்துவருகையில் ஒருநாள் அவனது கொலுமண்டபத்தின் எதிரில் ஒரு பிராமண தம்பதிகள் வருவதைக் கண்டான்.

அங்குள்ளவர்களால் ஜாதிமுறைக்குத் தக்கவாறு உபசரிக்கப்பெற்ற அவ்வந்தண தம்பதிகள் அச்சோழ பூபாலனுக்கும், மந்திரிப் பிரதானிகளுக்கும் ஆசி கூறியபிறகு ஓ மகாராஜனே! நாங்கள் மலைநாட்டு வேதியருள் ஒரு குடும்பத்தினர். நாங்கள் பூர்வசன்ம புண்ணியத்தின் பயனால் இப்பிறவியில் ஈசுவர பக்தியைப் பெற்றிருக்கிறோம். ஆகிலும் எங்கள் இருவருடைய மனம் ஒருவர்மீது ஒருவர் கோபத்தையடைகிறது. எவ்வித காரணமும் இல்லாமல் நாங்கள் இருவரும் தினந்தோறும் அடிக்கடி சண்டை செய்துகொள்கிறோம். அக்கலகத்தினால் ஒருவரை ஒருவர் நிந்தித்துக்கொள்கிறோம். இதனால் எங்களுக்குக் கிடைத்திருக்கும் செல்வத்தை முறைப்படி அனுபவிக்கமுடியாமல் போகிறது. இதன் காரணததைத் தாங்கள் உணரவேண்டுமென்று சொன்னார்கள்.

இவ்விதமாய் அந்தப் பிராமண தம்பதிகள் கூறிய மொழிகளைக் கேட்ட சோழ பூபாலன் மந்திரிமாருடன் சற்றுநேரம் யோசித்த பிறகு ஓ பிராமண தம்பதிகளே! உங்களுடைய இந்த வழக்கை என்னால் தீர்க்கமுடியாது போல் தோன்றுகிறது. ஆனால் நீங்கள் இருவரும் இந்நகரில் விளங்கும் புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்துகொண்டு தியாகராஜனைத் துதிசெய்து வருவீர்களாகில் உங்களுடைய இவ்வித நிலைமைக்குக் காரணம் விளங்கக்கூடும் என்று சொன்னான். பூபாலனால் இவ்வண்ணம் உரைக்கப்பட்டதையறிந்துகொண்ட அவ்விரு தம்பதிகளும் புண்ணிய நதியில் நீராடி முக்காலத்திலும் ஈசனைத் தொழுது துதிசெய்துவருகையில் ஒருநாள் தியாகேசர் அவர்கள்மீது கருணைசெய்து ஆகாயவாணியினால் உரைத்தார்.

"ஓ தம்பதிகளே! நீங்கள் முன் சன்மத்தில் செய்த பாவத்தினால் இப்பிறவியில் இவ்வண்ணம் மன ஒற்றுமையையடையாமல் ஒருவர்மீது ஒருவர் சினம் கொண்டு அலைந்து வாடுகிறீர்கள். ஆகிலும் இன்னும் ஒரு

வருஷகாலம் வரையில் இக்குளத்தில் நீராடிவருவீர்களாகில் ஒற்றுமையுண்டாகும்'' என்று உரைத்தார். இவ்விதமாய் அவ்வசரீரியைக் கேட்ட அவ்வந்தண தம்பதிகள் அவ்வாறே மனவொற்றுமையடைந்து வானவர், தெய்வம் என விளங்கும் தியாகராஜனது பாதகமலத்தில் பக்தியைப் பெற்று மகிழ்ந்து வாழ்ந்தார்கள். நன்மனமில்லாமல் தர்மம் செய்தவர்களும், பிறரது தாக்ஷிணியத்துக்காக நற்காரியம் செய்தவர்களும், கமலாலயத்தில் ஸ்நானம் செய்வாராகில் அவர்கள் நற்பயனையடைவார்கள். அவர்களது பாவங்களும் தணியும் பொய்யுரைத்தவர்களும், சுவர்ணபஹாரம் செய்தவர்களும் ஈசனையும் ஈசுவர பக்தர்களையும் பழித்தவர்களும், ஜாதித் தொழிலை விட்டவர்களும், சத்தியத்தை மீறியவர்களும், துரோகம் செய்தவர்களும் கமலாலயத்தில் நீராடித் தியாகேசனைப் பணிவாராகில் அவர்கள் சகல பாவத்தையும் தள்ளி நற்பதமடைவார்கள். குஷ்டரோகிகளும், அங்கஹீனர்களும், மகாபாதகமுடையவர்களும், தேசத்திலிருந்து விலகியவர்களும், ஜாதியிலிருந்து விலகியவர்களும், கமலாலயத்தில் நீராடித் தியாகேசனைத் தொழுவாராகில் அவர்கள் மனவிருப்பம் நிறைவேறும்; நற்பதவியுண்டாகும்; பாவம் தணியும்; சந்தானமற்றவர்களும் அனுகூலமில்லாத கணவனைப்படைத்த மாதர்களும், ஏழ்மையினால் வாடும் மாதர்களும் கமலாலயத்தில் நீராடித் தியாகேசனைத் தொழுவாராகில் அவர்களது மனோரதம் நிறைவேறும். மன்னவர் நல்வாழ்வெய்தி நற்பதவியில் விளங்குவார்கள்.

## 226. யானை சிங்கங்களுக்கு விசுவாசமளித்த லீலை

சமயத்தில் கலியின் ஆவேசத்தினால் உலகில் விளங்கிய தர்மத்திற்குத் தாழ்வு நேரிட்டது. ஜனங்களும் வைராக்கியத்தைக் கொஞ்சம் கொஞ்சமாய்க் கைவிட்டுப் பொருளாசையினால் இழுக்கப்பட்ட மனமுடையவர்களாய்

கர்மானுஷ்டானங்களையும் ஈசுவர பக்தியையும் இழந்து பாவத்திரளைத் தேடிவந்தனர். இவ்வித காரணத்தினால் மகரிஷிகள் தர்மங்குறைந்த தேசத்தில் தோற்றவேயில்லை, வருணனும் மழை பொழியவில்லை. வியாதிகளும், பீடைகளும் உலகெங்கும் பரவத்தொடங்கின. ஜனங்கள் எல்லோரும் நற்சாந்தியையிழந்து மனச்சோர்வுடன் தோன்றினார்கள்.

இவ்விதமான உலகத்தோற்றத்தையுற்று நோக்கிய விசாலாக்ஷ மகாராஜன் தக்ஷிண கங்கையென விளங்கும் காவிரி சூழ்ந்த தனது தேசத்தில் மகரிஷிகள் தோற்றாமைக்குக் காரணம் அதர்மமேயென்று ஆலோசனை செய்து அதுமுதல் சகல ஜனங்களும் முக்கரணங்களினாலும் முக்காலத்திலும் மாயையை வென்று தர்மப்பதவியில் அமர்ந்து ஈசுவரபக்தியுடன் விளங்கவேண்டுமென்று நாடெங்கும் பறைபறிவித்துத் தானும் அவ்வண்ணமே தமது திரவியங்களை நற்காரியத்தில் செலவிடலானான். ஒவ்வொரு புண்ய க்ஷேத்திரத்திலும் விளங்கும் மூர்த்திகளுக்கு நித்யாபிஷேகத்தையும், நைமித்திகாபிஷேகத்தையும் செய்து வைத்தான். வேதம் வல்ல வேதியர்களின் முகத்திலிருந்து வேதார்த்தங்களையும், புராண படனங்களையும் வெளியிட்டான். லக்ஷணக்கணக்கான வேதியர்களுக்கு அமுதளிக்கலானான். மாலை நேரங்களில் ஈசனது முன்னிலையில் எரிப்பதற்காகத் தீபதானங்களைச்செய்தான்.

இவ்விதமாய் அந்த விசாலாக்ஷ மகாராஜன் தர்மத்தை நிலைநாட்டி வருவதைக் கண்ட ஜனங்களும் தாமும் அவ்வாறே தர்மவழியில் நிலைபெற்று எவ்வித பாவகாரியங்களையும் மனதினாலும் சிந்திக்காமல் தயை, தர்மசிந்தை, ஈசுவரபக்தி, ஜபநியமம் முதலியவைகளை அணியெனப் பூண்டு விளங்கினார்கள். இவ்விதமாய் பன்னிரண்டு வருஷ காலங்கள் சென்ற போதிலும் அப்புண்ணியபுரத்துக்குள் முன்போல் மகரிஷிகள் தோற்றவில்லை. அதனால் மனச்

சோர்வையடைந்த பூபாலன் தியாகேசன் எதிரில் கொண்டு பலவாறு துதிசெய்து நிற்கையில் அப்பூபாலனது பக்தியைக் கண்டு களித்த தியாகராஜர் ஒரு ஆகாய வாணியை ஏவினார். அதைக்கேட்ட அச்சோழன் மனக் களிப்பையடைந்து அவ்வசரீரி வாக்குப்போலவே சமீபமாய் உள்ள காட்டில் வேட்டையாடக்கருதி வனத்துக்குச் சென்றான். சோழன் அவ்வண்ணம் செல்லும் ஜனங்களின் மூலமாய்த் தனது நற்கீர்த்தியைக் கேட்டுக்கொண்டு செல்லுகையில் ஓரிடத்தில் யானையும் சிங்கமும் சிநேகத் துடன் விளையாடிக்கொண்டிருப்பதைக்கண்டு வியப்புடன் சென்றான். மற்றோரிடத்தில் புலியும் பசுவும் ஒரு துறையில் நீர்குடிக்கக் கண்டான். இவ்வண்ணமாய் அங்குள்ள ஜீவராசிகள் தமது இயற்கைப் பகையை முற்றிலும் ஒழித்துவிட்டு நட்பையடைந்து விளங்கும் காட்சியைக்கண்டு வியப்புடன் சற்று நேரம் வேட்டை யாடித் தனது நகரத்துக்குத் திருப்புகையில் செல்வத் திருவாரூரில் முன்போலவே காசிபர், காத்தியாயனர், பதஞ்சலி, அகஸ்தியர், வசிஷ்டர், துர்வாசர், வியாசர் முதலிய மகரிஷிகள் தமது பாதபங்கயங்களால் வீதிகளைப் பரிசுத்தி செய்து கொண்டு தேவாலயத்தையும் புண்ய தீர்த்தக்கரையையும் அடைவதைக் கண்டான்.

தானும் தமது நாட்டு ஜனங்களும் பன்னிரண்டு வருஷ காலம் செய்துவந்த நற்காரியங்களின் சிறப்பினாலும் ஒப்பற்ற தியாகராஜனது கருணையினாலும் அச்சோழ நாற்றில் தர்மக்கொடி தழைத்தோங்கியும், ஈசுவர பக்தியும், மனத்தூய்மையும் பரவி விளங்குவதற்கு அடையாளமாய்த் தோற்றிய மகரிஷிகளை அம்மன்னவன் பணிந்தான். அவர் களும் அம்மன்னவனுக்கும் தேசத்தோருக்கும் ஆசிகூறி நெடுநாள் வரையிற் அந்நாட்டில் சத்தியப்பதவியை நிலை நாட்டினர். இவ்விதமாய் நடந்த சகல சம்பவங்களுக்கும் தேவர்கள் முதல்வனான தியாகராஜனது ஸன்னிதானத்தின் சிறப்பே என்றுலகு ஏத்தவும், வானவர்களெல்லோரும்,

வேதியர்களின் யாகஹவிரர்ப்பாகங்களைப் பெற்று மகிழ் வெய்தவும், வருணன் காலமழை பொழியவும், ஆதியுக மெனவே அம்மண்டலவாசிகள் ஈசுவர தரிசனத்தைப் பெற்று விளங்கினர்கள்.

## 227. தனவானுக்கும் மதியுடைவனுக்கும் அருள்செய்த லீலை

காடிகாபுரியில் விசாகன் என்று பெயருள்ள தனிகன் ஒருவன் இருந்தான். அவன் ஜாதியினல் வைசியனுக இருந்தபோதிலும் சிற்சில புண்ணிய வசத்தினல் குபேர னுக்கு நிகரான அளவற்ற செல்வத்தையடைந்திருந்தான். ஆகிலும் அவ்வைசியன் அச்செல்வங்களை நல்வழியில் செலுத்துகிறதில்லை. தாசிகளுக்கும், பொய்யாகத் துதி செய்பவருக்கும், சூதாட்டக்காரர்களுக்கும், இந்திரஜால வித்தைக்காரர்களுக்கும், விடர்களுக்கும் அவ்வைசியன் தனது செல்வத்தையளித்துவந்தானேயொழிய தானம் செய்தல், அன்னமளித்தல், ஈசுவரனது பணி செய்து வைத்தல் முதலிய நற்பதவிகளையே அவன் முற்றும் மறந்திருந்தான்.

மோகத்தினல் கவரப்பட்ட மனமுடைய அத்தனிக வைசியனவ்வாறு துர்மார்க்கங்களிலேயே இறங்கியிருக்கை யில் அக்காடிகாபுரியில் பாரத்வாஜ கோத்திரத்தில் உதித்த ஒரு வேதியர் தன்னிடத்திலுள்ள பொருளையெல்லாம் பற்பல தர்ம வழிகளில் அளித்துப் போதாதற்காக நன் மனமுடையவர் மாளிகையில் சென்று தானியம், தண்டுலம், திரவியம் முதலானவைகளை யாசனை செய்து பிராமணர்களுக்கும், வித்தையில் விருப்பமுள்ளவர்களுக் கும், அன்னமளித்தும், கல்வி தானம் செய்தும், அக் காடிகாபுரியில் விளங்கும் வாயுலிங்கமூர்த்தியின்

தேவாலயத்தை ஜீர்ணோத்தாரணம் செய்தும், திருவிழாக் காலங்களில் வந்துகூடும் ஈசுவர பக்தர்களுக்கன்னமளித்தும் வாழ்ந்து வந்தார். இவ்விதமாய் ஏழையாகிய அந்தண உத்தமர் யாசகப்பொருளினால் தர்மத்தைச்செய்துவரும் சிறப்பைப்பற்றியும், அத்தனிகன் அதர்ம வழிகளில் திரவியத்தையழித்துவரும் இகழ்ச்சியைப்பற்றியும் பேசிக் கொண்டிருக்கும் ஜனங்களின் வேண்டுகோளுக்கு இரங்கிய மனமுடைய தியாகேசர் அந்தணருக்குச் செல்வமளிக்க வேண்டுமென்றும், அவ்வைசியனுக்கு நற்புத்தியளிக்க வேண்டுமென்றும் சங்கல்பம் செய்தார்.

மறுநாட்காலையில் ஈசனுடைய சங்கல்பத்துக்குத் தக்கவாறு ஒரு சிவயோகியானவர் அக்கடிகா நகரத்துக்கு வந்து வாயுலிங்கமூர்த்தியைத் தர்சித்த பிறகு அவ்வைசியனது நடவடிக்கைகளையறிந்துகொண்டு அவன் அருகில் சென்று ஓ தனபதியே! நீ இதுவரையில் கண்டறியாத விலைமாதர்கள் செல்வத் திருவாரூரிலிருக்கிறார்கள். அம் மாதர்களது போகத்தை விரும்புகிறவர்கள் முதலில் அங்குள்ள கமலாலயத்தில் ஸ்நானம்செய்து தியாகேசனைப் பணிந்தபிறகே அவர்களையணுகவேண்டும். இவ்விஷயத்தை நீயறிவாயா? என்றுரைத்துச் சென்றார். இவ்விதமாய் அச்சிவயோகியினால் சொல்லக்கேட்ட அவ்வைசியன் அத் திருவாரூரிலிருக்கும் விலைமாதரின்மேல் ஆசைகொண்டு அளவற்ற திரவியங்களுடன் விரைவாய் புண்ணியபுரியை அடைந்தான்.

புண்ணியபுரியையடைந்த அவ்வைசியன் அச்சிவயோகி கூறியவாறே முதலில் கமலையில் ஸ்நானம்செய்தான். அவ்வாறு அப்புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானம்செய்த பலத்தினால் அவனது மனதுக்குக் கொஞ்சம் தெளிவு உண்டாயிற்று. பிறகு விரைவாய் அவ்வைசியன் தியாகராஜனது சன்னிதானத்தையடைந்து திவ்ய திருமேனியின் அழகைக் கண்டு உளமுருகிக் கண்ணீர் சொரிந்து பணிந்து வலம்

செய்து துதிசெய்து விலைமாதரின் யோகசிந்தையை முற்றிலும் மறந்தான். அதுமுதல் அவ்வீசனது வடிவழகுக்கு விரும்பிச் சிலகாலம் அங்கு நிலைபெற்று ஈசனைத் துதிக்கலானான். இவ்விதமாய் திருந்திய மனமுடைய அவ்வைசியன் தான் கொண்டுவந்த திரவியங்களை முற்றிலும் அவ்வூரிலிருக்கும் வேதியர்களுக்கும் மற்றுமுள்ள சற்பாத்திரர்களுக்கும் தானஞ்செய்ய முயலுகையில் அக்கடிகாபுரிவாசியாகிய அந்தணரும் அப்பொழுது அங்கு வந்துசேர்ந்தார். நெடுநாளாய் அவ்வேதியர் செய்துவரும் தர்மகாரியங்களை அறிந்துகொண்ட அவ்வைசியன் அப்பொழுது அவ்வேதியருக்கு ஒருபாகத் திரவியத்தைத் தானம் செய்தும் மனக்களிப்பையடைந்து ஒரு வருஷகாலம் வரையில் அத்திருவாரூரிலேயே வாசம் செய்யலானான்.

நெடுநாளாய் கெட்டபுத்தியையடைந்த அவ்வைசியன் இவ்வாறு புண்ணியதீர்த்த ஸ்நான பலத்தினாலும், புண்ணியபுர நாதனது தர்சன பலத்தினாலும் மாற்றப்பட்ட மனமுடையவனாய்க் கொண்டு சகலபாவங்களையும் நீக்கிச் சற்பாத்திரத்தில் தானம் செய்து தியாகராஜ பக்தியையே பணியாகப்பூண்டு அளவற்ற தனது திரவியத்தினால் மகா தானங்களையும், தியாகேசனுக்குத் திவ்வியாபரணங்களையும், சிறந்த திருவிழாக்களையும் செய்துவைத்துத் தனது குடும்பத்தாருடனே ஈசனது தரிசனத்தையும் அருளையும் பெற்று சற்புத்திரனையடைந்து சிறப்புடன் வாழலானான். தியாகேசர் இவ்விதமாய் அத்தனிகவைசியனது புத்தியை நல்வழியில் திருப்பியும், ஏழையாயுள்ள அவ்வேதியருக்குத் தானமூலமாய்ச் செல்வத்தையளித்தும் அவ்விருவர்கள் மூலமாய் உலகில் தர்மத்தை நிலைநாட்டி ஜனங்களை ரக்ஷித்து நற்பதவியளித்து விளங்கினார்.

## 228. தூஷித்தவனையழித்த லீலை.

நாகபுரியில் மகேச்சுவரதாசர் என்னும் வேதியர் ஒருவர் சிவத்தியான நிஷ்டராயும், சிவதத்துவோபதேசராயும் விளங்கிவருகையில் பூர்வஜன்ம பாவத்திரளால் துஷ்டன் என்றுலகோர்பழிக்கும் வைசியன் ஒருவன் புலியூரில் நடனம் செய்யும் ஈசனையும், ஈசுவரபக்தர்களையும் தூஷித்துக்கொண்டிருந்தான். ஒருநாள் அம்மகேச்சுவரதாசர் அம்பலத்தில் நடனம்புரியும் ஈசனது தரிசனத்தைப் பெறவேணுமென்று திருவாரூர்மார்க்கமாய்ச் செல்லுகையில் தியாகேசனருளால் ஏற்பட்ட ஆகாயவாணியினால் அத்தில்லைப்பதியில் தனக்கு ஏதோ ஓர்வித மனக்குறை நேரிடுமென்றறிந்துகொண்டு தியாகேச! அவ்வாறு எனக்கு நேரிடும் இடரைக்களைவாய் என்று ஈசனைச் சிந்தித்துக் கொண்டே தில்லைப்பதியை அடைந்தார்.

அவ்விதமாய் அந்த மகேச்சுவரதாசர் தியாகராஜ சிந்தனையுடனே தில்லைப்பதியை யடைந்து நடனபதியைக் கண்டு பணிந்து துதிசெய்து ஆன்மாவுக்குரிய பயனை அடைந்து திரும்புகையில் அத்துஷ்ட வைசியனானவன் எதிரில் வந்து ஓ அந்தணரே! நீர் இவ்வூரில் நடனம் பயிலும் ஈசனைத் தரிசித்தீரே! எவ்வித பயனையடைந்தீர்? என்று துடங்கிப் பலவாறு நடனமூர்த்தியையும் அத்தொண்டரையும் பழித்துப் பேசினான். அந்தத் தத்துவோபதேசியானவர் அத்துஷ்ட வைசியனுக்குப் பல தத்துவங்களையும், ஈசனது மகிமைகளையும் நிதர்சனங்களையும் ஆகமபுராணோபாக்கியானங்களையும் எடுத்துச் சொன்னபோதிலும் அவ்வித உபதேசங்கள் அவனிடத்தில் பயனை யுண்டு பண்ணவில்லை. அதனாலும் அவன் ஈசனைப் பழித்தபடியாலும், தன்னையும் ஈசுவர பக்தர்களையும் நிந்தனை செய்தபடியாலும் அவ்வேதியரானவர் ஆகாயவாணி கூறியது போலவே மனக்கொதிப்பையடைந்து மறுமொழி கூறாமல் தியாகேசனையே மனதில் சிந்தனை செய்துகொண்டு

புண்ணியபுரியையடைந்து கமலையில் நீராடி ஜபம்செய்து ஈசனைப்பணிந்து துதிசெய்து அத்துஷ்டனுடைய துர்க்குணத்தை மாற்றுதலுமக்கரிதோவென்று அஞ்சலிசெய்து நின்றார்.

இவ்விதமாய் அம்மஹேச்வரதாஸருடைய வேண்டுகோளுக்கிரங்கிய தியாகேசர் அந்த துஷ்ட வைசியனது துர்க்குணத்தை மாற்றி நல்வழியில் சேர்ப்பிக்கக் கருதியவராய்த் தான் ஒரு யாத்திரைக்கார வைசியன்போல் உருவமெடுத்துக்கொண்டு அத்தில்லைப்பதியை யணுகி அங்கு ஸாதுக்களைத் தூஷித்துவரும் வைசியனையடைந்து அவனுக்குத் தக்கவாறு பேசித் தான் கையில் எடுத்துவந்த ஒரு மூட்டையை அவ்வைசியனிடம் அளித்தார் தனக்கு அனுகூலமாய்ப் பேசி மூட்டையளித்த அவ்வைசியனது விருப்பம்போலவே தில்லையில் வாசம் செய்திருக்கும் அந்தத்துஷ்ட வைசியன் அம்மூட்டையை அன்றிரவில் வாங்கி வைத்துக்கொண்டு மறுநாள் காலையில் கொடுத்தான். தியாகராஜராகிய அந்த யாத்திரை வைசியனானவன் அந்த மூட்டையை அவிழ்த்துப் பார்த்து ஹா ஹா வென்று கூக்குரலிட்டு இந்த மூட்டையிலிருந்த எனது நித்திய லிங்கமூர்த்தியை நீயே களவு செய்திருக்கவேண்டும். ஏனெனில் நீ தினந்தோறும் லிங்கமூர்த்திகளைப் பழிப்பதால் இவ்விதகாரியம் உன்னால் செய்யப்பட்டதெனவே தோன்றுகிறதென்று வலுவில் வழக்கிட்டு அவனுடன் வெகுநேரம் தர்க்கம் செய்து அவனது வீட்டில் அவ்வண்ணமே ஒரு லிங்கமூர்த்தியைத் தோற்றச் செய்தார்.

சகல ஜனங்களாலும் லிங்கத்தைத் திருடிய வஞ்சகன் என்று இழக்கப்பட்ட அந்தத் துஷ்டவைசியன் அந்த யாத்திரை வைசியன் கூறியவாறே அக்குற்றத்திற்குப் பதிலாகத் தான் தினந்தோறும் கமலையில் நீராடி நூற்றெட்டுத் தடவைப் பஞ்சாக்ஷர மந்திரத்தை உச்சரித்து வருவதாக ஒப்புக்கொண்ட வுடனே அந்த யா,

வைசியன் மறைந்துவிட்டான். அத்தில்லை வைசியன் அது முதல் அவ்வித சத்தியத்தை மீறி நடக்க மனமற்றவனாய்ப் புண்ணிய புரியை அடைந்து கமலாலயத்தில் நீராடி ஆரூரானைத் தர்சித்து வந்தபடியால் அவனது மனதில் கொஞ்சம் கொஞ்சமாய்த் தத்துவச்சிறப்பு ஊர ஆரம்பித்து நற்புத்தியையடைந்தான்.

## 229 நரகத்தைக்காட்டி நன்மையுபதேசித்த லீலை.

கலியின் கொடுமை உலகெங்கும் பரவவே நாளடைவில் ஜனங்களெல்லோரும் புண்ணிய மார்க்கங்களை விட்டுவிட்டு பாவத்தொழிலில் அன்புகொண்டவர்களாய் விளங்கும் பொழுது அவ்வித ஜனங்களின் மீது கருணை செய்து கைலாயத்திலிருந்து பூலோகத்தை நாடிவந்த நாரத மகரிஷியானவர் புண்யபுரியையடைந்து கமலையில் ஜபங்களைச் செய்து முடித்துத் தியாகேசனை வீணாகானத்தினால் துதி செய்து நிற்கையில் அம்முனிவர் மீது கருணைசெய்த தியாகேசர் அவரது வேண்டுகோளின்படியே ஜனங்களுக்கு நன்மை செய்வதாக வாக்களித்து அன்றிரவின் ஆரம்பத்தில் ஜனங்களின் கண்களுக்குப்பற்பல நரகங்கள் தோற்றும்படி சங்கல்பம் செய்தார்.

லோக காரணனாகிய தியாகராஜனது சங்கல்பம் போலவே யமதர்ம ராஜன் முதலிய திக்பாலகர்கள் எல்லோரும் ஈசனைப்பணிந்து துதிசெய்து ஜனங்களது கண்களுக்கு நரகக்குழிகள் தோன்றும்படி செய்தார்கள். அச்சமயத்தில் இரவின் ஆரம்பகாலம் தோற்றியபடியால் தியாகேச தர்சனத்துக்காக அங்குவந்து கூடிய ஜனங்களின் மனமானது தெளிவையடையும்படி நாரதமுனிவர் மேல் உலகிலுள்ள ஒவ்வொரு நரக பேதங்களையும் குறிப்பிட்டுக்

காட்டலானார். வாரீர் புண்ணியசீலர்களே! உலகிலுள்ள ஜீவராசிகள் காமத்தினாலும், மோகத்தினாலும், கோபத்தினாலும், லோபத்தினாலும் செய்துவரும் அளவற்ற பாவங்களுக்குத் தக்கவாறு யமநரகில் நரக ஸ்தானங்கள் தோற்றுவதைப் பார்ப்பீர்கள்.

பிறர் மனைவியை விரும்பியவர்களனுபவிக்கும் நரகமிது
சுவர்ணத்தைத் திருடியவர்கள் அனுபவிக்கும் நரகமிது
ஜாதித்தொழிலை விட்டவர்கள் அனுபவிக்கும் நரகமிது
ஈசனைத்தூஷித்தவர்கள் அனுபவிக்கும் நரகமிது
ஈசுவர பக்தர்களை நிந்தித்தவர்கள் அனுபவிக்கும் நரகமிது
சுராபானம் செய்த வேதியர் அனுபவிக்கும் நரகமிது
பொய்யுரைத்தவர்கள் அனுபவிக்கும் நரகமிது
சிசுவைக்கொன்றவர்கள் அனுபவிக்கும் நரகமிது
பசுவைக் கொலை செய்தவர்கள் அனுபவிக்கும் நரகமிது
வேதியரைக் கொலை செய்தவர்கள் அனுபவிக்கும் நரகமிது

என்று இவ்விதமாய்க் கோடிக்கணக்கான நரகங்களைக் குறிப்பிட்டு நாரத மாமுனிவர் காட்டுவதைக்கண்ட ஜனங்களெல்லோரும் பயந்து நடுங்கி மயிர்க்கூச்சல் எய்திப் பாவத்தின் கொடுமைக்கு அஞ்சினார்கள். பாவகாரியங்களைச் செய்தவர்களின் ஆன்மாவைப் பற்பல நரகத்தில் யமபடர்கள் வீழ்த்தி வதை செய்வதையும் சகிக்கக்கூடாத வேதனைகளையனுபவித்துக்கொண்டு ஜீவராசிகள் படும் கஷ்டத்தையும் கண்ட பக்தரனைவரும் அதுமுதல் முக்கரணத்தினாலும் பாவத்தொழில் செய்வதில்லையென்று சபதமிட்டுக்கொண்டனர்.

இவ்விதமாய்ப் பக்தர்களின் கண்களுக்குச் சற்றுநேரம் வரையில் நானாவித கொடுமையான நரகம் தோற்றும்படி செய்து வைத்த தியாகேசர் யமதர்மராஜன் மூலமாய் மறுபடியும் அவைகள் மறையும்படி செய்துவைத்தார்,

நாரத முனிவரும் தியாகேசனைத் துதித்துவிட்டுச் சத்திய லோகம் சென்றார். அது முதல் பூவுலகிலுள்ள ஜனங்கள் எல்லோரும் முக்கரணத்தினாலும் எவ்வித பாபத்தையும் செய்யாதவர்களாய்த் தியாகேசனை இடைவிடாமல் துதித்துக் கைலாய பதவியையடையலானார்கள்.

## 230. பிராமண மகிமையுரைத்த லீலை.

பாண்டியபுரியில் பரானந்தர் என்ற ஒரு வேதியர் இருந்தார். அவர் பாலியம் முதல் குருகுலத்தையடைந்து சாஸ்திரங்களை யுணர்ந்தபிறகு அம்பிகாதேவியின் பாத மலரைப் பூஜித்துவந்தார். தேவியின் அருளால் அவரது மனதில் தேவீ தத்துவமும், சகலமந்திர ஸ்வரூபமும் சகல சக்தி ஸ்வரூபமும், சகலயந்திர ஸ்வரூபமும், சகலசக்தி ஸ்வரூபமும் விளங்கின. அதனால் அவ்வேதியர் இவ் வாழ்க்கையிலுள்ள முப்பொருளாசையையும் வென்று பரமானந்தத்தை யடைந்தவரானபடியால் அவருக்குப் பரானந்தர் என்று பெயர் உண்டாயிற்று. அப்படிப்பட்ட பரானந்த வேதியரானவர் கோகர்ணம், கேதாரம் காசி முதலிய திவ்விய க்ஷேத்திரங்களையடைந்து லிங்கமூர்த்தி களின் தர்சனத்தைப்பெற்று சக்தி தாரணைகளையுமடைந்து தமது நகருக்குத் திரும்புகையில் தென் திசைக்குத் திலக மென விளங்கும் திருவாரூரையடைந்து தியாகராஜனது அடிமலரை வணங்கி மனமுருகி உளமகிழ்ந்து, பணிந்து துதிசெய்து மனக்களிப்புடன் தன்னிருப்பிடத்தை அடைந்தார்.

இவ்விதமாய்த் தேசசஞ்சாரம் செய்து திரும்பிய அவ் வேதியரை நல்வரவு விசாரிப்பதற்காக வந்து கூடிய வேதியர்களின் விருப்பம்போல் அந்தப் பரானந்தரானவர் ஒவ்வொரு நாளும் ஒவ்வொருக்ஷேத்திர மகிமை விஷயங் களை விசேஷங்களை எடுத்துக் கூறிவந்தார். அவ்வேதியர்

கூட்டமும் இவ்விதமாய் நாஞ்க்ஷேத்திர மாகாத்மியங்களை யும், பசுபதி கருணையின் சிறப்பையும் கேட்டும் பரமானந்த மடைந்து ஈசுவரனது பாத கமலத்தில் அசைவற்ற பக்தியைப் பெற்றார்கள். இவ்வண்ணமாய் அவர்களுக்கு ஈசுவர பக்தியையும் தெளிவுபெற்ற புத்தியையும், சத்கர்மானுஷ்டானத்திலாவலையும் உண்டுபண்ணிய அந்தப் பரானந்தரானவர் தான் கடைசியாய்த் தர்சித்த தியாகேசனது அற்புதகுணங்களின் மேன்மையைப் பலவாறு புகழ்ந்துபேசினார். அதனாலுருகிய மனமுடைய அவ்வேதியர்களெல்லோரும் தியாகேசனது பாதமலரில் ஒப்பற்ற பக்தியைப்பெற்று அப்பரானந்தயோகி போலவே கர்மானுஷ்டானங்களைச் செய்துகொண்டு மீசனது நாமங்களை உச்சரித்துக் கொண்டும் நற்பதவியிலமர்ந்து விளங்கினார்கள்.

இவ்வண்ணமாய் அப்பாண்டியபுரியிலுள்ள வேதியர்கள் யாவரும் அநேக நற்குணங்களுடன் கூடி விளங்கும் அப்பரானந்தரை முன்னிட்டுக்கொண்டு தாம் ஒரு கும்பலாய்ச்சேர்ந்து மற்றொரு சமயத்தில் காசி யாத்திரைக்காகப் புறப்படலானார்கள். அவ்வண்ணமாய் அந்தப் பக்தர்கள் எல்லோரும் அங்கங்கு விளங்கும் மூர்த்தியைத் தர்சித்துக்கொண்டு அநேக நதிகளையும். வனங்களையும் தாண்டி மகத தேசத்தருகில் செல்லுகையில் ஒரு கொடிய வனம் அவர்களது வழியில் தோற்றிற்று அவ்வனத்தைத் தாண்டமுடியாமல் பயத்தையடைந்த சிலர் அங்கு நிற்பதைக்கண்ட அப்பரானந்தர் முதலிய வேதியர்கள் ஓ வழிப்போக்கர்களே ! நீங்கள் ஏன் இங்குச் சும்மா நிற்கிறீர்கள் ? உங்களுக்கு விருப்பம் இருந்தால் எங்களுடன் சேர்ந்து வாருங்கள் என்றுரைத்தார்கள். இவ்வித மொழியைக்கேட்ட அவ்வழிப்போக்கர்கள் ஓ புண்ணியசீலர்களே ! நீங்கள் இவ்விடம் வருவதற்கு முன்னமே நாங்கள் இங்கு வந்து கூடினோம். நானுதேசங் களிலிருந்து யாத்திரைக்காரராய் இங்கு வந்து கூடிய

நாங்கள் எல்லோரும் இக்காட்டில் நுழைந்து சற்று நேரம் செல்லுகையில் எங்களது வழியில் புலி சிங்கம் முதலிய அரண்ய ஜந்துக்கள் எங்களைப் பயமுறுத்துகின்றன. அதனால் நாங்கள் முன்செல்ல முடியாமல் தடைப்பட்டு நிற்கின்றோமென்றுரைத்தார்கள்.

அவ்விதவுரையைக்கேட்ட பராநந்த வேதியர் மிகவும் ஆச்சரியத்தையடைந்து அச்சமயத்தில் ஆசமனம் செய்து வடக்குமுகமாய் நின்று பிராண வாயுவையடக்கி மனதில் தேவியின் சக்தி பீடத்தையும் தியாகராஜனது திருமேனியை யும் கண்டு தியானித்து அக்காட்டில் தமக்குத் தமதுடன் வரும் வழிப்போக்கருக்கும் உண்டாகும் பயத்தை நீக்குவாய் என்று வேண்டி தாரணையை முடித்துக்கண்களைத் திறந்து பார்த்தார். அத்தருணத்தில் அவர்கள்மீது கருணைசெய்த தியாகேசர் ஓர் அசரீர் உண்டாகும்படி செய்தார். "கேளீர் பக்தர்களே! பராநந்தர் முதலிய பிராமணோத்தமர்களே! கபில மகரிஷியின் சாபத்தினால் நெடுநாளாய் இக்காட்டில் செல்லும் ஜனங்களுக்கு இவ்வாறு துஷ்ட ஜந்துக்கள் பயமுறுத்தும் வழக்கமுண்டு. அவ்வித பயத்தை எவ்வித வழியினாலும் தீர்க்கமுடியாது. ஸ்ருஷ்டி ஸ்திதி சம்ஹாரங்களுக்குக் காரணமாகிய தியாகராசனது பாதத் திலும், பிராமணர்களுடைய பாதத்திலும் யார் யார் பக்தி செலுத்துகிறார்களோ அவரவர்கள் எவ்வித பயமுமின்றி இவ்வனத்தைக் கடந்து காசி நகரையடைந்து தாரக மந்திரோபதேசத்தைப்பெற்று விளங்கினார்கள்." என்று அசரீரி சொன்னதைக்கேட்டு எல்லோரும் பிராமண பக்தியுடன் அவ்வனத்தைக்கடந்து 'கங்காதீரத்தை அடைந்தார்கள். பிராமணரிடத்தில் பக்தி செய்யாதவர்கள் மாத்திரம் அப்படியே நடுவழியில் கொடிய மிருகங்களின் தோற்றத்தினால் பயந்து சிதறி ஓடினார்கள். இவ் விஷயத்தையறிந்துகொண்ட க்ஷத்திரியர் முதலான ஜனங்கள் யாவரும் அதுமுதல் வேதியரது பாதபக்தியையும் ஈசனது அருளையுமே அணியெனப்பூண்டு மேன்மையுடன் விளங்கினார்கள்.

## 231. பக்தன் பழியை நீக்கிய லீலை.

திருவாரூர் நகரில் ஹரதாசர் என்னும் அந்தணோத்தமர் ஒருவர் இருந்தார். ஒவ்வொரு காலந்தோறும் முறைப்படி கர்மானுஷ்டானங்களைச் செய்துகொண்டு ஒப்பற்ற வைராக்கியத்தையும் தியாகராஜ பக்தியையுமே அணியெனப் பூண்டு விளங்கும். அவ்வந்தணோத்தமருடைய நற்குணங்களை வானவர்களும் அறியவல்லவரல்லர். அப்படிப்பட்ட நற்குணசீலராகிய ஹரதாசரென்னும் ஆவ்வேதியர் வெகுநாளாய் அத்திருவாரூர் நகரில் தண்டுல பிக்ஷை செய்து வாழ்ந்து வந்தார்.

தினந்தோறும் விடியற்காலத்தில் எழுந்து கமலையில் நீராடி கர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டும், தியாகராஜ தர்சனத்தைப் பெற்றுக்கொண்டும் அவ்வந்தணோத்தமர் வீதிகளில் தண்டுலபிக்ஷைக்காகச் செல்வார். தனது குடும்பத்துக்கு வேண்டிய தண்டுலம் கிடைத்தவுடனே தனது இல்லத்தையடைந்து அவ்வரிசியை தம் மனைவியிடமளித்துச் சமைக்கச்செய்து பூஜாகாரியங்களை நிறைவேற்றித் தேகவிருத்தி செய்து வருவார். இவ்விதமாய் அவ்வேதியர் முனிவர்போல் சிறப்புடன் வாழ்ந்து வருகையில் அவரது வைராக்கியத்தைக் கண்டவரெல்லோரும் வியப்படைந்து போற்றிவந்தார். இவ்விதமாய்ச் சிறப்பு வாய்ந்த அவ்வேதியர் ஒருநாள் தண்டுல பிக்ஷைக்காக வீதிகளில் சென்று கொண்டிருப்பதைக் கண்ட சோழராஜ குமாரியானவள் அவ்வேதியரது நற்குணங்களை நெடுநாளாய்த் தோழிமார்களின் மூலமாய்க் கேள்விபுற்றிருப்பதினால் அவரது வறுமை நீங்கும் வண்ணம் யோசனை செய்து தனது சென்னியில் உள்ள மாணிக்கத்தை அரிசியுடன் சேர்த்து அவ்வந்தணருக்குகளித்து, அவ்வரிசிக்குள் விலையற்ற மாணிக்கம் ஒளித்து வைத்திருப்பதையும் மொழிந்து திரும்பினாள்.

தண்டுல பிக்ஷா யாத்திரையிலிருந்து திரும்பிய அவ் வேதியர் வழக்கம்போல் அவ்வரிசிப்பாத்திரத்தைத் தம் மனைவியின் கையிலளித்தார். அவரது மனைவியானவள் அவ்வரிசியைப் பார்க்கும்பொழுது அவ்வரிசியுடன் கலந்து விளங்கும் விலையற்ற மாணிக்கத்தைக்கண்டு கையினால் எடுத்துப்போய் கணவனையடைந்து இஃதென்ன? விலை யற்ற மாணிக்கம்போல் தோற்றுகிறதே; எனமொழிந்தாள். அவ்வுரையைக்கேட்ட அவ்வேதியர் இஃது ஒரு நீலப்புழு. இதைக் கையினால் தொடாதே என்றுரைத்தார். கணவனது சொல்லைச் சென்னியில் தரித்த அம்மாதானவள் அம்மாணிக்கத்தை வீதியில் எறிந்தாள். அத்தருணத்தில் அங்கு வீதியில் சென்றுகொண்டிருந்த ஒரு துஷ்ட விடனது எதிரில் மின்னல் போல் அம்மாணிக்கம் காணப்பட்டது. அதைக்கண்ட அவ்விடன் மனக்களிப்புடன் அம் மாணிக்கத்தை எடுத்துக்கொண்டுபோய் விரைவாய்ச் சென்று தனது உயிருக்கு நிகராகிய தாசியின் கையில் அளித்தான்.

அன்றிரவு அந்தி நேரத்தில் அந்தத் தாசியானவள் விலையற்ற அம்மாணிக்கத்தைத் தனது சென்னியில் பூமாலை போலணிந்துகொண்டு ராஜமாளிகையில் நடனம் புரிவதற்கு வந்து நின்றாள். அவ்விலைமாதின் அழகிய நர்த்தனத்தைக் கண்டு களிப்பதற்காக அந்தப்புரமாதரனைவரும் நாடக சாலையை அடைந்தார்கள். அவர்களுடன் வந்த ராஜகுமாரி யானவள் அவ்விலைமாதின் சென்னியில் மலர்போல் அம்மாணிக்கமானது விளங்குவதைக்கண்டு காலை நேரத்தில் தான் வேதியருக்கு அரிசியுடன் அளித்த மாணிக்கமானது இம்மாலை நேரத்தில் இவள் சென்னியில் விளங்குவதற்குக் காரணமென்னவென்று நினைத்து அவ்வேதியரது குணங் களில் சந்தேகத்தையடைந்து வாடிய முகத்துடன் அந் நடனத்தையும் கண்ணுறாமல் இருந்தாள். அவ்வித ராஜகுமாரியைக்கண்ட மகாராஜன் மந்திரி முதலான

வர்கள் அப்பெண்மணியின் மனக்குறையை நீக்கும் பொருட்டு அந்த ஹரதாஸரென்னும் அவ்வேதியரை ராஜசபைக்கு வரவழைத்து விசாரணை செய்யத் தொடங்கினார்கள்.

அக்னிக்கு நிகராகிய தனது பர்த்தாவானவர் குற்றமுடையவரென்று பழிகூறப்பட்டவராய் ராஜபடர்களினால் இழுக்கப்பட்டவராய் நீர்மல்கிய கண்களுடன் ராஜபவனத்துக்குச் செல்லுவதை உற்றுநோக்கிய அவரது மனைவியானவள் அத்தருணத்தில் அஞ்சலி செய்து தியாகராஜ பாதகமலத்தை மனதில் தியானித்துத் தனது கணவன்மீது ஏற்பட்ட பழியை நீக்கக்கடவீர் என்று வேண்டினாள். அவ்வந்தண தம்பதிகளின் நற்செய்கைகளைக் கண்டுகளித்த தியாகேசர் அசரீரியை ஏவவே அதனால் அவ்வந்தணரது வைராக்கியச் சிறப்பையறிந்துகொண்ட பூபாலனால் வணக்கத்துடன் சன்மானிக்கப்பட்ட அவ்வேதியரைக்கண்டவரெல்லோரும் மகிழ்ந்து அவ்வேதியரையும், தியாகேசரையும் பணிந்து வைராக்கியத்தையடைந்து சிறப்புடன் வாழ்ந்தார்.

## 232. பல்லக்கைக் காத்தருளிய லீலை.

தும்பிகாரண்யத்தில் யோகம் செய்துவரும் யோகிகளுள் ருத்ரஜபம் செய்துகொண்டிருக்கும் யோகி ஒருவர் இருப்பத்தெட்டு வருஷகாலம் செல்லும் வரையில் பீஜாக்ஷரத்தை ஆகார கமலத்தில் வைத்து நியமயோகம் செய்தார். பிறகு எண்பது வருஷகாலம் செல்லும் வரையில் ஸவித்ராக்ஷரத்தையும், ஸாவித்திரி யக்ஷரத்தையும் குகையில் விட்டு, நாபியுடலில்விட்டு உபாஸநயோகம் செய்தார். பிறகு அநேக வருஷகாலம் செல்லும் வரையில் ப்ருதக்னி ஈசான

ஸ்வரூப பிரம்மத்தைக் குறித்து யோகம் செய்தார். அந்த யோகத்தின் முடிவில் பரந்தாமனுடைய அற்புதத் திருமேனியின் வடிவம் அந்த யோகியின் மனதில் நன்றாய் விளங்கிற்று.

அதனால் பரமானந்தமடைந்த அந்த யோகியானவர் பிராணாயாமாதி முறைப்படி யோகத்தை முடித்துக் கண்களைத் திறந்து உலகை நோக்கியபிறகும் அவ்வடிவமே எண் திசையிலும் காணப்பட்டது. அவ்வித பரமேசனது வடிவம் தோற்றக்கண்டு அந்த யோகியானவர் அவ்வித வடிவமுள்ள பரஞ்சுடர் பூவுலகில் க்ஷேத்திரங்களில் விளங்கக் கூடுமோ? என்று சங்கித்துக் கொண்டிருக்கையில் உண்டாகிய ஒரு அசரீரி சொல்லைக் கேட்டுத் தென் திசையிலுள்ள தியாகேசனது திருமேனியே தனது யோக முடிவில் தோன்றிற்றென்று அறிந்துகொண்டு மனக்களிப்புடன் தமது ஆச்ரமத்துக்கு வந்தார். நெடுநாளாய் யோகத்தில் அமர்ந்திருந்து முகமலர்ச்சியுடன் சிறந்த சுடருடனும் திரும்பிவந்த தமது குருவை சிஷ்யர்கள் யாவரும் குதூகலத்துடன் எதிர்கொண்டு அர்க்கியம் பாத்தியம் மதுபர்க்கம் முதலிய உபசாரவகைகளால் அந்த யோகியைப் பூஜித்தார்கள். இவ்வாறு அவர்களாலும் உபசரிக்கப்பெற்ற யோகியானவர் அச்சிஷ்யர்களுக்கு ஆசிகூறி தமது இருப்பிடமாகிய பர்ணசாலையையடைந்து ச்ரமபரிகாரம் செய்துகொண்டு தனது யோக முறையையும் யோகத்தின் முடிவில் ஈசனது திருமேனி தோற்றியதையும் பிறகு ஆகாயவாணியினால் அறிந்துகொண்ட விஷயத்தையும் உரைத்து அவ்வித தியாகேசனுடைய திருமேனியைத் தரிசனம் செய்ய ஆவல் கொண்டவராய் அறிவித்துப் பிறகு தன் கிழத்தன்மையையும் உற்றுநோக்கி மனவருத்தமடைந்தார்.

யோகத்திலிருந்து அவ்வித சிறப்புடன் திரும்பிய அந்த யோகீச்சுவரரின் கருத்தை முகஜாடையினால் அறிந்துகொண்ட அச்சிஷ்யர்களில் சிலர் அப்பொழுது அவரை

வணங்கி யோகீச்சுவரரே! உமது சரீரத்தில் விளங்கும் கிழத்தன்மையைக் குறித்து நீர் மனங்கலங்கவேண்டாம். எங்களால் தூக்கக்கூடிய பல்லக்கையடைவீராகில் சில தினங்கள் செல்வதற்கு முன்னமே அப்புண்ணியபுரியை நாடி அத்தியாகேசனைத் தர்சிக்கலாம் என்று வணக்கமாய் அறிவித்தார்கள். இவ்வாறு சிஷ்யர்கள் உரைத்ததைக் கேட்டு அந்த யோகியானவர் யோக முடிவில் தோற்றிய தியாகேசனது வடிவழகைக்காணக்கருதியவராய் அச்சிஷ்யர்களால் கொண்டுவரப்பட்ட பல்லக்கில் ஏறிக்கொண்டு பஞ்சாக்ஷர மகாமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு தென் திசையை நோக்கிச்சென்றார்.

அச்சிஷ்யர்கள் அவ்வாறு தமது குருவை அப்பல்லக்கில் வீற்றிருக்கச்செய்து அப்பல்லக்கைச் சுமந்துகொண்டு அநேக நதிகளையும், மலைச்சாரல்களையும் வனங்களையும், தேசங்களையும் கடந்து சோழமண்டலத்தின் அருகில் செல்லுகையில், அப்பல்லக்கின் கணை மூங்கில் முறிந்து விட்டது. அதைக்கண்ட சிஷ்யர்கள் நடுக்கமுற்றுத் தமது குருவின் சரீரத்துக்கு அபாயம் நேரிடுமோ என்று பயந்திருக்கையில் அப்பல்லக்கானது அச்சிஷ்யர்களால் தூக்கப்படாமல் இருக்கும்பொழுதே பறந்து செல்ல ஆரம்பித்தது. அவ்வதிசயத்தைக்கண்ட சிஷ்யர்களும் தமது குருவைவிட்டுப்பிரிய மனமில்லாதவர்களாய் அப் பல்லக்கைப் பின்தொடர்ந்து சென்றார்கள். அப்பல்லக்கானது மெதுவாய்த் தியாகேசனது கோபுரவாயிலின் அருகில் சென்று பூமியில் நிலைபெற்று நின்றது. அந்த க்ஷணத்திலேயே அச்சிஷ்யர்களும் குருவைச் சூழ்ந்து கொண்டார்கள். பிறகு அவர்களால் மெதுவாய் அழைத்துச்செல்லப்பட்ட அந்த யோகியானவர் தியாக ராஜனது சன்னிதானத்தையணுகிப் பணிந்து துதி செய்கையில் அப்பல்லக்கு முறியும் தருணத்தையறிந்து கொண்ட தியாகேசர் தமது கணத்தாரையனுப்பி அவர்கள்

மூலமாய் அப்பல்லக்கை அவ்வண்ணம் செலுத்தி வைத்தார் என்று அசரீரியால் தெரிந்துகொண்டவர்கள் எல்லோரும் மிகவும் வியப்பையும் அந்த யோகியிடத்தில் பக்தியையும், ஈசனிடத்தில் பக்தியையும் செலுத்தினர்கள். அந்த யோகீசரும் சிலகாலம் அங்கு வாசம் செய்து தியாகேசர் சுடருடனே ஐக்கியத்தையடைந்து விளங்கினர்.

### 233. மான்களைத் தேரில் கட்டி மன்னவனைக் காத்த லீலை.

சோழவம்சத்திலுதித்த பிரதாப வீர சோழசக்ரவர்த்தியானவன் ஒரு சமயத்தில் சகல சாமந்த ராஜாக்களையும் தனக்குள் அடக்கிக் கப்பம் வாங்கிவந்தபடியால் அச்சோழ சக்ரவர்த்தியின் சிறப்பின் மேலும், பராக்கிரமத்தின் மேலும் பொருமை கொண்ட சிற்றரசர்களெல்லோரும் ஒன்றுசேர்ந்து அச்சோழன் வேட்டைக்காக வனத்தில் வரும் தருணத்தில் அவனைமாய்க்க வேண்டுமென்று துராலோசனைசெய்து ஓரிடத்தில் வலை கட்டிவைத்து மறைந்திருந்தார்கள்.

இவ்விதமாய் அவர்கள் செய்திருக்கும் சூதை அறியாத அச்சோழன் சரத்காலம் தோன்றியபொழுது காட்டிலுள்ள துஷ்ட ஜீவராசிகளை வேட்டையாடியழிக்கக்கருதிக் கையில் சிறந்த அம்புகளை எடுத்துக்கொண்டு சிறந்ததொரு குதிரையின்மீது ஏறிக்கொண்டு சில வீரபடர்களால் சூழப் பட்டவனுய் வனத்தையடைந்தான். அன்று அத்தருணத்தில் அவ்வனத்தில் எவ்வித மிருகங்களும் அம்மகாராஜனது கண்களுக்குப் புலப்படவில்லை. அதனுல் அப்பூபாலன் வியப்புடன் அவ்வனத்தின் எண்திசைகளிலும் வேகமாய்ச் சென்று இங்குமங்கும் தேடிப்பார்க்கையில் அக்காட்டின்

கிருதி மூலையில் ஓர் இடத்தில் அநேக ஜந்துக்களின் அழு குரல் போன்ற ஒருவித தொனியைச் செவியினால் பற்றிய அம்மகாராஜன் அவ்வித தொனியானது கேட்பதற்குக் காரணமென்னவென்பதை அறியவேண்டுமென்று விருப்பத்துடன் அத்திக்கை நாடிச்சென்றான்.

அப்பகைமன்னர் மறைத்து வைத்திருக்கும் கொடிய தொரு வலையில் கவர்தலையடைந்த சிங்கங்களும், புலிகளும், கரடிகளும், வனமகிஷங்களும், மான்களும் கொடிய கஷ்டத்தை அனுபவித்துக் கொண்டிருப்பதை யறிந்து கொள்ளாமலிருக்கும் அம்மன்னவன் வேகமாய் அத்திக்கை நாடிச் செல்லுகையில் அம்மகாராஜனைக் காத்தளிக்கக் கருதிய தியாகேசர் அத்தருணத்தில் தான் ஒரு வேடன் போல் தோன்றிச் சில மான்களை ஒரு தேரில் கட்டிவைத்துக் கொண்டு அவ்வரசனது எதிரில் தோன்றி நின்றார். அவ் வேடனது சமீபத்தை அம்மகாராஜன் அடையும்பொழுது அவ்வேடன் அரசனை நோக்கி ஓ பூபாலனே! நீர் இம் மான்கள் கட்டிய தேரின் மீது ஏறிக்கொண்டு அங்குச் செல்வீராகில் உமது பகை மன்னவர்கள் உம்மைக்கண்டு வெளியில் வந்து கவரத்தோற்றுவார்கள். அத்தகைய தருணத்தில் இம்மான்களே உம்மைக் காப்பாற்றியும் அவர்களைக் கண்டித்தும் குற்றமற்ற அப்பிராணிகளை வலையிலிருந்து விலக்கியும் நன்மையுண்டுபண்ணும் என்றார்.

இவ்விதமாய் அத்தெய்வ வேடன் கூறியதையறிந்த அச்சோழன் அவ்வேடனுக்கு நன்றி பாராட்டி அவனிடத் தில் அன்புவைத்து அவனையும் தனக்குத் துணையாக அழைத்துக்கொண்டு அம்மான்கள் கட்டிய தேரிலேறிக் கொண்டு அத்திசையை நாடிச்சென்றான். பரமேசனது திவ்வியத்தேரை இழுத்துக்கொண்டு செல்லும் அம்மான்கள் வலைவீசியுள்ள அவ்விடம் அணுகுகையில் அச்சோழனையும் அவ்வேடனையும் கண்டு வெகு விரைவாய் அப்பகை மன்னர்கள் மறை புதரிலிருந்து ஓடிவந்து அச்சோழனைச்

சிறைசெய்யச் சூழ்ந்துகொண்டார்கள். அத்தருணத்தில் அத்தெய்வ மான்கள் யாவும் ஒவ்வொரு வீர படர்போல் தோன்றி அவ்வரசர்களைப் பிடித்துச் சிறைக்குரிய கட்டு களால் கட்டின. மற்றும் சில மான்கள் வலையிலகப்பட்டுக் கொண்டிருக்கும் குற்றமற்ற ஜீவராசிகளை அவ்வலையிலிருந்து விடுதலை செய்தன. அத்தருணத்தில் வேடன்போல் தோற்றிய தியாகேசர் மறைந்தார். அம் மான்களும் தேரும் மறைந்தன. அதைக்கண்ட பூபாலன் வியப்படைந்து அப்பகை மன்னரைச் சிலகாலம் சிறையில் வைத்து அவர்களது கர்வத்தை யொழித்துப் பிறகு அவர்களை விடுதலை செய்தான். அத்தருணத்தில் வேடனாய்த் தோன்றி யவர் தியாகேசனாகவே இருக்குமென்று நினைத்துப் பரமேச னுக்குக் காவிரி தீர்த்தத்தினால் மூன்றுமாத காலம்வரையில் அபிஷேகம் செய்துவைத்துச் சிறந்ததொரு திருவிழாவினா லும் ஈசனது திருமேனியைப் பூசித்து வெகுகாலம் செங் கோல் செலுத்தி வாழ்ந்திருந்தான்.



## 234. வனதேவதையினால் பாலனைக்காத்த லீலை

திரியம்பக க்ஷேத்திரத்தில் விளங்கும் வருண லிங்கத்தைத் தரிசனம் செய்துவரும் வேதியர் ஒருவர் புண்ணிய க்ஷேத்திர யாத்திரைக்காகக் குடும்பத்துடன் புறப்பட்டு ஒவ்வொரு க்ஷேத்திரங்களிலும் ஒவ்வொரு புண்ணிய தீர்த்தங்களிலும் தங்கியிருந்து செல்லுகையில் யாத்திராரம்ப சமயத்திலேயே கர்ப்பிணியாயிருக்கும் அவ் வேதியரது மனைவியானவள் நாளடைவில் வளர்ந்த கர்ப்பத்தையுடையவளாய் நடந்துசெல்ல சக்தியற்றவளாய் இருக்கும் தருணத்தில் அவர்களது வழியில் வர்ஷாகாலம் தோன்றிற்று. எண்திசைகளிலும் கறுத்த மேகங்கள் கிளம்பிக் கனமழை பொழிவதினாலும், கர்ப்பிணி மாதை

நடத்தி அழைத்துச்செல்ல முடியாமையாலும் மனக் கலக்கத்தையடைந்த அவ்வேதியர் ஒருநாள் ஒரு காட்டின் நடுவழியில் ஒரு மலையின் சாரலில் கனமழைக்குத் தங்கியிருந்தார்.

அவ்வேதியர் இவ்விதமாய் ஸம்ஸாரசகிதராய் அம் மலைச்சாரலின் எதிரிலுள்ள ஒரு குகையில் நாலைந்து நாள் வரையில் மழை விடாமையினால் தங்கியிருக்கையில் அவ் வந்தணர் ஆதிகாலம் முதல் செய்துவந்த நற்காரியங் களாலும் அவர் அத்தருணத்தில் தனது பாதகமலத்தைப் பக்தியுடன் மனதில் ஸ்மரிப்பதினாலும், தியாகேசர் அவ் வனதேவதையை ஏவினார். ஈசனால் ஏவப்பட்ட அவ் வனதேவதையும் அவர்கள் எதிரில் தோன்றி ருசியுள்ள கனி முதலியவைகளையளித்து அன்றிரவு நேரத்தில் அவ் வேதியரது மனைவியின் பிரஸவகாலத்தை எதிர்நோக்கி யிருந்து நல்ல சுபகாலத்தில் உதித்த சிசுவுக்கும் அவ் வந்தணர் மாதுக்கும் உயிர்த்தோழியாயிருந்து உணவளித்து காப்பாற்றிப் பதினைந்து நாள் செல்லும் வரையில் அக் குழந்தையை எடுத்து வளர்த்து வந்தாள். பிறகு அவ் வனதேவதையானவள் மறையும் தருணத்தில் தான் அவ்வனத்தின் தேவதையென்பதையும், தியாகராஜனால் ஏவப்பட்டவளாய் அங்கு வந்துதவியதையும் அவ்வித தியாகராஜனது அற்புத குணங்களையும் கூறி மறைந்தாள்.

அவ்வந்தணரது குடும்பத்தார் எல்லோரும் இவ்வித மாய் வனதேவதையின் உரையைக்கேட்டு மனமகிழ்ந்து தியாகராஜ பக்தியினால் கவரப்பட்ட மனமுடையவர் களாய்ப் புண்ணியபுரியை நாடி, கமலையில் நீராடி, வேதக் கொழுந்தாகிய தியாகராஜனது கலியாண வடிவத்தைக் கண்டு பணிந்து வேத வாக்கியங்களினாலும் ஸ்துதிசெய்து அப்புண்ணியபுரியிலேயே நெடுங்காலம் வாழ்ந்திருந்தார்கள்.

---

## 235. ஆபத்துக்குத் தோஷமில்லை என்றுரைத்த லீலை

சிவதாசர் என்னும் மகா யோகியொருவர் ராமேச்சுவர க்ஷேத்திரத்திலிருந்து ஹரகுண்டத்திற்கு யாத்திரையாய்ச் செல்லுகையில் புண்யத்திரள் என விளங்கும் தியாகேசனது பாதகமலத்தைப் பற்றித் தொழுது தில்லைப்பதி முதலான தக்ஷிணதேசத்தில் விளங்கும் ஈசுவரமூர்த்திகளையும், கோகர்ணம் முதலிய மேற்குத் தேசத்தில் விளங்கும் ஈசுவர மூர்த்திகளையும், காசி முதலிய வட தேசங்களில் விளங்கும் ஈசுவரமூர்த்திகளையும் தர்சித்துக்கொண்டு ஹரகுண்டத்தின் சமீபத்தையடைந்தார்.

அந்த மகாயோகியுடன் அவரது சிஷ்யர்களும் மற்றும் உள்ள யாத்திரைக்காரரும் ஹரகுண்டத்தையடையும் பொருட்டும் அங்கிருந்து கைலாயத்தை அடைவதற்கும் ஆவல்கொண்டவர்களாய்ச் சென்றுகொண்டிருந்தார்கள். அம்மகாயோகியானவர் தினந்தோறும் காட்டில் வழிநடந்து செல்லும்பொழுதும் வழியின் கஷ்டத்தைச் சாந்தமாக்கு வதற்காகப் பரமேசுவரரின் திவ்யகுண மகிமையைக் கூறிக் கொண்டே செல்வார். அவருடன் செல்பவர்கள் யாவரும் அதுமுதல் ஈசுவரபக்தியின் மேன்மையைப் பெற்றும் பற்பல விதமாய்த் தர்மசாஸ்திரங்களின் சந்தேகங்களையும் நிவர்த்திசெய்துகொள்ளலானார்கள்.

இவ்விதமாய் அம்மகாயோகியானவர் அநேக பக்தர் களுடன் கூடியவராய்க் கங்கா நதியைத் தாண்டி அனந்தேச்வர தீர்த்தத்தையடைந்தபிறகு நைமிச வனத் தையும் தாண்டி ஹரகுண்டத்தையடைந்து அத்திவ்விய தீர்த்தத்தில் நீராடி அங்கு விளங்கும் கைலாசநாத லிங்கத் தையும் தர்சித்து அங்கு ஒரு பர்ணசாலை அமைத்துக் கொண்டு வாசம் செய்யலானார். அவருடன் சென்ற தொண்டர்கள் யாவரும் நெடுநாள்வரையில் அவரது சமீபத்திலேயே தங்கியிருந்து தர்மசாஸ்திர சம்பந்தமாயும் வேதாந்தசாஸ்திர விஷயமாயும் தமக்குத் தோன்றும்

சந்தேகங்களைக் கேட்டார்கள். அவர்களுடைய அநுகூலமாகவே அம்மகாயோகீசுவரரும் பதிலளித்து வருவார். அஞ்ஞானத்தினாலும், மோகத்தினாலும் செய்த பாவத்துக்கும், நிந்தனை செய்த பாவத்துக்கும், உண்ணக் கூடாத இடங்களிலுண்ட பாவத்துக்கும், தொடக் கூடாதவைகளைத் தொட்ட பாவத்துக்கும், மற்றும் பற்பல பாவத்துக்கும் பிராயச்சித்தம் செய்யவேண்டிய முறையையும், ஈசுவர நாமங்களை உச்சரிக்கவேண்டிய முறையையும், பக்தியின் சிறப்பையும் சாங்கமாயுரைத்தார்.

அத்தருணத்தில் பிராமணர் ஒருவர் அம்மகா யோகீசனது சமீபத்தை யணுகி முறைப்படி பணிந்து சில தினங்களுக்குமுன் தான் காட்டில் சென்றுகொண்டிருக்கையில் காட்டு மிருகத்தினால் துரத்தப்பட்டு ஒரு சண்டாளனுடைய வீட்டில் நுழைந்து உயிர்பிழைத்ததாயும், அவ்விதம் சென்று உயிர் பிழைத்தது நியாயமாகுமா? இவ்வித பாவத்துக்குப் பிராயச்சித்தத்தை மொழிவீர் என்று சொன்னார். அதைக்கேட்ட அந்த யோகீசரும் சற்றுநேரம் வரையில் தியாகேசனையும், கேதார நாதனையும், ஹரகுண்ட நாதனையும் நினைத்து மயிர்க்கூச்சல் அடைந்து ஓ பிராமணோத்தமரே! விபத்துநேரிட்ட காலத்தில் ஜீவராசிகளைக் காக்கும் பொருட்டு செய்த இவ்வித காரியதததுக்கு எவ்வித தோஷமும் இல்லை எவ்வித பாவமும் அணுகாது. எவ்வித பிராயச்சித்தமும் செய்ய வேண்டியதில்லையென்று மொழிந்து கொண்டிருக்கையில் தயாநிதியாகிய தியாகேசர் ஒரு ஆகாயவாணியை ஏவினார். "கேளீர் யோகநிஷ்டர்களே! ஆபத்து நேரிட்டகாலத்தில் இவ்விதமானவைகளுக்கு எவ்வித தோஷமும் இல்லை. தியாகராசனது பாத கமலத்தை நினைத்தலாவது, கங்கையில் நீராடலாவது இலிங்கேச மூர்த்திகளுக்கு அபிஷேகம் செய்து வைத்தலாவது செய்தால்போதும். இவையே சகல தோஷங்களையும் நீக்கி நற்பதவியையளிக்கும்.

என்று இவ்விதமாய் உண்டாகிய ஆகாயவாணியைக் கேட்ட அம்மகாயோகி முதலான சகல தொண்டர்களும் சந்தேகத்தைத் தெரிவித்துக்கொள்வதற்காக அங்கு வந்த வேதியரும் தியாகராஜ நாமோச்சாரணத்தினுல் பரிசுத்த மான முகங்களையுடையவர்களாய்ப் பரமானந்தமடைந்து துதிசெய்து வாழ்ந்துவந்தார்கள்.

## 236. கண் கட்டுண்டவனுக்குக் காக்ஷியளித்த லீலை

வேதாரண்யமென்னும் பதியில் வேதசர்மா என்ற வேதியர் ஒருவர் இருந்தார். அவர் சாஸ்திராப்பியாஸங்களினுல் உண்டாகிய ஞானக்கண்களையுடையவராய் இருந்தாலும் முகத்தில் விளங்கும் மானுஷக்கண்களின் குறையையடைந்தவர். பாலியதசை முதல் கண் பார்வையையிழந்த அவ்வந்தணர் தியாகராஜனது பாதாரவிந்த பக்தியைப்பெற்று அதனுல் உளமகிழ்வை அடைந்து வாழ்ந்துவந்தார்.

தான் அடைந்திருக்கும் ஞானச்சிறப்புக்குத் தக்கவாறு அவ்வேதாரணியபுர வாசிகளுக்குப் பரமேசனது தத்துவங்களையும், உலக சிருஷ்டி முறையையும், விரதங்களின் மேன்மையையும், பரமேசனது திருவிழா தர்சன பலன்களையும் ஸாங்கமாய் உபதேசித்து வருவார். ஒவ்வொரு வருஷத்திலும் தக்ஷிணுயன முடிவாகிய தனுர் மாசத்தில் தோற்றும் ஆருத்திரா நக்ஷத்திரத்தில் தியாகேசர் தொண்டர்களுக்குத் தரிசனம் அளிக்கும் சேவையைக் கண்டு பரமானந்தமடைவார். பார்வையையிழந்திருந்த அவ்வந்தணர் ஒரு சமயத்தில் கண் வைத்தியரிடத்தில் தனது கண்களைக்காட்டி அவனுல் கொடுக்கப்பட்ட மருந்தைத் தனது கண்களில் போட்டுக்கொண்டிருந்தார்.

பிறகு அந்நேத்திர சிகித்ஸகன் மற்றொரு மருந்தையளித்து அவ்வந்தணரது கண்களிரண்டையும் கட்டிவைத்து வைத்தியம் செய்து வரலானான்.

அவ்விதமாய் அவ்வந்தணோத்தமர் கண்களிரண்டிலும் மருந்தையணிந்துகொண்டு கண்கட்டையடைந்திருக்கும் தருணத்தில் ஆருத்திரா தர்சன தினம் தோன்றிற்று. அப்புண்ணிய தினத்தில் தியாகேசனது திருமேனி தரிசனத்தை அடையமுடியாமல் போய்விட்டதே என்று மனக்குறையையும் பெருமூச்சையும் அடைந்த அவ்வேதியர் அப்புண்ணிய தினத்தில் காலையில் கதிரவன் கீழ்த்திசையிலுதிக்கும் தருணத்தில் மகாதாரகமந்திரம் தியாகராஜ பஞ்சாக்ஷர மந்திரம், தியாகராஜ கவசம் முதலியவைகளை உச்சரித்துக் கொண்டு அசைவற்ற தனது மனத்தில் தியாகராஜ ஒளியை நினைத்தார். அவ்வண்ணம் ஒப்பற்ற பக்திபூண்ட அவ்வந்தணர் அப்புண்ணியகாலத்தில் தனது வடிவழகை நினைக்கையில் அவரது பக்தியின் சிறப்பைக் கண்டுகளித்த தியாகேசர் மானுஷக்கண்களினால் நேரில் தர்சிப்போர்களுக்கு எவ்வாறு தர்சனமளிப்பாரோ, அதைக்காட்டிலும் நூறுபங்கு அதிகப்பிரகாசமாய் அவ்வந்தணரது மனக்கமலத்தில் ஞானக்கண்களின் வழியாய்த் தோற்றி விளங்கினார்.

சக்கரமேந்திய திருமாலினாலும், பிரமனாலும், வாசவன் முதலிய வானோர்களாலும் தேடியும் காணாத தியாகராஜனது ஸ்வரூபத்தை அன்று காலைநேரத்தில் தனது மனதில் தோன்றக்கண்ட அந்தணர் மிகவும் மகிழ்ச்சி அடைந்து அஞ்சலிசெய்து பணிந்து சற்றுநேரம் தியானத்தினால் மெய்ம்மறந்திருந்து இன்றுதான் தனது சன்மம் பலனையடைந்தது. அருள்புரிவாய் ஈசனே என்று துதி செய்து கொண்டிருந்தார். அத்தருணத்தில் திருவாரூர் நகரில் வந்து கூடிய தொண்டர்களுக்குத் தரிசனமளித்து விளங்கும் தியாகேசரது ஏவலால் ஓர் ஆகாயவாணி

உரைத்ததாவது :— "முனிவர்களுக்கு அருள் செய்யும் தியாகேசனைத் தர்சித்துப் பலனடைவீர்கள். பக்தருக்கு அருள் செய்யும் தியாகேசனைத் தர்சித்துப் பாவத்தை நீக்குவீர்கள். கண் கட்டுண்ட அந்தணருக்குக் காட்சி அளிக்கும் ஈசனைப் பணிந்து சன்மப்பயனையடைவீர்கள்" என்று இவ்விதமாய் கூறிய ஆகாய மொழியைக் கேட்டவர் எல்லோரும் கண் கட்டுண்ட புண்யசீலர் யார் என்று சற்று நேரம் விசாரித்துப் பிறகு வேதாரண்யவாசி பக்தரிடமிருந்து அறிந்துகொள்ளப்பட்ட விஷயமுடையவர்களாய் அவரது பக்தியின் சிறப்புக்கு மேன்மை கூறியும், அவ்விதமாய்த் தொண்டருக்கருள்செய்யும் தியாகேசனைப் பணிந்தும் துதி செய்தும் ஜன்மப் பயனை அடைந்து விளங்கினார்கள்.

## 237. குடத்தில் பெண்ணையீன்ற லீலை.

வாமதேவர் என்னும் மகரிஷியொருவர் தமது பிதாவாகிய லோகாக்ஷி மஹரிஷியின் பாதங்களில் பக்தியைச் செலுத்தி அவரிடமிருந்தே வேதங்களையும், வேதாந்தங்களையும், புராணார்த்தங்களையும், ஈசுவரத்தியான மகிமை முதலியவைகளையும் கற்று வந்தார். அவ்விதமாய் அவ்வாமதேவரானவர் நெடுநாள் வரையில் தமது தந்தையாகிய லோகாக்ஷி மகரிஷியினிடமிருந்தே கல்வி கற்றபிறகு யோகம் செய்யக்கருதி இமாசலத்தையடைய வேண்டுமென்று செய்துவரும் முயற்சியை ஒருநாள் அந்த லோகாக்ஷி மகரிஷி அறிந்துகொண்டார்.

தனது ஏககுமாரனாகிய அவ்வாமதேவன், தன்னிடம் இருந்தே கல்வி கற்றபிறகு சம்சார வாழ்க்கையில் ஆசையற்றவனாய் யோகத்தில் விருப்பம் கொண்டவனாய் இமாசலம் செல்வதற்காகச் செய்துவரும் முயற்சிகளைக்கண்டு தனது அருமைக் குமாரனை அருகிலழைத்து ஆசி கூறிய பிறகு நீ இல்லறத்திலமர்ந்து தர்ம பத்தினியிடத்தில் சத்புத்திரனை யுண்டுபண்ணுவாயாகில் நமது வம்சத்துக்கு

ஏற்பட்டிருக்கும் பித்ருக்களுடைய கடன் நீங்கிவிடும், குமாரர்களை உண்டுபண்ணிய பிறகு வயது முறைக்குத் தகுந்தவாறு யோகம் செய்வதைத் தேவர்களும் சிறந்தது எனக்கூறுவார்கள். ஆகையால் நீ இவ்வயதுக்குத் தக்க வாறு ஒரு மகரிஷியின் பெண்ணை விவாகம் செய்து கொண்டு சிலகாலம் வரையில் இல்லறதர்மத்திலமர்ந்து புத்திரனைப் பெற்றுப் பித்துருக்களுடைய கடனை நீக்கிய பிறகு நீ யோகத்துக்குச் செல்வாய் என்றுபதேசித்தார்.

தந்தையாகிய லோகாக்ஷி மகரிஷியின் உபதேசத்தில் கௌரவம் பாராட்டியபோதிலும் இல்லற வாழ்க்கையில் விசேஷப் பற்றுதலையடையாத அவ்வாமதேவர் தந்தைக்குத் தக்க பதில் கூருமல் நின்ருர். அவ்விஷயத்தையறிந்து கொண்ட மகரிஷியானவர் ஓ நற்புத்திரனே ! நீ இல்லறத் திலமர்ந்து புத்திரோற்பத்தி செய்வதையே நான் குரு தக்ஷிணையாக நினைக்கிறேன் என்று வெகுண்டு கூறினுர், தான் கற்ற கல்விக்குக் குருதக்ஷிணையாக இல்லற தர்மத்தில் அமர்வதையே தனது தந்தை வரிப்பதைக் கேட்ட வாம தேவரானவர் குருவின் பாதத்தில் வீழ்ந்து பணிந்து அவ் வண்ணமே குருதக்ஷிணையளிக்கிறேன். இதற்கு யாதொரு தடையும் இல்லை. ஆயினும் இப்பூவுலகில் மானுஷாம்சமாய் பிறந்த ரிஷிப் பெண்களை நான் விவாகம் செய்துகொள்ள விரும்பவில்லை. தேவாம்சமாய் அயோனிஜையாய்ப் பிறந்த பெண்களையே நான் தேடிப்பார்த்து மணப்பேன். இவ்வண்ணம் நான் செய்வதற்கு நீரே யருள்புரிவீர் என்று வணங்கி நின்ருர்.

இவ்விதமாய்த் தனது குமாரன் கூறுவதைக் கேட்டு இதுவும் ஒரு நன்மையின் பொருட்டாகுமென்று நினைத்து அவருக்கு அவ்வண்ணமே அனுமதி கொடுத்துத் தனது முதிர்ந்த வயதையும் சரீரத்தையும் கவனிக்காமல் தனது குமாரனுடனே அது முதல் ஒவ்வொரு மகரிஷிகளின் ஆச்ரமங்களிலும் சென்று தேடலானுர். எட்டுவருஷ காலங்

கள் செல்லும்வரையில் பற்பல மகரிஷிகளின் ஆச்ரமங்களில் சென்று பலவிதமாய்த் தேடியபோதிலும் அவ்விதப் பெண் அத்தருணத்தில் எங்கும் கிடைக்காமையைக் கண்டு மனக் கலக்கத்தையடைந்த அந்த லோகாக்ஷி மகரிஷியானவர் ஒருநாளிரவில் மூன்றாவது யாமத்தில் நித்திரைவிட்டு எழுந்து தனது மனோரதமும் தன் குமாரனது மனோரதமும் நிறைவேறும்பொருட்டுப் பரமேசனைத் தனது மனதில் நிலை பெறத் தியானித்து, அவ்விதப் பரமேசன் அருளினாலேயே அவ்வித அயோனிஜப் பெண்ணையடைய வேண்டுமென்று நிர்ணயம்செய்து தனது குமாரனுடன் ஒவ்வொரு புண்ய க்ஷேத்திரங்களுக்கும் சென்று பரமேச தர்சனத்தைப் பெற்றுக்கொண்டு திருவாரூர் நகருக்கருகில் வரும் தருணத்தில் அவரது மனம் தெளிவையடைந்தது. பற்பல சகுனங்களும் தோன்றின.

அவ்விஷயங்களையறிந்துகொண்ட அந்த லோகாக்ஷி மகரிஷியானவர் இந்தத் தலத்தின் அதிபதியாகிய தியாகராசனே நமது மனோரதத்தை நிறைவேற்றிவைப்பார் போல் தோற்றுகிறது என்று கருதி நகருள் நுழைந்து புண்ய தீர்த்தங்களில் நீராடி ஜபதபங்களை முடித்துக்கொண்டு ஈசுவர தரிசனத்தைப்பெற்று மனமகிழ்ந்து துதிசெய்து திரும்பி ஒரு பர்ணசாலையில் தங்கியிருந்து அக்கமலாலயத்தின் புண்ய தீர்த்தத்தை ஒரு குடத்தில் ஊற்றி மஹா மஹாமந்திரங்களினால் ஜபம்செய்து தியாகராசனது கருணையின் பெருக்கை எதிர்பார்த்துக்கொண்டு விளங்கினார். அம்மகரிஷியின் பக்தியைக்கண்டு மகிழ்ந்த தியாகேசர் துலா மாச பௌர்ணமி தினத்தில் தனது திவ்யசக்தியினால் அக்குடத்திலிருந்து ஒரு திவ்விய குமாரியை உண்டு பண்ணினார். அவ்விதமாய் அக்குடத்திலிருந்து வெளி வந்து நின்ற குமாரியானவள் அம்மகரிஷியைக்கண்டு பணிந்து அவரது ஆசியைப்பெற்ற பிறகு, அம்மகரிஷியின் உத்திரவினால் அவ்வாமதேவரிஷியைச் சாஸ்திர முறைப்படி அப்பதியில் விவாகம்செய்து தியாகேசன் அருள்பெற்று

விளங்கினார்கள். இவ்விதமாய் ஈசன் லோகாக்ஷி மகரிஷியின் குடத்திலிருந்து ஒரு பெண்ணை எழுப்பியவதிசயத்தைக் கண்டுகளித்துப் போற்றி வாழ்ந்தார்கள்.

## 238. காலில் கண்ணையளித்த லீலை

வஜ்ரகாரு என்னும் மகரிஷியானவர் கைலாய பர்வதத்தின் தாழ்வரையில் அநேக வருஷ காலங்கள் யோகம்செய்தபோதிலும் அவரது மனதில் ஈசுவர தத்துவம் தோன்றவில்லை. அதனால் அந்த வஜ்ரகாரு மகரிஷியானவர் என் செய்வதென்று வாடுகையில் அவரது எதிரில் தோன்றிய நாரதமகரிஷியின் உபதேசப்படி தென்திசையில் விளங்கும் காவிரி நதியையடைந்து அங்கு நூறு வருஷ காலங்கள் தவம்செய்யத் தொடங்கினார்.

இவ்விதமாய் அந்த வஜ்ரகாரு மகரிஷியானவர் கைலாயத்தில் யோகம்செய்த சிறப்பினாலும் தக்ஷிண கங்கை யென்று உலகேத்தவல்ல காவிரியின் கரையில் நூறு வருஷ காலம் வரையில் செய்த தவத்தின் சிறப்பினாலும் மகிழ்ச்சி யடைந்தவராயும் அம்மண்டலாதிபதியாயும் இருக்கும் தியாகேசர் தனது கருணையின் சிறப்பினால் அம்மகரிஷிக்குத் தனது திவ்யமூர்த்தியின் தரிசனத்தையளித்தார். அப் பரமேசனுடைய திவ்ய தரிசனத்தைப் பெற்ற வஜ்ரகாரு மகரிஷியானவர் வேதாந்த வாக்கியங்களினால் ஈசனைப் பலவாறு துதிசெய்து தான் நினைக்கும்பொழுதெல்லாம் உமது திருமேனி என் மனதில் விளங்கவேண்டும். உமது அருளினால் எனது காலில் ஞானக்கண் தோன்றவேண்டும். காச்யபமகரிஷியினிடத்தில் வேதாப்பியாஸம் செய்துவந்த என்னுடைய சிநேகிதர்களுக்கும் உமது தத்துவச் சுடர் விளங்குமாறு அருள்புரிய வேண்டும் என்று வரங்களைக்

கேட்டார். அவரது பக்தியின் சிறப்பினால் மிகவும் உள மகிழ்ந்த தியாகேசர் அவ்வண்ணமே அவர் வேண்டியவாறே வரமளித்து அந்தர்த்தியானத்தையடைந்தார்.

தியாகராஜப் பரம்பொருளிடமிருந்து வரம்பெற்ற அம்மஹரிஷியானவர் அப்பொழுதே தனது வலதுகாலில் தோன்றிய நேத்திரத்தைக் கண்டு மனமகிழ்வுடன் அவ்வித பாத நேத்திரத்தினால் பூலோக தத்துவங்கள் யாவையும் அறிந்துகொண்டு முகத்தில் விளங்கும் இரு கண்களால் ஈசனது திருமேனியைத் தரிசிக்கலானார். ஞானக் கண்ணினால் தியாகராஜனது வேதாந்த தத்துவத்தைக் காணலானார். இவ்விதமாய் அந்த வஜ்ரகாரு மகரிஷிக்கு மூன்றுவித கண்கள் உண்டாகவே த்ரிநேத்ரமகரிஷி என்னும் மற்றொரு பெயர் உண்டாயிற்று. இவ்விதமாய் அம்மகரிஷி ஈசனருளால் த்ரிநேத்ரமகரிஷி என்று பெயர் பெற்று அத்தியாகராசன் விளங்கும் திருப்பதியாகிய திருவாரூர் நகரையடைந்து தேவபீடத்தில் விளங்கும் தியாககல்பகத்தின் பாதத்தைப் பணிந்து ஆனந்தமடைந்து அந்நகரில் யோகம்செய்வதற்காகவும் தவம்செய்வதற்காக வும் வந்து கூடியிருக்கும் அநேக மகரிஷி மண்டலத்துக்கு யோககலையின் முறையையும், தாரணையின் ஆஸ்பதத்தை யும், தவத்தின் நிலை, சுகம், பொறிவென்றல், ஆகாரம் ஒழித்தல், அந்தர்நாடியைச் சுருக்கல் முதலிய முறையையும் உபதேசித்துக்கொண்டு பரமானந்தத்துடன் இருந்தார்.

அத்தகைய தருணத்தில் அந்த வஜ்ரகாரு மகரிஷி ஈசனிடம் வேண்டியதுபோல் தியாகேசனும் அவரது சிநேகிதர்களுக்கும் தனது தத்துவத்தைத் திடீரென்று தோற்றச்செய்யவே, அதனால் எல்லையற்ற ஆச்சரியத்தை யும் மகிழ்வையுமடைந்த புருதர், பரத்வாஜர், குத்ஸர், மேதாதிதி, மிருகச்ருங்கர், கண்வர் முதலான மகரிஷிகள் அந்த வஜ்ரகாரு மகரிஷியானவர் தங்கியிருக்குமிடத்தை யறிந்துகொண்டு அத்திருவாரூர் நகரத்தையடைந்தார்கள்.

அக்னிக்குச் சமமாய் சுடர் வீசப்பெற்றவராய் அங்கு விளங்கும் வஜ்ரகாரு மகரிஷியைக் கண்டு உபசரித்து எவ்வித ச்ரமமுமில்லாமலிருக்கும்பொழுதே தியாகேசனது தத்துவம் தமது மனதில் தோன்றும்படி வரங்கேட்டதைப் பற்றி மிகவும் புகழ்ந்து அம்முனிவருடனே தியாகராசனது திவ்யபாதமலரின் நிழலிலொதுங்கி விடாய்தீர்ந்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்து தேவர்களுக்கும் அரிதாகிய திவ்ய தரிசனத்தையடைந்து நெடுநாள் யோகமுறையிலமர்ந்து பக்திரசத்தையும் ஈசுவர தத்துவச் சிறப்பையும் உலகில் பரவச்செய்து சகல மனுஷ்யர்களுக்கும் உஜ்ஜீவன வழியைச் சாஸ்திர விளக்கினால் காட்டிக்கொடுத்து வாழ்ந்தார்கள்.



## 239. பசுவின் பிரஸவத்துக்குதவி செய்வித்த லீலை

சோழவரசனால் தியாகராசனது திருக்கோயிலுக்குக் கோதானமாக விடப்பட்ட கோக்களில் ஒரு சிறந்த பசுவானது ஈசனது அருளால் கர்ப்பத்தையடைந்திருந்தது. ஒருநாளிரவில் சகலஜனங்களும் நித்திரையைத் தழுவி நன்றாய் உறங்குகையில் அப்பசுவானது பிரஸவவேதனையை அடைந்து சற்றுநேரம் படுத்தும், சற்று நேரம் எழுந்தும் இங்குமங்குமோடியும் தனக்கு நேரிட்ட கர்ப்ப வலியைத் தணித்துக்கொள்ள முயற்சி செய்தது.

அவ்விதம் அத்தேவாலய பசுவானது பிரஸவ சமயத்திலுண்டாகிய கொடிய துன்பத்தை நெடுநேரம் வரையில் சகித்திருந்தும் பிறகு அவ்வித துன்பத்தைப் பொறுக்க முடியாமல் தனது காதுகளையும், இருகொம்பு களையும் பூமியில் தேய்த்து வாலினால் பூமியைத் தட்டிக் கண்ணீர்த் தாரையைச் சொரிந்து ஓ தியாகேச! நான் இவ்வாறு துன்பப்படுவதைத்தணிப்பது உமது கருணைக்குப்

பெரியதோர் காரியமாகுமா? என்று அழுத குரலுடன் வாட்டத்தையடைந்தது. அவ்விதமாய் அத்தேனுவின் அழுகையைக் கேட்டு மனமுருகிய தியாகேசரானவர் அப்பசுவுக்கு நன்மைசெய்யக் கருதி அந்நகரின் மேற்குப் பாகத்தில் வாசம்செய்யும் ஓரிடையனுக்கு கனவில்தோன்றி அப்பிரஸவம் கெடாவண்ணம் மருந்தளிப்பாய் என்று கூறி மறைந்தார். விழித்தெழுந்த அவ்விடையன் அத்தருணத்திலேயே விரைவாய்த் தன்னிடத்திலிருக்கும் மருந்தை எடுத்துக்கொண்டு திருவாரூர் ராஜவீதியை அடைந்து தேவாலயத்தின் எதிரில் நின்றுகொண்டு "ஓ தேவாலய ரக்ஷகர்களே! இப்பொழுது எனது கனவில் தோன்றிய தியாகேசர் சொன்னதுபோலவே நான் மருந்துடன் வந்திருக்கிறேன். இத் தேவாலயத்தில் இருக்கும் பசுவின் பிரஸவ வேதனையைப் போக்கிக் கன்றையும் காப்பாற்றுவதற்குத் தியாகேசர் அருள்புரிவார்போலும். ஆகையால் நீங்கள் வேகமாய் இக்கோபுர வாயிலைத் திறந்து வழியளிப்பீர்கள்" என்று முறையிடலானான்.

இவ்விதமாய் அந்நடுநிசியில் ஓர் இடையன் மருந்து ஏந்திய கையுடன் கூவிப் புலம்புவதைச் செவியுற்ற தொண்டர்கள் பலர் கூடி யோசனைசெய்து தேவாலய அதிகாரிகளின் மூலமாய்க் கோபுரவாயிலின் கதவுகளைத் திறந்து அவ்விடையனுடன் பெருங்கூட்டமாய் ஆலயத்தினுட் புகுந்தார்கள். அவ்வித ஜனங்கள் யாவரும் மாட்டுத் தொழுவத்திற்கு வெகுதூரத்தில் நின்றவர்களாய் அவ்விடையன் செய்யப்போகும் வைத்தியசாதுர்யத்தைப் பார்ப்பதற்காகக் கூட்டமாய்க் கூடியிருந்தார்கள். அவ்விடையனானவன் அப்பசுவின் அருகில்சென்று மருந்தளித்து கைகால்களின் நரம்பைப் பிடித்துக் காமதேனுவென்றே நினைத்து ஒரு முகூர்த்தகாலம் உபசரித்துவந்தான். அதனால் நரம்பின் பிணி குறைந்த அப்பசுவானது கைலாய மலைபோல் வெண்மை நிறம் வாய்ந்து சிறந்த லக்ஷணம்

பொருந்திய காளைக்கன்றை யீன்றது. மறுநாட்காலையில் ஜனங்களெல்லோரும் ஒன்றுகூடி அப்பசுவின் மீது தியா கேசர் கருணைகூர்ந்து அவ்விடையன் மூலமாய் அப் பசு விற்கு உதவிசெய்த சிறப்பைப் பற்றித் துதிசெய்து களித் தார்கள். சகல ஜீவராசிகளின் இடரை நீக்கி நன்மை அளிக்கும் தியாகேசரது திவ்ய லீலையானது எங்கும்பரவ எல்லோரும் தியாகேசனை வழிபட்டு வாழ்ந்துவந்தார்கள்.

## 240. நாவில் பீஜாக்ஷரத்தை எழுதிய லீலை

வாமன புரியில் வசிக்கும் வேதியர் ஒருவர் சத்தியம், கர்மானுஷ்டானம், ஈசுவரபக்தி முதலிய நற்குணங்களுக்கு இருப்பிடமாய் விளங்கியபோதிலும் பூர்வஜன்ம பாவத் தினால் அவருடைய குமாரன் புத்திஹீனனாய்ப் பிறர் ஏச வாடுவதைக்கண்டு சோர்ந்த முகத்துடன் இவ்வித பாவச் செயல் எப்பொழுது குன்றுமோ? என்று ஈசனைத் துதி செய்துகொண்டே வீட்டிலமர்ந்திருக்கலானார்.

இவ்விதமாய் அவ்வந்தணோத்தமர் நாடோறும் தனது குமாரனது நிலைமையைப்பற்றி மனக்கலக்கத்தையடைந்து வெட்கத்தையுமடைந்து முகம் வாடி அக்குமாரனுக்கு எவ்வித நன்மையுரைத்தபோதிலும், அவன் ஏற்றுக் கொள்ளாமலிருப்பதைக்கண்டு தனது குலத்தையும் தனது ஜன்மத்தையும் வெறுத்து நிந்தித்துச் சோகத்துடன் இருந்தார். ஒருநாள் அக்குமாரன் செய்யத்தொடங்கிய காரியங்களைக் கண்டு சினமடைந்த அவ்வந்தணர் வெகுண் டெழுந்து "நீ காட்டுக்குள் நுழைந்து அங்குள்ள மிருகங் களுக்கு உணவாகி உயிரை இழப்பதே நலம்" என்றுரைத்து தனது புத்திரனைப் பலவாறு பழித்து வீட்டிலிருந்து துரத்தி விட்டார். பூர்வஜன்ம பாவத்தினால் தனக்கு நேரிட்ட குறைவைப்பற்றிக் கோபித்த தாய்தந்தையரால் விரட்டப்

பட்ட அவ்வந்தண குமாரன் எல்லாராலும் இகழப் பட்டவனாய்த் தனது மனம்போல் இங்குமங்கும் ஓடிச் சென்று அலைந்து திரிந்து அருகிலுள்ள விஷயங்களை அறிந்துகொள்ள சக்தியற்றவனாய்ப் பசியினாலும், தாகத்தி னாலும் மிகச்சோர்வடைந்து ஊர்கள்தோறும் நுழைந்து தண்ணீரைக் குடித்துப் பசியை நீக்கிக்கொண்டு சென்று கொண்டிருக்கையில் ஈசுவரச் செயலால் அவனது கால்கள் இரண்டும் திருவாரூருக்குச் செல்லும் வழியில் செல்லத் தொடங்கின.

புத்தியற்ற அவ்வந்தண குமாரன் தற்செயலாய்த் திருவாரூர் வழியில் கொஞ்சநேரம் நடந்துசெல்லுகையில் அவனது கண்களின் எதிரில் ஈசனது ஆலயத்தில் விளங்கும் கோபுரங்கள் தோன்றின. வெகு சிறப்புடன் விளங்கும் அக்கோபுரங்களை வெகுதூரத்திலிருந்து கண்களால் கண்ட அவ்வந்தண குமாரன் அக்கோபுரங்களைக்குறித்துத் தனது இருகைகளையும் கூப்ப முயல்வதற்குள் அவனது புத்திக்கு மாறுதல் உண்டாகவே அவன் அப்பொழுது நாரைப் பறவைபோல் கைகளையும் கால்களையும் விரித்துக்கொண்டு தலையைச் சாய்த்துப் பூமியில் வீழ்ந்து படுத்துறங்கலானான். அவ்விதமாய் ஒரு மரத்தினடியில் வீழ்ந்து அயர்ந்து உறங்கும் அவ்வந்தண குமாரன்மீது தனது ஆச்சரிய சக்தியை ஏவ மனக்கருத்தையடைந்த தியாகேசர் அந்நடுப் பகலில் ஒரு கிழமுனிவர் போல் தோன்றி வழி நடையினால் சோர்ந்தவர்போல் தளர்நடையுடனும் ஊன்றிய கோலுடனும் அம்மரத்தடியை அடைந்தார். அம்முனிவர் அப்பொழுது அங்குறங்கும் அவ்வந்தண குமாரனது நாவில் சர்வகலைகளுக்கும் ஆதாரமாகிய சக்தி தேவியின் பீஜாக்ஷரத்தை எழுதி மறைந்தார்.

சில நிமிஷங்கள் சென்றபிறகு கண்விழிப்பையடைந்த அவ்வந்தண குமாரன் அவ்வாறு தியாகேசனால் நாவில் பீஜாக்ஷரத்தை எழுதப்பெற்றபடியால் அந்த க்ஷணத்தி லேயே பிருஹஸ்பதிக்குச் சமமான புத்தியின் சிறப்பைப்

பெற்று முகமலர்ச்சியுடன் எழுந்து தான் படுத்துறங்கும் இடத்தை நன்கு கவனித்ததில் தனது இருப்பிடத்திலிருந்து ஓர் அற்புத காலடியின் வடிவு தோற்றங்கண்டு அவ்வித காலடி செல்லும் வழியைப் பின்பற்றிக்கொண்டு செல்லுகையில், அக்காலடியானது திருவாரூரருகில் மறைந்துவிட்டது. அக்காலடி மறைந்தபோதிலும் எதிரில் தோற்றும் செல்வத் திருவாரூரையடைந்த அவ்வந்தண குமாரன் விரைவாய் அந்நகரில் நுழைந்து கமலைப் பொய்கையில் நீராடி மாலைநேரத்துக்குரிய ஜப முறைகளை முடித்துவிட்டுத் தியாகேசனது சன்னிதானத்தில் பணிந்து அழகிய வாக்கினால் துதிசெய்யும்பொழுது அவரது ஞானச் சிறப்பைக் கண்ட கலைவல்லோரனைவரும் அவ்வந்தண குமாரனுக்குத் தக்க மரியாதை செய்து மறுநாட்காலையில் சோழனுடைய அரசவைக்கு அவ்வந்தண குமாரனையும் அழைத்துச்சென்றார்கள்

அந்த ராஜசபையில் சகல கலை ஞானிகளும் வியக்கத் தக்க ஞானச்சிறப்பைக் கண்ட மகிபாலனால் நன்கு வெகுமதிக்கப்பட்ட அவ்வந்தண குமாரன் அம்மகா ராஜனுக்கு ஆசிகூறி ஆஸ்தான புலவர்களால் ஆதரிக்கப் பட்டவராய் ராஜசன்மானங்களுடன் வாமனபுரியை அடைந்து தனது பிதாவின் பாதத்தில் வீழ்ந்து பணிந்து சகல விஷயங்களையும் கூறினான். இவ்விஷயத்தை அருகிலிருந்தவர்கள் எல்லோரும் நாவில் பீஜாக்ஷரத்தை எழுதிய தியாகராசனை பக்தரின் துணையென்று துதித்து அந்த தியாகராசனுடைய கருணையைப்பற்றியே பேசத் தொடங்கினார்கள்.



## 241. துஷ்ட மந்திரியின் கண்களையழித்த லீலை

கேரளபதியானவன் தியாகராஜ பக்தியினால் அளவற்ற திரவியங்களையும், பட்டாடைகளையும் நவரத்னங்களையும் ஈசனது சன்னிதானத்திலளித்துச் சிறந்த திருவிழாக்களை மாதந்தோறும் நடத்திவைத்துத் தானும் திருவிழாக்களை நேரில் கண்டுகளித்துச் சிலகாலம் புண்ணியபுரியிலே வாசம்செய்துவந்தான். அத்தருணத்தில் அம்மகாராஜனது கோச சாலையிலுள்ள தனங்களும் நவரத்தினங்களும் தர்ம வழியிலும், திருவிழா வழியிலும் அளவற்றதாய்ச் செலவு ஆய்விட்டதே என்று நினைத்த கேரள மந்திரியானவன் இனி கோச சாலையிலிருந்து திரவியமளித்தால் நமது நாடு நாசமாகிவிடும் ஆகையால் இனி தியாகேசனது திருவிழாவுக்குத் தனத்தைச் செலவு செய்யாமல் திரும்பி நமது நாட்டுக்கு வருவதே நலமென்று ஓலை அனுப்பினான். அவ்வோலையைப் படித்த கேரள மகாராசனும் மனங்கலங்கி நின்றான்.

இவ்விஷயமிப்படியிருக்கையில், இவ்வித ஓலையை எழுதியனுப்பிய அக்கேரள துஷ்ட மந்திரியானவன் மறுநாட்காலையில் படுக்கையிலிருந்து எழுந்திருக்கையில் தனது கண்களின் பார்வையை இழந்து பிறவிக் குருடன் போல உலகத் தோற்றத்தையிழந்து பரிதபித்துப் புலம்பலானான். அம்மந்திரியின் மனைவியானவள் அவ்விஷயத்தை அறிந்துகொண்டு அலறி ஓடிவந்து நாதனது பாதத்தில் வீழ்ந்து பணிந்து அவருக்கு ஆறுதலைக் கூறியபிறகு நாத! நீர் நியாயமார்க்கத்துக்கும், தர்மமார்க்கத்துக்கும் விரோதமாய் நடந்தீரா? தேவர்களிடத்திலாவது, முனிவர்களிடத்திலாவது, வேதம் வல்ல வேதியர்களிடத்திலாவது நிந்தனையைச் செலுத்தினீரா? அநியாயத்தீர்ப்பு செய்தீரா? என்று இவ்விதமாகப் பலகேள்விகளைக் கேட்டாள். மனைவியின் இனிய சொல்லைக் காதினால் கேட்ட அம் மந்திரியானவன் ஓலை யெழுதியனுப்பியதைத் தவிர வேறு எவ்விதமாயும்

எவ்வித குற்றத்தையும் செய்யவில்லையே என்று புலம்பினன்

கற்புள்ள மாதர்களில் சிறந்தவளாயும் நற்புத்தி யடைந்தவளாயுமுள்ள அம் மந்திரியின் மனைவியானவள் சற்றுநேரம் ஆலோசனை செய்து தியாகராசனது திருவிழாவின் சிறப்புக்கு உதவிவரும் செல்வத்தைச் செலவுசெய்ய மறுத்த குற்றத்தினலேயே தனது கணவனது கண்கள் குருடாயின போலுமென்று நினைத்து அப்பொழுதே ஒரு பல்லக்கில் ஏறிக்கொண்டு சீக்கிரமாய்ப் புண்ணியபுரியை அடைந்து கமலையில் ஸ்நானம் செய்து நியமத்துடன் போஜனமநந்தாமலே மூன்று காலங்களிலும் தியாகராசனது திவ்ய தர்சனத்தைப் பெற்றும், தியாகராசனது பாத கமலத்தை மனதில் தியானித்துக்கொண்டும் வாசம் செய்து வரலானுள். தனது கணவன்செய்த பிழையைப் பொறுத்துக் கண்களை மீண்டும் அளிக்கவேண்டுமென்று அஞ்சலி செய்துகொண்டு அம்மந்திரியின் மனைவி வாடுகையில், அவளது பக்தியின் சிறப்பைக்கண்ட தியாகேசர் தனது திவ்ய சக்தியினுல் அம்மந்திரிக்கு மறுபடியும் கண்களையளித்தார். நிதியையடைந்தது போல் கண்களை மீளவும் பெற்ற அம்மந்திரியானவன் அப்பொழுதே கேரள தேசத்திலிருந்து புறப்பட்டுத் திருவாரூரையடைந்து தனது கண்களால் தியாகேசனது அழகிய திருமேனியைக் கண்டு துதிசெய்து பற்பல ரத்னங்களினுல் ஈசனது பாத மலரைப் பூசித்து வணங்கிச் சன்மப்பயனையடைந்து தனது மனைவியுடன் சேர்ந்து அந்நகரிலிருக்கும் கேரள மகாராசனது அருகில் வணங்கி நின்று திருவாரூருக்கு வந்து சேரும்படி நேரிட்ட காரணத்தையும், தனது பத்தினி கொண்ட விரதத்தினுல் மீளவும் தனக்குக் கண்களின் ஒளி உண்டான விஷயத்தையும் கூறுகையில் கேரள தேசத்திலிருந்து விரைவாய் வந்த சில தூதர்கள் தமது கோச சாலையில் கனகமாரி உண்டாயிற்று என்று சொன்னர்கள். இவ்வித சம்பவங்களை எல்லாம்

யாடந்தமாக அறிந்த கேரள பூபாலன் சோழ பூபாலன் முதலிய ஜனங்களெல்லோரும் தியாகராசனது கருணையினலேயே இவைகள் உண்டாயிற்றென்று அறிந்து கொண்டு ஈசனைத் துதித்து மகிழ்ந்தார்கள்.

## 242. வேதியரின் திரவியத்தைக் காத்த லீலை.

மதுராபுரியிலுள்ள வேதியர் ஒருவர் வேதாத்தியனம் முதலான கல்விகளைக் கற்றுக்கொண்ட பிறகு இல்லற தர்மத்திலமர்ந்து சில காரியங்களைக் கழித்தபிறகு திவ்ய ஸ்தல யாத்திரையாகச் செல்லலானார். அவ்வண்ணம் செல்லுகையில் நடுவழியில் அக்காட்டில் வாசம் செய்யும் முனிவர்களுடைய சமீபத்தையடைந்து பணிந்து அவர்களால் உபதேசிக்கப்பட்ட ஈசுவர தத்துவங்களையும் அறிந்துகொண்டு தலயாத்திரையாக தேசங்கள்தோறும் செல்லலானார். அவ்வேதியர் ஒருநாள் சில பிராம்மணர்களுடைய கூட்டத்துடன் சேர்ந்து புண்ணியபுரியை அடைந்து அங்கு விளங்கும் தியாகேசனைக்கண்டு துதிசெய்து அவனது லீலையைக் கேட்டுப் பரமானந்தமடைந்து அத்தியாகர சமூர்த்திக்குப் பற்பல தொண்டு செய்வதாக சங்கற்பம் செய்துகொண்டு அன்றுமுதல் ஆஸ்திகரிடம் சென்று திரவியம்தேட ஆரம்பித்தார்.

இவ்விதமாய் அவ்வேதியர் பொருளைச் சேமித்துக் கொண்டே பாண்டிநாட்டைக் கடந்து கேரளநாட்டை அடைந்து அங்குள்ள விவேகிகளுக்கும் தியாகராச பக்தியின் சிறப்பை வெளியிட்டு அவர்களிடமிருந்தும், அக்கேரள பூபாலனிடமிருந்தும் பொருளைச் சேகரித்துக்கொண்டு திரும்புகையில், அவரது வழியில் கொடிய மிருகங்களும், சோரர்களும், வேடர்களும் நிறைந்த காடு ஒன்று குறுக்கிட்டது. தியாகேசனுக்காகத்தான் பலவிடம்

சென்று வெகுநாளாய்ச் சேகரித்த அளவற்ற திரவியங்களை எடுத்துக்கொண்டு அக்காட்டில் நுழைகையில் அவ் வேதியருக்கு மனச்சோர்வும் பயமும் உண்டாயிற்று. அதனால் தளர்நடையையடைந்த அப்பிராமணோத்தமர் நாலைந்து நாட்கள் செல்லும் வரையில் அக்காட்டில் உழன்றபோதிலும் பாண்டிய நாட்டுக்குச் செல்லும் வழியினை அடையவில்லை. அதனால் அவர் பெருமூச்சு விட்டலறி ஓ தியாகேச! வேதாந்தச்சுடரே! தொண்டர் துயரை நீக்கும் ஒஷதிக்கொடியே! ஆனந்த ஸ்வரூபியே! உமது தொண்டுக்காக நான் இவ்விதமாகப் பொருளைத் தேடி எடுத்துவருகிறேனே? இக்கொடிய காட்டில் திரியும் சோரரிடத்திலிருந்து பயமுண்டாகிறதே. நான் என் செய்வேன் என்று இவ்விதமாய் ஈசனை மனக்கமலத்தில் தியானஞ்செய்துகொண்டே உடம்பு மெலிவெய்திய அவ் வேதியர் அவைகளையெல்லாம் ஓரிடத்தில் ஒரு மரத்தடியில் வைத்துவிட்டுத் திருவாரூருக்குத் திரும்பலானார்

அப்பொழுது அவ்வந்தணரது வழியில் நற்பல சகுனங்கள் உண்டாயின அவரது அந்தக்கரணத்தில் களிப்பும் உடம்பில் பலமும் உண்டாயின. அதனால் அவர் தியாகேசனது நாமங்களைச் சொல்லி ஓ தியாகராச! நான் மரத்தடியில் வைத்துத்திரும்பிய பொருளைக்காப்பது உமது கடமையேயாகும். நற்குணங்கள் நிறைந்த தொண்டர்களால் அளிக்கப்பட்ட அப்பொருள் யாவும் உமது பொருளேயாகும். ஆதலால் இக்கொடிய காட்டில் அவைகளைக் காத்தளிப்பது உமது கருணையின் சிறப்பேயாகு மென்றுரைத்துக்கொண்டே ஒரு வழியையடைந்து கொஞ்ச தூரம் செல்லுகையில் அழகிய கோபுரங்களினாலும் மாளிகைகளாலும் விளங்கும் மதுரைப்பதியையடைந்தார். பிறகு அங்கிருந்து சோழராஜனது கொலுமண்டபத்தை அடைந்தார். சோழன் மாளிகை வாயிலையடைந்த அப் பிராமணோத்தமர் தான் தியாகேசனுக்காகப் பொருள்தேடி வந்ததையும் கேரள தேசத்தினருளால் ஒரு கொடிய

காட்டிலுள்ள ஒரு மரத்தடியில் அவைகளை வைத்துத் திரும்பியதையும் உரைத்து அப்பொருள்களை எடுத்துக் கொண்டு வருதற்குத் தூதர்களை அனுப்புவீர் என்று உரைத்துக்கொண்டிருந்தார்.

அத்தகைய தருணத்தில் சில குதிரைக்காரர்கள் அச்சோழ பூபாலனுடைய மண்டபத்தினருகில் வந்திறங்கி வணங்கி நின்றார்கள். அமைச்சர் முதலியவர்களால் யாரென்று விசாரிக்கப்பட்ட அவர்கள் தமது நாதனாகிய சேரள மகாராஜனது கனவில் தோன்றியுரைத்த ஒரு திவ்ய புருஷனுடைய பேச்சைப்போலவே தமது நாதன் தங்கள் மூலமாய் இப்பொருள்களை அனுப்பியிருப்பதாய் உரைத்து இவைகளெல்லாம் ஓர் அந்தணோத்தமர் சேகரித்த பொருளாம் என்றும் சுட்டிக்காட்டி விடை பெற்றுக் கொண்டு தமது இருப்பிடம் செல்லலானார்கள். இவ்வித சம்பவங்களை எல்லாம் கண்டுவியப்படைந்த சோழபூபாலன் அவ்வேதியர், மந்திரிமார் முதலிய ஜனங்கள் யாவரும் அக்கேரள ராஜனது கனவில் தோன்றியுரைத்த புருஷனும் தியாகராசனே அக்கொடிய காட்டில் இவ்வந்தணர் சேகரித்து வைத்த பொருளைக் காத்தவரும் தியாகராசனே என்று இவ்விதமாய் ஈசனது சிறப்பைப்பற்றியும், அவ்வந்தணரது மனத்தூய்மையைப் பற்றியும் துதி செய்து அவ்விதப்பொருள்களால் தியாகராசனுக்குத் தீபபாத்திரங்கள், தட்டுக்கள் முதலிய பணிகளைச் செய்வித்து ஈசனருள் பெற்று மகிழ்ந்து வாழ்ந்தார்கள்.



## 243. ரிஷியை மந்திரியாக்கிய லீலை

பிரதுமதி என்னும் மந்திரியானவன் கோலூன்று கிழவனாயிருந்தபோதிலும் தனது புத்திரனது வயிற்றில் தோன்றிய ஒரு சிசுவை அன்புடன் கண்டு ஆசி கூறியபிறகு அக்கிழமந்திரியும், அவனது குமாரனும் ஈசுவரபக்தியினால்

உயர்பதவியையடைந்தார்கள். இவ்வித சம்பவங்களை யெல்லாம் அறிந்த சோழவரசனானவன் தனது சபைக்கு மந்திரிமார் அற்றிருப்பதையறிந்து முகச்சோர்வுடன் தியாகேசனது சன்னிதானத்தையடைந்து பணிந்து துதி செய்து தனது ராஜகாரியத்தைச் சுமக்கவல்ல மந்திரி சிசுவானது வளரும் வரையில் திறமையுள்ள ஒரு மந்திரி ரத்தினத்தையருள்புரிவீரென்று வேண்டி நின்றான்.

இவ்விதமாய்ச் சோழமகாராசன் மந்திரியையளிப்பீர் என்று வேண்டி நிற்க அவ்வரசனது வேண்டுகோளை நல மென்று எண்ணிய தியாகேசர் ஓர் ஆகாய வாணியினால் பாத்ரபத பௌர்ணமி திதியில் உனது ஆஸ்தான மண்டபத்தின் அருகில் வந்து தோன்றி ஒரு ருத்திராக்ஷ மாலையை யார் உனக்கு அளிக்கிறாரோ அவரையே நீ சில காலம் வரையில் மந்திரி ரத்தினமாகவெண்ணித் தர்ம பரிபாலனம் செய்வாய் என்றுரைத்தார். தியாகராசனது கருணைவெள்ளம் போன்ற இவ்வித ஆகாயவாணியைக் கேட்டுஉ ளமகிழ்வையடைந்த சோழபூபாலன் அம்மூன்று மாத காலங்களை ஈசுவரத் தியானத்துடன் கழித்து வரலானான். குறிப்பிடப்பட்ட பாத்ரபத பூர்ணிமாதிதியும் சுபயோகமும், சுபகரணமும் சேர்ந்து விளங்கும் நன்னாள் தோன்றியது அத்தகைய தினத்தில் அச்சோழபூபாலன் முதலிய பிரதானிகர் விடியற்காலத்தில் கமலைத்தீர்த்தத் தினால் தியாகராஜனுக்குச் சிறந்ததோர் அபிஷேகத்தைச் செய்துவைத்துப பணிந்து அவரது அருளைப் பெற்றுக் கொண்டு ஆஸ்தான மண்டபத்துக்கெதிரில் வேதம் வல்ல வேதியர்களின் பாதாரவிந்தங்களைப் பூசித்து அன்று வரப் போகிற மந்திரியை எதிர்பார்த்து நின்றார்கள். அத்தகைய தருணத்தில் பதஞ்சலி முனிவரை முன்னிட்டுக்கொண்டு அநேக மகரிஷிகளும் அங்குத் தோன்றினார்கள்.

இவ்விதமாய்ச் சோழவரசன் முதலியவர்கள் மந்திரி ரத்தினத்தின் வரவை எதிர்நோக்கிக்கொண்டு திருவாரூரில்

விளங்குகையில், வேணுவனத்தில் விளங்கும் சபிஞ்சல தீர்த்தத்தின் கரையில் நெடுநாளாய் ஈசனைக் குறித்துத் தவம் செய்துகொண்டிருக்கும் ஸாரபிந்து மகரிஷியின் நியமச் சிறப்பைக் கண்டுகளித்த தியாகேசர் அவரது எதிரில் பிரத்தியக்ஷமாய் தோன்றி ஓ மகரிஷியே! உமது தவச் சிறப்பைக் கண்டு மகிழ்வடைந்தேன். மிகவும் கிழவர்களாய் இருக்கும் உமது தந்தைக்கும் அன்னைக்கும் அவ்வாறே நற்பதவியளித்தேன். ஆகிலும் நீர் இந்நிமிஷம் முதல் சோழவரசனுல் உபசரிக்கப்பெற்றவராய் அவ்வரசனது ஆஸ்தான மண்டபத்தில் விளங்கும் மந்திரி பதவியையடைந்து ராஜ்ய காரியத்தை வகிக்கக்கடவீர். பாற்கடலிலுதித்த ஐராவதம்போல் வளர்ந்துவரும் மந்திரியின் சிசுவானது தக்க வயதையடைகையில் நீர் உமது தவச் சிறப்பினுல் கண்டறிந்த க்ஷத்திரிய தர்மங்களின் சாரத்தை நன்குபதேசித்த பிறகு இப்பொழுது நான் உரைத்த பதவியையடைவீர் என்று கூறி ஒரு ருத்திராக்ஷ மாலையையளித்து மறைந்துவிட்டார்.

தனது தவப்பயனுல் தோற்றிய தியாகராஜன் பிரசன்னமாகி இவ்வாறுகூறி மறைந்ததையறிந்துகொண்ட சாரபிந்து மகரிஷியானவர் ஈசனது தர்சனத்தைப் பெற்றதினுல் மகிழ்ந்து கூத்தாடித துதிசெய்து ஈசன் அளித்த அம்மாலையைக் கையில் ஏந்திக்கொண்டு அதிவிரைவாய்ப் புண்யபுரத்துக்கு வரலானுர். அத்தருணத்தில் பதஞ்சலி மகரிஷியானவர் தனது ஞானக்கண்ணினுல் தனது சிஷ்யராகிய சாரபிந்து மகரிஷியானவர் தியாகேசனிடமிருந்து வரம் பெற்றுக்கொண்டு வருவதை அறிந்து பூபாலனிடம் சொல்லவே எதிர்கொண்டு சென்ற சோழன் வேதம் வல்ல வேதியர்கள் மூலமாய் அம்மகரிஷிக்கு பாத்யம் முதலிய உபசாரங்களைச்செய்து வைத்துத் தனது ஆஸ்தானத்துக்கு வரும்படி கூறினுன். அவ்விதம் வந்த அந்த சாரபிந்து ரிஷியானவர் அச்சோழபூபாலனது சபையினருகில் தனது குருவாகிய பதஞ்சலி மக

விளங்கக்கண்டு பலவாறு பணிந்து அவரது ஆசியையும் உத்தரவையும் பெற்றவராய் ஈசனளித்த அந்த ஜப மாலையைப் பூபாலனது கழுத்திலணியச்செய்து அம்மந்திரி பதவியில் தேவகுரு போல் வீற்றிருந்து நீதி தவறாமல் காரியங்களைக்கவனித்து வரலானார்.

இவ்விதம் தவம் செய்துகொண்டிருந்த சாரபிந்து மகரிஷியானவர் ஈசனது ஏவலால் மந்திரியாய் விளங்குகையில் உலகில் எவ்வித இடையூறுகளும் எவருக்கும் நேரிட்டதில்லை அகாலமரணம், வியாதி, மழைக்குறைவு, சோரபயம், பகைவர் பயம், விஷஜந்துக்களின் பயம், அசத்தியம், பாவச்செயல் முதலிய எவ்வித கெடுதியும் உண்டாகவில்லை. சகல ஜனங்களும் மகரிஷியின் அருளைப் பெற்றுச் சந்தோஷமாக இருந்தார்கள். காலமுறையினால் வளர்ந்து வந்த அம்மந்திரி குமாரனுக்குச் சகல கலைகளையும் அம்மகரிஷியே சொல்லிவைத்து அவனிடத்தில் மந்திரி பதவியையொப்படைத்துவிட்டுத் தியாகேசனைத் தரிசனம் செய்து சிலகாலம் தியானத்தில் அமர்ந்து பிறகு ஈசனது பதவியை அடைந்து அமர்போல் விளங்கலானார்.

## 244. மானினால் புத்தியளித்த லீலை

பாடலீ வனத்துக்கருகிலுள்ள வேடர் சேரியில் மிகவும் அஞ்ஞானமுள்ள வேடனொருவன் இருந்தான். அவன் பால்யம் முதல் வேட்டையாடி மிருகங்களைக் கொன்று வயிற்றை நிரப்பிக்கொண்டு காலத்தைக் கழித்து வந்தானே யொழிய எவ்வித சமயத்திலும் தெய்வம் ஒன்றுண்டு என்னும் நினைவே அவரது மனதிலில்லை. இவ்விதமாய் அவ்வேடன் வீணாகக் காலத்தைக் கழித்துக்கொண்டு வருகையில் அவ்வேடனது குடிசையினருகிலுள்ள வழியைப் பற்றிக்கொண்டே அநேக பக்தர்கள் புண்ணிய ஸ்தலங்களுக்குச் செல்வதையும் அங்கிருந்து திரும்பி வருவதையும் அவ்வேடன் நெடுநாளாய்க் கண்டுகொண்டிருந்தான்.

அத்தொண்டர்கள் பாடலீவனேசனையும், நடன பதியையும், தியாகராஜனையும், மற்றுமுள்ள லிங்கங்களையும் தர்சித்துக்கொண்டு தமதிருப்பிடம் திரும்புகையில் அங்குள்ள ஸ்தலங்களின் சிறப்புக்களைப் புகழ்ந்துகொண்டே அவ்வேடனது குடிசைக்கருகிலுள்ள வழியாகவே திரும்புவார்கள். அப்படிப்பட்ட யாத்திரைக்காரர்களுக்கு வினோதத்தையுண்டுபண்ணவேண்டுமென்று அவ்வேடனுக்கு ஒருநாள் ஓர் எண்ணம் உண்டாயிற்று. அப்படிப் பட்ட புத்தியையடைந்த அவ்வேடன் அப்பொழுதே ஒரு சிறந்த வில்லைக் கையினுல் பற்றிக்கொண்டு வனத்தில் நுழைந்து நெருக்கமான புதருள் நுழைந்து தேடிப்பார்த்து ஒரு புள்ளிமானை வலைவீசிப் பிடித்தான். அப்புள்ளிமானை அவ்வேடன் அன்புடன் பிடித்துக்கொண்டுவந்து தனது குடிசையின் எதிரிலுள்ள ஒரு மரத்தில் கட்டிவைத்து, இனிய உணவை அளித்து முக்காலத்திலும் அன்புடன் நோக்கிவந்த தனது மனைவி மக்களுக்கும் அருகிலுள்ள வழிப்போக்கர்களுக்கும் மனக்களிப்பை உண்டுபண்ணும் பொருட்டு இவ்வாறு செய்யலானுன்.

வேடனது கையையடைந்த அம்மானனது முதலில் தன்னைக் கொன்றுவிடுவானே என்று பயத்தையடைந்தது. பிறகு அவ்வேடன் கூறும் நன்மொழிகளைக் கேட்டுக் கொஞ்சம் நம்பிக்கையையடைந்தது. பிறகு தினந்தோறும் அவ்வேடன் செய்துவரும் போஷணையுபசாரங்களைக்கண்டு அவ்வேடன் தன்னைக் கொல்லாமல் அன்புடன் வளர்த்து வருவதற்கு எவ்வித கைம்மாறு அளிப்பேனென்று சிற்சில சமயங்களில் அம்மானனது யோசனைசெய்தது. வேடன் தன்னை அன்புடன் வளர்த்துவருவதற்கு எவ்வித பதில் உபகாரம் செய்வது நலமென்று யோசனை செய்துகொண் டிருக்கும் அம்மானனது அருகிலுள்ள வழியில் செல்லும் ஈசுவர பக்தர்களின் மனமும் கண்களும் மகிழும்படி சிற்சில விதமாய் அற்புதக் கூத்தாடும். துள்ளிப் பாயும்; தாவி

நோக்கும், அன்புடன் கழுத்தை நீட்டி க்ஷேம விசாரிக்கும். மனிதர்களின் பேச்சையறியாத அம்மானனது இவ்விதமாய் அங்கு செல்லும் தொண்டர்களுக்குக் களிப்பையுண்டுபண்ணி அவர்களது தர்சனத்தினாலும், தழுவுதலாலும் அன்புள்ள நோக்கினாலும் கொஞ்சம் கொஞ்சமாய்ப் புண்ணியத்தைச் சம்பாதித்துக் கொண்டு வந்தது.

ஒருநாள் அம்மானனது அவ்வேடனது அஞ்ஞானத்தைக்கண்டு அவனுக்கு எவ்விதத்திலாவது கைம்மாறு செய்யக்கருதி வாயில் தனது கட்டை அவிழ்த்துக்கொண்டு தென்திசையாய் செல்ல ஆரம்பித்தது. அம்மானிடத்தில் வைத்த அளவற்ற அன்பினால் அவ்வேடன் அவ்விதம் செல்லும் அம்மானை அடிக்காமல் அதன் பின் செல்லத்தொடங்கினான். வேடனால் பின் தொடரப்பட்ட அப்புள்ளிமானனது அங்கங்குப்புண்ய தலங்களில் விளங்கும் ஈசுவர மூர்த்திகளின் எதிரில் நின்று பணிந்து சென்று கொண்டே முடிவில் புண்யபுரியையடைந்து தியாகராசனது திருக்கோயிலினுட்புகுந்து அவ்வேடனது கண்களில் தியாகராஜமூர்த்தியின் வடிவழகு புலப்படும்படி நின்றது. தியாகராஜனால் கவரப்பட்ட மனமுடைய மானனது இவ்வாறு அவ்வேடனை வலுவில் இழுத்துக்கொண்டு வந்து தியாகராஜமூர்த்தியின் தர்சனத்தைப்பெறச் செய்வதைப் பார்ப்பதற்காக ஜனங்கள் பலர் அங்குக்கூடியபொழுது ஈசுவர தர்சனத்தைப்பெற்ற அவ்வேடன் அஞ்ஞானத்தை முற்றிலும் மறந்து பக்தியையடைந்து பணிந்து கைகூப்பி அம்மானை வலம் செய்து "ஓ குருவே! எனக்கு ஈசுவர தர்சனத்தையளித்த என தன்புள்ள குருமூர்த்தியே!" என்று துதிசெய்து அதுமுதல் தியாகராஜபக்தனாய் அமர்ந்து திருக்கோயிலுக்குத் தொண்டு செய்து வரலானான். அதையறிந்த அவனது மனைவி மக்களும் அவ்வாறே ஈசுவர பக்தியினால் நன்மையயடைந்தார்கள்.

## 245. பயிரைக் காத்த லீலை

வேதாரணியத்தின் சமீபத்திலுள்ள ஒரு கிராமத்தில் ஒரு கிழவியொருத்தி இருந்தாள். பூர்வஜன்ம பாவத்தினல் அவள் கீழ்ச்சாதியில் பிறந்தபோதிலும் ஈசுவர பக்தியைப் பெற்று எவ்வித காரியங்களைச் செய்யும்பொழுதும் முதலில் கடவுளை வணங்கிவிட்டுப் பிறகுதான் செய்வாள். பரமேச! ஏழைகளின் கற்பகமே! நான் விதைக்கும் இவ்விதைகள் நன்ருய் முளைத்துவளரவேணுமென்றுரைப்பாள். மற்ருெரு சமயத்தில் ஓ பரமேச பக்தர்களே! உங்களது அன்பினல் நானிடும் பயிர் வளர்ச்சியடைந்து பலத்தையளித்து எனது குடும்பத்தைப் போஷிக்கவேண்டுமென்று வேண்டுவாள்.

இவ்விதமாய் அக்கிழவியானவள் வேதியரிடத்திலும், ஈசுவரனிடத்திலும் பக்தியைப்பெற்றுத் தனது குலத்தோரால் அடையப்பட்ட நிலத்தில் வர்ஷாகால பூசையைச் செய்து அவள் நெற்பயிரையும், பூசனி, புடல், அவரை, பாகல் முதலியவகைகளையும் பயிரிட்டு நன்ருகப் பாதுகாத்துவந்தாள். இவ்வண்ணம் அக்கிழவியானவள் தெய்வச் சிந்தனையுடன் செய்துவரும் பயிர்த்தொழிலானது வெகுவாய்ச் சிறந்த வளர்ச்சியடைந்த நற்பலனையளித்து வந்தது. அம்மாது தர்ம சிந்தனையும் நல்லவர்களுக்குக் கொடுத்தலும் முதலிய காரியத்தைச் செய்துவந்தாள். அக்கிழவியானவள் ஒருசமயத்தில் தனது குமாரனை அழைத்துக்கொண்டுபோய்த் தியாகேசனைத் தரிசனம் செய்ததுமுதல் அவளது மனதில் ஈசுவரனுடைய ஸ்வரூபமே நிலைபெற்று விளங்கலாயிற்று. தியாகராஜ பக்தியை அம்மாதும் அவளது குமாரனும் மற்ருெரு சமயத்தில் ஜ்வரத்தினல் பீடிக்கப்பட்டவர்களாய்த் தனது வீட்டில் படுத்தார்கள். அத்தருணத்தில் தனது மனத்தில் தோற்றும் தியாகராஜமூர்த்தியையே தியானித்து ஓ பரமேச! நான் உமது பக்தியுடன் இதுவரையில் பாதுகாத்துவந்த எனது பயிரை இப்போது பாதுகாப்பார்

யாருமிலரே; நானும் எனது மகனும் வியாதியையடைந்து வாடுகிறோமே. எனது பயிரைக் காப்பாற்ற யாரும் இல்லையே என்று ஈசனை வேண்டிக்கொண்டே சிலநாட்கள் செல்லும்வரையில் சக்தியற்றுப் பூமியில் படுத்திருந்தாள்.

களங்கமற்ற மனதுடன் அக்கிழவியினால் அன்புடன் தியானிக்கப்பட்ட தியாகராசர் அவளது வேண்டுகோளின் படியே தான் ஒரு வேலையாள்போல் தோன்றி அவளது நிலத்தைச் சுற்றிப்பார்த்துக்கொண்டு வந்தார். இவ்வாறு சில தினங்கள் செல்லும்வரையில் பயிர்களை ரக்ஷித்த பிறகு சரீராரோக்கியத்தையடைந்த அக்கிழவியும் அவளது மகனும் நிலத்தைச் சுற்றிப்பார்த்து ஆனந்தமடைந்து அவைகளை யாதொரு மிருகங்களும் அழிக்காமலிருப்பதைப் பற்றி வியப்படைந்து இந்நாள் வரையில் இப்பயிர்களைக் காப்பாற்றியவர் யார்? என்று வினவுகையில் தினந் தோறும் ஒரு புருஷன் சற்றுநேரம் தோன்றி மறைவதாய் அருகிலுள்ளார் சொல்லக் கேட்டாள். அம்மாதானவள் அவ்விதம் தோன்றித் தோன்றி மறைந்து தனது பயிரைக் காப்பாற்றியவர் தியாகேசனாகவேயிருக்கவேண்டும் என்று நினைத்துத் தக்க காலத்தில் அவ்வித பயிர்களைக் கொய்து அவ்வருஷத்துக்குத் தனது குடும்பத்துக்கு வேண்டிய தானிய வகைகளை வைத்துக்கொண்டு மற்றவைகளைத் தியாகேசனுக்கே அளிப்பதாகத் துணிந்து அவ்வித தானிய வகைகளை வண்டிகளின் மீதும் பொதி சுமக்கும் காளைகளின் மீதும் ஏற்றிக்கொண்டு திருவாரூர்ப்பதியை அடைந்து தியாகராஜனது தேவாலயத்தின் எதிரில் அச்சரக்குகளை இறக்கித் தனது கருத்தை தேவாலய அதிகாரிக்கு அறிவித்தாள்.

அவ்வதிகாரிகள் அப்பொருள்களை வைத்துக்கொண்டு தியாகேசனுக்குச் சிறந்ததொரு அபிஷேகத்தைச் செய்து வைத்தார்கள். மற்றைய தொண்டர்கள் எல்லோரும் துதிசெய்தார்கள்.

## 246. ராஜகுமாரிக்கு ஜயமளித்த லீலை

ராமபுரியிலிருக்கும் விருச்சாகன் என்னும் வேதியர் ஒருவர் பாலப்பிராயம் முதல் வயிற்றுவலியின் துன்பத்தை அடைந்து மனச்சோர்வுடன் இருக்கையில் காருணிகராகிய ஒரு முனிவர் ஒருநாள் வனத்தில் செல்லுகையில் நடுவழியில் வீழ்ந்து வயிற்று நோயினால் பிடிக்கப்பட்டுப் பூமியில் புரண்டழுதுகொண்டிருக்கும் அவ்வந்தணரைக்கண்டார். அம்முனிவரால் விசாரிக்கப்பட்ட அவ்வந்தணர் எவ்வித ஔஷதங்களாலும் ஜபாதிகளாலும் தனது வயிற்றுவலி நீங்காதிருப்பதற்கு ஆதிகாரணம் என்னவென்று கேட்டார். அம்முனிவர் கருணைகூர்ந்து ஞானதிருஷ்டியினால் அவர் பூர்வ ஜன்மத்தில் செய்த பாவத்தின் கொடுமையறிந்து அதனால் உண்டாகிய வயிற்று நோயைத் தணிப்பதற்குக் கமலாலய புண்யதீர்த்த ஸ்நானமும் தியாகராஜ நாம தியானமுமே சிறந்தது என்று நினைத்து அவ்விஷயத்தை அவ்வந்தணருக்குபதேசித்தார்.

அம்மகாமுனிவருடைய உபதேசத்தைப் பெற்றுக் கொண்ட அவ்வேதியர் நோயின் கொடுமையினால் புழுபோல் துடித்துக்கொண்டே புண்யபுரத்தையடைந்து சகல விருப்பங்களையும் அளிக்கவல்ல அக்கமலாலயத்தில் ஆறு மாதகாலம் வரையில் நித்ய ஸ்நானம செய்து வந்தார். இவ்வாறு அவர் காலையில் ஸ்நானம் செய்தும், மாலை நேரத்தில் தியாகேசனது திருமேனியைத் தர்சித்தும், இடைவிடாது நாம ஸ்மரணை செய்தும் வந்தார். அவ்வண்ணமாய் அவ்வந்தணர் செய்துவருவதைக்கண்ட தியாகேசர் தனது கருணையினால் அவரது வயிற்றுவலியைப் போக்கினார். வயிற்றுவலி தீர்ந்த அவ்வந்தணர் தியாகேசனைப் புகழ்ந்து கொண்டே ஒருநாள் மதுரைமாநகரின் வீதியில் சென்றார்.

அவ்வந்தணோத்தமர் தியாகராஜ பக்தியினால் துள்ளிப் பாடித் தொழுதேத்திக்கொண்டு சொல்லும் சொல்லைக் கேள்வியுற்ற பாண்டிய ராஜன் மகளானவள் தனது

தோழிமார்களின் மூலமாய் அவ்வந்தணரைத் தனதிருப் பிடம் வரச்செய்து அவரது பாதத்தைச் சென்னியில் சூடி அவரது ஆசிபெற்றுக் கேரள ராஜனுடன் யுத்தத்திற்காகச் சென்றிருக்கும் தனது தந்தைக்கு ஜயமுண்டாவதற்கு நற்காரணத்தை விளம்புவீரென்றுரைத்தாள். இவ்விதமாய் அந்த ராஜகுமாரியின் மொழியைக்கேட்டவந்தணர் உனது தந்தையின் இடர் நீங்குவதற்காகத் தியாகராஜ பாத கமலத்தை நினைத்துப் போற்றுவாய் என்று சொல்லி விட்டுத் தனது வழக்கம்போல் இடரை அடைந்தோர் தியாகேசனைப் பணிவீர் என்று கூவிக்கொண்டே வீதியில் செல்லலானார். அந்தணரது உபதேசத்தைப் பெற்றது முதல் அப்பாண்டியராஜன் மகளானவள் சித்திரத்தில் தியாகராஜனின் உருவத்தை எழுதச்செய்து அவரது பாதகமலத்தில் தனது மனதை நிறுத்தித் தியானம் செய்யலானாள். அர்க்கியம், பாத்யம், தூபம், தீபம் முதலிய வைகளால் அத்தியாகராஜனைப் பூஜித்துத் தனது தந்தைக்கு ஜயமளிக்குமாறு வேண்டிவரலானாள்.

இவ்விதமாய் அந்த ராஜகுமாரியானவள் ஒப்பற்ற பக்திபுடன் தனது பாதகமலத்தைப் பூசிஜித்து வருவதைக் கண்ட தியாகேசர் அநேக நாட்களாகப் பகை மன்னருடன் கடும்போர் புரியும் பாண்டியராஜனுக்கு உதவி செய்யக் கருதியவராய் ஒருநாள் அந்த ராஜகுமாரி தூங்குகையில் அவளது கனவில் தோன்றி ஓ ராஜகுமாரியே! நாளை நீ ஒரு ராஜகுமாரன்போல் ஆடைதரித்துக்கொண்டு கையிலேந்திய வில்லுடன் யுத்தகளத்தையடைந்து அடைவாயாகில் உனக்குச் சுலபமாய் ஜயமுண்டாகுமென்றுரைத்து ஓர் அம்பையும் அளித்துவிட்டு மறைந்தார். கண்விழிப்பை அடைந்த பாண்டியன் மகள் தனது கனவில் தோற்றிய விஷயத்தைப்பற்றி வியப்படைந்து அவ்வாறு கனவில் தோன்றியவர்தான் பூஜித்துவரும் தியாகராஜனாகவே இருக்கவேண்டுமென்று நினைத்தும் அருகில் ஈசனருளால்

வீழ்ந்திருந்த சிறந்த அம்பையும் எடுத்துப்பூசித்து நியமத் நடனி நந்து மறுநாட்காலையிலும் வழக்கம்போல் பூஜை செய்துவிட்டு, ஆண் வேடத்தைத் தரித்துக்கொண்டு வில்லையும் எடுத்துக்கொண்டு யுத்தகளத்தையடைந்து தியாகேசனை நினைத்துக்கொண்டே பாணங்களைப் பிரயோகித்தாள். தியாகேசனது கருணையினால் அளிக்கப் பட்ட அவ்வம்பிலிருந்து வெளிக்கிளம்பிய பாணங்கள் நெருப்பைக் கக்கிக்கொண்டு பகைவர் சேனையின்மீது பாய்ந்து வருவதைக்கண்டு பயந்த கேரள பூபாலன் ஓட ஆரம்பித்தான். அவனது சேனைகளும் சிதறி ஓடின. இவ்விதமாய் பகைவரை ஓடச்செய்து ஜயத்தையடைந்த ராஜகுமாரியானவள் தனது தந்தையின் அருகில் சென்று வணங்கி அந்தண நபதேசத்தினால்தான் தியாகேசனைப் பூசித்து வந்ததும் அவ்வீசன் தனது கனவில் தோன்றிச் சிறந்த பாணமொன்று அளித்ததையும் கூறி வெற்றியுடன் மதுராபுரியை அடைந்தாள். இவ்விதமாய்த் தனது புத்திரியின் மூலமாய் வெற்றிபெற்ற வேந்தன் தியாக ராஜனது திருமேனி குளிரும்படி அபிஷேகம் செய்து வைத்து நெடுநாள் சிறப்புடன் வாழ்ந்தான். அந்த ராஜகுமாரியும் தியாகேசனருளால் சோழகுமாரனை மணந்து நற்புதல்வனைப்பெற்று மேன்மையடைந்தாள்.



## 247. பகைவரின் சூதை வெளியிட்ட லீலை

சில சிற்றரசர்கள் ஒன்றுகூடி கமலையில் நீராடி நியம முறையுடன் தியாகராஜனது சன்னிதானத்தையடைந்து பணிந்து துதிசெய்து ஓ தியாகராஜ கற்பகமே! பக்தர்களின் மன விருப்பத்தை நிறைவேற்றிவைப்பது உமது கடமை. நாங்கள் உமது கருணையையே நம்பினோம் என்றிவ்விதமாய் வேண்டிக்கொண்டு தமது இருப்பிடத்தையடைந்து பல வஞ்சகருடன் யோசனைசெய்து அத்தியாகராஜனது

பக்தனுகிய சோழனையழிக்கக் கருதி அவன் வேட்டையாடி வரும் வழியில் ஒரு குழி வெட்டிவைத்து அதில் சோழனை இறக்கச்செய்வதற்காகத் தமது வீரர்களில் சிலரையும் ஏவிவைத்தார்கள்.

சோழனை மாய்க்கவேணுமென்று இவ்வாறு துராலோசனைசெய்த அச்சிற்றரசர் யாவரும் தியாகேசனைத் தியானித்துக்கொண்டிருக்கையில் தெய்வத்தன்மைவாய்ந்த ஒரு சோதிடர் அச்சிற்றரசர்கள் ஒன்றுகூடியிருக்கும் இடத்தையணுகி "ஓ பூபாலர்களே! நான் இங்கு வருகையில் மரங்களிலமர்ந்திருந்த சிற்சில பக்ஷிகளின் கண்ஜாடைகளைக் கண்டேன் அதனுல் எனக்குத் தோன்றுவதுயாதெனில் சத்தியத்துக்கு விரோதமில்லாமல் வேண்டிய விருப்பங்களைத் தியாகேசர் அளிப்பாரேயல்லாது பிறரைக் கெடுப்பதற்காகப் பிரார்த்தனை செய்து அவைகளை நிறைவேற்றிவைக்கமாட்டார். சத்திய வழியையும் தர்ம வழியையும் விளக்குவதற்காகவே புண்யபுரியின் நடுவில் விளங்கும் தியாகராஜர் தொண்டர்களின் நல்விருப்பங்களை நிறைவேற்றி வைப்பாரேயொழிய துராலோசனையை நிறைவேற்றிவைக்கமாட்டார் என்னும் இவ்விஷயத்தைத் தவச் சிறப்பினுல் பூர்வஞானம் பெற்ற மகரிஷிகள் சொல்லக் கேட்ட இப்பறவைகளும் ஒன்றுக்கொன்று பேசிவருவதை யானறிந்தேன். மேலும், இவ்வூரில் யாரோ சிலர் துராலோசனை செய்கிறுர்கள்போலும். அவர்களுடைய அவ்வித துராலோசனை பலிக்காமல் போகக்கடவதென்று பரமேசன் சங்கல்பித்ததுடன் துராலோசனை செய்தவர்களுக்கே தீங்கையே விளைவிப்பாரென்றும் தோன்றுகிறது என்று இவ்விதமாய் அச்சிற்றரசர்களிடத்திலும், அவர்கள் ஒன்று கூடியிருந்த அந்நகரத்திலும் பலர் கேட்குமாறுரைத்துக் கொண்டு சென்றுர்.

தெய்வத்தன்மை வாய்ந்த அச்சோதிடரது சத்திய உரையை மெய்யெனக் கருதாமல் மோகத்தையடைந்த

அப்பூபால சிற்றரசர்கள் தமது சங்கேதப்போலவே வீர படர்கள் மூலமாயும் படுகுழி தோண்டிவைத்துப் பிறகு தாமும் நேரில் பார்ப்போம் என்று நினைத்து அப்படுகுழியின் அருகில் ஒளிந்திருந்தார்கள். தியாகேசர் சோதிடர் மூலமாக அறிவித்தபோதிலும் அவர்கள் அதை அசட்டை செய்யக்கண்டு வெகுண்டு அவர்களுக்கு நற்புத்தி அளிக்க வேண்டுமென்று சங்கல்பம் செய்துகொண்டு தானே அந்த சோழன்போல் உருவமெடுத்துக்கொண்டு படுகுழியின் அருகில் குதிரையின் மீதேறி வருபவர்போல் தோன்றினர். ஈசனது மாயையையறியாத அச்சிற்றரசரில் சிலரும் அவர்களது ஏவலாளிகளில் சிலரும் அவ்விதம் தோற்றியவரை உண்மையான சோழன் என்று நினைத்து விரைவாய்ச் சூழ்ந்துகொண்டு அப்படுகுழியினருகில் நெருங்கி அவனை அங்கு மாய்க்க முயன்றார்கள்.

அத்தருணத்தில் திடீரென்று தியாகேசனாகிய சோழன் மறையவே மோஹத்தையடைந்த அவர்களில் சிலர் தலை சுற்றுதலையடைந்து தாமே அப்படுகுழியில் வீழ்ந்து சிக்கினர். சில வீரர்களும் அவர்களைக் கயிற்றினால் பின்னி அடிக்கலாயினர். சிலர் அவர்களை மாய்க்கவே முயன்றனர். படுகுழியில் தவறி வீழ்ந்த தம்மையே தமது வீரர்கள் மாய்க்க முயலுகிறார்கள் என்றறிந்துகொண்ட அச் சிற்றரசர்கள் யாவரும் அஞ்சி நடுங்கி கைகூப்பி ஓ தியாகேச! அச்சோதிடன் உரைத்தவாரே எங்களது துராலோசனையை நிறைவேற்றிவைக்காமல் எங்களுக்குத் தீங்கையளித்தீரே! எங்களது குற்றத்தை மன்னிக்க வேண்டுமென்று அலறிக்கொண்டு அச்செல்வத் திருவாரூரை அணுகித் தியாகராஜனது சன்னிதானத்தின் எதிரில் கூடி நின்று, ஈச! சத்திய தெய்வமே! எங்களது குற்றத்தை மன்னித்துக் காத்தருளவேண்டும். இனி எங்களது மனதில் இவ்வாறு துராலோசனை தோன்றாவண்ணம் அருள்புரிவீர் என்று துதிசெய்வதைக்கேட்டவரனைவரும் வியப்படைத்து தியாகராஜனது திவ்ய சக்தியைப் பலவாறு புகழ்ந்தார்கள்.

## 248. கத்திப் பரீக்ஷையில் அரசனைக் காத்த லீலை

தேவதாரு வனத்தில் சஞ்சரிக்கும் வீரர்களுள் மிகவும் வல்லமையையும், தோள்வலிமையையும் பெற்று விளங்கும் வீரன் ஒருவன் கத்திச் சண்டை செய்வதில் மிகவும் தேர்ச்சி அடைந்தவன். கயிலாயக் குன்றுபோல் பருத்த தனது தோளினால் தாங்கிக்கொண்டிருக்கும் வீரக்கத்தியினால் அவ்வீரன் போர் விளைவிப்பானாகில் கொடிய தானவர்களும் அரக்கர்களும், தேவர்களும் பின்வாங்குவார்கள். அப்படிப் பட்ட புயபலமடைந்த அவ்வீர மல்லன் பூலோகத்திலுள்ள சகல பூபாலர்களது சமீபத்தையணுகி அவ்வித கத்திச் சண்டையில் தனது தோள்வலி காட்டி அவர்களைத் தோல்வி அடையச்செய்து அவர்களால் நன்கு மதிக்கப்பெற்றவனாய் மற்றொரு சமயத்தில் தென்திசைக்குத் திரும்பலானான்.

விக்கிரம சோழனுடைய புகழைக்கேட்டு அவ்வரச னுடன் கத்திச்சண்டை செய்யக் கருதிச் சோழனுடன் பேசித் தனது தோள்வலிச் சிறப்பைக் காட்டுவீரென்று அழைத்தான் தியாகராஜன் அருளால் ஒப்பற்ற வல்லமையையடைந்து வீரசிங்கமெனப் பெயர்வாய்ந்த அச்சோழனும் அத்தருணத்தில் தீர்க்காலோசனை செய்யாமல் அப்படியே ஆகட்டுமென்று அவ்வீரனுக்கு வாக்களித்துத் தானும் வீரவாளைக் கையில் தரித்துக் கொண்டு அவ்வீரனுடன் கத்தி யுத்தம் செய்யத் தொடங்கினான். அவ்விருவரும் கண்டோர் மனம் கலங்கும் படி யுத்தம் செய்வதைப் பார்த்து சோழனின் பட்டமகிஷி யானவள் தியாகேச! எனது வல்லபனுக்குக் கட்க யுத்தத்தில் ஜயமளிப்பீரென்று அஞ்சலி செய்து திகைத்து நின்றாள்.

சோழன் வெகு திறமையுடன் கத்தியைச் சுழற்றிப் போர் செய்யும் அதிசயத்தைக்கண்ட அம்மல்லவீரன் மிகவும் தனது யுக்தியினால் வலமாறு இடமாறாகவும், மேலும் கீழுமாகவும், பிரதக்ஷிணமாகவும், அப்பிரதக்ஷிண

மாகவும், கத்தியைச் சுழற்றிச்சுழற்றி வீசுகையில் அச் சோழனது கையிலிருந்த கத்தி சற்றுத் தவறுதலையடைந்து அவன் மீதே வீழ்ந்தது. ரணவேகத்தினால் தனது சரீரத்தில் அவ்விதம் கத்தி வீழ்ந்ததையும் அசட்டை செய்து அம்மன்னனும் அவ்வீரனும் போர்புரிந்து சம பலம் உடையவர்களென்று சபையோர்களால் புகழப்பட்டவர் களாய் ஆஸ்தான மண்டபத்தில் களைப்பாற்றிக்கொள்ளும் பொழுது தேவாலயத்திலிருந்து சிலதூதர்களும் பூசகர்களும் அம்மன்னவனது எதிரில் வந்து நின்று தியாகராசனது வலது தோளில் ஒரு கத்தியின் வீசல்பட்டு அதனால் ரத்தம் வருகிறதே என் செய்வோமென்று அலறினார்கள்.

அச்சொல்லைக் கேட்ட சோழன் அப்பொழுது தனது வலது தோளைத் தடவிக்கொள்ளுகையில் கத்தியின் வீசலினால் உண்டாகிய ரத்தத்தைக கண்டவுடனே ஈசனது கோயிலையடைந்து பார்க்கும்பொழுது ஒரு அசரீரியுண்டாகி பூபாலனே! கத்திச் சண்டையில் உனது சரீரத்தில் தவறி வீழ்ந்ததைத் தியாகேசனே தனது வலதுதோளினால் தாங்கி உனது தேவியின் விருப்பப்படி உன்னைக் காத்தருளினார் என்பதைக் கேட்டவர் அனைவரும் காவேரீ தீர்த்தம் முதலிய புண்ணிய தீர்த்தங்களால் திவ்யாபிஷேகம் செய்து வைத்துத் துதிசெய்தார்கள். அவ்வீரனும் சோழனைக் காத்தருளிய தியாகேசனது திவ்ய சக்தியைப்பற்றி வியப் படைந்து தான் பற்பல அரசர்களிடமிருந்து பரிசாகப் பெற்றுவந்த திரவியங்களையெல்லாம் ஈசனுக்கே அர்ப் பணம்செய்து தியாகராஜ பக்தனாகவே அன்றுமுதல் அங்கு நிலைபெற்று வாழலானான்.



## 249. சிஷ்யர்களைப் பிழைப்பித்த லீலை.

முன்பு ஒரு சமயத்தில் பதஞ்சலி மகரிஷியானவர் முக்திக்ஷேத்திரமாகிய தில்லைப்பதியில் அற்புதக் கூத்தனது திவ்ய தர்சனத்தைப் பெற்று வானுளாரும் அடையாத

பரமானந்தத்தையடைந்து அங்குச் சிலகாலம் வசித்து பிறகு கமலாலயத்தையடைந்து பரமேசனைக் குறித்து நெடுநாள்வரையில் யோகம் செய்யலானூர். அம்முனிவர் அவ்வித யோகத்தையும் சாங்கமாய் முடித்து அந்த க்ஷேத்திரத்தின் நாதனுகிய வன்மீக நாதனையும், தியாகேசனையும் தர்சித்து அப் பரஞ் சுடர்களுடைய அற்புத குணங்களையும் பூர்வயுகங்களின் தோற்றுதலையும் அங்குள்ள பக்தர்களுக்கு உபதேசித்து வரலானூர்.

அத்தருணத்தில் அம்முனிவரது உபதேசத்தைக் கேட்பதற்காகக் கணக்கற்ற வேதியர்களும் மகரிஷிகளும் அங்குவந்து கூடினூர்கள். அவ்வித பக்தர்கள் அனைவரும் வேதாந்த சாஸ்திரங்களையும் பதவாக்கிய வாசகபோதனை களையும் நன்முய் உபதேசிக்கும் பொருட்டு அப்பதஞ்சலி மகரிஷியானவர் தனது அம்சமாகிய நாகராஜனை துதி செய்து அவனது கருணையினுல் தான் ஆயிரம் முகங்களை யுடையவராய்த் தனது பர்ணசாலையின் உட்சுவருக்கப்பால் வீற்றிருந்துகொண்டு தனது முகங்களை வெளிக்காட்டாமல் துணியினுல் மறைத்துக்கொண்டு எதிரில் வீற்றிருந்து பக்தர்கள் அனைவருக்கும் வேதாந்தோபதேசம் செய்து வரலானூர்.

இவ்விதமாய் பதஞ்சலி மாமுனிவர் பக்தர்கோஷ்டிக் குள் ஒவ்வொருவரும் தனித்தனியாய்ச் சந்தேகங்களைக் கேட்கும்பொழுதும், அரும்பொருளை அறியும்பொழுதும் தமது பல முகங்களினுல் இடையூறின்றிப் பதிலளித்து ஆனந்தமடைந்து வருகையில் ஒருநாள் ஒரு வேதியன் பர்ணசாலைக்குள் பதஞ்சலி முனிவர் எவ்வாறு வீற்றிருக் கிருர் அதைப் பார்ப்போமென்று கருதி அவரது உத்தரவை மீறி திரைச்சீலையைத் திறந்து பார்த்தான். அங்குப் பல முகங்களுடன் கூடியவராய் விளங்கும் முனிவரைக் கண்டு பயந்த அவ்வேதியன் தனது இருப்பிடத்துக்குத் திரும்பு வதற்கு முன்னமே அம்முனிவர் வெகுண்டு இளம்பி நாகராஜனருளால்தான் பல முகங்களுடன் வீற்றிருந்து

தனித்தனி பதிலுரைப்பதைக் கண்ட அவ்வந்தணன் மீதும் மற்றுமுள்ள சிஷ்யர்களின் மீதும் அடங்காச் சினங்கொண்டு தனது தபோ பலத்தினால் அவர்களை ஒரே பஸ்மமாக்கி விட்டார். பிறகு சிறிது நேரத்திற்குள் கோபத்தின் தணிவையடைந்த பதஞ்சலி முனிவர் ஹா! ஹா! என்று அலறித் தனது சத்சிஷ்யர்களைத் தான் சபித்ததகுறித்து வருத்தமடைந்து கமலாயத்தில் ஸ்நானம்செய்து தியாக ராஜனது பாதாரவிந்தத்தில் பணிந்து துதிசெய்து அக் கமலாலயக் கரையிலேயே கொடிய தவம்செய்யலானார்.

அவ்விதமாய் பன்னிரண்டு வருஷ காலங்கள் கழியும் வரையில் மனதையீசனிடத்தில் செலுத்தித் தவம் செய்து வருவதைக்கண்டு மகிழ்ந்த தியாகராஜர் அவரது எதிரில் பிரசன்னமாய்த் தோன்றி "ஓ பதஞ்சலி மாமுனிவரே! நீர் விரும்பியவாறே உமது சாபத்தினால் பஸ்மமாக மாறிய உமது சிஷ்யர்கள் யாவரும் உயிர் பிழைத்தெழுவதற்காக அன்னாபிஷேக தினத்தில் எனது திருமந்திரத்தை உச்சரித்துக்கொண்டே எனது அபிஷேக தீர்த்தத்தை ப்ரோக்ஷணம் செய்வீர்" என்று உரைத்து மறைந்தார். அம்மாதிரியாகவே அச்சுபதினத்தில் சோழன் முதலிய பக்தர்களினால் நடத்திவைக்கப்பட்ட அபிஷேக ஜலத்தினால் அப்பதஞ்சலி மகரிஷி ஜலத்தைத்தெளிக்கவே அவரது சாபத்தினால் மடிந்த சிஷ்யர்கள் யாவரும் நித்திரையிலிருந்து எழுந்தவர்களைப்போல் கண்விழித்து அருகில் உள்ள குருவைப்பணிந்தார்கள். முனிவரால் தெரிவிக்கப்பட்ட சிஷ்யர்கள் யாவரும் கமலையில் ஸ்நானம் செய்து தியாகேசனைப் பணிந்து வேதாந்த வாக்யங்களினால் துதி செய்து மகிழ்ந்தார்கள்.

இவ்விஷயத்தையறிந்த தொண்டர்கள் யாவரும் எண் திசைகளிலிருந்தும் திருவாரூருக்கு வந்து கூடித் தியாகேசனைத் துதிசெய்தார்கள்.

## 250. கனியையுதிர்த்த லீலை

காவிரி நதியின் கரையில் உள்ளதும், சிறந்ததுமான கும்பகோணத்தில் ஒரு குடியானவன் இருந்தான். அவனது வசத்தில சிறந்த புஷ்பத் தோட்டங்களும், நல்ல நிலங்களும், நற்பசுக்களும் இருந்தன.

இப்படிப்பட்ட செல்வத்தினால் மனக்களிப்பையும், சுகத்தையும் அடைந்த குடியானவன் பூர்வஜன்ம பாவங்களினால் ஈசுவர பக்தியையடையவில்லை. புண்ணிய காலங்களில் கூடும் பெரியோர்கள் கூறும் தத்துவ மொழிகள் அவனது செவியிற் சற்றேனும் நுழையவில்லை. அதனால் அவனது சிறந்த செல்வத்தையும் இகழ்ந்த பெரியோர்கள் அவனை நிந்தனை செய்துவந்தார்கள். இவ்விஷயத்தை அறிந்துகொள்ளாத பக்தர் ஒருவர் ஒருநாள் திருவாரூரிலிருந்து புறப்பட்டு அந்நகரைநாடி அவனது அருகில் சென்று ஓ கிருஷீவலனே! நீ பூர்வஜன்மங்களில் செய்துவந்த புண்ணியத்திரளால் இவ்வுலகில் அழியாச்செல்வத்தை அடைந்து விளங்குகிறாய். இப்படிப்பட்ட மேன்மை பெற்ற நீ பரமேசுவரனது தொண்டுக்குரியதாய் ஏதேனும் ஒரு நற்செயலைச் செய்யலாகாதா என்று கேட்டார். அவ்வுரைக்கு அந்தக்குடியானவன் எவ்வித மறுமொழியும் கூறவில்லை. அதனால் வியப்படைந்த அவர் ஓ தனிகனே! உனது வசத்திலுள்ள தோட்டங்களில் பற்பல கனிகள் பழுத்திருப்பதாய் அறிகிறேன். அவைகளில் கொஞ்சம் தர்மத்துக்கு அளிக்க பிரியம் உண்டா என்றுரைத்தார்.

ஈசுவரனிடத்திலும், ஈசுவரனது பக்தர்களிடத்திலும் அன்புசெலுத்தாமல் மிகவும் லோபியாய் இருந்த அவன் கனிவர்க்கத்தை யாசிப்பதைக் கேட்டு வெகுண்டெழுந்த உரகம்போல் சீறி ஒன்றும் கொடுக்க முடியாது என்று உரைத்துப் பலவாறு பரமேசபக்தர்களை நிந்திக்கலானான். அவ்வேதியர் அவ்வுரையைக் கேட்டும் அவன் சீறிவருவதைப் பார்த்தும் நடுக்கமுற்றும் நற்காரியத்துக்கு உதவிபுரியாத

உனது கனிமரங்கள் யாவும் எனது சரீரம் இப்பொழுது நடுங்குவதுபோல் நடுக்கத்தை அடையக்கடவது என்று உரைத்துக்கொண்டு மற்றோரிடம் செல்லலானார்.

அவ்வண்ணம் உரைத்துக்கொண்டே அத்தொண்டர் சென்றபிறகு அவரது உடம்பு எவ்வளவு நடுக்கத்தை அடைந்ததோ அவ்வண்ணமே அக்குடியானவனது தோட்டத்தில் இருந்த மரங்கள் யாவும் நடுக்கத்தையடைந்து பழங்களையெல்லாம் பூமியில் உதிர்த்துவிட்டன. மறுநாட்காலை நேரத்தில் தனது தோட்டத்தை புற்றுநோக்கிய அவன் திடீரென்று கனிகள் வீழ்தலைக் கண்டு மனச்சோர்வடைந்து அவ்வேதியரை நிந்தித்துப் பேசி அவரது சூதினால் இவ்வாறு ஏற்பட்டதென்றுரைத்து மகாராஜன் அருகில் இவ்வழக்கை யறிவித்தான் அத்தருணத்தில் அக்குடியானவனுடைய மனைவியின் கனவில் தோற்றிய தியாகேசர் முன் தினத்தில் நடந்த வரலாற்றை அறிவிக்கவே திருவாரூர் பக்தர்மீது பழி கூறலாகாதென்று அம்மாதால் தடுக்கப்பட்டவனாய்க் கொண்டு அவ்வித கனிகளையெல்லாம் ஈசனது அபிஷேகத்துக்கும் பிராம் மணரது போஜனத்துக்கும் விநியோகப்படுத்தினான். அக்குடியானவன் அதுமுதல் நற்குணங்களையும் ஈசுவரபக்தியையும் அடைந்து நல்லோர் கூட்டத்துடன் சேர்ந்து நலமெய்தினான். இவ் விஷயத்தையறிந்த ஜனங்கள் யாவரும் அந்த பக்தரது நற்குணங்களுக்காக வியப்படைந்தார்கள்.



## 251. பந்துக்காக பலனளித்த லீலை

சோழனது அரண்மனைக்குச் செல்விபோல் வளர்ந்தோங்கிவரும் ராஜகுமாரியும் அவளது தோழிப் பெண்ணாகிய வேலைக்காரியின் மகளும் சற்றேறக்குறைய ரூபத்திலும், புத்தியிலும், கல்வியிலும் சாதுரியப்பேச்சுக்களிலும் ஒற்றுமையடைந்து விளங்கினார்கள். அத்

தோழியினிடத்தில் இவ்வித நற்குணங்கள் பல நிறை இருந்தபடியால் ராஜகுமாரியானவள் அவளை வேலைக்காரி யின் மகளென்று நிந்தனை செய்யாமல் தனக்குத்தக் தோழி என்று நினைத்துப் பாலிய வயது முதல் அத்தோழி யுடன் விளையாடி வந்தாள். அந்த ராஜகுமாரியும் அவளது தோழியும் அந்தந்த வயதுக்குத்தக்கவாறு பற்பல லீலைகளின் ரஸங்களை அனுபவித்துக்கொண்டும் தியாகேசனது திவ்ய குணங்களைப்பற்றிக் கீர்த்தன செய்துகொண்டும், கமலநாயகியாரின் குணங்களைக் கும் மியினால் புகழ்ந்துகொண்டும், வீணையினால் பாடிக்கொண்டும் உல்லாசமாய்த் தமது பாலியதசையைக் கழித்து வந்தார்கள்.

அப்படிப்பட்ட ராஜகுமாரியும் அவளது தோழியும் ஒருநாள் பந்து விளையாடிக் கொண்டிருக்கையில் இந்தப் பந்து ஆட்டத்தில் நான் ஜயமடைவேனாகில் லோகேச இப்பந்துபோல் சுவர்ணத்தினால் அழகியதொரு பந்தைச் செய்து கமலைநாயகியின் கையில் அளிப்பேன் என்று வேண்டிக்கொண்டாள். அன்றையதினத்தில் அவ் வண்ணமே அந்தப் பந்து விளையாட்டத்தில் ராஜகுமாரி ஜயத்தையடைந்தாள். மறுநாள் அவ்விருவரும் பந்து விளையாடத் தொடங்கியபொழுது அவளது தோழி யானவள் ஓ தியாககற்பகமே! இந்தப் பந்து விளையாட்டத் தில் நான் ஜயமடைவேனாகில் இப்பந்துபோல் மெல்லிய நூலினால் அழகியதொரு பந்து செய்து கமலைநாயகியின் திருக்கையில் அளிப்பேன் என்று வேண்டிக்கொண்டாள். அன்றையதினத்தில் அவ்வண்ணமே அத்தோழி ஜயத்தை யடைந்தாள். அதைக்கண்ட அந்த ராஜகுமாரியானவள் வியப்படைந்து நான் பொற்பந்து அளிப்பேன் என்று வேண்டிக்கொண்டதும் சரியாகுமோ? உனது பந்துக்கும் எனது பந்துக்கும் விலைமதிப்புச் சரியாகுமா! எனது பந்தையே தியாகேசர் அங்கீகரிப்பாரேயல்லாது உனது நூற்பந்தை ஒருபொழுதும் அங்கீகரிக்கமாட்டார் என்று ராஜகுமாரியுரைத்தாள்.

ராஜகுமாரியின் அவ்விதச்சொல்லை செவியிற்கொண்ட அத் தோழிப் பெண்ணானவள் ராஜகுமாரியை நோக்கி தோழி! நீ சொல்லும் சொல்லானது எனக்கு வியப்பை யளிக்கிறது. மனிதர்களுக்குப் பக்ஷபாதமும் பொருளாசை யும் உண்டாவதுபோல் தேவர்களுக்கு உண்டாகுமா? உள் ளன்புடன் அன்பர்கள் அளிக்கும் பொருளைத் தியாகேசன் அங்கீகரிப்பார் என்று பெரியோர் கூறும் பழமொழி பொய்க்குமா? என்றுரைத்தாள். இவ்விஷயமாய் அவ்விரு வர்களுக்கும் மேன்மேலும் தர்க்கமும் மன ஆயாசமும் வளரவே அருகிலுள்ள மற்றத் தோழியர் வந்துகூடி இவ் விஷயத்தைப் பரீக்ஷைசெய்து பார்ப்போமென்றுரைத்துச் சமாதானத்தை நிலைநிறுத்தினார்கள்.

அவ்விதமாய் மனச்சோர்வையும் பிடிவாதத்தையும் நீக்கிய அந்த ராஜகுமாரியானவள் அவ்விஷயத்தை அறிவித்துத் தனது வேண்டுகோளின்படியே அழகியதொரு பொற்பந்தை செய்து வந்தாள். அதைப் பார்த்துக் கொண்டிருந்த ராஜகுமாரியின் தோழியும் அந்நிமிஷம் முதல் அழகிய பட்டுக்களினாலும் சந்திர கிரணம்போல் வெண்மையான நூல் துண்டுகளாலும் தனது சிறிய கையினால் பந்து செய்து முடிக்கலானாள். மறுநாள் அழகிய மாலை நேரத்தில் அந்த ராஜகுமாரியும் அவளது தோழியும் தமது தமது பந்துக்களை ஒரு தட்டில் வைத்துக்கொண்டு அந்தப்புர கன்னிமார் சூழ மங்கள வாத்தியத்துடன் தியாகராஜனது சன்னிதானத்தை யடைந்தார்கள். அத் தருணத்தில் அந்த ராஜகுமாரியானவள் அழகிய மல்லிகை மாலையையணிவித்து தான் கொண்டுவந்த பொற்பந்தையும் கமலைநாயகியின் திருக்கையில் வைத்தாள்.

அதுபோலவே ஏழையாகிய அத்தோழிப் பெண்ணும் பக்தியுடன் தான் கட்டிய அந்நூல் பந்தையும் கமலைநாயகி யின் திருக்கையில் அளித்தாள். கர்ப்பூரச்சுழலெடுக்கையில் அவ்விருவரும் மற்றத் தொண்டர்களும் பரமேசுவரியின்

அவ்வழகிய திருக்கோலத்தைத் தர்சித்து ஆனந்தமடைந்து கைகூப்பி நிற்கையில் தியாகராஜர் ஒரு ஆகாயவாணியை ஏவி பக்தர்கள் அன்புடன் அளிக்கும் பொருளின் தாழ்மைக் குறைவைப் பரமேசனும் பரமேச்வரியும் கருதமாட்டார்கள், அவரவரது மனத்தூய்மையையே சிறப்புக்குக் காரணம், செல்வமும் வறுமையும் காரணமல்லவென்று உரைத்தார். அசரீரியைக் கேட்டவரனைவரும் தியாகராஜனது க ணையப்பற்றிப்பேசி மகிழ்வடைந்தார்கள்.



## 252. முத்து மாலையினால் திருடனை வெளியிட்ட

அவிநாசி நகரில் அரவாபரணன் என்னும் அந்தண உத்தமர் ஒருவர் இருந்தார். அவ்வேதியர் பால்யதசையில் தன்னுடன் வேதபாடம் செய்துவந்த சிவதாசன் முதலிய வேதியர்களினால் தியாகராஜனது திவ்ய சரித்திரத்தைக் கேள்வியுற்று அப்படிப்பட்ட சத்தியமூர்த்தியாகிய தியாக ராஜனைத் தானும் பணியவேணும் என்ற எண்ணங் கொண்டார்.

அரவாபரணன் என்னும் அவ்வேதியர் அநேக வனங் களையும், தேசங்களையும் தாண்டிக் காவிரி சூழ்ந்த நாட்டில் நுழைந்து புண்ணியபுரியையடைந்து கமலையில் நீராடி தியாகராஜனது சன்னிதியில் அஞ்சலிசெய்து ஈசனது திவ்ய தர்சனத்தைப் பெற்றுப் பரமானந்தமடைந்து கூத்தாடி தியாகேச! உமது பாதாரவிந்தத்தில் எனது மனம் பதியுமாறு அருள்புரிவீர் முனிவர் மனதில் விளங்கும் பரஞ்சுடரே! கலியின் கொடுமை ஜனங்களின் மீது படியாமல் காத்தருள்வீர். தொண்டரது துயர் அவனுக்கும் வேத ஸ்வரூபமே! நான் பிறருக்கு உமது ஸ்வரூபத்தின் மகிமையை எடுத்துக்கூறுவதற்கு அருள்புரிவீர் என்று வரத்தைக்கேட்டார். அத்தருணத்தில் அவ்வேதியரது மனதில் நற்களிப்பு உண்டாகவே, திசைகளும் நிர்மலமாய்

விளங்கவே, இவைகளையே நற்சகுனங்களாகக்கொண்டு அவ்வேதியர் தான் வேண்டியவாறே பரமேசர் அருள் புரிந்தார் என்றே நினைத்துக்கொண்டு சில நாட்கள் செல்லும் வரையில் அப்பதியிலமர்ந்து இருந்து க்ஷேத்திர வாச விரதத்தை முடித்துவிட்டுப் புறப்படுகையில், மற்றொரு தடவை தியாகேசனது சமீபத்தையடைந்து தனது விருப்பத்தை நிறைவேற்றி வைப்பீர் என்று அஞ்சலி செய்துவிட்டு வடதிசையை நோக்கிச்சென்றார்.

அவ்வேதியர் அத்திருவாரூர் நகரைவிட்டுச் செல்லுகையில் சோழவரசனால் ஒரு பறையறை ஊரெல்லாம் சாற்றப்பட்டிருந்தது. "சில நாள் தொடங்கிச் சோழனது மாளிகையில் தினந்தோறும் இரவு காலத்தில் சிற்சில பொருள்கள் களவு வழியில் சென்று கொண்டிருக்கின்றன. அவ்வித கள்வனைக் கண்டுபிடித்துக் கொடுப்பவர் விரும்பும் திரவியத்தையளிப்பார்" என்றும் பறையறைந்திருந்த போதிலும், தில்லைநகரில் விளங்கும் நடனபதியின் பாதத்தை தர்சிக்க எண்ணங்கொண்டவராய் அவ்வேதியர் விரைவாய் நடராஜனைப்பணிந்து ஆன்மாவுக்கு நற்பயனைத் தேடிக்கொண்டு மறுபடியும் திருவாரூர்ப்பதியை அடைந்தார். தினந்தோறும் இருவேளையிலும் பறை யறைவித்து வரும் விஷயத்தையறிந்துகொண்ட அவ் வேதியர் தான் அம்மாயக்கள்வனைக் கண்டுபிடிப்பதாய் ஒப்புக்கொண்டு அரசனது உத்தரவைப் பெற்று அரண் மனையின் ஒருபாகத்தில் தங்கித் தியாகேசபஞ்சாக்ஷர மகா மந்திரங்களையுச்சரித்து ஜபம் செய்துகொண்டிருக்கலானார்.

தனது எதிரில் வருகின்றவர் யாவராயினும், அவரிடத் தில் ஏதேனும் குற்றமிருந்தபோதிலும் அவ்விதக் குற்றங் களை அவர்களே ஒப்புக்கொண்டு தன் மூலமாய்த் தியாக கற்பகத்தின் குணங்களில் விருப்பத்தையடையும்படி அவ் வந்தணரீசனிடத்தில் வரங்கேட்டுக்கொண்டிருப்பதினாலும் தியாகராஜ மந்திரத்தை உச்சரித்துக்கொண்டிருக்கும்

மகிமையாலும் அவ்வந்தணரது கண்களில் அன்றிரவில் சில திருடர்கள் புலப்பட்டார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் கலிபுருஷனது கொடுமைத்தொழில் முழுமையையும் பெற்ற பாவிகள் அப்படிப்பட்ட துஷ்ட திருடர்கள் திவ்ய சக்தியினால் அம்மாளிகையிலுள்ள காவலாளிகளை ஏமாற்றி சோரம்செய்து வந்தவர்கள் அச்சோரர்கள் மகாராஜனது அணிகளில் சிறந்ததாகிய ஓர் முத்துமாலையை எடுத்து அதை மற்றோரிடத்தில் வைத்துவிட்டு மறுபடியும் களவு செய்ய உட்புறத்தை நாடினார்கள்.

அச்சோர வீரர்கள் செய்துவந்த அஞ்ஜனத்தின் சக்தியானது அவ்வந்தணரின்மீது பரவாமல் மழுங்கிவிட்டது. தியாகராஜ பக்தராயும், மஹாமந்திரங்களை ஜபிக்கிறவராயும் விளங்கும் அவ்வந்தணோத்தமர் மீது திருடர்களது அஞ்ஜனசக்தி படியாமல் மழுங்கவே கண்விழிப்பையடைந்திருந்த அவ்வந்தணர் மெதுவாய் இருளில் நடந்துசென்று அம்முத்துமாலையைக் கையினால்தொட்டு ஸ்தம்பன மஹாமந்திர சக்தியினால் கட்டுப்படுத்தினார். அதையறியாத அத்திருடர்கள் ஒவ்வொருவரும் அம்மாலையைக் கையினால் எடுத்தபொழுது வேதியரது மந்திரசக்தியினால் அத்திருடர்கள் எல்லோரும் ஸ்தம்பன சக்திக்குட்பட்டு வெள்கி நின்றார்கள். உதய நேரத்தில் வந்துகூடிய அரசன் முதலியவர்களால் வெகுமதிக்கப்பட்ட அவ்வரபாபரணர் என்னும் அந்தணோத்தமர் அச்சோரர்களது மனதைப் பக்திமார்க்கத்தில் திருப்பியும், அவர்களது துர்க்குணங்களை நீக்கியும், பரமேசுவர மந்திரத்தினது பராக்கிரமத்தை வெளிப்படுத்தியும், அச்சோரர்களுக்குத் தியாகராஜதர்சனத்தை அளிப்பித்தும், அவர்கள் சேகரித்த பொருட்குவியலை ஈசனிடம் அளிப்பித்தும் அவர்களுக்குத் தத்துவோபதேசம் செய்துவிட்டுத் தமதிருப்பிடமடைந்தார். இவ்வித அற்புத விஷயங்களைக் கேட்டவரெல்லோரும் ஈசனது மஹிமையையும், மந்திரத்தின் மஹிமையையும் பக்தரது பெருங்குணத்தையும் புகழ்ந்தார்கள்.

## 253. சிங்கத்தினால் பாலனைக்காத்த லீலை

மாமுனிவர்களாலும், யோகிகளாலும், தவசிகளாலும் தேவர்களாலும் தானவர்களாலும் தொழுது ஏத்தப்பட்டு விளங்கும் தியாகராஜனது பாதமலரை நினைத்தவர்களுக்கு எவ்வித பாவங்கள் இருந்தபோதிலும் நசிக்கும். நரகும் ஒழியும். வானவர் விரும்பும் நற்பதவியையடைவார்கள். முத்தியைப்பெற்று மகிழ்ச்சி அடைவார்களென்றும் இவ்விதமான பக்திக்கு ஆதார வசனங்களை நாடோறும் உபதேசித்துக்கொண்டே நாரதமுனிவர் ஒரு சமயத்தில் பூலோகத்தில் ஓரிடத்தில் நிலைபெற்று வாசம் செய்யலானார். அந்நாரதமாமுனிவர் கங்கையும் யமுனையும் கூடி விளங்கும் புண்ணியபூமியில் பிரகாசிக்கும் சுயம்பு லிங்கேசனைத் தர்சித்தபிறகு தெற்கு திசையை நோக்கலானார்.

தென்திசையை நோக்கிச்செல்லும் அந்நாரத மாமுனிவர் விந்திய மலையின் சார்பையடைகையில் அங்கு உள்ள ஒரு குகையின் வாயிலில் அழகியதொரு ராஜ குமாரனையும் அப்பாலகனது அருகில் ஒரு சிங்கத்தையும் கண்டு முதலில் சற்று ஆச்சரியத்தையடைந்தார். பிறகு அச்சிங்கத்தினால் காக்கப்பட்டு வரும் அவ்வரசகுமாரனைக் கண்டு இவ்வண்ணம் நேரிடுவதற்குக் காரணம் என்ன வென்று தனது ஞானதிருஷ்டியினால் யோசித்துப்பார்த்தார். "மகாகாளக்ஷேத்திரேசுவரனது பாதமலரைச் சென்னியில் சூடிவரும் அவந்திதேச மகாராஜன் தக்ஷிணதேசயாத்திரைக் காரரான சில ச்ரோத்திரியர்கள் தியாகேசனது கருணையின் சிறப்பையும் உபதேசித்தது முதல் அவ்வித தியாகராஜனது அழகிய திருமேனியைக் கண்ணாரக்கண்டு களிப்பதற்காக அவ்வரசன் தனது சேனைபரிவாரங்களுடன் புண்ணிய புரியையடைந்து அந்தணர்களுக்கு அநேக தானங்களைச் செய்துவிட்டுத் தியாகேசனது திருமேனியைக்கண்டு மகிழ்வெய்தும் தருணத்தில் சமயத்தைத் தேடிக்கொண்டு இருக்கும் சில திருடர்கள் அவந்தி மகாராஜனது

மாளிகையுள் நுழைந்து பொருளைக் கொள்ளைகொண்டும் நகரத்தில் உள்ளவர்களுக்குத் துன்பம் செய்து வருவதை அறிந்த தியாகேசர் அத்தேசத்தினருகிலுள்ள அவ்விந்திய மலையின் குகையில் நெடுநாளாய் வசிக்கின்ற சிங்கத்தின் மூலமாக அத்திருடர்களைக்கொன்றும். அம்மாளிகையின் உட்புறத்தில் தொட்டிலில் உறங்கும் அம்மகாராஜனது பாலனை அச்சிங்கம் எடுத்துக்காக்கும்படியும் செய்து வைத்தார்" என்றும் நாரதர் ஞான திருஷ்டியில் புலப்பட்டது.

தவமுனிவரில் சிறந்த நாரதமகரிஷியானவர் அந்த ராஜகுமாரனைக் காத்துக்கொண்டிருக்கும் சிங்கத்தின் வரலாற்றை இவ்வண்ணமாய்த் தனது ஞானக்கண்ணினால் அறிந்துகொண்டு அங்கிருந்து ஆகாயமார்க்கமாய் விரைவாய் திருவாரூர்த் திருப்பதியையடைந்து தியாகராஜனது முன்பு துதிசெய்துகொண்டிருக்கும் அவந்தி பூபாலன், சோழ பூபாலன் கணக்கற்ற பக்தர்கள் முதலானவர்களது முன்பு தோன்றி ஈசனை வீணையினால் துதிசெய்தபிறகு சில நாழிகைகளுக்குமுன் விந்தியமலையின் மேற்குச் சாரின் குகை வாயிலில் அந்த ராஜகுமாரனை ஒரு சிங்கம் காத்து வரும்படி தியாகேசர் செய்துவைத்த அற்புத விஷயங்களையெல்லாம் உரைத்துவிட்டு வானுலகம் சென்றார்.

இவ்விதமாய் நாரதமுனிவர் உரைத்ததைச் செவியினால் கேட்ட அவந்தி அரசனும் அப்பொழுதே தியாகேசனை மனதில் ஸ்மரித்துக்கொண்டு சோழ சக்கரவர்த்தியினால் வெகுமதிக்கப்பட்டவனாய்ச் சில தினங்கள் செல்வதற்குள் தனது நகரத்தையடையும்பொழுது அத்தருணத்தில் அச்சிங்கமானது தனது முதுகின்மேல் அப்பாலனையெடுத்து வைத்துக்கொண்டு அவனது சிம்மாசனத்துக்கருகில் வந்து நின்றது. அத்தருணத்தில் மனக்களிப்பையடைந்த அப்பூபாலன் தனது மைந்தன், மனைவி, சுற்றத்தார், நகரஜனங்கள் முதலியவர்களால் சூழப்பட்டவனாய்த் தியாக

ராஜ பரம்பொருளின் அற்புத சக்தியையும் தனக்கு நாரதர் உரைத்த விஷயத்தையும் அவ்வண்ணமே சிங்கம் தோன்றிய விஷயத்தையும புகழ்ந்து கொண்டாடிவருகையில் அவ்வரசனை அச்சிங்கம் வலஞ்செய்துவிட்டுக் காட்டிற்குச் சென்றது. தியாகேசன் அருளால் அதுமுதல் அவ்வவந்தி தேசமுழுமையில் நற்சுபங்கள் உண்டாகி கால மழை, ஈசுவர பக்தி முதலியவைகளால் ஜனங்கள் க்ஷேமத்துடன் வாழத் தொடங்கினார்கள்.



## 254. தம்பதிகளுக்கு விரோதம் செய்தவனையழித்த லீலை.

ஒரு தனிக வைசியனானவன் தனது மனைவியுடன் காவிரியாற்றைக் கடந்து அக்கரையை யடையவேண்டு மென்னும் விருப்பத்துடன் தோணியைச் செலுத்தும் தோணிக்காரனிடம் வந்து தனது மனக்கருத்தை வெளி இட்டான்.

அவ்வைசியனது மனக் கருத்தையறிந்த அச் செம்படவன் அதற்கு ஒத்துக்கொண்டு அவனையும் அவனது மனைவியையும் தனது தோணியிலேற்றிக்கொண்டு ஊன்று கோலினால் தோணியைத் தள்ளிக்கொண்டே காவிரி யாற்றைக் கடந்து செல்ல ஆரம்பித்தான். தனது தோணி யில் அவ்வைசிய தம்பதிகளை ஏற்றிக்கொண்டு காவிரி நதியைக்கடந்து செல்லும் அச்செம்படவன் பாபபுத்தியைப் பெற்று அவ்வைசியனது மனைவியின் அழகைக்கண்டு மதிமயக்கத்தையடைந்து குயில்போன்ற குரலுடைய இள மானே! எனது பாட்டைக்கேட்டு மறுமொழி கூறுவாய் என்று தொடங்கிப் பற்பல சிருங்காரப் பேச்சுகளைப் பேசி வெட்கத்தையும், புத்தியையுமிழந்து காமுகனானான். அச்செம்படவன் கூறுகின்ற துஷ்டப்பேச்சுகளைக் கேட்டு அவ்விருவரும் ஹா! ஹாவென்று கதறி மனந் துடித்து

இப்பாவி யிவ்வண்ணம் கூறுகின்றனே ; ஜகதீச ; லோக நாயகா ! ஆபத்சகாய ! என்று பரமேசனையே துணையாகக் கொண்டு துடிக்கலாயினர்.

அத்தருணத்தில் மேன்மேலும் காம பரவசனாகிய அச் செம்படவன் அவ்வைசியமாதை யுற்று நோக்குகையில் காமனது ஏவலால் தோள்வலிமை குன்றிவிட்டது. கண்கள் சுழன்றன. கையினால் தள்ளும் தோணிக் கோலும் பயனற்று நின்றன. வெள்ளத்தின் வேகத்தினால் அவர்களது தோணியானது வழியை மீறித் தானாகவே இங்கு மங்கும் அலைபோல் அசைதலை அடைந்து ஓடத் தொடங்கியது. முறைப்படி தோணியைச் செலுத்த மதிமயக்கத்தை யடைந்த அச்செம்படவனானவன் ஓ வைசியப்பிரபுவே! நீர்மாத்திரம் இவ்விடத்தில் இறங்கிவிடுவீர். இம்மாதும் நானும் எங்களது இஷ்டம்போல் களித்து விளையாடிய பிறகு உமதருகில் வந்து சேருவோமென்று இவ்வண்ண மாய்ச் சொல்லத்தொடங்கினான். நடுக்காவிரி வெள்ளத்தில் தோணியானது தவறி ஓடுவதையும் அச் செம்படவப் பாவி இவ்வாறு கூறுவதையும் கண்டு மனந்துடித்தலை யடைந்த தம்பதிகள் பெருமூச்சுவிட்டு ஓ லோகநாதா! ஆபத்தைத் தீர்க்கும் துணைவர்களே ! உங்களையே நம்பினோம் எங்களைக் காப்பது உமதுகடமை என்று முழுமையிலும் ஈசனையே நம்பி அழுதுகொண்டே அத்தோணியில் சென்றார்கள்.

அவ்வைசிய தம்பதிகளின் துன்பத்தையறிந்து கொண்ட தியாகேசர் அத்தருணத்திலேயே ஒரு செம்படவ வீரன்போல் தோன்றி மற்றொரு தோணியை அத்தோணிக்கு எதிர்முகமாய்ச் செலுத்திச்சென்று மதிமயக்கத்தை அடைந்த அச்செம்படவனின் அருகில் தோணியைச் செலுத்தி அப்பாவியைத் தோணியில் ஏற்றி அவனது கைகளையும் கால்களையும் கட்டி வீழ்த்திப் பயமுறுத்திக் கரையை அணுகத்தகுந்ததாய் அவ்வளவு வேகத்தில் அத்

தோணியைத் தள்ளிவிட்டுச் செம்படவன்போல் தோன்றிய தியாகேசர் அவ்வைசிய தம்பதிகள் ஏறியிருக்கும் தோணியை நல்மார்க்கத்தில் செலுத்தலானார். அவ்விதமாகத் தோற்றிய தியாகேசர் அத்தம்பதிகளுக்கு நல்வார்த்தைகளையும், தைரியத்தையும் கூறிக்கொண்டே அக்கரையையடைந்தார். செம்படவன் கூறிய நன்மொழிகளைக் கேட்டும் அவனால் தாம் விரும்பிய கரையை அடைந்ததைப் பார்த்தும் மனக்களிப்பையடைந்த அவ்வைசிய தம்பதிகள் அச்செம்படவனுக்குப் பரிசையளிக்க நினைக்கையில் தியாகேசர் அவர்களைப் பார்த்து ஓ நற்குணசாலிகளே! நீங்கள் கமலாலயக்கரையில் விளங்கும் தேவபீடத்தினருகில் இப்பரிசையளிப்பீர்கள் என்று உரைத்துக்கொண்டே திடீரென்று மறைந்துவிட்டார்.

அதைக்கண்ட அவ்வைசிய தம்பதிகள் செம்படவனாக தோன்றி மறைந்தவர் தியாகேசராகவே இருக்குமென்று ஊகித்து அவரது கீர்த்தியைக் கீர்த்தனை செய்துகொண்டு மூன்று யோசனை வழியைத் தாண்டி புண்ணியபுரியில் விளங்கும் தியாகராஜமூர்த்தியை நேரில் தரிசித்து விலையற்ற ரத்தினங்களினால் ஈசனது பாதமலரை அர்ச்சித்து மகிழ்ந்து எமது பயத்தை நீக்கிக் காத்த பரஞ்சுடரே என்று துதித்தார்கள். அத்தருணத்தில் அவ்வாறு கட்டித் தள்ளப்பட்ட செம்படவனைத் தூக்கிக்கொண்டுவந்த சில செம்படவர்கள் தியாகராஜனது கோபுர வாயிலில் வந்து அலறித் தனது வம்சத்திலுதித்த அம்மூடன் மூர்ச்சை தெளிந்து எழுந்திருக்கும்வண்ணம் அருள்புரிவாய் என்று முறையிடவே தியாகேசர் அவனது மூர்ச்சையை நீக்கினார். அதுமுதல் பரதாரங்களைச் சகோதரிகளாகவே சகல ஜனங்களும் நினைத்துத் தியாகராஜனது தண்டனைக்கும் பாவத்துக்கும் பயந்து நல்வழியில் நிலைபெற்று வாழ்ந்தார்கள்.

## 255. துளையில்லா ரத்தினத்தை கோத்துவித்த லீலை

அம்பிகாபுரத்தில் ஆயுர்த்தாமன் என்னும் ஒரு சிற்றரசன் இருந்தான். அவ்வரசனுக்கு அம்பிகை என்னும் குமாரியொருத்தி பிறந்தாள். பூர்வபக்ஷ சந்திரகலைபோல் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்த அந்த ராஜகுமாரியானவள் யௌவனப் பருவத்தையடைந்தது முதல் தனது தந்தையின் கோசசாலைக்கு முத்துக்களையும் ரத்தினங்களையும் உற்று நோக்கி அதில் சிறந்த நீல ரத்னங்களைப் பொறுக்கியெடுத்துத் தனக்கு அதை ஸ்வாதீனமாகக் கொடு என்றுரைப்பாள். மகளிடத்தில் அளவற்ற அன்பு வைத்த பூபாலன் அவள் விரும்பியவாறே சிறந்த நீல ரத்தினங்களையளித்து வந்தான்.

இவ்விதமாய் ஒவ்வொரு சமயங்களிலும் அன்புடன் தந்தையினால் அளிக்கப்பட்ட நீல ரத்தினங்களையெல்லாம் எடுத்துச் சேகரித்து வைத்த அந்த ராஜகுமாரியானவள் மனதில் யோசிக்கலானாள். நமது தந்தையினால் அன்புடன் அளிக்கப்பட்ட இவ்வித நீல ரத்தினங்கள் எல்லாம் மிகவும் சிறந்தவைகள். துளைகளற்ற இவ்வித ரத்தினங்களை நாம் மாலையாகக் கோக்க முயல்வோம். எந்த ஈசனுடைய கருணையினால் துளையற்ற இவைகள் கோர்க்க முடியுமோ? அவ்வீசனது நகரில் விளங்கும் அரசனது மகனையே கணவனாக வரிக்கவேண்டும் என்று இவ்விதமாய்த்தனக்குள் ஒருவாறு நிர்ணயம் செய்துகொண்டு இவ்விஷயத்தைத் தனது தந்தையிடம் தெரிவித்தாள். புத்திரியினது விருப்பம் போலவே அவ்வரசன் தூதர்களையனுப்பி அங்கங்குத் திவ்ய க்ஷேத்திரங்களில் விளங்கும் மகேச்சுவரர்களின் நாமங்களையும் அம்மஹேசனது பாதபக்தி பெற்று விளங்கும் ராஜவம்சத்தையும் விசாரித்துவருப்படி ஏற்பாடு செய்தான்.

தாம்பிரபர்ணீ நதிக்கதிபதியாகிய அம்பிகாபுர அரசனால் அனுப்பப்பட்ட தூதர்கள் அங்கங்குச்சென்று

மகேச்வரமூர்த்திகளின் பெயரை விசாரித்து எழுதிக்கொண்டும் அங்குள்ள பூபால யுவராஜனது ஸ்வரூபத்தையும் சித்திரப்படமெழுதிக்கொண்டும் உலகப்பிரதக்ஷிணமாய் அம்பிகாபுரத்திற்குத் திரும்பி வந்தார்கள். அவ்வாறு தூதர்களால் அளிக்கப்பட்ட பத்திரிகையிலுள்ள நாமத்தையுச்சரித்துக்கொண்டும், அவ்விசனே மனதில் நினைத்துக்கொண்டும் அந்த ராஜகுமாரியானவள் துளையற்ற ரத்தினங்களைக் கோர்க்க முயன்றாள். க்ஷேத்திர மூர்த்திகளின் நாமங்களை உச்சரித்துக்கொண்டே அந்த ராஜகுமாரி நீல ரத்தினங்களைக்கோர்க்க முயன்றவை வீணாயினவென்று மதிகலங்கிச் சற்று நேரம் திகைத்து நின்றிருந்த பிறகு தியாகேசமூர்த்தியே! அருள்புரிவீர். இம்மணிகள் யாவும் நூல்பெற்ற ஹாரம்போல் நிற்கவேணும் என்று வேண்டி ஒரு ரத்தினத்தை மற்றொரு ரத்தினத்துடன் கோர்க்கையில் அவைகள் ஒன்றுக்கொன்று பிடிப்பையடைந்து விளங்கிற்று.

அதனால் தன்னிடத்தில் தியாகேசன் அருள்செய்தார் என்று முகமலர்ச்சியையும், மனக்களிப்பையுமடைந்த ராஜகுமாரியானவள் மூன்று, நான்கு என்று எண்ணிக்கொண்டே துளையற்ற அந்த நூறு ரத்தினங்களையும் அழகாய்க் கோர்த்து முடித்துவிட்டாள். அம்மாலையைத் தியாகராஜனது திருமார்புக்கே அளிக்கும்படி அம்மாலையையும், அத்தியாகராஜனத்திடத்தில் பக்திபெற்று விளங்கும் சோழ குமாரனது மார்பில் அணியக்கூடிய சுயம்வர மாலையையும் தூதர்மூலமாய் புண்ணியபுரிக்கு அனுப்பலானாள். அவ்விஷயத்தைத் தூதர்கள் சொல்லக்கேட்ட சோழவரசன் துளையில்லா ரத்தினத்தை வெகு அழகாய் ராஜகுமாரியினால் கோர்த்துவித்த தியாகராஜனுக்கே அச்சிறந்த நவரத்தின மாலையை அளித்துத் தனது குமாரனுக்கு அந்த ராஜகுமாரியை மணம்செய்துவைக்கக் கருதி ஏற்பாடு செய்வித்தான். அத்தருணத்தில் தியாகராஜனேவிய அசரீரி வாக்கைக் கேட்டவர்களெல்லோரும் களிப்படைந்து

அவ்வாறே அவ்விவாகத்தை நிறைவேற்றிவைத்தார்கள், அவ்விதமாய் மாலை கோர்த்த ராஜகுமாரியும் சோழ ராஜகுமாரனும் ஒன்றுசேர்ந்து தேவவேதிகையிலீசனைத் தர்சித்து நன்மக்களையும் சிறந்த செல்வத்தையும், நற்புகழையும், தியாகேச பக்தியையும் பெற்றுச் சிறப்புடன் வாழ்ந்தார்கள்.



## 256. தேனுவின் அழுகையைத் தேற்றிய லீலை

சோழ நாட்டை சோழ வம்சத்தில் உதித்த மநுநீதிச் சோழன் என்னும் மகாராஜன் நற்கீர்த்தியுடன் சிம்மாஸனத்தை அடைந்து ஆட்சிசெய்துவரலானான். மிகவும் வினயமுடையவனையும், வில்வித்தையில் நிபுணனையும், பொறுமையற்றவனையும், கோபமற்றவனையும், தர்மார்த்த காமாதி புருஷார்த்தங்களின் உள் மர்மத்தைக் கற்றறிந்தவனையும், ஈசுவர பக்தி பெற்றவனையும், தானசீலனையும் விளங்கும் அச்சோழனது நற்குணங்களைக் கண்டவர் எல்லோரும் ஆதிமனுவென்றே நினைத்து அவ்வரசனது வெண்குடை நிழலிலொதுங்கி இடரின்றி வாழ்ந்து வந்தார்கள்.

சகல ஜீவராசிகளையும் தனது மக்களெனவே நினைத்து பரிவுடன் பாதுகாத்துவருபவனையும் திக்பாலகருக்குச் சமானமாயும் விளங்கும் அம்மநுநீதிச் சோழ மகாராஜனது மனக்கருத்தை உலகில் நன்ருய்ப் பரவச்செய்யவேண்டும் என்று சங்கல்பம் செய்துகொண்ட தியாகேசர் தான் தேனுவாகவும் கன்ருகவும் உருவமெடுத்துக்கொண்டு அத்திருவாரூர் ராஜவீதியில் செல்லலானார். ஈசனது கட்டளைப்படியே அஷ்டதிக்பாலரும் அத்தருணத்தில் உதவி செய்வதற்காகவும் அப்பூபாலனது மனதைப் பரீக்ஷிப்பதற்காகவும் மறைந்து தோன்றினார்கள் அவ்விதம் தெய்வக் தன்மை வாய்ந்த அத்தேனுவானது தனது அருமைத்

கன்றையும் அழைத்துக்கொண்டுபோகையில் அச்சோழனது குமாரன் ரதமேறிக்கொண்டு வேட்டைக்காக வனத்திற்குச் செல்லலானான். அச்சோழ பூபாலனது குமாரன் ஏறிச் செல்லும் ரதமானது திடீரென்று விரைவாய் ஓடவும் அத்தகைய தருணத்திலேயே அத்தேனுவின் கன்றும் அத் தேரின் சக்கரத்தருகில் சென்று தனது உயிரை இழக்கும்படி நேரிட்டது.

இவ்விதமாய் ராஜகுமாரனது தேர்ச்சக்கரத்தினால் மாய்க்கப்பட்ட தனது கன்றைக்கண்டு விம்மி விம்மி அழத் தொடங்கிய அத்தேனுவானது அச்சோழனது அரண் மனையையடைந்து அங்கு விளங்கும் ஆராய்ச்சி மணியைத் தனது கொம்பினால் ஒலிக்கச்செய்து நின்றது. அவ்வித அபாய ஒலியைக்கேட்டு மனக்கொதிப்பையடைந்த மனு நீதிச்சோழன் விரைவாய் ஓடிவந்து அத்தேனுவையும் அதனது கன்றுக்குட்டியானது தன் மகனது தேரினால் மாய்க்கப்பட்டதையும் கண்டு சற்றுநேரம் பெருமூச்சுவிட்டு அழுது மந்திரி சிகாமணிகளுடன் ஆலோசனை செய்து தனது குமாரனையும் அவ்வண்ணமே அத்தேனுவின் மனக்குறை நீங்கும் வண்ணம் அந்தத்தேரின் சக்கரவட்டத்திலேயே மாய்ப்பீர்கள் என்று கட்டளையிட்டான்.

அம்மனுநீதிச்சோழன் இவ்வாறு நீதிமுறை தவறாமல் தனது மைந்தனை வதைக்கக்கட்டளையிட்டபடியால் அது போலவே வீரர்கள் அம்மைந்தனுக்குத் தந்தையின் உத்திரவை அறிவித்தார்கள். தனது தேரின் வேகத்தினால் பசுவின் கன்று இறந்துவிட்டதற்குப் பதிலாக தனது உயிரையும் அவ்வண்ணமே மாய்ப்பதில் மிகவும் முக மலர்ச்சியையடைந்த அந்த ராஜகுமாரன் ஓ! தியாக கற்பகமே எப்பிறப்பிலும் உமது பாத பக்தி எனது மனதில் பதியுமாறு அருள் புரிவீர் என்றுரைத்துக் கொண்டே தனது சென்னியைத் தேரின் சக்கரத்தினருகில் நீட்டினான். அக்குமாரனது மனச்சுத்தியையும் அச்சோழனது நீதி

முறையையும் கண்டு மகிழ்ந்த தியாகராஜன் தேவர்கள் மூலமாய் அவர்களின் மீது மலர்மாரியைப் பொழியச் செய்தார். அத்தருணத்தில் அத்தேனுவும் கன்றும் திடீரென்று மறைந்துவிட்டன. இவ்விஷயங்களையெல்லாம் கண்டிருந்த அப்புண்யபுரவாசிகளனைவரும் வியப்படைந்து அரசனுக்கு ஆசிகூறி ஈசனைப்போற்றிப் பணிந்து பரமானந்தமடைந்து தியாகேசன் அருள்பெற்று இடரின்றி வாழ்ந்தார்கள்.



## 257. விருஷபத்துக்கு அருள்செய்த லீலை

கௌரீ என்னும் கிராமத்தில் வேதியர் ஒருவர் தனது கிருஷி வேலையில் ஒரு கிழ எருதை உபயோகித்துவரும்படி கட்டளையிட்டுவந்தார். வேலை செய்து செய்து வலிமையை இழந்திருந்த அக்கிழ எருவானது தன்னால் கூடும்வரையில் காரியங்களைச் செய்துவருகையில், ஒருநாள் மிகவும் துர்ப் பலத்தையடைந்திருக்கையில் உழவுத்தொழிலில் பூட்டப் பட்ட ரிஷபமானது தனது பலக்குறைவைப் பற்றியும் கடின வேலையின் முயற்சியைப் பற்றியும் மனச்சோர்வை அடைந்து முகம் வாடிக் கண்ணீர்மல்க நின்று தென் திசையை உற்று நோக்கித் தனக்கு யார் உதவிபுரிவார் என்று ஏக்கத்தையடைந்திருந்தது.

அத்தகைய ரிஷபத்தின் வாட்டத்தை நீக்கக் கருதிய தியாகேசர் தன்னைப் பணிந்து விடைபெற்றுக்கொண்டு ஆகாயமார்க்கமாய் விமானமேறிச் செல்லும் ஒரு கந்தர்வன் மூலமாய் அக்காளையினது காதில் தனது பீடாதார சக்தி மந்திரத்தை உபதேசிக்கச் செய்தார். அவ்வண்ணமே அக் கந்தர்வனிடமிருந்து மந்திரோபதேசத்தையடைந்த காளை யானது முகமலர்ச்சியையடைந்ததும் தளர்வடைந்த ஒவ்வொரு நாடிகளிலும் பலத்தையடைந்தும் மனதில் ஈசுவர பக்தியைப் பெற்றும் அவ்வுழவுத் தொழிலை ஒரு

முகூர்த்த நேரத்துக்குள் முடித்துவிட்டு அதிவிரைவாய் ஓடிச்சென்று தனது நாதனுகிய அவ்வேதியரது அருகில் சென்று அவரை வலஞ்செய்து வணங்கி நின்றது. வயதினுல் முதிர்ந்த அவ்விருஷபமானது ஒரு கந்தர்வனிடமிருந்து காதில் உரைக்கப்பட்ட ஏதோ ஒரு அபூர்வ மந்திரத்தினுல் மிகவும் சிறப்படைந்து சுலபமாய் உழவை முடித்துத் திரும்பியதைக் கண்டிருந்த வேலைக்காரரனைவரும் அவ் விஷயத்தை அவ்வந்தணரிடம் அறிவித்தார்கள். அவ் வந்தணரும் அதைக்கேட்டு வியப்படைந்திருக்கையில் அவ் வந்தணரது பித்ரு ச்ராத்த காரியத்தை நிவேற்றி வைப்பதற்காக அவரால் கூப்பிடப்பட்ட மற்றொரு வேதியர் திருவாரூரிலிருந்து அவரது வீட்டையடைந்தார்.

தக்க காலத்தில் முறைப்படி பித்ரு ச்ராத்த காரியத்தை அவ்வந்தணர் ஆரம்பிக்கும் தருணத்தில் அத் திருவாரூர் அந்தணர் கூறியதாவது: கேளீர் பிராமண ச்ரேஷ்டரே! இன்று நான் காலை கமலையில் ஸ்நானம் செய்து ஜபத்தை முடித்துத் தியாகேசனைத் தரிசனம் செய்துவிட்டு இவ்வூருக்கு வரும் வழியில் ஒரு மரத்தடியில் படுத்திருந்த சிறந்த தொரு தேனுவைக்கண்டு நான் பிரதக்ஷிணம் செய்து கைகூப்பிவிட்டு வருகையில் அப் பசுவானது என்னைக்கண்டு சிரித்தது. அதையறிந்த நான் மறுபடியும் அப்பசுவை வணங்கித் துதிசெய்து அவ்விதச் சிரிப்புக்குக் காரணத்தைக்கேட்கையில் உழவுத்தொழிலில் ஒரு கிழ எருதை வைத்துக்கொண்டு வேலை வாங்கிவரும் தயையற்ற வேதியன் வீட்டில் நீர் உண்ணச்செல்வது எனக்கு மிகவும் ஆச்சரியத்தைத் தருகின்றது என்று உரைத்ததைக் கேட்ட நான் விரைவாய் இங்கு வந்து இவ் விஷயத்தை உமக்கறிவித்தேன் என்றுரைத்தார். காலை நேரத்தில் தமது கிழ எருது விஷயமாய் வேலைக்காரர் உரைத்ததையும், இவ்வந்தணர் கூறிய விஷயத்தையும் யோசித்துப்பார்த்த அவ்வேதியர் அத்தருணத்தில் நடத்த வேண்டிய பித்ரு காரியத்தை மனக்குறைவுடன செய்து

முடித்துவிட்டு அன்றுமாலைப்பொழுதிலேயே திருவாரூர்ப் பதியையடைந்து தியாகேசனைப் பணிந்து தான் அவ்வெருதுக்குச் செய்த குற்றத்தை மன்னித்துத் தன்னைக் காத்தருளவேண்டும் என்று வேண்டி நின்றார்.

தயாநிதியாகிய தியாகேசர் அத்தருணத்தில் ஓர் அசரீர் வாக்கினால் கிழத்தன்மையினால் வலிகுறைந்து வேலையில் வாடும் அவ்வெருதின் தாய்ப்பசுவினால் பிரார்த்திக்கப்பட்ட தான் அவ்வெருதின் மீது கருணைகூர்ந்து கந்தர்வன் மூலமாய் அருள் செய்த விஷயத்தையும் அந்த எருதை உழவுத் தொழிலில் ஏவிய அவ்வந்தணரது பாவம் நீங்கும்பொருட்டு மகாதாரக மந்திரத்தையும் கூறினார். அதைக்கேட்ட அவ் வேதியர் மிகவும் நடுங்கி அவ்வாறே ஒருபக்ஷம் வரையில் நியம ஸ்நானம் செய்து மகாதாரக மந்திர ஜபத்தையும் நிறைவேற்றி ஈசனைத்துதித்துத் தனது பாவத்தை நீக்கி சுத்தராய் விளங்கலானார். அவ்வந்தணரது பித்ருக்களும் பரமானந்தமடைந்தார்கள். இவ்விஷயத்தை அறிந்த ஜனங்கள் யாவரும் அதுமுதல் பிராணிகளிடத்தில் அன்பு உடையவர்களாய் விளங்கலானார்கள். அதனால் பசு நாதனும் விருஷப நாதனும் உலகில் நன்மையைப் பெருக்கினார்கள்.



## 258. புஷ்பத்தை வாடாமல் காத்த லீலை.

ஒரு சமயம் சிவபாதசேகரன் என்னும் மகாராஜன் காஞ்சிமாநகரில் தர்மாஸனத்தில் விளங்குகையில் அவ் வரசனது குமாரியானவள் யௌவனப் பருவத்தையடைந்து சுயம்வரத்தில் தான் தேடிய கலிங்க யுவராஜனைக் கணவனாகப்பெற்று நற் சுப முகூர்த்தத்தில் அவனை யணுகி அவனை வணங்கி ஓ மகாராஜனே! அற்பசரசமுள்ள இம் மானிடவாழ்க்கையிலமர்ந்து அஞ்ஞானிகளாவதற்கு முன்னம் நாமிருவம் ஈசுவர தத்துவத்தைக் களங்கமறக் கற்றுக்கொள்வது மிகவும் நலமல்லவா என்று வினவினாள்.

கன்னிகாந்தப் புரத்தில் பாலிய வயதிலேயே பற்பல சாஸ்திரங்களின் பயிற்சியைச் செய்து நல்ல ஞானம் பெற்ற அந்த ராஜகுமாரியானவள் இவ்விதமாயுரைப் பதைச் செவிபிற்கொண்ட அவளது கணவனும் சற்று நேரம் யோசனைசெய்து அவளது மனவிருப்பம் போலவே செய்வது நலமென்று கருதினன். அன்று முதல் அந்த ராஜதம்பதிகளிருவரும் தமது ஐம்புலன்களின் ஓட்டத்தை வென்று முனிவர்போல் தூய்மையான மனதையடைந்து குரு ஜனங்களின் உத்தரவு பெற்றுக்கொண்டு அளவற்ற திரவியங்களையும், காவற்படை வீரர்களையும், புலவர்களையும் பெற்று பல்லக்கின்மீது ஏறி க்ஷேத்திராடனம் செய்து ஈசுவர தத்துவத்தையடைந்து வருவதாக நிர்ணயம் செய்து யாத்திரை செல்லத்தொடங்கினார்கள். தமதுடன் வரும் பெரியோர்களின் மூலமாயும் அங்கங்கு திவ்யப் பதிகளில் விளங்கும் பெரியோர்கள் மூலமாயும் அந்தந்த க்ஷேத்திரங்களின் பெருமையையறிந்துகொண்டும், அங்கங்கு விளங்கும் லிங்கேச மூர்த்திகளின் தர்சனத்தைப் பெற்றுக் கொண்டும் வேதம்வல்ல வேதியர்களுக்கு பல தானங்களைச் செய்துகொண்டும், பற்பல புண்ணிய தீர்த்தங்களில் நீராடியும், தேசசஞ்சாரம் செய்துகொண்டே திருவாரூரை யடைந்தார்கள்.

எல்லா க்ஷேத்திரங்களிலும் உள்ள ஈசனின் மகிமையை புகழ்ந்துகொண்டே அப்புண்ணியபுரியை யடைந்த அந்த ராஜதம்பதிகள் அங்குத் தோற்றிய சிற்சில நற்சகுனங்களையும், நற்குறிகளையும் அறிந்து அப்பதியில் ஏதோ அற்புதம் நடக்கப்போவதாய் உணர்ந்துகொண்டு அங்கு விளங்கும் புண்ணிய தீர்த்தங்களில் நீராடி அந்த க்ஷேத்தி ராதிபதியாகிய தியாகராஜனது திவ்ய வடிவைத் தர்சித்து மயிர்க்கூச்சலடைந்து கண்ணீர்மல்கக் கைகூப்பிக்கொண்டு துதிசெய்து அங்கேயே சிலகாலம் தங்கியிருந்து அங்குள்ள பெரியோர்களால் தியாகராஜனது சிறந்த திருவிளையாடல்களின் சிறப்பைக்கேட்டு ஆனந்தம் அடையலானார்கள். இவ்வாறு அந்த ராஜதம்பதிகள் தினந்தோறும் தியாக

ராஜனது ஒவ்வொரு அற்புத லீலையையும் கேட்டு உள மகிழ்ச்சியடைந்து அவ்வீசனுக்கு மாலையளித்தல் முதலிய பற்பல உபசாரங்களை செய்து வரலானார்கள். பசுபதியின் பாதகமலத்தில் பக்தி நிறைந்த அந்த ராஜதம்பதிகளுக்கு அந்நகரிலிருக்கும் பெரியோர்களும் முனிவர்களும் தியாகேசனின் சிறப்பைப் பெரும்பாலும் உரைத்தபடியால் அவைகளையெல்லாம் கேட்டு அத்தியாகராஜனிடத்தில் விசேஷபக்தி செலுத்திய அந்த ராஜகுமாரியானவள் ஒரு நாள் மாலையில் ஈசனைத் தர்சித்துத் திரும்பியபொழுது பக்தர்களுக்கு ஒவ்வொரு சமயங்களிலும் அருள்செய்த தியாகேசர் நம்மீதும் அருள்புரிவார் போலுமென்றுரைத்துக் கொண்டே கணவனுடன் தனது இருப்பிடத்தை அடைந்தாள்.

அன்றிரவு அந்த ராஜகுமாரியானவள் தியாகராஜனது குணங்களைப் பலவாறு புகழ்ந்து இவ்வற்புத தெய்வத்தினிடத்தில் அன்புபூண்டவர் செய்யும் எவ்வித முயற்சியையும் இவரே நிறைவேற்ற வல்லவர் என்றுரைத்து மறுநாட் காலையில் ஒரு பெரிய பாத்திரத்தில் பலவித புஷ்பங்களைக் கொய்து எடுத்துக்கொண்டு கணவனுடன் ஈசனது தேவாலயத்தையடைந்தாள். அந்த ராஜகுமாரியானவள் கணவனை நோக்கி இத்தியாகேசன் அருள் இருக்குமாயின் நமது கையிலேந்திய இம்மலர்களும் வாட்டத்தையடையாது விளங்கும் என்றுரைத்தாள். அவ்விதப் பரீக்ஷையைப் பார்ப்போமென்று கருதிய அத்தம்பதிகள் ஒரு அகன்ற பாத்திரத்தில் அம்மலர்களைக் கொட்டித் தியாகராஜனது திருமுற்ற வாயிலில் வெய்யிலில் உலர்த்திவிட்டு ஈசனைத் தர்சித்துத் திரும்பினார்கள். வெய்யிலில் உலர்த்தப்பட்ட அம்மலர்கள் யாவும் நாலைந்துநாள் வரையில் கொஞ்சமேனும் வாட்டத்தையடையாமல் விளங்கும் தன்மையைக் கண்டவரனைவரும் ஈசனது மற்றொரு லீலை என்று புகழ்ந்தார்கள். அத்தம்பதிகளும் சிறந்த ஓர் ஆண்மகவைப் பெற்று மகிழ்வெய்திலங்தார்கள்.

## 259. அரசனுக்கு எதிரில் மரியாதை செய்வித்த லீலை

காவிரி நதியின் கரையிலுள்ள சோலை சூழ்ந்த சிராமலை நகரில் சேணியன் ஒருவன் இருந்தான். சிவபக்தியிலும், ஜாதித்தொழிலிலும், மற்றுமுள்ள நற்குணங்களிலும் நிலை பெற்று வந்த அந்தச்சேணியன் சிற்சில சமயங்களில் புதுத் துணிகளை விற்பனை செய்வதற்காக எடுத்துக்கொண்டு அங்கங்குத் தேசங்களிலும் நகரங்களிலும் சென்று விற்றுத் திரும்புவான். அப்படிப்பட்ட சேணியன் காட்டு வழிகளில் நடந்து செல்லுகையில் சிற்சில இடங்களில் லிங்கமூர்த்திகள் விளங்குவதையும், அவ்வித ஸ்தலங்கள் அமைந்திருக்கும் அழகையும் கண்டு வியப்படைந்து அழகிய சிறு துணிகளை பக்தியுடன் நெய்து அவ்வித லிங்கமூர்த்திகளின் ஆசன பீடங்களில் அளித்துக்கும்பிட்டு வலஞ்செய்து மகாலிங்க மூர்த்திகளே! என்னைக்காத்தருள்வீர் என்று வேண்டிச் செல்வான்.

இவ்வண்ணமாய் அச்சேணியன் பற்பல சமயங்களில் அநேக லிங்கமூர்த்திகளுக்கு ஆடையளித்து வருகையில் அவனது பக்தியின் சிறப்பைக் கண்டுகளித்த பரமேசுவரன் அவனிடத்தில் தனது கருணையைச் செலுத்தினார். அச்சேணியன் மற்றொரு சமயத்தில் உலகோர் புகழும் தியாகராஜனது திருவிழாவைத் தரிசிக்க வேண்டுமென்று கருதி சில துணைவர்களுடன் திருவாரூருக்கு வந்து சேர்ந்தான். அவன் வரும்பொழுது தியாகராஜனுக்கு ஒரு வஸ்திரத்தை அளிப்போமென்று நினைத்து அங்கங்குக் காடுகளில் தனிமையாய் விளங்கும் லிங்கேச மூர்த்திகளுக்குத் தான் அளித்துவரும் வஸ்திரத்தைப்போலவே அழகியதாயும் இரண்டு முழம் நீளமுள்ளதாயுமுள்ள ஒரு நூலாடையை மிக அன்புடன் நெய்து சென்னியில் தாங்கி வரலானான். அவ்விஷயத்தை அவனுடன்கூட வருபவர்கள் ஒருவரும் அறியவேயில்லை. அவ்விதமாய் அச்சேணியன் திருவாரூர் நகரத்தையடைந்தவுடனே அந்நகரத்தின்

செல்வச்சிறப்பையும் தேவாலயத்தின் மேன்மையையும் அங்கு நடைபெறும் அவ்வருஷாகாலத் திருவிழாவில் ராஜாதி ராஜர்கள் முதலிய பக்தகோடிகள் விலையற்ற பீதாம்பரங்களையும், நன்மணி மாலைகளையும், முத்து மாலைகளையும் அளிப்பதைக்கண்டு ஈசனுக்காகத்தான் கொண்டு வந்திருக்கும் அவ்விரண்டு முழமுள்ள நூலாடையை அளிப்பதற்கு வெட்கத்தை அடைந்து மனம் வாடி நின்றான்.

பக்தர்களால் அளிக்கப்பட்ட சிறந்த கம்பளங்களை அணிந்துகொண்டு வர்ஷாகால மண்டபத்தில் ரத்தினம் இழைத்த மண்டபத்தில் ஈசான தத்துவ பீடத்தின்மேல் வீற்றிருக்கும் தியாகராஜர் அம்மண்டபத்துக்கு எதிரில் நின்று பணிந்து துதிசெய்யும் சகல பக்த ஜனங்களுக்கும் அருள்புரிந்த பிறகு ஒரு ஆகாயவாணியை ஏவி "அச்சிரா மலைச் சேணியன் மிக நற்குணமுடையவன். சிவபக்தருள் சிறந்தவன். அச்சேணியன் வெகுநாட்களாய் அங்கங்கு வனங்களில் விளங்கும் லிங்கேசுவர மூர்த்திகளுக்கு அன்புடன் ஆடையளித்தவன். சில தொண்டர்கள் மிகவும் பிரசித்திபெற்ற பரமேசமூர்த்திகளையே பணிந்து காடு களில் ஏகாந்த ஸ்தலத்தில் விளங்கும் லிங்கேசமூர்த்தியை அலக்ஷ்யம் செய்துவருவார்கள். அச்சேணியன் அவ்வித பக்தர்கள்போல் மனதில் யோசிக்காமல் பரிசுத்தமான வன மத்தியில் சிற்சில முக்ய மரங்களின்கீழ் தீபம்போல் விளங்கும் லிங்கமூர்த்திகளிடத்தில் விசேஷ பக்தி வைத்து நல்லாடையையளித்துவந்தவன். அவ்வித சேணியன் இப்பொழுது மிக்க அன்புடன் கொண்டுவந்திருக்கும் ஒரு சிறிய ஆடையையளிக்க வெட்கி நிற்கின்றான். ஆகையால் அச்சேணியனையே இக்கூட்டத்தில் முதல்வனாக எண்ணி அவனுக்குத் தக்க வெகுமதியளித்து அவன் கொண்டுவந்த ஆடையை ஈசனுக்களிப்பீர்கள்" என்று அறிவித்தார்.

அவ்வர்ஷாகால மண்டபத்தினருகில் உண்டாகிய இவ்வித அசரீரியுரையைக் கேட்ட தொண்டர்கள் யாவரும்

களிப்படைந்து அக்கூட்டத்துள் அச்சிராமலைச் சேணியனை தேடிப்பிடித்து சகல பூபாலர்களின் முன்னிலையிலவனுக்குப் பக்தருக்குரிய மரியாதையைச் செலுத்தி அவனது சென்னி யில் தாங்கிவந்த அவ்வாடையை ஈசனது திருத்தோளில் அணியச்செய்து மேன்மையை எய்தினார்கள்.



## 260. ஏழைகளுக்குச் செல்வமளித்த லீலை.

ஆனந்தபுரத்தில் அக்னிஹோத்ரி என்னும் அந்தணோத் தமர் ஒருவர் இருந்தார். அவர் குருவின் கருணையினால் முப்பத்திரண்டு வயதுவரையில் முதலாவது ஆச்ரமத்தில் இருந்து கல்விகளைக் கற்றுப் பிறகு இரண்டாவது ஆச்ரம மென்னும் இல்வாழ்க்கையில் ஈடுபட்டுத் தர்மபத்னியுடன் வாழுநாளில் அவ்வந்தணருக்கு வறுமை அதிகமாயிற்று. வறுமையால் பிடிக்கப்பட்ட அவ்வேதியர் சாந்த குணத் தையும், வைராக்கியத்தையும் ஹாரமாகப் பூண்டு அனுஷ் டானங்களையும் தேவபக்தி, ஈசுவரபூஜை, விருந்தளித்தல் முதலியவைகளையும் நெடுநாள் வரையில் கைவிடாமல் காப்பாற்றி வரலானார். சத்தியசீலராகிய அவ்வந்தணரது ஏழ்மைத்தனத்தை யறிந்துகொண்ட விருந்தினர் யாவரும் அவருக்குக் கஷ்டத்தை விளைவிக்கலாகாதென்று நினைத்து அவரது வீட்டிற்குப் போகாமல் இருந்துவிட்டார்கள்.

அவ்விஷயத்தை யறிந்துகொண்ட அக்னிஹோத்ரி யானவர் தான் மிகவும் ஏழ்மையாயிருப்பதனாலல்லவா அதிதிப் பிராமணர்கள் தானாகவே நின்றுவிட்டனர் என்று மனமுருகி விருந்தினருக்கு அளிக்காமல் தானும் தனது புத்திரர்களும் உண்ணும் உணவை இகழ்ந்து முகம்வாடி பெருமூச்சுவிட்டு ஒரு முகூர்த்தகாலம் வரையில் மௌன மாய் இருந்து கைலாஸபதியை மனதில் தியானித்துப் பிறகு தனது குடும்பத்தாருடன் தேசாடனம் செய்ய

வாரம்பித்தார். அவ்வந்தணர் அவ்வாறு திவ்யக்ஷேத்ரயாத்திரையாய்ப் புறப்படுகையில் ஆனந்தபுரத்திலுள்ள அநேக பிராமணோத்தமர்களும் அவருடன் செல்லலானார்கள். அவ் வக்னிஹோத்ரியானவர் பாண்டிமண்டலம், கொங்குமண்டலம், சோழமண்டலம் முதலான திவ்ய ஸ்தானங்களில் விளங்கும் ஈசனது தர்சனத்தைப் பெற்றுக் கொண்டும், தன்னுடன் வரும் அந்தணருக்கு ஈசனது தத்துவத்தையும், குணச் சிறப்பையும் பலவாறு உரைத்துக் கொண்டும் புண்ய க்ஷேத்திரத்தையடைந்தார்.

அம்மண்டலாதிபதியாகிய தியாகேசனது திவ்யபதியை நாடி அவர்களெல்லோரும் ஈசனது தர்சனத்தைப் பெற்று உளமகிழ்ந்திருக்கையில் அக்னிஹோத்ரியானவர் தொண்டர் விரும்பும் விருப்பங்களையெல்லாம் அளிக்கும் பரம்பொருள் இத்தியாககற்பகமே என்று அவரது குணங்களைத் துதி செய்தார். அவர் அவ்வாறுரைத்ததைக்கேட்ட மற்றொரு வேதியர்அக்னியை முக்காலத்திலும் உபாஸிக்கும் அந்தணோத்தமரே! இத்தியாககற்பகம் பக்தர்கள் விருப்பங்களையளிப்பது உண்மையாகில், பக்தச்ரேஷ்டராகிய உமக்கு ஏன் செல்வம் அளிக்கவில்லையென்று வினவினார். அவ்வுரையைச் செவியினால் பற்றிய அக்னிஹோத்ரியானவர் சற்றுநேரம் மௌனமாயிருந்து தியாகேசனைத் தியானித்திருந்து ஓ வேதியரே! இதுவரையில் நான் செல்வத்தை விரும்பியதே இல்லை. இத்தியாகராஜனது அபார திவ்ய சக்தியை உங்களுக்குத் தெரிவிக்கும்பொருட்டே நான் அஞ்சலிசெய்து செல்வத்தை வேண்டினேன். வேதம் சத்தியமாகில் அவ்வேதத்தின் சென்னியில் விளங்கும் இத் தியாகேசன் சத்தியமாகில், அவரது பாதாரவிந்தத்தில் நான் பக்தி வைத்திருப்பது உண்மையாகில் நான் விரும்பியவாறு இவ்வீசனே செல்வமளிப்பாரென்று உரைத்துக்கொண்டே வழியிலுள்ள மூர்த்திகளைத் தர்சித்துக்கொண்டு ஆனந்தபுரத்துக்குத் திரும்பலானார்.

அவ்வந்தணோத்தமரும், அவரது குடும்பமும் அவருடன் பின் சென்ற பிராமணோத்தமர்களும் ஆனந்தபுரத்தை அடைவதற்கு முன்னமே பக்தரக்ஷகனாகிய யாகேசர் அவ் வந்தணர் வேண்டியவாறு அவரது வீட்டையும், அவரது பந்துக்களின் வீட்டையும், உமக்கு என் ஈசன் செல்வமளிக்க வில்லையென்று வினவியவர்களுடைய வீட்டையும் சிறந்த மாளிகைகளாகும்படி செய்தார். ஆனந்தபுரவாஸிகளாகிய அவர்களெல்லோரும் தமது வாசஸ்தானத்தையடைந்து தமது சிறிய வீடுகளெல்லாம் பெரிய மாளிகைகளாக இருக்கக்கண்டு அவ்வக்னி ஹோத்ரியின் காலில் வீழ்ந்து பணிந்து பரிசுத்த மனமுள்ள பக்தர்களின் விருப்பத்தை நிறைவேற்றிவைக்கும் பரம்பொருள் தியாகேசனே என்று ஈசனது திவ்யகுணங்களைப்புகழ்ந்து அவ்வித செல்வங்களைத் தர்ம வழியில் செலவழித்து அஹங்காரம், பொறாமை, சினம், காமம் முதலிய துர்க்குணங்களையொழித்துத் தியாகேச பக்தர்களாய் வாழ்ந்தார்கள்.



## 261. சிவபக்தியைப் பரீக்ஷைசெய்த லீலை.

நந்திபுரத்தில் சிவசோமயாஜி என்னும் தீக்ஷிதர் ஒருவர் இருந்தார். அவர் கைலாஸநாதனது தத்துவச் சிறப்பை விரிவாய் எடுத்துரைத்து ஞானமற்றவர்களுக்கு ஈசுவர தத்துவத்தை யறியச்செய்து சிவபக்தியை உலகில் பரவச் செய்வதையே முக்யத்தொழிலாகக் கைப்பற்றிவந்தார். அவ்வந்தணோத்தமரது உபதேசத்தினால் அநேகர் தமது அஞ்ஞானத்தை விலக்கி நற்பதவியை யளிக்கும் ஈசுவர பக்தியையடைந்து மேன்மையெய்தினார்கள்.

அப்படிப்பட்ட அத்தீக்ஷிதருடைய சிவபக்தியைப் பரீக்ஷை செய்து பார்க்கக்கருதிய தியாகேசர் ஒருநாள் அவரது எதிரில் வேடன் போல் தோன்றி ஓ பிராமணரே!

நீர் சிவபிரானை மறைப்பொருளென எண்ணுமல், அவரது பக்தியையும் இழப்பீராகில் உம்மை நான் உயிருடன் விடுவேன். இல்லாவிடில் எனது கையில் சுற்றியிருக்கும் நாகத்தை உமது மேல் சீறவிட்டு உமது உயிரை நீக்குவேன் என்றார். அவ்வார்த்தையைக் கேட்ட நந்திபுர தீக்ஷிதர் சகல ஜீவராசிகளிடத்திலும் சமபுத்தியாய் நடந்துவந்த நான் உனக்கும் யாவருக்கும் எவ்வித தீங்கும் செய்யாமல் இருக்கும்பொழுது நீ என்மீது வெகுண்டு இச்சர்ப்பத்தைப் பாயவிட்டாலும் என்னுயிரை நீக்கினுலும், எனது உடலை வாளாலறுத்துத்தீயிலிட்டாலும் நான் சிவபக்தியை மறக்க மாட்டேன். எனது நாதனுகிய பரமேசனது திருவுடம்பில் அணியாய் விளங்கும் இந்நாகங்கள் என்னையணுகாதென்றே நினைக்கிறேன் என்று அவ்வேடனுக்குப்பதில் கூறினுர்.

தீக்ஷிதர் உரைத்த சொல்லைகேட்ட அவ்வேடன் தனது கையிலிருந்த ஒரு கருநாகத்தைச் சீறிப் பாயச்செய்து ஓ அந்தணரே! இப்பொழுது ஒரு தடவை கூறுகிறேன். ஏமாற்றத்தை யடையவேண்டாம். நான் சொல்வதைக் கேளும்; நீர் சிவபக்தியைக் கைவிட்டேனென்று ஒரு வார்த்தை சொல்லி விடுவீராகில் இந்நாகமும் நானும் உமக்குச் சிறந்த ரத்தினங்களை யளிப்போம் அவைகளைப் பெற்றுக்கொண்டு நீர் சுகமாய் வாழலாம். இல்லாவிடில் நீர் எங்குச் சென்றபோதிலும் நீர் இந்த நாகத்தினிடம் இருந்து உயிர்தப்பிப் பிழைக்கமாட்டீர். யமபடர்களின் கையில் விளங்கும் பாசக்கயிற்றினுல் கட்டுண்டு நரகில் ஆழ்வீர் என்றுரைத்துக்கொண்டே தனது பயங்கரமான கோரபற்களைக் காட்டிப் பயமுறுத்தித் தோள் தட்டிக் கர்ஜனை செய்து பயத்தையளித்தான்.

அவ்விதமாய் வேடன் உரைத்ததைக் கேட்ட தீக்ஷிதர், ஓ வேதப்பரம்பொருளே! பக்தர்களைக் காப்பதற்காக அங்கங்கு லிங்கரூபியாய் விளங்கும் பரமேச! புண்யபுரியில் விளங்கும் தியாகேச! சத்தியச் சுடரே! எனது மனதில்

உமது பாத பக்தியானது எப்பொழுதும் மாருமலிருக்கும் வண்ணம் அருள்புரிவீரென்று வேண்டித் தைரியமாய் நின்றார். இவ்விதமாய் அவ்வேதியர் தியாகேசருடைய பாதத்தை நினைத்திருக்கையில் அவர்மீது கடுஞ்சினத்துடன் பாய்ந்த அந்நாகம் விஷத்தைக் கக்கியும் அது சற்றேனும் அவரது சரீரத்தில் துன்பத்தை விளைவிக்கவேயில்லை. அதைக்கண்டு வியப்படைந்த அவ்வேடன் ஓ அந்தணரே! இப்பொழுது ஒருதடவை கூறுகிறேன். சிவபக்தியைக் கைவிட்டுவிட்டேன் என்று நீர் ஒரு வார்த்தை கூறுவீராகில் நான் உம்மை விடுவேன். இல்லாவிடில் இக்காட்டிலேயே செந்தீயினுல் உமது சரீரத்தைக் கொளுத்திவிடுவேன் என்று வெகுண்டு உரைத்தான்.

அப்பொழுதும் அந்தத் தீக்ஷிதரானவர் தியாகராஜ பாதபங்கய ஸ்மரணத்தையேயடைந்திருக்கையில் கடுஞ்சினங்கொண்டு எழுந்த அவ்வேடன் அருகிலுள்ள காட்டுக் கட்டைகளை ஒன்றுசேர்த்து சிதையாக்கி அதில் கொடிய தீயை இட்டு அவ்வேதியரை அச்சிதையின்மீது படுக்கச் செய்து கொளுத்தத் தொடங்கினுன். அக்கட்டைகளை எரிக்கத்தொடங்கிய அத்தீயானது ஜ்வாலைகளை விட்டுக் கொண்டு அவ்வந்தணரை வலஞ்செய்யத்தொடங்கியது போல் விளங்கிற்று. இவ்விதம் செய்தபோதிலும் சிவபக்தி மாருமனமுடைய அவ்வேதியரது நற்குணங்களைக் கண்டு வியப்படைந்த வேடஞன தியாகேசன் மறையும்பொழுது வானத்தில் இந்திரன் முதலிய தேவர்களும் நாரதரும் வந்து சூழ்ந்துகொண்டு அவ்வேதியரை அத்தீயிலிருந்து வெளிவரச் செய்து இவ்வாறு உமது பக்தியைப் பரீக்ஷித்தவர் தேவ பீடத்தில் விளங்கும் தியாகராஜனே என்றுரைத்து அவ்வந்தணர் சென்னியில் மலர்மாரி பொழிந்தனர். அவ்வாறு தேவர்களின் தர்சனத்தைப் பெற்ற அந்தத் தீக்ஷிதர் விரைவாகப் புண்யபுரியையடைந்து கமலையில் சுத்த ஸ்நானம் செய்து தியாகேசனைக் கண்ணுரக்கண்டு

தொழுது துதிசெய்து தனக்கு நேரிட்ட சம்பவத்தை அத்திருவாரூர் ஞானிகளிடம் உரைத்தார். அதைக்கேட்டு வியப்படைந்த அத்தொண்டர்களும் அதுமுதல் அசைவற்ற சிவபக்தியையடைந்து வாழ்ந்துவந்தார்கள்.

## 262. அரசன் பழியை நீக்கிய லீலை

ஹரசோழ மகாராஜன் நீதி முறைப்படி உலகைக் காத்து வருகையில் அவ்வரசனுடைய தூயமனதைப் பரீக்ஷித்துப் பார்க்கவேண்டுமென்று நினைத்த தியாகேசர் வேட்டைக்குறவர் வேடம்பூண்டு பால் மணி வடங்களையும், கருமணி வடங்களையும் கையிலேந்திக்கொண்டு ஆஸ்தான மண்டப வாயிலில் தோன்றி மணிகொள்வார் உண்டோ என்று கூவினார்.

அவ்விஷயத்தை முன்னமே அறிந்துகொண்ட அந்தப்புர மாதரும், கன்னியரும், தோழியரும் அவ்வித மணி வடங்களை அணியத்தமக்கு வெகுநாளாய் விருப்பம் உண்டு என்னும் விஷயத்தை அச்சோழவரசனிடம் தெரிவித்தார்கள். அதனால் ஹரசோழன் அருகிலிருந்த மந்திரிமார் மூலமாய் அவ்வேட்டைக்குறவனைச் சமீபத்தில் அழைத்து அவனிடத்திலிருக்கும் பற்பல மணிவடங்களையும் பரீக்ஷை செய்து சிறந்த மணிகள் நிறைந்த வடங்களை விலைக்கு வாங்கி அவைகளில் அன்புபூண்ட அந்தப்புர மாதருக்கும் கன்னியருக்கும் அளித்துவிட்டு ராஜகாரிய ஆலோசனையில் ஈடுபட்டு இருந்தான். அவ்விதம் வேட்டைக்குறவன் போல் தோன்றிய தியாகராஜர் அப்பொழுதே திடீரென்று மறைந்து தேவவேதிகையின் மஹாயந்திர சக்ரதாராபீடத்தில் நிலைபெற்றவுடனே தன் மார்பில் அணிந்திருக்கும் ரத்தினஹாரங்களெல்லாம் அச்சோழனது அந்தப்புர மாதரின் சரீரத்திலும், கன்னியரின் சரீரத்திலும் விளங்கும்படி தனது அற்புத சக்தி

செய்து வைத்தார். இவ்வித ஈசுவர மாயையையறியாத அம்மர்தர்கள் அரசனால் அளிக்கப்பட்ட அவ்வித பால்மணி வடங்களும், கருமணி ஹாரங்களும் தமது சரீரத்தில் அணியப்பெற்ற சில முகூர்த்த காலம் செல்வதற்கும் சிறந்த கோமேதகங்களாகவும், நீலரத்தினங்களாகவும் ரத்தின ஹாரங்களாகவும் மாறக்கண்டு அவைகள் யாவும் அக்குறவனது அருளோ? மணியின் மேன்மையோ? ஈசனது அருளோ? என்று வியப்படைந்து ஆனந்தக்கடலில் மூழ்கி விளையாடி வந்தார்கள்.

ஹரசோழ மகாராஜனைப் பரீக்ஷிக்கக்கருதிய தியாகேசர் இவ்விதமாய்த் தனது திருமேனியிலிருந்த சிறந்த அணிகள் யாவும் சோழ மாதரின் சரீரத்தில் விளங்கும்படி ஏவிய பிறகு அத்தியாகராஜனது திருமேனியைத் தரிசிக்கும் தொண்டர்கள் ஹா ஹா வென்று கூக்குரலிட்டுத் தியாகராஜனது திருமேனியில் விளங்கும் அணிகள் யாவும் காணப்படவில்லையே யென்று அழத் தொடங்கினர். நூற்றுக்கணக்காயும், ஆயிரக்கணக்காயும், பதினாயிரக் கணக்காயும் ஒன்றுசேர்ந்த பக்தர்கள் யாவரும் மனக் கொதிப்பையடைந்து தேடி வாடுகையில் மகாராஜனது மாளிகையிலிருந்து வெளிக்கிளம்பிய சிலர் நேற்றுவரையில் தியாக கற்பகத்தின் திருமேனியில் விளங்கிய ரத்தினங்கள் யாவும் இன்று சோழபூபாலனது அந்தப்புரமாதர் சரீரத்திலும், கன்னிகைகளின் சரீரத்திலும் விளங்குகின்றன என்று உரைத்தார்கள். அதைக்கேட்ட தொண்டர்கள் யாவரும் ஆச்சரியத்தையடைந்து தர்மநிலையைக் காப்பதற்காகவே விளங்கும் பூபாலனை இவ்வித துரோகசிந்தையுடன் ஈசனது அணியை மாதருக்கு அளிப்பானாகில் நாம் என்னசெய்வோம் என்று நினைத்தார்கள். சிலர் தூற்றினார்கள்; சிலர் அரசன் அவ்வண்ணம் செய்யமாட்டான் இவ்விஷயத்தின் உண்மை நாளடைவில் வெளியாகும் என்று நம்பினார்கள்.

இவ்விதமாய் ஜனங்கள் சோழன்மீது கூறும் பழியானது பரவிப்படர்ந்தபொழுது அதையறிந்த சோழன் மனப் பதைப்பையடைந்து அழுதகண்ணீருடன் கைகூப்பி நின்று தியாகேசனை நினைத்துத் தான் ஒரு குறவனிடத்தில் பால்மணி வடங்களை வாங்கியளித்ததற்கும் தியாகராஜனே சாக்ஷி என்றுரைத்துப்பிறகு மந்திரிமார்களையும் தியாகராஜ பக்தர்களையும் நோக்கித் தான் தேவதுரோகம் செய்ததாய் எனக்கு ஏற்பட்டிருக்கும் குற்றத்திற்கு எவ்வித தண்டனை அளித்தபோதிலும் அதைத் தான் ஏற்றுக்கொள்வதாகச் சபைநடுவில் ஒப்புக்கொண்டான். அதைக்கேட்ட தொண்டர்களும் அமைச்சர்களும் அச்சோழ பூபாலனுக்கு எவ்வித தண்டனை விதிக்கலாம் என்று ஆலோசனை செய்கையில் ஈசனது ஏவலால் அங்குத் தோற்றிய நாரதரின் உரையினால் அவர்களெல்லோரும் சந்தேகங்களையொழித்து அவ்வரசனது மனத்தூய்மையைப் பற்றிப் புகழ்ந்து இதுவும் தியாகராஜனுடைய திருவிளையாடலின் சிறப்பே என்றுகூறி ஈசனைத் துதித்து மகிழ்வெய்தினார்கள். அந்த ஊரசோழ மகாராஜனும் அந்தப்புர மாதரும் தியாகேசனை மறுபடியும் ஆலயத்தில் தர்சிக்கும்பொழுது முன்போல் ஈசனது திருமேனியில் திவ்யாபரணங்கள் விளங்கக்கண்டு சகல தொண்டர்களும் ஆனந்தக்கடலில் மூழ்கி ஈசனைத் துதித்தார்கள்.



## 263. இல்லை என்றவனுக்கில்லாமல் தோற்றிய லீலை

குமுதபுரம் என்னும் நகரில் சடிலன் என் வைசியன் ஒருவன் இருந்தான். அவனது தந்தையும், பாட்டனும், பாட்டனது தந்தைமார்களும் நெடுநாளாய்ச் செய்துவந்த புண்ணியத்தினால் அவன் பூவுலகில் சகல ஐசுவரியங்களையும் பெற்று விளங்கலானான். அவ்வித செல்வத்தினால் சிறந்தவனாய் இருந்தபோதிலும் அவ்வைசிய

னுக்கு ஈசுவர பக்தி உண்டாகவேயில்லை. அதைக் கண்ட சில பெரியோர்கள் அவனுக்கு நன்மதி கூறியபோதிலும் அவனிடத்தில் அவ்வித உபதேசம் பயன்படவில்லை. நாளடைவில் அவ்வித செல்வத்தினால் அடங்கா கர்வத்தை அடைந்த சடிலன் தனது செல்வத்தைப் பற்பல துர் மார்க்கத்திலும், துஷ்டரிடத்திலும் செலவழிக்கத் தொடங்கினான்.

அவ்வித வைசியனுடைய மனைவியானவள் ஜன்மத்தினாலும், குணத்தினாலும், ஈசுவர பக்தியினாலும் திசைகளில் பரவிய நல்ல புகழையுடையவள். தினந்தோறும் காலையில் கோதாவரியில் ஸ்நானம் செய்து பீமேச்வரலிங்கமூர்த்திக்கு அபிஷேகம்செய்து ஈசனை நமஸ்கரித்த பிறகு போஜனம் செய்வாள். பரமேசனிடத்தில் பக்தி செய்த பெரியோர்களின் பாதத்தை வணங்குவாள். காலையிலும், மாலையிலும் சிறந்த பசுக்களையும், குரு ஜனங்களையும், குருமார்களையும், வேதியர்களையும், நதிகளையும், திசைகளையும், ஆல், வில்வம் முதலிய சிறந்த மரங்களையும், நாகராஜனையும், புஷ்பச்செடிகளையும் வணங்கி கைகூப்பிவருவாள். இவ்வித நற்குணங்கள் நிறைந்த அவ்வைசியமாதானவள் தனது கணவனது துஷ்டத்தன்மையைக் கண்டு வணங்கிப் பலவாறு நற்புத்தி கூறியபோதிலும் அவனது காதில் எவ்வளவு சாந்த மொழிகள் கூறியபோதிலும் பயன்படவில்லை. அதனால் வருத்தமடைந்த மனைவியானவள் சகலலோக நாயகனையும், சர்வசக்தி நிறைந்தவனையும் விளங்கும் பரமேசனது கருணையினாலேயே தனது கணவனுக்கு நற்புத்தி உதிக்கவேண்டும் என்று நினைத்துத் திவ்ய க்ஷேத்ராடனம் செய்யும் பெரியோர்களைத் தனது அருகில் வரவழைத்து அவர்களை முறைப்படி வணங்கி அவர்களது ஆசிபெற்றுவந்தாள்.

ஒருசமயத்தில் திருவாரூரிலிருந்து குமுதபுரம் சென்ற தியாகராஜ பக்தர் ஒருவர் அம்மாதினால் வரவழைக்கப் பட்டவராய் அவளது மாளிகையையடைந்து அவளுக்கு

ஆசிகூறியபிறகு அவளது மனோரதம் நிறைவேறும்வண்ணம் தியாகராஜமூர்த்தியைப் பணிந்துவருவாய். மூன்று மாத காலத்துக்குள் உனக்கு நன்மையுண்டாகுமென்று உபதேசித்துக் காசி வழியைப்பற்றிச் செல்லலானார். நற்குணங்களுக்கு இருப்பிடமாகிய அவ்வைசியமாதும் அந்தத் தியாகராஜபக்தர் உபதேசித்ததுபோலவே அது முதல் நியமத்தையடைந்து தியாகராஜனது திருமேனியை மனதில் தியானித்துத் தியாகராஜன்போலவே ரத்தினத்தினால் ஒரு பிம்பநிர்மாணம் செய்து முறைப்படி பூஜை செய்து கைகூப்பித் தனது கணவனுக்கு நற்புத்தியளிக்குமாறு வேண்டி வந்தாள். தூய மனதையும் ஒப்பற்ற பக்தியையுமடைந்த அவ்வைசியமாது செய்துவரும் பூஜோபசாரங்களைப் பெற்று மகிழ்ந்த தியாகேசர் வேதம்வல்ல அந்தணர்போல் உருவம் எடுத்துக்கொண்டு குமுதபுரத்திலிருக்கும் அவ்வைசியனை அணுகித் தான் செய்யப்போகின்ற யாகத்துக்குத் தானியத்தையாவது, நவரத்தினங்களையாவது, புதிய ஆடைகளையாவது, கம்பளங்களையாவது அளிப்பாய் என்று கேட்டார்.

அதைக்கேட்ட அவ்வைசியன் பாபபுத்தியினாலும் துஷ்ட சிநேகிதர்களுடைய பேச்சுகளாலும் அவ்வந்தணரை நோக்கித் தன்னிடத்தில் தானியமுமில்லை, தனமுமில்லை, நவரத்தினங்களுமில்லை, புதிய ஆடைகளுமில்லை என்று உரைத்தான். அதையறிந்த பரமேசுவரனாகிய அவ்வேதியன் மிகவும் நகைத்து நீ உரைத்தபடியே உன்னிடத்திலுள்ள பொருள்கள் யாவும் மறைந்துவிட்டன. நீ அவைகளை மறுபடியும் விரும்புவாயாகில் உனது மனைவி தொழும் தெய்வத்தைக் கேட்டுப் பெற்றுக்கொள்வாய் என்று உரைத்துக்கொண்டே மறைந்துவிட்டார். அவ்வுரையைக் கேட்ட அவ்வைசியன் உடனே சென்று கோசசாலையை உற்றுநோக்குகையில் அதில் எவ்வித தனங்களும் ஸுவர்ணங்களும் வெள்ளியும் நவரத்தினங்களும் காணப்படவில்லை,

அதனால் வருத்தமடைந்த அவ்வைசியன் முகத்திலும், தலையிலும் மோதிக்கொண்டு கூக்குரலிட்டு அழுதுகொண்டு தனது மனைவியிருக்குமிடத்தையடைந்து வரலாற்றை அறிவித்து விம்மி விம்மி அழத்தொடங்கினான். தியாகராஜ பக்தியை உறுதுணையாகப் பற்றிய அம்மனைவியானவள் அப்பொழுது அக்கணவனுக்குத் தைரியமுரைத்துத் தியாகேசனே தனது கணவனது செல்வத்தை மறையச் செய்தார் என்று அறிந்துகொண்டு தனது கணவனுடன் திருவாரூரையடைந்து கமலையில் நீராடித் தியாகேசருடைய முன்னிலையில் இனி துர்மார்க்கத்தில் பிரவேசிக்கவில்லை யென்று கூறி சிறந்த அபிஷேகத்தையும் செய்துவைத்துத் திரும்பி தன் வீட்டுக்குவந்து பார்க்கையில் செல்வங்கள் எல்லாம் இருக்கக்கண்டு தியாகேசனைப் புகழ்ந்துகொண்டு வாழ்ந்துவந்தார்கள்.



## 264. சகவாஸத்தினியல்பைக் காட்டிய லீலை

ஒருசமயம் ச்யவனமகரிஷியானவர் திருவாரூர் நகர வாசிகளைபார்த்து புண்ணிய க்ஷேத்திரத்தில் நிலைபெற்றுத் தியாகராஜனது பாதமலரின் நிழலில் வாசம் செய்யும் புண்ணியசீலர்களே! கேளீர். இக்கமலாலயக்கரையில் முன்பு ஒரு சமயத்தில் காச்யப மகரிஷி தவம்செய்து ஈசுவர தர்சனத்தைப்பெற்றுத் திரும்பிய பிறகு நான் ஹிமாசலத்தி லிருந்து இங்கு வந்தேன். நான் இந்த க்ஷேத்திரத்தில் யோகம் செய்வதற்காக வந்த தருணத்தில் கர்னாடக தேச மகாராஜன் தனது குடும்பத்துடன் இங்கு வந்து தியாக கற்பகத்தை வணங்கித்துதிசெய்து அவரது அருள்பெற்றுத் தனது தேசத்திற்குத் திரும்பும்பொழுது இந்தக் கமலாலயப் பொய்கையின் அலையில் விளையாடிக்கொண்டிருக்கும் அன்னப்பறவைகளைக்கண்டு ஆச்சரியமடைந்து அப்பறவை களுள் ஒரு சிறந்த ஹம்ஸத்தை வீரர்கள் மூலமாய்ப் பிடித்து எடுத்துச் சென்றான்,

இவ்விதமாய்த் தனது தேசத்தையடைந்த அம் மகாராஜன் அந்த ஹம்ஸப்பறவையை அன்புடன் வளர்க்கத்தொடங்கி அதைத் தனது சமீபத்திலேயே வைத்துக்கொண்டிருந்து ராஜ்ய காரியங்களை நிறைவேற்றி வந்தான். அவ்விதமாய் அம்மகாராஜனது உணவையுண்டு அவனது சமீபத்திலேயே நிலைபெற்று வாழ்ந்து அவனது பேச்சைக் கேட்டுக்கொண்டிருந்த அந்த ஹம்சமானது சிற்சில சமயங்களில் எதிரில் புலப்படும் ஜனங்களைக்கண்டு "ஓ ஜனங்களே! நீங்கள் ஏன் இந்த அற்ப சரீரத்தில் ஆசையை வைக்கிறீர்கள்? யுத்த பூமியை அடைந்து பகை மன்னருடன் போர் புரிந்து அவர்களைவென்று நற்புகழுடன் வாழுங்கள். அல்லது அந்தப் போர்க்களத்திலேயே உயிரைவிட்டு ஒளிவீசும் தெய்வ சரீரத்தைப் பெற்று விமானமேறி தேவமாதருடன் சுகமாக வாழுங்கள். கீர்த்தியல்லவா மனிதருக்குப் பெரும் பொருள். அதைத் தேடுவதை விட்டுவிட்டு மின்னல் போல் நிலையற்ற உலகப் பொருளைத் தேடுதல் நலமா?" என்று இவ்விதமாய் க்ஷத்திரிய தர்ம முறைகளை உபதேசிக்க ஆரம்பித்தது.

அந்த ஹம்ஸத்துக்குச் சகோதரனாகிய மற்றொரு ஹம்ஸமானது இக்கமலாலயக்கரையில் ஆச்ரமங்களை அமைத்துக்கொண்டு வாசம் செய்யும் மஹரிஷிகளின் முகத்திலிருந்து வெளியாகும் வேதவொலிகளையும், ஈசுவர நாம ஸங்கிர்த்தனங்களையும் கேட்டுக்கொண்டிருந்து சிற்சில சமயங்களில் எதிரில் தோன்றும். ஜனங்களைக்கண்டு புண்ணிய பூமியில் புண்ணிய வசத்தினால் பிறந்த மானிடர்களே! காலையில் அனுஷ்டானங்களைச் செய்வீர்கள், தியாகராஜனைப் பூசித்து அவனது அருளைப் பெறுவீர்கள் துன்பம் நேரிட்ட சமயத்தில் தியாகேசனே உங்களைக் காப்பாற்றுவார். ஐம்புலன்களையும் அடக்கி ஸாதுக்களுடன்சேர்வீர்கள் என்று இவ்விதமாய் வேதாந்த தத்துவ முறைகளையே உபதேசிக்க ஆரம்பித்தது.

மற்றொரு சமயத்தில் சோழ மகாராஜன், காச்யபர், துர்வாஸர், த்ருணபிந்து, வசிஷ்டர், கௌதமர் முதலிய மகரிஷிகளைத் துணையாகவும், அத்வர்யுக்களாயும் வரித்து வெகுசிறப்புடன் இந்த க்ஷேத்திரத்தில் ஒரு யாகம்செய்ய ஆரம்பித்தான். அந்த யாகத்தைக்கண்டு மேன்மையடைவதற்காக எண் திசைகளிலிருந்தும் பூபாலர்களும், வேதியர்களும் வந்துகூடினர். அத்தருணத்தில் கர்னாடகதேசத்து அரசனும் வந்தான். அவனால் அன்புடன் வளர்த்துவந்த அன்னப்பறவையும் வந்தது. ஒருநாள் இக்கமலவாவியைக் கண்டு அங்கு நற்றாமரை மலரில் தனது குலத்தாராகிய பறவைகளைக் கண்டு தனது தோழரது அருகில் சென்று அவைகளுடன்பேசி மகிழ்ந்து பிறகு தனது மனதிலுள்ள க்ஷத்திரியதர்ம முறைகளையே பேசத்தொடங்கியது. அதனது சகோதரப் பறவை வேதாந்த விஷயங்களையே பேசத்தொடங்கியது.

இவ்விதமாய் அவ்விரு ஹம்ஸ பக்ஷிகளும் சகோதரர்களாயிருந்தபோதிலும் ஒன்றுக்கொன்று எதிராக உரைப்பதற்குக் காரணம் யாது? என்றறிந்துகொள்வதற்காக அப்பறவைகளெல்லாம் ஒரே கும்பலாகக்கூடி ஆகாயத்தில் பறந்து தமது மூக்கினால் தாமரை இதழ்களைக்கொண்டு ஈசனை அர்சித்துத் துதிசெய்தன. அவ்விதமாய் அவ்வன்னப் பறவைகளின் மனக்கருத்தையறிந்த தியாகேசர் ஒரு ஆகாயவாணியினால் "எல்லாவற்றிற்கும் சகவாஸமே காரணம்" என்று கூறினார். அதைக்கேட்ட அவ்வன்னங்களும், அரசன் முதலான தொண்டர்களும் ஸஹவாஸ சிறப்பின் ஸ்வரூபத்தை அறிந்துகொண்டார்கள் என்று ச்யவன மகரிஷியானவர் அப்புண்ணியபுரவாஸிகளுக்கு உரைத்ததைப்பற்றி அவர்கள் அவரது பாதத்தில் பணிந்து நன்மையடைந்தார்கள்.

## 265. நெல்லைப் பதாக்கிய லீலை.

சந்திரிகாபுரியில் வேதங்களைக் கற்றுணர்ந்த வேதியர் ஒருவர் இருந்தார். அவரது நற்குணங்களையும், நற்கல்விகளையும் கண்டு அதிசயத்தையடைந்தவர்கள் அவ்வேதியரை நற்குணசீலர் என்றே வழங்கி வரலானார்கள். அந்த நற்குணசீலர் என்னும் வேதியர் ஒரு நாள் மாலை நேரத்தில் செய்யும் ஜபாதிகளை முடித்துவிட்டுப் போஜனமும் செய்து படுக்கையில் படுக்கும்பொழுது ஈசுவர ஸ்வரூபம் நமது மனதில் ஒரு நாளிலும் தோற்றவில்லையே! மாசிலாமணியும் ஆபத்சகாயனும், லோகநாதனும், ஏழைக்கெளியவனும் அன்பர்க்கமுதாயும் விளங்கும் பரமேசனை யோகிகளே அறியவல்லோர். நமது மனதுக்கு அப்பரமேச்வரனது திவ்ய ஸ்வரூபம் தோற்றுமா? என்று சிந்தித்துக்கொண்டே நித்திரை செய்யலானார்.

மகாதயாளனும், அற்புதச் சுடராயும விளங்கும் அவ்வேதியரது மனக்கருத்தையறிந்து அன்றிரவில் அவ்வேதியரது கனவில் தோன்றி ஆதாரசக்தி பீடத்தில் பஞ்சாக்ஷரத்தின் நடுவில் சக்திதாரகமாய் விளங்கும் தனது திவ்யமூர்த்தியைக் காண்பித்து மறைந்தார். நித்திரையை நீக்கிய அவ்வேதியர் அவ்வாறு தனது கனவில் தியாகராஜ ஸ்வரூபம் தோற்றியதைப்பற்றி பரமானந்தமடைந்து அந்த ஸ்வரூபத்தையே தனது தாரணையினால் நிலைபெறச் செய்து கண்ணீர்மல்கக் கூத்தாடித்தனது ஜன்மப்பயன் உண்டாகிவிட்டதென்று துள்ளி எழுந்து ஆடிப்பாடி அதுமுதல் தியாகராஜ பக்தியைப் பெற்று அவ்வீசனைக் கண்ணாரக் கண்டுகளித்துத் துதி செய்தார். கனவில் தோற்றிய திரு உருவத்துக்கும் தேவபீடிகையில் விளங்கும் திவ்யவடிவுக்கும் வேற்றுமையைக் காணுதவராய் இம்மணியே எனதுகனவில் தோற்றிய தியாகமணி என்று சொல்லித் திருக்கோயிலை வலஞ்செய்து அங்குச் சிலகாலம் வசித்திருந்து க்ஷேத்திராடனம் செய்யலானார்.

அந்நற்குணசீலர் அவ்வாறு தேசங்கள் தோறும் செல்லுகையில் துலாமாசத்திருவிழாவில் தியாகராஜனைத் தர்சிப்பதற்காக வந்துகூடும் வேதியர்களுக்கு அமுதளிப்பதற்காக ஒவ்வொரு கிராமங்களிலும் தானியங்களை யாசகம் செய்துவரலானார். அவ்வேதியரது மனத்தூய்மையையும், அவரது முயற்சியையும் கண்டு களித்தவர்களெல்லோரும் நெல்லையும், கனிவகைகளையும் நெய், தயிர்வகைகளையும் தத்தமது செல்வத்துக்குத் தகுந்தவாறு அளிப்பதாக ஒப்புக்கொண்டு அவ்வேதியர் கருத்துபோலவே திரவியங்கள் எல்லாவற்றையும் வண்டிகளின் மூலமாய்ப் புண்ணியபுரிக்கு அனுப்பலாயினர்.

இவ்விதமாய்ப் பொருள் சேர்த்து வரும் அவ்வேதியர் ஒருநாள் ஒரு குடியானவனுடைய சமீபத்தையடைந்து தான் அதுவரையில் திரவியம் சேகரித்த விஷயங்களைக் கூறி உனது செல்வத்துக்குத்தக்கவாறு உதவி செய்ய வேண்டும் என்று கேட்டார். அவ்வார்த்தையைக்கேட்ட அவன் தானத்தின் சிறப்பையறியாதவனாய்த் தன்னிடத்தில் விளங்கும் நெற்குவியல்களை மறைக்கக்கருதியவனாய் ஓ அந்தணரே! என்னிடத்தில் இப்பொழுது சிறந்த தானியங்களில்லை. இவைகள் எல்லாம் பதராக இருக்கின்றன. மற்றொரு சமயத்தில் நீர் வருவீராகில் நான் அப்பொழுது கூடியவரையில் உதவி செய்கிறேன் என்று சொன்னான். அதைக்கேட்ட வேதியர் அவ்வுரையை உண்மையென்றே நம்பி குளிரையும், மழையையும், பொறுத்துக்கொண்டு மற்றுமுள்ள புண்ணியசீலர்களிடம் சென்று தானியங்களைச்சேகரித்துக்கொண்டு திருவாரூருக்கு வந்து லக்ஷக்கணக்கான அந்தணர்களுக்கு அன்னமளித்துத் திருப்தி செய்து வைத்துத் தாம்பூலங்களையும், தக்ஷிணைகளையும் வழங்கி அவ்வந்தணரது முகத்திலிருந்து கிளம்பிய வேதங்களினால் எண்திசைகளையும் பரிசுத்தி செய்து வைத்தார்.

அத்தருணத்தில் தியாகராஜனது ஸன்னிதானத்தில் அந்தக்குடியானவன், அழுதபுரண்டு முறையிடலானான். ஓ தியாகராஜ பெருமணியே! சில தினங்களுக்கு முன் ஒரு வேதியர் வந்து தர்ம காரியத்துக்காகத் தானியம் அளிப்பாயாக என்று கேட்டார். அத்தருணத்தில் தருமத்தின் சிறப்பை அறியாத நான் என்னிடமிருக்கும் தானியங்கள் எல்லாம் பதராக இருக்கின்றன என்று உரைத்தேன். அதைக்கேட்ட அவ்வேதியர் ஒன்றும் பேசாமல் சென்றபிறகு நான் மறுநாட்காலையில் தானியங்களைப் போய் பார்க்கையில் எண்ணிக்கையற்ற எலிகளும், குருவிகளும், மற்றுமுள்ள பறவைகளும் உண்கின்றனவே! இவ்விதச் செயலைத்தடுக்கலாகாதா! ஓ பூபதியே! என்று நான் முறையிடுகையில் எனது நண்பரில் சிலர் எனக்குக் கூறியவாறு தியாகேச! நான் உமது பாதத்தையே நம்பினேன். எனது தானியங்கள் கெடாவண்ணம் அருள் புரியவேண்டுமென்று வேண்டி நின்றான். அந்தக் குடியானவனுடைய கூக்குரலைக்கேட்ட வேதியர் எல்லோரும் அவனுக்குத் தைரிய மொழிகளைக்கூறி இதுவும் தியாகராஜனது லீலையே என்று நினைத்து அவனுக்குத் தானத்தின் சிறப்பை உபதேசித்து அனுப்பினார்கள். மறு வருஷம் முதல் அக்குடியானவனுக்குத் தியாகேசனது அருளால் எண்மடங்கு தானியங்கள் விளைய ஆரம்பித்தன. அதனால் அவன் அவைகள் யாவும் தியாகேசனது அருளினாலேயே உண்டாகின்றனவென்று நினைத்து ம... அதுமுதல் தர்ம சிந்தனையுடன் வாழ்ந்திருந்தான்.

## 266. முடியில் பாதம் வைத்ததைக் காண்பித்தது

பசுபதிபுரத்தில் ஒரு சிவயோகி இருந்தார். அவர் பால்ய வயது முதல் பூமி முழுமையிலும் சென்று க்ஷேத்திர யாத்திரை செய்தவர். அந்த யோகியானவர் அந்தந்த க்ஷேத்திரங்களின் மேன்மையையும், லிங்கேச்வர மூர்த்தி

களின் சிறப்புக்களையும், தியாகராஜனது அற்புத லீலையின் சிறப்பையும் உபதேசித்துக்கொண்டிருந்தார். அவரது உபந்யாசங்களைக் கேட்ட பக்தர்களுள் கணதாஸர் என்னும் வேதியர் ஒருவர் தியாகராஜனது லீலைகளைக் கேட்டு அவரையே சுத்தப்பிரம்மமாகத் தியானித்துத் திருவாரூரையடைந்து ஈசனுக்கு அபிஷேக குடங்களைத் தனது சென்னியினால் சுமந்து அளித்துவரலானார்.

இந்திர தீர்த்தம், அக்னி தீர்த்தம், வருண தீர்த்தம், வாயு தீர்த்தம், நாரதகுண்ட தீர்த்தம்,கமலாலய தீர்த்தம், காவிரி தீர்த்தம், கபிஞ்சல தீர்த்தம் முதலிய புண்ணிய தீர்த்தங்களைத் தனது சென்னியில் கொண்டுவந்து தியாகராஜனுக்கு அபிஷேகஞ்செய்து வைத்துப் பிறகு, ஓ தியாகேச! அக்ஞானமுள்ள என்மீது அருள்புரிவாய். உமது பாதமலரை எப்பொழுதாவதுஒருநாள் எனது சென்னியில் பதியவைத்து என்னைக் காத்தருள்புரிவீர் என்று மனதில் தியானித்து அஞ்சலியுடன் தேவபீடத்தை வலஞ்செய்து திரும்புவார். இவ்விதமாய் அநேக வருஷங்கள் பிரதிதினமும் அவ்வேதியர் அபிஷேகக் குடங்களை எடுத்து வருகையில் அவரது மனக்கருத்தையும், அவரது உறுதியான பக்தியையும் கண்டு ஆச்சர்யத்தையடைந்த தியாகராஜர் ஒருநாள் அவரது கனவில் தோன்றி ஓ அந்தணோத்தமரே! உமது பக்தியின் மேன்மையைக் கண்டு நான் மகிழ்வடைந்தேன் நீர்விரும்பியவாறே எனது பாதத்தை உமது சென்னியில் வைத்தேன் என்று தனது பாதத்தைச் சற்று நேரம் அவரது சென்னியில் வைத்து மறைந்துவிட்டார்.

தியாகராஜனது பாதஸ்பரிசத்தை அடைந்த அவ்வேதியர் கண்விழித்தெழுந்து கண்ணீர்மல்கக் கூத்தாடி இன்று நான் மேன்மையை அடைந்தேன். எனது வம்சத்தாரும் நற்கதியடைந்தார்கள். வேதமும், திருமாலும் திசைமுகனும், முனிவர்களும் தேடிக்காணாத ஈசனது பாதத்தைநான் காணப்பெற்றேன். இப்பூவுலகில் எனக்கு

இனி யாதொரு குறைவுமில்லை என்றிவ்விதமாய் சொல்லிக் கொண்டு வீதிகளில் செல்லும்பொழுது அவ்வேதியரது உரையைக் கேட்ட சிலர் ஆச்சரியப்பட்டு அவரது பக்தியின் சிறப்பை மெச்சிப் புகழ்ந்தார்கள்.

## 267. மாண்ட மகனைப்பாராமல் விருந்தளிப்பித்த லீலை

கங்கை, யமுனை, கோதாவரி, ஸரஸ்வதி, நர்மதை முதலிய புண்ணிய நதிகளின் அதிஷ்டான தேவதைகள் யாவரும் துலாமாஸ ஆரம்பதினத்தில் தக்ஷிண தேசத்தில் விளங்கும் காவிரி நதியுடன் சேர்ந்து வருகிறார்கள். அதனால் அத்துலாமாஸத்தில் அந்தக் காவிரி நதியில் ஸ்நானம் செய்பவர்களும், அந்நதிக்கரையில் ஜபம் செய்கிறவர்களும், அந்த நதிக்கரையில் தானம் செய்கிறவர்களும் சிறந்த பலனை அடைவார்கள். இவ்விதமாய் அக்காவிரியின் சிறப்பை மகரிஷிகளிடமிருந்து கேட்டறிந்த வேதியர் முதலான தொண்டர்கள் ஒரு சமயத்தில் அந்தத் துலாமாசத்தில் காவிரிக்கரையில் வந்து கூடினர்.

அவ்வித அந்தணர்களுக்கும், மஹரிஷிகளுக்கும், தவசிகளுக்கும், ச்ரோத்திரியர்களுக்கும் அமுது அளிப்பதற்காகப் பொருளைச்சேகரித்து வந்த தியாகேச பக்தராகிய ஒரு வேதியர் கணக்கற்ற வேதியர்களை உட்காரச்செய்து முறைப்படி பூசித்து அன்னமிட்டு அவர்களது ஆசியைப் பெற்று மனமகிழ்வையடைந்து வந்தார். இவ்விதமாய் அநேக வருஷகாலமாகத் துலாமாதத்தில் அந்தணர்களுக்கு அமுதளித்துவரும் அவ்வேதியரது மனத்தூய்மையையும், பக்தி முதலிய நற்குணங்களையும் கண்டு சகல ஜனங்களும் ஆனந்தமடைந்துகொண்டு வருகையில் ஹரப்ரியரென்னும் அவ்வேதியரது மன உறுதியையும், அவரது தர்மபத்தினியின்

மன உறுதியையும் பரீக்ஷை செய்து அவரது நற்கீர்த்தியை உலகமெங்கும் பரவச்செய்ய வேண்டுமென்று தியாகேசர் எண்ணினர்.

ஹரப்ரியரென்னும் அந்தணோத்தமரும், அவரது மனைவியும் அத்துலாமாதத்தில் ஆனந்த பரவசர்களாய் விருந்து அளித்து வருகையில் தியாகேசர் ஒருநாள் தனது சங்கற்பத்துக்குத் தக்கவாறு செய்யக்கருதி அவ்வந்தணரது குமாரனை ஒரு சர்ப்பம் தீண்டும்படி செய்துவைத்தார். அவ்விதமாய் நடுப்பகலில் மகரிஷிகளும், அந்தணர்களும் போஜனம் செய்துகொண்டிருக்கையில் சிலவேலைக்காரர்கள் அங்கே வந்து அந்தணோத்தமரே! வில்வபத்திரங்களைக் கொய்வதற்காகக் காட்டில் சென்ற உமது குமாரன் ஒரு நாகத்தினால் கடிக்கப்பட்டு உயிரிழந்து விட்டான்; என் செய்வோம்? என்றலறி முறையிட்டார்கள்.

அத்தருணத்தில் தனது புத்திரன் மாண்டுவிட்டான் என்னும் விஷயத்தையறிந்து கொண்ட அவ்வந்தணரும், அவரது மனைவியும் சற்றுநேரம் மெய்மறந்து திகைத்து நின்று அஞ்சலிசெய்துகொண்டு ஓ வேதக்கொழுந்தே! பரஞ்சுடரே! ஆபத்சகாய! நாங்கள் இப்படிப்பட்ட மஹரிஷிகளுக்கும் அந்தணோத்தமர்களுக்கும் அமுதளித்து வருகையில் எங்களுக்குப் புத்திர விரகம் ஏற்பட்டுவிட்டதாய் அறிகிறோம். அதனால் எங்களுக்கு உண்டாகிய தீட்டானது இவர்கள் புஜித்து எழுந்திருக்கும் வரையில் எங்களையணுகாமல் இருக்க அருள்புரியவேண்டும். மேலும் இம் மஹரிஷிகளும், பிராம்மணர்களும் போஜனம் செய்யும் முறையானது எவ்விதத்திலும் கெடாதவண்ணமருள்புரிவாய். எங்களுக்குப் புத்திரனாய்த்தோன்றி இறந்த அந்த ஜீவனுக்கு நன்மையளிப்பீர் என்றிவ்விதமாய் கூப்பிய கையுடன் அவ்வந்தண தம்பதிகள் சற்றுநேரம் நின்று பிறகு அவ்வுத்தமர்களுக்கு விருந்தளிக்கும் முறையிலே ஈடுபட்டிருந்தார்.

அவ்விதம் அம்மஹரிஷிகளும், வேதம்வல்ல வேதியர்களும் முறைப்படி போஜனமருந்திக் கைகால்களைச் சுத்தி செய்துகொண்டு அக்காவிரிக் கரையில் விளங்கும் சரற்கால மண்டபத்தில் வீற்றிருக்கும்பொழுது அவ்வந்தண தம்பதிகள் வந்தனம் செய்தார்கள். அத்தருணத்தில் அவ்விருவர்களின் மனவுறுதியைக் கண்டுகளித்த தியாகேசர் விதிஹவ்ய மஹரிஷியை ஏவினர். த்ரிகால ஞானியாகிய அம்மஹரிஷியானவர் ஈசனது கட்டளையினல் தூண்டப்பட்ட மனமுடையவராய்க்கொண்டு அம்மண்டபத்தில் இருக்கும் பக்தர்களைக் கண்டு ஆதரவுடன் கூப்பிட்டு ஹரப்ரியரென்னும் அவ்வந்தணரின் மனக்கருத்தையும் அவரது மனைவியின் மனக்கருத்தையும், அவர்கள்மீது தியாகேசர் செய்த லீலையின் சிறப்பையும் எடுத்துக்கூறி அவர்கள் மனதிற்கு ஆச்சரியத்தையும், ஆனந்தத்தையும் அளித்து வருகையில் மாண்ட அவர்களது குமாரனும் தியாகேசனருளால் உயிர்பெற்று வருவதையும் காண்பித்தார். இவ்விஷயத்தை அறிந்த சகல மகரிஷிகளும் அக்குமாரனுக்கு ஆசி கூறினர்கள். இதுவும் ஒரு தியாகராஜ லீலையின் சிறப்பே என்று நினைத்து ஈசனருள் பெற்று யாவரும் மகிழ்வெய்தினர். பஞ்சபூதத்தினல் தோற்றிய சரீரத்தை ஒழித்த அவ்வந்தண தம்பதிகள் அன்னதானத்தின் சிறப்பினலும், தியாகேசனது அருளினலும் நற்பதவியில் விளங்கினர்கள்.



## 268. தொண்டரிடத்திலன்புவைத்தவளையுகந்த லீலை

சந்திரலேகை என்னும் தாசி ஒருத்தி தனது செல்வத்தைத் தர்ம வழியில் விநியோகித்து வேதியர்களின் அருளையும் மகரிஷிகளின் ஆசியையும் தியாகராஜ பக்தியையும் பெற்று மகிழ்ந்துவந்தாள். ஈசுவர பக்தியின் சிறப்பை அடைந்து விளங்கும் அவ்விலைமாதின்மீது மோகமுற்று

அவளது சமீபம் வந்த விடபுருஷர்கள் பெரும்பாலும் அவளால் பாடப்பட்ட ஈசுவர காதைகளின் சிறப்பைக் கேட்டு மனமுருகியவர்களாய்த் தியாகேச பக்தியையடைந்து விளங்கினார்கள்.

இவ்விதம் அவ்விலைமாதானவள் தனது யௌவனச் சிறப்பைக் கண்டு மோகித்துவந்த விடபுருஷர்களை அன்புடன் அழைத்து மானிட வாழ்க்கையின் நிலையற்ற தன்மையையும், ஈசுவர தத்துவத்தின் சிறப்பையும் எடுத்துக் கூறி அவர்களை நல்வழியில் திரும்பச்செய்த விஷயங்களை அறிந்த பெரியோர்கள் அவ்விலைமாதைப் புகழ்ந்து வந்தார்கள். துஷ்டர்களுடைய மனதையும், காமிகளுடைய மனதையும், ஈசுவர பக்தி மார்க்கத்தில் திருப்பிச் சிவதத்வ பிரகடனம் செய்துவந்தபடியால் அம்மாதைப் பரீக்ஷித்துப் பார்க்கவேண்டுமென்று கருதிய தியாகராஜர் ஒருநாள் தன் கணத்துள் ஒருவனான பூதன் என்பவனைக் கூப்பிட்டுச் சிற்சில விஷயங்களை உபதேசித்து அத்தாசியின் வீட்டுக்குச் செல்லும்படியனுப்பினார்.

தியாகராஜனது கட்டளையைச் சென்னியில் மாலைபோல் தரித்துக்கொண்ட பூதன் என்பவன் ஒரு சிவபக்தவேதியன் போல் உருவமெடுத்துக்கொண்டு ஹரஹர! பரமேச! தியாகேச என்று நாமசங்கீர்த்தனம் செய்துகொண்டே அத் திருவாரூர் நகரில்வாழும் அவ்விலைமாதின் மாளிகைவாயிலின் அருகே சென்றுகொண்டிருந்தார். அவ்விதமாய்ச் செல்லும் சிவபக்தரின் குரலோசையைக்கேட்டு அத்தாசி ஆனந்தத்துடன் வெளிவந்து அவரது பாதத்தில் பணிந்து நன்கு உபசரித்து க்ஷேமத்தை வினவினாள். ஈசுவரனது பிரமத கணநாதனாகிய அச்சிவபக்தரானவர் அவள் செய்த பூஜைகளையெல்லாம் மகிழ்வுடன் பெற்றுக்கொண்ட பிறகு புன்சிரிப்புடன் ஓ சந்திரலேகா! தேவலோக சுகத்துக்கு நிகராகிய உனது சயனபோகத்தை நான் மூன்றுநாள் விரும்புகிறேன் என்றுரைத்தார்.

அச்சிவபக்தரது உரையைக்கேட்ட அசசாங்க யானவள் தனது வழக்கம்போல் ஈசனது திவ்யகுணங்களை வீணையில் பாடிய பிறகு காமராஸத்திலிருந்து பக்தி மார்க்கத்தில் திருப்புவதற்காக ஈசனது திவ்ய மஹிமைகளை விரிவாக எடுத்துக்கூறினாள் *

269. வேதத்தினால் கதவைத் திறக்கச் செய்த லீலை.

ஒருசமயம் ஒரு மந்திரவாதியானவன் நெடுநாள் வரையில மகாமகா கோரமந்திரங்களையுச்சரித்து காளி, கராளி, டாகினி, சூலி, பைரவி, ஜ்வாலாமுகி முதலிய உக்ர தேவதைகளை மஞ்சள் சோறு, கருப்புச் சோறு, ரக்தச் சோறு, முதலியவைகளைப் பலியிட்டு உபாசித்து அவர்களது அருளினால் பலவித மந்திரங்களின் சித்தியைப் பெற்று பூமி நடுங்கும்படி நடந்துவந்து அத்திருவாரூர் நகரையணுகி அங்கு விளங்கும் செல்வச் செழிப்பைக் கண்டு பொறாமை கொண்டான்.

மகாபாதகச் செயலைச் செய்வதில் துணிவையடைந்த அம்மந்திரவாதியானவன் நல்ல ரத்தினங்கள் இழைக்கப் பட்டதாய்ப் பொற்கிரிபோல் விளங்கும் ஈசனது கோபுரத் தின் அழகைக்கண்டு கடுஞ்சினங்கொண்டு கண்களினின்றும் சினப்பொறி பறக்க மகாமந்திரங்களை உச்சரித்து அத் தேவாலயத்தின் கோபுரவாசல்களை திறக்க முடியா வண்ணம் மந்திரத்தினால் ஸ்தம்பனம் செய்து விட்டுத் தனது கொடியபற்களைக் காட்டிக்கொண்டு கண்டோர் மனம் முறியும்படி கோர மந்திரங்களை உச்சரித்துக் கொண்டே ராஜமாளிகை வாயிலையடைந்தான். இவ்வித மாய் அம்மந்திரவாதியானவன் ஜீவராசிகளுக்கு யமன் போல் தோன்றி அந்நகரையழிக்க நினைத்துச் செய்துவரும்

* கையெழுத்துப் பிரதியில் இக்கதை முற்றுப்பெறாமல் இவ்வளவுதான் காணப்படுகிறது.

தீச்செயல்களைக் கண்டு சினங்கொண்ட தியாகேசர் தனது அற்புதசக்தியினால் பிரம்மராக்ஷஸனை உண்டுபண்ணி அவனுக்கு மகாசக்திகளையளித்து அன்றிரவு முடிவதற்கு முன்னமே அம்மந்திரவாதியை மாய்த்துவரும்படி

தியாகேசனால் அனுப்பப்பட்ட அந்தப் பிரம்மராக்ஷஸனானவன் மிகவும் விரைவாய் ஓடிவந்து அம்மந்திரவாதியின் எதிரில் நின்று அவனது நாவிலிருந்து உதிரவெள்ளம் கக்கும்படி ஒரு கற்பாறையை அவனது தலையில் மோதினான். அதனால் வெகுண்ட அம்மந்திரவாதி நாகுழற பெருமூச்சுவிட்டு உதிரத்தைக் கக்கிக்கொண்டு பூமியில் வீழ்ந்து தனது மந்திரசக்தியினால் அப்பிரம்ம ராக்ஷஸன் கைகளும், கால்களும் கட்டுறும்படி ஸ்தம்பனம் செய்தான் ஈசன் அளித்த மந்திரசக்தியினால் அவனது மந்திரசக்தியை யழித்த அந்தப் பிரம்ம ராக்ஷஸன் ஆகாயமும் பூமியும் நடுங்கும்படி பெரியகர்ஜனை செய்து தோள்தட்டி மறுபடியும் அம்மந்திரவாதியைப் பூமியில் வீழ்த்தி அடித்து மிதித்து உதைத்துக் கடித்து உயிரை யிழக்கும்படி செய்து அந்தர்தானமடைந்தான்.

நடுநிசியில் அவ்விருவருக்கும் நடந்த போரின் கொடுமையைக் கண்டு பயந்த நகர ஜனங்கள் ஓடிவந்து கும்பலாய்க்கூடி தேடிப்பார்க்கையில் அந்த மந்திரவாதியானவன் ராஜமாளிகையின் அருகில் குன்றுபோல் வீழ்ந்து கிடப்பதைக் கண்டு பயந்து அரசனுக்குத் தெரிவித்து வீரர்கள் மூலமாய் அவனைப் பூமியில் புதைத்துத் தியாகேசனருளினாலேயே தமது நகரும் ஜீவராசிகளும் காக்கப்பட்டதென்று ஈசனைத் துதிசெய்துகொண்டிருக்கையில் சூரியனும் தன்னுடைய கிரணங்களை வீசிக்கொண்டு கிளம்பினான். அத்தருணத்தில் தேவாலய அதிகாரிகள் ஓடிவந்து ஓ மகாராஜனே! ஈசனது கோபுர வாயிலில் கதவுகள் யாவும் திறக்கமுடியவில்லையே! என்செய்வோம்!

சனது பூஜாகாரியத்துக்குப் பங்கம் நேரிடுமோ என்று அலறினார்கள்.

அத்தருணத்தில் தயாநிதியாகிய தியாகராஜப் பரம்பொருள் ஏவியதோர் அசரீரி வாக்கைக் கேட்ட சோழ பூபாலன் பிரார்த்திக்க பிரம்மதேஜஸ்ஸினால் அக்னிக்கு நிகராய் விளங்கும் அந்தணோத்தமர்கள் தியாகராஜ பாத கமலத்தை மனதில் தியானித்துக்கொண்டு நான்கு வேதங்களையும் முறைப்படி பாராயணம் செய்கையில் முதல் முகூர்த்தம் கழிந்தவுடன் முதலாவது கோபுரக் கதவு திறப்பையடைந்தது. இரண்டாவது முகூர்த்தம் கழிந்தவுடன் இரண்டாவது கோபுரக் கதவு திறப்பையடைந்தது. இவ்விதமாய் தயாநிதியாகிய தியாகேசர் அவ்வந்தணர்கள் ஓதும் வேதங்களின் மந்திரசக்தியைக் கொண்டு கோபுரக் கதவுகளைத் திறக்கச் செய்து எண்திசைகளிலும் மங்களத்தையுண்டுபண்ணினார், அதையறிந்த தொண்டர்கள் எண்திசைகளிலிருந்தும் வந்து கமலையில் ஸ்நானம் செய்து தியாகேசனைத் தர்சித்துக் கைகூப்பித் துதிசெய்து சிறப்புடன் மகிழ்ந்தார்கள்.

## 270. மானிட சரீரத்தைச் சுவர்க்கத்திலமர்த்திய லீலை

ஒருசமயம் வசிஷ்டர் முதலிய மகரிஷிகள் புண்ணிய தீர்த்தங்களில் நிலைபெற்று ஜபம் செய்து புண்ணியங்களைச் சம்பாதித்துக்கொண்டு புண்ணியபுரத்துக்கு வந்து கூடினர். அந்த வசிஷ்ட மாமுனிவர் அந்த க்ஷேத்திரத்திலும் ஜபங்களை முடித்துவிட்டுத் தெய்வநாதனையும் பூதநாதனையும் விளங்கும் தியாகேசனைக் கண்டு பணிந்து துதிசெய்கையில் தியாகேசர் தனக்கு மந்திரசாந்தி அபிஷேகம் செய்வீர் என்று வசிஷ்டருக்குரைத்தார். தியாககற்பகத்தின் இவ்வித மொழியைக் கேட்ட அவ்வசிஷ்ட மாமுனிவர்

அவ்விஷயத்தை வித்த சோழ மகாராஜனுக்கு அறிவித்தார். முனிவரது விருப்பம்போலவே அம்மகாராஜனும் தியாக ராஜனுக்கு விசேஷ சிறப்புடன் அந்த மந்திரசாந்தி அபிஷேகத்தைச் செய்துவைக்கக்கருதி காரணம், காமிகம் பாசுபதம் முதலிய சைவாகமங்களில் ஞானம்பெற்ற வேதியர்களையும், அங்கத்துடன் நான்கு வேதங்களையும், ஓதவல்ல வேதியர்களையும், புராணங்களைப் படிக்கவல்ல வேதியர்களையும் எண்திசைகளிலிருந்தும் கணக்கற்றவர் களாய் வரவழைத்தான்.

வசிஷ்ட மாமுனிவருடைய உபதேசம்போலவே அச் சோழ பூபாலனும் அந்தத் திவ்யாபிஷேகத்துக்கு உபயோகிக்கவேண்டிய திரவியங்களையும் நாறுதிக்குகளி லிருந்து சேகரித்தான். அவ்வித முயற்சியைக் கண்ட சிவ பக்தர்கள் யாவரும் கணக்கற்றவர்களாய்த் திருவாரூருக்கு வந்துசேர்ந்தார்கள். அவ்வித திவ்யாபிஷேகச் சிறப்புக்கு தமது பொருளும் கொஞ்சம் சேரவேண்டுமென்று எண்ணி பிராம்மணர்களும், க்ஷத்திரியர்களும், வைசியர்களும் சூத்திரர்களும் தம் வசத்திலிருந்த செஞ்சந்தனங்களையும், குங்குலியங்களையும், கஸ்தூரிகளையும், மற்றுமுள்ள பற்பல திரவியங்களையும் பக்தியினால் சென்னியில் வைத்துக் கொண்டு தியாகராஜனது சந்நிதானத்தில் அளித்தார்கள். இவ்விதமாய் நாறுதேச பக்தர்களாலும், அச்சோழ பூபாலனாலும் மந்திரசாந்தி அபிஷேகத்துக்கு வேண்டிய சகல திரவியங்களும் சேகரிக்கப்பட்ட பிறகு ஆவணிமாத மூலா நக்ஷத்திரத்தில் கங்கணம் தரித்துக்கொண்ட அந்த வசிஷ்ட மாமுனிவர் அவ்வித பிராம்மணோத்தமர்களின் மூலமாயும் மகரிஷிகளின் மூலமாயும் வேதங்களையும், புராணங்களையும், மந்திரங்களையும் படிக்கச்செய்து தான் ஆயிரத்தெட்டு ஸ்நபனபாத்திரம் வைத்து ருத்திராகம முறைப்படி தியாகராஜனது திருமேனி குளிரும்படி அபிஷேகம் செய்ய ஆரம்பித்தார்.

மங்களவாத்தியங்கள் முழங்கவும் கின்னரரும் தேவரும் கீதம்பாடவும், வேதியர் மறையோதவும், பக்தர் துதி செய்யவும் நற்சுப முகூர்த்தத்தில் கும்பாபிஷேகத்தையும் செய்துவைத்த அவ்வசிஷ்ட மகரிஷியானவர் தியாகேசனை துதித்துக் கவசமந்திரத்தினால் பிரதிஷ்டைசெய்து வைத்து திவ்ய நைவேத்தியங்களினாலும் மற்றுமுள்ள பதினாறுவித உபசாரங்களினாலும் பணிசெய்து பணிந்துநின்றார். அத்தருணத்தில் தியாகேசனைத் தர்சித்த ஜனங்கள் யாவரும் தத்தமது விருப்பத்தையடைந்து வாழ்ந்தார்கள். சிலர் தமக்குக் கைலாசபதவி யளிக்கவேண்டுமென்று வேண்டினர். சிலர் தமக்குத் தியாகராஜபக்தி நிலைபெற வேண்டினர். சிலர் தமக்குப் பூலோக ஐச்வரியத்தையும் இடர் இல்லாமையையும் ஈசுவரபக்தியையும் வேண்டினர். சிலர் கல்விச்செல்வத்தை வேண்டினர். சிலர் புத்திர செல்வத்தை வேண்டினர். இவ்விதமாய்ச் சகல ஜனங்களும் தத்தமது விருப்பங்கள் நிறைவேற வேண்டுமாறு அருள் புரிவீரென்று அஞ்சலி செய்து துதிக்கையில் நெடுநாளாய்த் தியாகராஜ பக்தியடைந்தவனையும், கணக்கற்ற திரவியங்களினால் ஈசனுக்குத் தொண்டு செய்தவனையுமிருக்கும் அந்த ஸித்தசோழமகாராசன் கூப்பியகையுடன் தியாகேசனது எதிரில் விரும்பியவாறே அவனது மானிட சரீரம் ஸ்வர்க்கத்தில் நிலைபெறும்படி அருள்செய்தார்.

அத்தருணத்தில் தியாகராஜனது கருத்துப்போலவே இந்திரன் முதலிய தேவர்கள் விமானத்துடன் அங்குத் தோன்றித் தியாகேசனைத் தேவகங்கா ஜலத்தினால் அபிஷேகம் செய்துவைத்துப் பணிந்து நின்ற அச்சோழனை மானிடதேகத்துடன் தம்முடன் அமர்ந்திருக்க அழைத்துக் கொண்டு சென்றார்கள். இவ்விதமாய்த் தியாகேசனுக்கு மந்திரசாந்தி அபிஷேகத்தை முறைப்படி நடத்திவைத்த வசிஷ்டமுனிவர் ஒரு மண்டலம் வரையில் காமதேனுவின் பாலினால் அபிஷேகத்தைச் செய்துவைத்து அங்கு நடந்த

விஷயங்களின் சிறப்பையறிந்து மகிழ்ந்து பக்தர்களுக்கு காசிகூறித் தியாகமகிமையைப் பலவாறு எடுத்துரைத்தார். அவ்விதமாய் வசிஷ்ட மாமுனிவரது உபதேசத்தினால் தொண்டர்கள் யாவரும் நற்பதவியிலமர்ந்து ஆதியுகத்தின் இயல்பைத் தோற்றுவித்தார்கள்.



### 271. கட்டுச்சோறு அளித்த லீலை

திருவாரூர் நகரில் ஒரு புரோகிதர் வசித்துவந்தார். அவர் அநேக மகரிஷிகளையும், அநேக ச்ரோத்ரியர்களையும், அநேக பக்தர்களையும் கண்டு பணிந்தவராயிருந்தாலும், அவர்களது தத்வோபதேசங்களைக் கேட்டிருந்தபோதிலும், தியாகராஜனது பக்தியை யடைந்திருந்தபோதிலும் ஸம்ஸாரத்தினாலுண்டாகிய மனக்லேசத்தை அடைந்து கொண்டே காலங்கழித்துவந்தார். இல்வாழ்க்கையில் தானியமில்லாத சமயத்திலும், தனமில்லாத சமயத்திலும், பிணி நேரிட்ட சமயத்திலும், பற்பலவிதமாய் இடர் நேரிட்ட சமயத்திலும் அவர் தியாகராஜனது பாதாரவிந்தங்களைச் சுத்த மனதினால் தியானித்து அவரது கருணையினால் அவ்வித துன்பத்திலிருந்து நீங்கியபிறகு மறுபடியும் ஸம்ஸார சிந்தையையே யடைவாரேயொழிய தியாகேச பக்தியில் நிலைபெற்றுநிற்பவரல்ல.

அவ்வேதியர் குடும்ப விஷயத்தைப்பற்றி அவ்வாறு சிந்தனை செய்பவராயிருந்தபோதிலும் தினந்தோறும் விடியற்காலையில் முறைப்படி கர்மானுஷ்டானம் செய்து வரும் சிறப்பினாலும் சாஸ்திரமுறைப்படி வைதிககாரியங்களை நடத்திவைக்கும் விமரிசையினாலும், பக்ஷபாதமின்மையினாலும், தூயசிந்தையை யடைந்திருப்பதினாலும் எச்சமயத்திலும் பாவகாரியங்களைச் செய்யத் துணியாத தன்மையினாலும் பிறருக்கு நல்லுபதேசம் உரைப்பதினாலும் அவ்வந்தணரிடத்தில் தனது கருணையைப் பெருக்க

கருதிய தியாகராஜர் தக்க சமயத்தைத் தேடிக்கொண்டிருந்தார். ஒருநாள் அவ்வைதியர் தனது சிறுகுமாரனையும் சிறு குமாரியையும் அழைத்துக்கொண்டு மற்றொரு ஊருக்குப் புறப்பட்டுச் செல்லுகையில் நடுவழியில் வழி தடுமாற்றத்தை யடைந்து ஒரு காட்டில் நுழைந்து இங்கு மங்கும் மேடுபள்ளங்களில் ஏறி இறங்கி அலைந்து நடையின் தளர்ச்சியினாலும், பசியினாலும், தாகத்தினாலும் வாடும் தனது புத்திரனையும், புத்திரியையும் கண்டு முகவாட்டத்தையும் மனக்கொதிப்பையும் அடைந்து தென்திசையை நோக்கிக் கைகளைக் கூப்பிக்கொண்டு, ஓ தியாக கற்பகமே, உமது அருளினால் ஜன்மாவையடைந்த எனது மக்கள் இக்காட்டில் இம்மாதிரியாய் உணவு இன்றி வாடுகிறார்களே. எனது கண்களுக்கு நல்வழியும் தோற்றவில்லை. எனது மக்களின் பசியை எவ்வாறு ஆற்றுவேன்? உமது பாதத்தையே நம்பினேனென்றுரைத்துக்கொண்டே பெருமூச்சுவிட்டுத் தளர்ந்த நடையை யுடையவராய் அம் மக்களுடன் ஒரு மரத்தின் நிழலில் உட்கார்ந்தார்.

அக்கொடிய காட்டில் அவ்விதமாய்ப் பசியினாலும், தாகத்தினாலும் வாடிய அவ்வைதியரையும், அவரது மக்களையும் காக்கக்கருதிய தியாகேசன் முதலில் அசரீரியின் மூலமாக அறிவித்தார். "ஓ அந்தணரே! உமது கர்மானுஷ்டானத்தைப்பற்றியும், உமது மனச்சுத்தியைப்பற்றியும் நான் களிப்படைந்துள்ளேன். நீர் அளவற்ற பக்தியை அடைந்திருந்தபோதிலும் நமது குடும்பத்தை யார் காப்பாற்றுவார்? நமது மக்களுக்கு யார் உணவு அளிப்பாரென்று அற்ப ஞானத்தையடைந்துவந்தீரே! அவ்வித ஞானத்தை இப்பொழுது ஒழித்துவிடும். சகல ஜீவராசிகளையும் சிருஷ்டித்தும், பாதுகாத்தும், நற்புத்தி கூறியும் இடரிலிருந்து காத்துவரும் பரமேசனல்லவா உலக நாதன். உலக ரக்ஷகன். எங்கும் நிறைந்தவன், நற் குணங்களோடு கூடியவன். இப்படிப்பட்ட பரமேசு

வரனது தத்துவத்தையறிந்துகொண்டு சகல ரக்ஷணைகளை யும் ஈசனே செய்வார் என்று நம்புவீராகில் அப்பொழுதே பரமேசன் காப்பாற்றுவார். இப்பொழுது உமது மக்களுக்கும் நற்சோறளித்துக் காப்பாற்றப்போகிறார்" என்று இவ்விதமாய்த் தனது அருகில் உண்டாகிய அசரீரியைக் கேட்டுத் தியாகராஜனது பாதமே கதி என்று நம்பிய அவ்வேதியர் சற்றுநேரம் எழுந்து ஈசனைக் கைகூப்பி துதித்துக்கொண்டிருக்கையில் ஒரு திவ்ய புருஷன் அவரது எதிரில் தோன்றித் தேவாமிருதத்துக்கொப்பாகிய கட்டுச் சோற்றையும், தெளிந்த தண்ணீரையும் ஒரு பாத்திரத் துடன் கொண்டுவந்து இதை உமது மக்களுக்களித்து நீரும் உண்டுகளிப்பீரென்றுரைத்து மறைந்தான்.

அதைக்கண்ட அவ்வேதியர் மிகவும் ஆச்சரியத்தை அடைந்து சகலலோகங்களுக்கும் ஆதிகாரணமாகிய தியாகேசனருள் வெள்ளம்போன்ற அவ்வுணவைத் தமது குழந்தைகளுக்குக் கொடுத்துத் தானுமருந்திக் களைப்பாறி ஈசனை மனத்தில் நினைத்தவுடனே அவரது கண்களில் நல் வழியும் தோன்றிற்று. அதனால் அவர் அதுமுதல் தான் தனது குடும்பரக்ஷகன் என்னும் அஞ்ஞானத்தை யொழித்து ஒப்பற்ற தியாகேச பக்தியையடைந்து பிறருக்கும் இவ்விஷயத்தை உபதேசிக்கலானார்.

### 272. காட்டிலொளித்த லிங்கங்களைக் காண்பித்த லீலை

வேதம்வல்ல வேதியர்களால் முப்பொழுதும் தொழுதேத்தப்பட்ட தியாகராஜர் பூமியின்கண் அங்கங்கு வசிக்கும் சகல பக்தர்களுக்கும் தனது தர்சனத்தை யளித்துச் சிறப்படைவிக்கக்கருதியவராய் ஆதியுக காலம் முதல் அங்கங்குள்ள புண்ணிய ஸ்தலங்களில் விளங்கும் மகாலிங்கேச்வர மூர்த்திகளை வெளிப்படுத்திக் காண்பிக்க வேண்டுமென்று ஒரு நாள் ஒரு வேடன்போல் உருவம்

எடுத்துக்கொண்டு பத்மவனத்தினருகில் தோன்றினர். அவ்விதம் தோன்றிய தியாகேசர் அங்குள்ள பிராம்மணத் தமர்களைக் கூப்பிட்டு ஒரு புதரில் மறைந்திருக்கும் ஜயலிங்க மூர்த்தியைக் காண்பித்துப் பணிவீர்களென்றுரைத்து மறைந்தார். அப்பொழுதே மற்றொரு வனத்தில் தோன்றிய வேடன், வ்ருஷபத்வஜலிங்க மூர்த்தியையும், உமாமகேச லிங்க மூர்த்தியையும், பரமேச்வரலிங்க மூர்த்தியையும், விசுவகர்மலிங்க மூர்த்தியையும், சைவலிங்க மூர்த்தியையும், இந்திரலிங்க மூர்த்தியையும் அக்னிலிங்க மூர்த்தியையும், யமலிங்க மூர்த்தியையும், வருணலிங்க மூர்த்தியையும், வாயுலிங்க மூர்த்தியையும், பக்தப்பிரியலிங்க மூர்த்தியையும், கைலாஸலிங்க மூர்த்தியையும், சங்கரலிங்க மூர்த்தியையும் மகாதேவலிங்க மூர்த்தியையும், ஈசான லிங்க மூர்த்தியையும், பிரஹ்மலிங்க மூர்த்தியையும், குமார லிங்க மூர்த்தியையும், பசுபதிலிங்க மூர்த்தியையும், ம்ருத்யுஞ்சயலிங்க மூர்த்தியையும், பத்ரலிங்க மூர்த்தியையும், ஜ்யேஷ்டலிங்க மூர்த்தியையும், ருத்ரலிங்க மூர்த்தியையும், தேஜோலிங்க மூர்த்தியையும், பஞ்சபூதலிங்க மூர்த்தியையும், காளலிங்க மூர்த்தியையும், தர்மலிங்க மூர்த்தியையும், ஸ்வர்ணலிங்க மூர்த்தியையும், ரஜதலிங்க மூர்த்தியையும், வாமதேவலிங்க மூர்த்தியையும், காரண லிங்க மூர்த்தியையும், விருஷலிங்க மூர்த்தியையும், ஆதி தேவலிங்க மூர்த்தியையும், கிராதலிங்க மூர்த்தியையும், காமசக்ரலிங்க மூர்த்தியையும், காமதகனலிங்க மூர்த்தியையும், பைரவலிங்க மூர்த்தியையும், அங்கங்குள்ள புண்ய நதிக்கரைகளிலும், புண்ணிய மலைகளின் சாரிலும், உச்சியிலும், நடுக்காட்டிலும், மறைந்து விளங்கும் லிங்கேசுவர மூர்த்திகளை அவ்வேடன் அந்தணர்களுக்குக் காண்பிக்கவே அவர்கள் எல்லோரும் ஒன்றுகூடி அளவற்ற திரவியங்களினால் எல்லா மூர்த்திகளுக்கும் ஆகம முறைப்படி மறுபடியும் கும்பாபிஷேகம் செய்து துதிக்கத் தொடங்கினர்.

அந்தந்த சமயங்களிலுண்டாகிய அசரீரி வாக்கைக் கேட்ட தொண்டர்களனைவரும் அவ்வாறு வேடனுய்த் தோன்றி மகேசுவர லிங்கமூர்த்திகளைக் காண்பித்து மறைந்தவர் தியாகராஜனே என்று நிச்சயித்து அவ்வித லிங்க மூர்த்திகளிடத்திலும், தியாகராஜரிடத்திலும் ஒப்பற்ற பக்தியைச் செலுத்தி நன்மையுடன் விளங்கலானார்கள்.

## 273. கைலாஸ தீர்த்தத்திலமர்ந்தவனைக் கபிலையில் எழுப்பிய லீலை.

புண்யகரமான தபோவனங்களும், மகரிஷிகளின் ஆச்ரமங்களும் சூழ்ந்த மல்லிகை வனத்தில் கைலாஸதீர்த்த மென்னும் ஒரு புண்ணிய தடாகமுண்டு. முன்பு ஒரு சமயத்தில் பார்வதியும் பரமசிவனும் வ்ருஷபாரூடராய் ஆகாயத்தில் சஞ்சரித்துக் கொண்டு தென்திசையில் சென்ற பொழுது அந்த லோக தம்பதிகளின் களைப்பை நீக்கும் பொருட்டு அம் மல்லிகாரண்யத்தில் வருணராஜனால் அமைக்கப்பட்ட அப் புண்ணிய தடாகம் அவர்களின் முன்பு விளங்கிற்று. லோகநாதனும், பார்வதியும் அந்தத் தடாகத்தில் நீர்உண்டு அங்கு விடாய் நீங்கியவர்களாய்ச் சென்றதுமுதல் அந்தத் தடாகத்துக்குக் கைலாஸதீர்த்த மென்று முனிவர்கள் பெயரளித்தார்கள்.

சகல பாவங்களையும் நீக்கி நற்புத்தியையும் சிறப்பையும் அளிக்கவல்ல அப்புண்ணிய தடாகத்தின் மகிமையை யறிந்துகொண்டு அதுமுதல் அநேக முனிவர்களும், யோகிகளும், மாணுக்கர்களும் அங்குவந்து வசிக்கலாயினர். அவ்வித வித்யார்த்திகளாலும் வேதியர்களாலும் முனிவர்களாலும் சூழப்பட்டவராய் ப்ருகுகுத்ஸர் என்னும் மகரிஷியானவர் ஒருநாள் விடியற்காலையில் ஸ்நானனுஷ்டானம் செய்வதற்காகச் சென்றார். அவ்விதம் செல்லும்

அம்மகரிஷியும், அவரது சிஷ்யர்களும் சம்போ! சங்கர! கௌரீச! என்று ஈசுவரநாமங்களைக் கீர்த்தனை செய்து கொண்டே அப்புண்ணியதீர்த்தத்தின் அருகில்சென்று ஆசமனம் செய்து ஸ்நானம் செய்யத் தொடங்கினார்கள். மாணாக்கர்களுள் மாணிக்கலிங்க தாஸன் என்னும் ஒரு மாணாக்கன் அக்கைலாஸ தீர்த்தத்தில் தவறி ஆழத்தில் அமிழ்ந்துவிட்டான்.

அந்த மாணிக்கலிங்க தாஸனைக் காக்கக் கருதிய தியாகேசர் தனது திவ்ய சக்தியை ஏவவே அதையறிந்த வருணராஜன் அம் மாணாக்கனது சரீரத்துக்கு எவ்வித இடரும் நேரிடாமல் பார்த்துக்கொண்டு அவனை அக் கயிலாய தீர்த்தத்திலிருந்து கங்கா ப்ரவாஹ வழியாய் கமலாலயத்தில் சேர்த்து அதிலிருந்து வெளியில் எழுப்பித் தியாகராஜனது சன்னிதானத்தைக் காண்பித்துவிட்டு மறைந்துசென்றான். அத்தருணத்தில் தியாகேசனது ஏவலா லுண்டாகிய அசரீரியைக் கேட்டும் கமலாலயத்திலிருந்து வெளிக்கிளம்பி வந்த அந்தமாணாக்கனைக்கண்டும், அவன் பக்தியுடன் துதிசெய்வதைக் கேட்டும் பரமானந்தமடைந்து "ஜீவராசிகளுக்கு உண்டாகும் எவ்வித இடரையும் நீக்கிக் காக்கும் தியாகராஜனே மூவுலகுக்கும் நாதன், தியாகராஜனே வேதப்பொருள்" என்று பலவிதமாய் ஈசனைத்துதி செய்தார்கள். அத்தருணத்தில் கைலாஸ தீர்த்தத்தில் மூழ்கிய வேதிய குமாரனைக் காணாத அம் மகரிஷியானவர் ஆகாயவாணியைக்கேட்டுக் களிப்படைந்து தியாகராஜ பக்தியைப் பெற்றுச் சில தினங்களில் அங்கிருந்து திருவாரூரையடைந்து அம்மாணாக்கனுடன் தியாகராஜனைக் கண்டு துதிசெய்து பணிந்து தியாகேசன் அருளால் யோகசித்தியையடைந்தார்கள்.

**274. தேவர் ஏவலை மறுத்தவனுக்கருள்செய்த லீலை.**

ஒரு சமயம் தியாகராஜனது திருக்கோயிலில் கிருத்திகா தீபவைபவம் நடந்தது. அத்தீபவிழாவை வெகு சிறப்புடன் நடத்திவைக்கக்கருதிய ஸுமதி சோழ மகாராஜன் தானே நேரில் சென்று லக்ஷ தீபத்தையும், லக்ஷ கும்பாபிஷேகத்தையும், லக்ஷப்பிராமண போஜனத்தையும் நடத்தி வைப்பதற்கு வேண்டும் திரவியங்களைச் சேகரித்து வருகையில் அம்மன்னவனது மனதைப் பரீக்ஷை செய்யக் கருதிய இந்திரன் மாதலியையனுப்பினான்.

தேவேந்திரனால் அனுப்பப்பட்ட அம்மாதலியானவன் விமானத்துடன் விரைவாய்ப் புண்ணியபுரியையடைந்து திருவிழாக்காரியத்தில் முயற்சி செய்துகொண்டிருக்கும் அச்சோழ பூபாலனையணுகி "ஓ புமிபுரந்தரனே! சுவர்க்கத்தில் விளங்கும் தேவேந்திரனுடைய ஏவலால் நான் இங்கு வந்தேன். நந்தவனத்தில் விளையாடித் தேவர்களுடன் தேவாமிருதத்தை உண்பதற்கு உமக்கு விருப்பம் இருக்குமாயின் நீர் இப்பொழுதே இவ்விமானத்தில் ஏறிக்கொள்வீர். இன்னும் சில முகூர்த்தங்கள் செல்வதற்கு முன்னமே தேவலோகத்தையடைந்து பரமானந்தம் அடையலாம். இதுவே இந்திரனது விருப்பம்" என்று சொன்னான். அவ்வாறு மாதலியுரைத்ததைச் செவியிற் கொண்ட சோழபூபாலன் "மாதலியே! நான் இப்பொழுது ஸ்வர்க்கத்திற்கு வரவிரும்பவில்லை. சகல லோகநாயகனாகிய தியாகராஜனுக்குக் கிருத்திகா தினத்தில் லக்ஷதீபம் ஏற்றி வைத்தும், லக்ஷ கும்பஜலத்தினால் அபிஷேகம் செய்து வைத்தும், லக்ஷக்கணக்கான வேதியர்களுக்கு அமுது அளித்தும், எனது ஆன்மாவுக்கு நற்பயனைத்தேடித் தியாகேசனைப் பணிந்து விடை பெற்றுக்கொண்டபிறகே நான் ஸ்வர்க்கத்திற்கு வரமுடியும்" என்று சொன்னான். அதைக்கேட்ட மாதலியானவன் அவ்விஷயத்தைத் தேவர் கோனுக்குத் தெரிவித்தான்.

மறுநாள் சூரிய உதய காலத்தில் அம்மகாராஜனது எதிரில் மற்றொரு தேவதூதன் தோன்றி "ஓ பூபாலனே! செல்வத்தினால் சிறந்த குபேரனது ஏவலால் இங்கு வந்த என் பேச்சையுற்றுக்கேட்பீர். இத்தருணத்திலேயே குபேரனது சபைக்கு வருவீராகில் நீர் வேண்டும் விருப்பங்களை அஷ்ட திக்பாலகர்கள் அன்புடன் அளிப்பார்கள்" என்று கூறினான். அதைக்கேட்ட சோழ பூபாலன் மாதலிக்கு உரைத்ததுபோலவே பதில் கூறியபிறகு தியாகராஜத் திருவிழாவின் முயற்சியில் தனது மனதை நிலைபெறச்செய்தான். இவ்விதமாய் அம்மகாராஜனது மனதை எவ்விதத்திலும் மாற்ற முடியாமல் திக்பாலகர்கள்

அதன் பிறகு அத்திருவிழா தினத்தில் அச்சோழ பூபாலனது மனக்கருத்துப்போலவே சாஸ்திரமுறைப்படி வேதியர்கள் முதலிய தொண்டர்கள் தியாகராஜனுக்கு லக்ஷ கும்பாபிஷேகத்தை நிறைவேற்றி வைத்துப் பிராம்மணர்களுக்கு அமுதளித்து மாலைநேரத்தில் லக்ஷ தீபங்களை ஏற்றிவைத்து மங்களவாத்தியங்கள் முழங்கத் திருவிழாவை நிறைவேற்றி வைக்கையில் தொண்டர்கள் அனைவரும் பணிந்து நிற்கையில் ஒரு அசரீரி உண்டாயிற்று "கேளீர் பக்தர்களே! இந்திரன் குபேரன் முதலிய திக்பாலர்களின் ஏவலை ஆதரிக்காமல் தியாகராஜப் பரம்பொருளுக்கு இத்திருவிழாவைச் சிறப்பாய் நடத்திவைத்த இம்மகாராஜனே ஒப்பற்ற பக்திவைத்தவன். இவனது மனநிலையைக்கண்டு களித்த தியாகேசர் இவ்வரசன் வேண்டும் நற்பதவிகள் யாவும் கிடைக்கும்படி கருணைபுரிந்திருக்கிறார். இத்தருணத்தில் இப்புண்ணியதீபங்களைக் கண்களால் தர்சிக்கும் உங்களது பாவம் நீங்கும். மேன்மையடைந்து ஈசானபதவியில் விளங்குவீர்கள்" என்றிவ்வாறு உண்டாகிய ஆகாய வாணியைக் கேட்ட தொண்டர்கள் யாவருமீசனைப் பணிந்து துதிசெய்தார்கள். அதுமுதல் கார்த்திகை மாதத்

தில் கிருத்திகா தினத்தில் தேவாலயத்தில் ஜ்வலிக்கும் தீபங்களின் தர்சன பலமானது தொண்டர்களின் பக்திக் கொடியை வளர்த்து வந்தது.

### 275. சிறுவனுக்கு மறுமொழி கூறிய லீலை.

சில சிறுவர்கள் திருவாரூர் நகரில் புழுதியில் விளையாடுகையில் ஒரு சிறுவன் “தியாகராஜ! இந்த ஆட்டத்தில் நான் தவறாதவண்ணம் எனக்கு யுக்தி கூறுவாய்” என்று தனது முழுமனதினாலும் ஈசனையே நம்பி ஆடத் தொடங்கினான். சுத்த மனமுடைய அச்சிறுவன், தனது நாமதேயத்தை யுரைத்துக் கூப்பிட்டு யுக்தி யளிக்கவேண்டுகையில் அச்சிறுவன்மீது கருணைசெய்த தியாகேசர் அங்கு அவர்களின் கண்களுக்குத் தோற்றாதவராய் மறைந்து நின்று ‘ஓ பாலனே! நீ இவ்வழியாய்ச் சென்று கையை நீட்டி, பிறகு வேகமாய் ஓடிநின்று திடீரென்று திரும்புவாய். இப்படி நீ செய்வாயாகில் இந்த ஆட்டத்தில் ஜயத்தை அடைவாய்’ என்றுரைத்தார்.

ருண்டாகும் தொனியைக் கேட்டு அப்பொழுது அச்சிறுவன், தியாகராஜ! அப்படியே செய்கிறேன் நான் உன்னையே நம்பியிருக்கிறேன் என்றுரைத்து கொண்டே கிழக்கு முகமாகவும். வடக்கு முகமாகவும் விரைவாய் ஓடித் தனதுகையை நீட்டி அடையாளம் செய்த உடனே திரும்பிக் கோடுகளைத் தாண்டிக்கொண்டு தனது இருப்பிடம் வந்து சேர்ந்தான். இவ்விதம் ஈசனை நம்பிய அச்சிறுவன் எதிரில் நிற்கும் மற்றொரு சிறுவனது கையில் அகப்பட்டுக்கொள்ளாமல் வெற்றியுடன் திரும்பியதைக் கண்ட மற்றைய சிறுவர்கள் களித்து அச்சிறுவனைப் புகழ்ந்தார்கள். அதைக்கண்ட எதிர்ச்சிறுவன் தன்னை அச்சிறுவன் வென்றதற்குக் காரணம் யாது என்று விசாரிக்கையில் சுந்தரன் என்னும் அச்சிறுவன் தியாகேச!

நான் உன்னையே நம்பியிருக்கிறேன் என்று கூறியதும் அதற்கு இவ்வண்ணம் செய்வாய் என்று மறுமொழி வந்ததுமே காரணமென்று அறிந்துகொண்டு அவ்விதமறு மொழி கூறி யுக்தியுரைத்தவர் யாராவர்? யாராயிருக்கலா மென்று அச்சிறுவர்களெல்லோரும் அவனைக் கேட்பதையும் அதற்கு அவன் தியாகேச உன்னை நம்பினேன் அதுதான் எனக்குத்தெரியும் என்று சொல்லி திகைத்து நிற்பதையும் கண்ட சில வேதியர்கள் அச்சிறுவனுக்கு மறுமொழி கூறி யுக்தியுரைத்தவர் பக்தவத்ஸலனாகிய தியாகேசனாகவே யிருக்கவேண்டுமென்று நிச்சயித்து, அவ்வதிசயத்தை அந்நகரிலிருக்கும் ஞானிகளிடமுரைத்தார்கள்.

சகல ஜீவராசிகளிடத்திலும் தனது எல்லையற்ற கருணையைப் பரவச்செய்து நன்மை உண்டுபண்ணுவதற் காகவே இந்நகரில் விளங்கும் தியாகேசர் சிறுவனிடம் மறுமொழி கூறியதுமீசனது ஒரு லீலையே என்று நம்பி அன்று மாலை தியாகேசனை நமஸ்கரிக்கையில் 'சிறுவனுக்கு மறுமொழி கூறிய தியாகேசனே தொண்டர்களின் விருப்பங் களை நிறைவேற்றுவார்" என்று அசரீரி உண்டாயிற்று. அதைக்கேட்ட பெரியோர்களும் அப்போது அங்குத் தோன்றிய மகரிஷிகளும் இது தியாகேசனது லீலை என்பதற்கு ஐயமில்லை என்றே நினைத்து அன்று அவ்வாறு வீதியில் விளையாடிய அச்சிறுவர்களை ஆலயத்துக்கு வரவழைத்துத் தியாகேசனது தர்சனத்தைப் பெறச் செய்து எல்லோருக்கும் ஆசி கூறி அப்பிரதோஷ காலத்தில் கிடைத்த தியாகேச தர்சனத்தினால் தாமும் ஆன்மாவுக்கு நன்மையைச் சம்பாதித்துக்கொண்டு களிப்புடன் இருப்பிடமடைந்தார்கள்.

## 276. சைனரால் மடம் கட்டுவித்த லீலை

திருவாரூர் நகரிலிருக்கும் பாரிஜாதன் என்னும் வைச்ய பக்தனொருவன் தியாகராஜ பக்தனாய் ஒரு நாள் வடதிசையை நாடிச்சென்றான். அவன் அவ்வாறு செல்லுகையில் விசுவேசுவர! லோககாரண! பூதேச! ஸர்வ தேவேச! அணுவுக்கும் அணுஸ்வரூபியே! பெரிதுக்கும் பெரிய ஸ்வரூபியே! ஈசமூர்த்தியே! ஈசான மூர்த்தியே வ்ருஷப வாஹன! சம்போ! சூலபாணியே! உமக்கு நிகர் இவ்வுலகில் ஒருவர் உண்டோ? உமது அருள் பெற்றவனே புண்ணியசாலி உமது பாதபக்தியற்றவனே மகாபாபி என்று உரைத்துக்கொண்டே சென்றான் அச்சமயத்தில் அச்சநந்தி என்னும் ஒரு சைனகுருவும் அவனது சிஷ்யர்களும் கோலாகலத்துடன் தமது மதச்சிறப்பை வெளியிட்டுக்கொண்டே அத்திருவாரூர் வழியை நோக்கி வருவதைக்கண்ட அத்தொண்டன் சற்றுத் திகைத்துநின்றான்.

மிகவும் கம்பீர ஸ்வரத்துடன் அத்தொண்டன் ஈசனது நாமசங்கீர்த்தனம் செய்துகொண்டே தமக்கு எதிராக வருவதைக்கண்ட அச்சைனகுருவும் திகைத்து நின்றான். மதத்தையடைந்த இரண்டு கஜங்கள்போல சைன குருவுக்கும் சிவபக்தனுக்கும் வாதப்போர் உண்டாயிற்று. சதருத்ர கீதையிலும், பிரம்மஸ்துதியிலும், உபநிஷத்துக்களிலும், வேதாங்கங்களிலும் புராணங்களிலும் கூறப்பட்டிருக்கும் பரமேச்வரமகிமையை முனிவர்களும், வேதியர்களும் சொல்லக் கேட்டிருந்தபடியால் அவ்வைச்யபக்தன் அச்சைனகுருவின் கர்வத்தையும் அநியாய யுக்திகளையும் விதண்டைக் கருத்தையும் அடக்க முயன்றவனாய் ஓ தியாகேச! ஜகந்நாத! வ்ருஷபத்வஜா! உமது அருளால் நான் இப்பொழுது இச்சைன குருவை வென்று உமது தத்துவத்தை உலகில் நிலைநாட்ட வேண்டும். நீரே பரதத்துவப் பொருள் என்பது உண்மையாயின் உமது தத்துவங்கள் என் மனதில் இப்பொழுது தோற்றவும் இச்சைனர்கள்

கொழுப்பையடக்கவும் அருள் புரிவீர் என்று அஞ்சலி செய்துகொண்டு அச்சைனகுருவின் சமீபத்தையடைந்தான்.

அதைக்கண்ட சைனர்கள் அவ்வைச்ய பக்தரது முககாந்தியைக்கண்டு கடுஞ்சினங்கொண்டவர்களாய் ஓ சிவபக்தரே! நீர் எமது குருநாதனை வணங்கவந்தீரா ? அல்லது வாதப்போர் செய்து அதில் நீர் தோல்வியடைய வந்தீரா? என்று வினவினார்கள். இவ்வித சொல்லைக்கேட்ட வைச்யன் ஓ சைனர்களே! உங்களது குருவுடன் நான் வாதப்போர் செய்யவந்தேன் என்றுரைத்தான். அவ்வித வாதப்போருக்காகவே திருவாரூருக்கு வரும் அச்சாந்தியானவன் அப்பொழுது வாதம்செய்ய உடன்பட்டு நின்றான். அக்குருவின் துர்யுக்திகளை அழிக்கக் கருதிய அச்சிவபக்தன் நான் இந்த வாதப்போரில் தோல்வியடைவேனாகில் நானும் என்னைப் போன்றவரும் சைவமதத்தை விட்டு விலகி உமது சிஷ்யர்களாகிறோம். நீர் தோல்வியடைவீராகில் நீரும் உமது சிஷ்யர்களும் எங்கள் ஈசனுக்கு அடிமைத்தொழில் பூண்டு உங்களது திரவியங்களினாலேயே நீங்களே சைவதருமார்களுக்கு இத்திருவாரூரில் சிறந்ததொரு மடமெடுப்பிக்கவேண்டும்; இதற்கு இசையாவிடில் நீங்கள் இந்நகருக்குள்ளே போகலாகாது என்று கர்ஜித்துக் கேட்டான். அவ்வித பந்தய நிபந்தனைக்கெல்லாம் உடன்பட்ட அச்சைனதருவுக்கும் சிவபக்தனுக்கும் மேன்மேலும் மறுமொழி முறை ஆரம்பமாயிற்று.

தனது பாதபக்தியையே உறுதுணையாகக் கொண்டு ஒருவனாய் அச்சைனரனேகருடன் அப்பக்தன் வாதம்செய்வதை அறிந்த தியாகேசர் ஒரு ஆகாயவாணியை ஏவி அதன் மூலமாய் அத்திருவாரூரிலிருக்கும் மகாராஜனையும் மந்திரி பிரதானிகளையும் புலவர்களையும் ஒரு நொடியில் அனுப்பினார். தியாகேசனது அசரீரி வாக்குப்போலவே அவர்களும் அவ்வண்ணமே துரிதமாய் அந்நகருக்கு வடதிசையில் வந்து அச்சைனர் கூட்டத்தையும் அவர்களுடன்

நின்று வாதம்செய்யும் அச்சிவபக்தனையும் கண்டு அவ்விரு வரும் ஆரம்பத்தில் செய்துகொண்ட பந்தயத்தை உறுதிப் படுத்தி மத்யஸ்தர்களாய் நின்றார்கள். சிலவேதியர்களும் பெரியோர்களும் அப்பக்தனுக்கு உதவியாய்ச் சாஸ்திர யுக்திகளைக் கூறினார்கள். இவ்விதமாய் அத்தருணத்தில் நடக்கத் தொடங்கிய வாதமானது பதினைந்துநாள் வரை யில் நடைபெறலாயிற்று. தினந்தோறும் அச்சிவபக்த னுக்கும் சாஸ்திர வசனங்களுக்கும் மறுமொழிகூற புத்தி யிழந்த அச்சைனர்களும் அவர்களது குருவும் முக வாட்டத்தை யடையலாயினர்.

வேதாந்தப் பொருளாகிய தியாகேசனது பரதத்து வத்தைத் தினந்தோறும் ஸ்தாபித்துவந்த அப்பக்தனும் அவ்வேதியர்களும் பதினைந்தாவது தினத்தில் அவ்வெதிரியை முற்றிலும் வென்று திகைக்கும்படிச் செய்து பந்தய நிபந்தனைகளை வலுவில் நிறைவேற்றிவைக்க சோழனை வேண்டினார்கள் மத்யஸ்த பதவியைப் பெற்று நீதி முறையைக் கைவிடாத அச்சோழபூபாலனும் அப்பொழுது பந்தய நிபந்தனைப்படி அச்சைனர்கள் மூலமாய் மடமெடுப் பிக்கும்படி செய்தான்.

## 277 கல்லை மிதக்கவைத்த லீலை

தியாகேசர் அப்பாரிஜாத பக்தனுக்கு அருள்புரிந்து அவர் மூலமாய் அச்சைனர்களை வாதப்போரில் வென்றபொழுது மகாராஜனது கட்டளையையும் தாம் அச்சிவபக்தருடன் செய்துகொண்ட பந்தய நிபந்தனைகளை யும், மீறி நடக்கச் சக்தியற்ற அச்சைனர்கள் எல்லோரும் அத்திருவாரூர் நகரையடைந்து கமலையில் நீராடி விபூதி ருத்திராக்ஷங்களை அணிய மனமில்லாதவர்களாய்ச் சற்று நேரம் திகைத்துநின்றார்கள். பெருமூச்சுவிட்டு அழுதார் கள். தாம் செய்துகொண்ட நிபந்தனையைக் குறித்து

வருந்தினார்கள். பிறகு ஆறுதல் அடைந்து விபூதி ருத்திராக்ஷங்களை அணிந்துகொண்டு தியாகேசனது ஸன்னிதியை அடைந்து ஈசனது மூர்த்தியைக் கண்களால் கண்டவுடனே அவர்களுடைய மனம் அழலிலிட்ட வெண்ணெய்போல் உருகலாயிற்று. அப்பொழுது அவர்களுடைய மனத்தில் இத்தியாகேசனே தத்துவப்பொருள் என்பதற்குத்தடையுண்டோ என்று சிலர் நினைத்தார்கள். சிலர் இவ்வீசனது பக்தியின் சிறப்பினாலேயே அப்பக்தர் தம்மை வாதத்தில் வென்றார் என்று நினைத்தார்கள். மற்றும் சிலர் இவ்வீசனது பக்தனாக நாம் இன்று மாறியபடியால் இன்று முதல் நமது ஜன்மத்துக்குப் பலனுண்டாகும் என்று நினைத்தார்கள்.

இவ்விதமாய் அச்சைனர்கள் யாவரும் தியாகராஜனது திருமேனியின் அற்புத ஒளியையும், ஸன்னிதானத்தின் சிறப்பையும், தேவாலயத்தின் அமைப்பையும் ஐசுவரியத்தையும், அங்கு நின்று துதி செய்யும் கணக்கற்ற தொண்டர்களின் பக்திச் சிறப்பையும், மற்றுமுள்ள மகிமையையும் கண்டு களிப்படைந்து தியாகேசனைப் பணிந்து வலஞ்செய்து அச்சோழபூபாலனால் காண்பிக்கப்பட்ட ஒரு மாளிகையில் தங்கியிருந்தார்கள். அத்தகைய அந்தச் சைன வித்துவான்கள் சிவபக்தராக மாறிய விஷயத்தையறிந்துகொண்ட அந்நகரவாஸிகள் அச்சைனர்களிடம் சென்று வெகு சந்தோஷத்துடனும், மரியாதைகளுடனும் சாஸ்திர விஷயமாய்ச் சற்று நேரம் பேசிவிட்டுச் சென்றார்கள். நாளடைவில் அச்சைனர்கள் யாவரும் தமது மதக்கோட்பாடுகளை இகழ்ந்து வேதக்கொழுந்தாகிய தியாகேசனையே ஸத்தியமென்று நம்பிச் சிவபக்தருடன் மிகவும் நேசித்து விளங்கலாயினர்.

வாத நிபந்தனை முறைப்படி அச்சைனர்கள் யாவரும் சிலநாள் சென்றபிறகு அத்திருவாரூர் நகரில் சிறந்த ராஜ ‑ யில் ஓரிடத்தில் சிவபக்தர்களுக்காகத் தமது

செல்வத்தைச் செலவு செய்து மடநிர்மாணம் செய்ய ஆரம்பித்தார்கள். அவ்விதம் மடம் எடுப்பதற்குச் சம்மதமில்லாத சில சைனர்கள் ஒரு நாளிரவில் அம்மட நிர்மாணத்திற்காகக் கொண்டுவரப்பட்ட சில கற்பாறைகளைத் தமது தலையில் தூக்கி வைத்துக்கொண்டு அருகில் இருந்த குளத்தில் வீழ்த்திவிட்டுத் தமது இருப்பிடம் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் அச்சைவ மடத்துக்குத் தம்மால் விரோதம் செய்யப்பட்டதைப்பற்றி அன்றிரவில் ஒருவர்க்கொருவர் புகழ்ந்து பேசிக்கொண்டிருப்பதை அருகில் கேட்டுக்கொண்டிருந்த சைனர்கள் அவர்களைக் கூப்பிட்டு, அவர்கள் செய்த குற்றத்தையறிந்துகொண்டு ஹா ஹா! நீங்கள் இவ்வாறு செய்தது நியாயமாகுமா? நாம் எல்லோரும் தோல்வியடைந்து சிறந்த சிவபக்தராய் மாறி ஈசனது குணங்களைப்பற்றி மகிழ்வெய்தி நற்கீர்த்தியுடன் வாழுநாளில் நீங்கள் பகையை வளர்த்துக் குளத்தில் கற்பாறைகளைப் போடலாமா? அவ்வித காரியத்துக்குத் தியாகேசனே சாக்ஷியாக விளங்குவாரே! அத்தெய்வத்தை ஒருவரும் ஏமாற்ற முடியாதே? என்று அந்தத் துஷ்டர்களுக்குத் தத்துவோபதேசத்தையும், நற்புத்தியையும் கூறினார்கள்.

இவ்விதமாய் அவர்கள் கூறிய மொழியைக்கேட்ட அச்சில சைனர்கள் மனம் நடுங்கி, என் செய்வோம்? பாவியாகிவிட்டோமே என்னும் பயத்துடனே அன்றிரவைக் கழித்து மறுநாட்காலையில் அக்குளத்தையடைந்து பார்க்கும்பொழுது தாங்கள் நடுத்தண்ணீரில் வீசியெறிந்த கற்பாறைகள் யாவும் மிதக்கக்கண்டு ஆச்சரியப்பட்டு அவ்விஷயத்தை எல்லோருக்கும் சொன்னார்கள். அதைக்கேட்ட மற்றவர்களும் அங்குப்போய் உற்றுப்பார்க்கையில் நகர ஜனங்கள் யாவரும் அங்குவந்து கூடினர். மகாராஜனுக்கும் விஷயம் தெரியவே அச்சைனர்கள் தாம் நேற்று இரவில் பூர்வ பகையின் காரணமாக மடநிர்மாண கற்பாறைகளைத்

தண்ணீரில் போட்டோம் என்று குற்றத்தை ஒப்புக் கொண்டு கமலையில் நீராடித் தியாகேசனைத் தர்சிக்கும் பொழுது உண்டாகிய ஆகாயவாணியினால் அவர்களுடைய குற்றத்தை மன்னித்து அருள் புரிந்தார் என்று தெரிந்து கொண்டு, கற்பாறைகளைத் தண்ணீரில் மிதக்க வைத்ததும் தியாகேசனது ஒரு லீலை என்றே புகழ்ந்து ஈசனைத் துதித்தார்கள்.



## 278. நெருப்பிடியினு மழியாமல் காத்த லீலை.

ஒருசமயம் தியாகராஜப் பரம்பொருளின் திவ்ய தர்சனத்தைப் பெற்ற சில தொண்டர்கள் சிவபக்தர்களுக் காக, அத்திருவாரூர் நகரில் கட்டப்பட்டு விளங்கும் சிறந்த அம்மடத்தில் தங்கியிருந்து சைவ சாஸ்திர பாடங்களை உபதேசித்து வந்தார்கள். அத்தொண்டர்கள் கூறும் அற்புத குணச்சிறப்புகளையும், பூர்வபக்தர்களின் மேன் மையையும், உலகதத்துவத்தையும், பரதத்துவத்தையும் பஞ்சபூதங்களின் இயற்கைக் குணங்களையும், பக்தியின் சிறப்பையும் பக்தியினால் ஈசனது மனம்களிக்கும் முறை யையும் விவரமாய்ச் செவியுற்ற அந்நகரவாஸிகளும், அம்மண்டலவாஸிகளும் ஆனந்தத்தையடைந்து விளங்கினார்கள்.

இவ்வண்ணம் அங்குள்ள பக்தர்கள் யாவரும் ஈசனது குணங்களைப் பலவாறு புகழ்ந்து மகிழ்ந்து வாழ்ந்து வருகை யில் ஒருநாள் நடுஇரவில் மேகங்கள் இடியுடன் மழை பொழியத் தொடங்கின. எண்திசைகளைக் கவர்ந்து கொண்டும், இடிகளையும் மின்னலையும் பெருக்கிக்கொண்டும் யுகமுடிவைக் காண்பிப்பதற்கு முயன்றனபோல் கர்ஜனை செய்துகொண்டும் மேகக்கூட்டங்கள் இடைவிடாமல் மழை பெய்யும்பொழுது, அத்தொண்டர்கள் யாவரும் நடுக்கத் துடன் பரமேசனைத் தியானித்துக்கொண்டே அம்மடத்தில் நித்திரை செய்யலாயினர். அத்தருணத்தில் தெய்வச்

செயலால்; அம்மேகக் கூட்டத்திலிருந்து கொடியதோரு நெருப்பு இடியானது அம்மடத்தின்மீது வீழ்ந்தது அந்த இடியினால் அங்குள்ள தொண்டர்களுக்கு தீங்குவிளையுமோ என்றுகருதிய தியாகேசர் ஆத்தருணத்தில் கையிலேந்திய ஒரு கலசத்திலிருந்து சுத்த தண்ணீரை வாரித்தெளித்துக் கொண்டே தோன்றினர்.

இவ்விதமாய்த் தியாகேசர் அங்கு ஒரு கிழப்பிராமணர் போல் தோன்றிப் புண்ணியதீர்த்தத்தைத் தெளித்து அம்மடத்தை உற்றுநோக்கிக் கடாக்ஷித்துவிட்டுத் தனது ஆலயத்தைக் குறித்துத் திரும்பிவரலானர். அத்தகைய சமயத்தில் அங்குள்ள சிலர் நெருப்பு இடியினால் எங்குத் தீங்கு நேரிட்டதோ? என்று பார்க்கத்தொடங்கினர். சிலர் அந்த இடியினால் மடம் அழிந்திருக்குமென்று ஊகித்தனர், சிலர் மடமும் சிவபக்தர்களும் மாண்டிருப்பார்களோ என்றலறிக் கதறத்தொடங்கினர். மற்றம் சிலர் பயத்தை யளிப்பவருமீசனே ; பயத்தையழிப்பவருமீசனே ; ஆதலால் ஈசனருளால் நன்மையே விளையுமென்று நினைத்தார்கள்.

இவ்விதமாய் அப்புண்ணியபுரத்திலுள்ள ஜனங்கள் யாவரும் இடிவீழ்தலைக் கண்டு பயந்து நிலைகுலைந்து நான்கு திசையிலும் பரபரப்புடன் ஓடித் தேடிப்பார்க்கையில் ஜனங்களின் ஆரவாரவொலியையும், இடியின் கொடுமையையும் கண்டு சோழ மந்திரியானவன் சில வேதியர்களுடன் அம்மடத்துக்கருகில் செல்லுகையில் கிழவேதியராய்த் தோன்றிய ஈசன் கையிலேந்திய கலசத்துடன் திரும்பி வருவதைக் கண்டார்கள். அவர்கள் செய்த புண்யத்தின் சிறப்பினால் அவர்களுக்கெதிரே தோன்றிய தியாகேசர் ஓ வேதியர்களே! மந்திரியே! நீங்கள் யாவரும் அஞ்ச வேண்டாம். இந்தக் கலச தீர்த்தத்தின் பெருமையினால் அம்மடத்தின்மீது வீழ்ந்த நெருப்பு இடியின் துன்பமானது அம்மடத்தின்கண் உறங்கும் சிவபக்தர்

சுகமாகவே இருக்கத் தடையுண்டோ என்று உரைத்துக் கொண்டே தேவாலயத்தைநோக்கிச் சென்றார்.

அவ்வாறுரைத்துக்கொண்டே சென்ற வேதியர் திடீரென்று மறையக்கண்ட மந்திரி முதலானோர்கள் வியப்படைந்திருக்கையில் அம்மடத்துக்குள் உறங்கும் தொண்டர்களின் கனவில் தோற்றிய தியாகேசர் தானே கருணையினால் அம்மண்டபத்தைக் காத்தளித்தாரென்னும் அசரீரியுரையைக் கேட்டவரனைவரும் துன்பத்தைப் போக்கியவர் தியாகராஜனே என்று நினைத்துக் கதிரவன் உதிக்கும் வரையில் ஈசுவரநாம பஜனையினால் இரவைப் போக்கிக் காலையில் அம்மடத்தின் சீர்மையைக் கண்டு மகிழ்ந்து தியாகேசனுக்கு அபிஷேகம் செய்தார்கள். இவ்விதமாய் ஈசன் மடத்தைக் காத்தருளிய அற்புத லீலையின் சிறப்பு உலகில் பரவியபொழுது ஈசனைத் தொழுது பணியாதார் இல்லை. மேன்மையெய்தாதாரில்லை; ஈசனது கருணைக்குப் பாத்திரமாக விளங்காதார்



## 279. கப்பம் வாங்கி வந்த லீலை

சூதர் சொல்கிறார். தியாகேசர் செய்த மற்றோரற்புத லீலையைச் சொல்லுகிறேன். கேளீர். இந்த லீலையில் அன்பு கொண்டவர்கள் மாத்ருகாக்ஷரத்தின் சிறப்பையும், ஓங்கார பீஜத்தின் சிறப்பையும் அறிந்துகொண்டு கைலாசத்தில் விண்ணோர் தொழ விளங்குவார்கள். முற்காலத்தில் தத்துவ ஞானிகளாலும், வேதியர்களாலும், சற்குருக்களாலும் கர்வபங்கம் செய்யப்பட்ட சில சைனர்களும், சாக்கியர்களும், நாளடைவில் கும்பல் கும்பலாய் ஒன்று சேர்ந்து பலவாறு சிதறிய தமது மதக்கோட்பாடுகளை மறுபடியும் உலகில் பரவச்செய்து ஜனங்களுக்கு மோஹத்தையுண்டுபண்ணி வஞ்சனை செய்யத் தொடங்கினார்கள்.

அவர்கள் ஒரு சமயம் ஜினநந்திபுரத்தில் விளங்கும் மகாராஜனது சபையில் தமது ஜைன மதத்தின் மீது யுக்தி கூறி வெல்ல முடியாத புலவர்கள் யாவரும் தமக்குக் கப்பம் அளிக்கவேண்டும். தமது மதத்தை வெல்பவருக்குத் தாமே கப்பமளிப்போம் என்றும் சிற்சில ஏற்பாடுகளைச் செய்துவிட்டு அப்பூபாலன் மூலமாய் இவ்விஷயத்தைச் சோழ அரசனுக்குத் தெரிவித்தார்கள். அதையறிந்த சோழனும் தமது நாட்டில் விளங்கும் மெய்ஞ்ஞானிகளையும் நற்புலவர்களையும் கூட்டி அவர்களுக்கு அச்சைனர்களின் ஏற்பாடுகளைக் கூறினன். அப்பொழுது அங்குவந்து கூடிய புலவர்களால் வாதம் செய்வதில் வல்லமை பெற்றவர். இம்மலைக்கரச வேதியர் ஒருவரே என்று ஆய்ந்து எடுக்கப் பட்ட வேதியர் அச்சோழனாலும், கற்றோர்களாலும் அனுமதியளிக்கப்பட்டுத் தியாககற்பகத்தின் பாதமலரின் நிழலில் க்ஷணகாலம் நிலைபெற்று நின்று துதி செய்து திரும்பி முகமலர்ச்சியுடன் அந்த ஜினநந்திபுரத்திற்குச் செல்லலானார்.

அவ்வேதியரானவர் அவ்வாறு வாதம் செய்து ஜைனர்களை வென்று கப்பம் வாங்கி வருவதற்காகச் செல்லுகையில் அவருடன் சில சிஷ்யர்களும் சென்றனர். சீடர்களுடன் அவர் பல நதிகளையும், வனங்களையும், மலைகளையும் கடந்து செல்லுகையில் வழிநடைச் சிரமத்தினாலும் ஆகாரம் குறைவினாலும் அவரது சரீரத்தில் திடீரென்று ஜுரவேகம் தோன்றிற்று. அவ்வித ஜ்வரத்தினால் முகச் சோர்வையும் தளர்ந்த நடையையுமடைந்த அவ் வந்தணோத்தமரின் சரீரத்திற்குச் சௌக்யத்தை உண்டு பண்ணுவதற்காகவும் மருந்து கொடுப்பதற்காகவும் முயற்சி செய்த அவரது சிஷ்யர்கள் அவரை ஓரிடத்திலிருக்கச் செய்து சிகிச்சை செய்யலாயினர். அதனால் குறிப்பிட்ட காலம் சென்றால் தமது சைவசமயத்துக்கு இகழ்ச்சி நேரிடுமோவென்று பயந்தும் அப்புலவருக்கு எப்போது சரீர

சௌக்யம் உண்டாகுமோ என்றும், மனக்கவலை கொண்ட அச்சிஷ்டர்கள் ஓ தியாகராஜ! பக்தர்களின் துன்பத்தைத் துடைக்கும் மருந்தே! காப்பாற்றுவீராகவென்று கதறிக் கொண்டிருந்தார்கள்.

அத்தருணத்தில் தயாநிதியாகிய தியாகேசர் அவ்வித பக்தர்களின் மனோரதத்தை நிறைவேற்றக் கருதியவராய்த் தான் ஒரு புலவர்போல் உருவமெடுத்துக்கொண்டு விரைவாய் அந்த ஸ்ரீநகரபுரத்தையடைந்து அங்கு ராஜ சபையில் கூடியிருக்கும் அஜ்ஜைனர்களின் யுக்தி வாதங்களை முற்றிலும் தக்கப்பிரமாணங்களால் வென்று அஜ்ஜைனர்கள் அளித்த சம்பத்தைப் பெற்றுக்கொண்டு அந்நாட்டில் தமது அருளினால் சைவசமயத்தைப் பரவச் செய்துவிட்டு அவ்வேதியர் இருக்குமிடத்தை அடைந்து கப்பத் திரவியங்களை அவர் முன்புவைத்து அவரைக் குளிர நோக்கி மறைந்தார்.

அவ்விதமாய் அப்பரமேசன் ஒரு திவ்யபுருஷனாய்த் தோன்றி மறைந்தபொழுதே உண்டாகிய ஆகாயவாணியை கேட்ட அவ்வேதியரும் அவரது சிஷ்யர்களும் பரமானந்தம் அடைந்தும் சீர் சௌக்யத்தை அடைந்தும் தியாகேசனே புலவர்போல் தோன்றி வாதப்போரில் ஜைனர்களை வென்று அவர்களிடமிருந்து வாங்கிவந்த காணிக்கையின் சிறப்பை விரைவாய்த் திருவாரூருக்குத் திரும்பிவந்து நடந்த விஷயங்களைச் சோழனது சபையில் வெளியிட்டார்கள். அதைக் கேட்ட ஜனங்கள் யாவரும் சந்தோஷமடைந்து சிவமதத்தின் சிறப்புக்காகத் தியாகேசன் செய்த காரியத்தைக்கண்டு வியப்படைந்து அவ்விசனைத் துதித்துப் புகழ்ந்தார்கள்.

## 280. கணபதியின் அபிஷேகம் பெற்ற லீலை.

வித்யாதேவதையாயும், [illegible] விக்கினங்களை விலக்கும் முதற் தெய்வமாயும், ஜகத்துக்கும் முழுமுதற்காரணமாயும் விளங்கும் கணபதி மூர்த்தியானவர் முன்பு ஒருசமயத்தில் குபேரனால் பூஜிக்கப்பட்டவராய் அவனது நகரையழித்துவரும் சிந்தூர நாதனென்னும் அசுரனை அழிக்கக்கூடிய திவ்யமந்திரங்களைக் குபேரனுக்கு உபதேசித்தார். பக்தியுடன் அவ்வித திவ்ய சஸ்திராஸ்திர மந்திரங்களை உபதேசிக்கப்பெற்றுக் குபேரன் தனது சேனைகளுடன் அவ்வசுரனை எதிர்த்தபொழுது அவ்வசுரனிடத்தில் அம்மந்திரசக்திகள் யாவும் பயனற்றதாயின. அதனால் பின்வாங்கிய சேனையை ஒன்றுசேர்த்துத் திரும்பிய குபேரன் மறுபடியும் கணபதியையடைந்து பணிந்து துதி செய்து தனக்கு நேரிட்ட துன்பத்தை முறையிட்டான்.

அதனால் சினங்கொண்ட கணபதியானவர் தானே நேரில் சென்று அவ்வசுரனை ஸம்ஹரிப்பதாய் நிச்சயம் செய்துகொண்டு விரைவாய் எழுந்து சேனைகளுடன் அப்போர்க்களத்தை யடைந்து அவ்வசுரன்மீது கொடிய பாணங்களை ஏவினார். அவைகளை நொடிப்பொழுதில் அச்சிந்தூர நாதாசுரன் துண்டித்துவிட்டு உலகில் கணபதியையே ஓட்டிவிடுவதாய்க் கர்ஜித்து அட்டஹாஸம் செய்யலானான். அதனால் மனக்கொதிப்பையடைந்து திகைத்து நிற்கும் கணபதியைத் தேற்றுவார் ஒருவருமில்லை. அத்தருணத்தில் திசைகள் ஒடுங்கின; முனிவர்கள் நடுங்கினர்; சூரிய பிம்பத்தில் இருளும் தோன்றிற்று. அத்தகைய அபசகுனத்தைக்கண்டு சற்று ஆலோசனைசெய்த நாரத மகாமுனிவர் அங்குத் தோன்றினார்.

அவ்வாறு தோன்றிய நாரதமுனிவர் கணபதியின் சமீபத்தையடைந்து தென்திசையில் விளங்கும் தியாகராஜனின் பாதமலரே ஜயத்தையளிக்கும் என்று உரைத்து

விட்டு, அக்கொடியபோரில் நடக்கும் முறைகளைக் காண்பதற்காக அவ்விடம் சென்றார். நாரதமுனிவரின் சொற்படியே கணபதியானவர் அப்பொழுது தனது சுத்த மனத்தினால் தியாகேசனின் பாதமலரைத் தியானித்து ஓ மூவுலகுக்கும் தாதையே, எனது பாக்கியத்திரளே! எனக்கு இப்போரில் வெற்றியை யளிப்பீர் என்று துதிசெய்து மனக் களிப்புடன் பிறகு அக்குபேரனது சேனையுடன் தனது சேனையையும் ஒன்றுசேர்த்துப் போர்முகத்தை யடைந்து சிங்கநாதம் செய்து நின்றார். அப்பொழுது சிங்கம் மலையி லிருந்து வருவதுபோல் அவ்வசுரனும் பொங்கிய கோபத்துடன் அவர் முன் நின்றான்.

அப்பொழுது மூவுலகுக்கும் நடுக்கத்தைக் கொடுக்கக் கூடிய யுத்தமானது உண்டான தருணத்தில் தியாக ராஜனின் அருளைப்பெற்ற விநாயகமூர்த்தியானவர் தியாகேசனின் பஞ்சதார மந்திரங்களை உச்சரித்துக் கொண்டே பாணங்களை விட்டார். அதனால் அவ்வசுர னுடைய சென்னியானது துண்டிக்கப்பட்டதாய்ப் பனம் பழம்போல் யுத்தபூமியில் வீழ்ந்தது. அதைக்கண்ட தேவர்களும் கின்னரர்களும் திக்பாலகர்களும் புஷ்பமாரி பொழிந்தார்கள். அதைப் பெற்றுக்கொண்ட கணபதி யானவர் இவைகளெல்லாம் எனது தந்தையாயும் மூவுலகைக் காக்கும் கற்பகமாயும் விளங்கும் தியாக கற்பகத்துக்கே தகுமென்று நினைத்து குபேரன், இந்திரன் முதலானவர்களை அழைத்துக்கொண்டும், புண்ணிய தீர்த்தங்களை எடுத்துக்கொண்டும் திருவாரூர் நகருக்கு வந்துசேர்ந்தார்.

அவ்விதமாய் விநாயகர் வரும்பொழுது முருகனும், பிரமனும் திருமாலும் அங்கு வந்தார்கள். கணபதி யானவர் தன் கையில் கங்கணம் தரித்துக்கொண்டு நல்ல முகூர்த்தத்தில் தியாகராஜனது திருமேனிக் குளிரும்படி திவ்யாபிஷேகம்செய்து சிறந்ததொரு மஹோற்சவத்தையும்

நடத்திவைத்தார். தியாகேசனது சென்னியிலிருந்து பூமியில் வீழ்ந்த அபிஷேக ஜலமானது சகல செழிப்பையும் உலகுக்கு அளித்தது. அதுமுதல் வருஷந்தோறும் அந்தச் சுபமுகூர்த்தத்தில் தியாகராஜனுக்கு அபிஷேகஞ்செய்யத் தொடங்கினார்கள்.



## 281. மறைந்திருந்து பூஜையைப்பெற்ற லீலை.

ஒருசமயம் தாம்பிரபர்ணி நதிக்கரையில் விளங்கும் பிரம்மபுரியில் சிவதத்தன் என்னும் பிராமணோத்தமர் ஒருவரிருந்தார். அவ்வேதியர் பாலியம் முதல் ஐம்புலன்களையுமடக்கி ஞானம், சாந்தி, ஆஸ்திகத்தன்மை முதலிய நற்காரியங்களைச் செய்துகொண்டும், சிவார்ச்சனை செய்துகொண்டும் வந்தார். பார்வதி ஸஹிதராயும், ஈசான ஸ்வரூபியாயும், அவ்யயஸ்வரூபியாயும், ருத்திர ஸ்வரூபியாயும், அந்தகாஸுர ஸம்ஹாரியாயும், விரூபாக்ஷ ஸ்வரூபியாயும், இந்திரமந்திர ஸ்வரூபியாயும், யமமந்திர ஸ்வரூபியாயும், வருணமந்திர ஸ்வரூபியாயும், பித்ருகர்ம ஸ்வரூபியாயும், தக்ஷகர்ம ஸ்வரூபியாயும், ஸோமாஸ்கந்த ஸ்வரூபியாயும், பஞ்சபூத ஸ்வரூபியாயும், பிரம்ம ஸ்வரூபியாயும், பிராம்மண ஸ்வரூபியாயும், பூதபவ்யஸ்வரூபியாயும், ஜகத் ஸ்வரூபியாயும் விளங்கும் தியாகராஜனது பாதாரவிந்தத்தில் பக்தி வைத்து அத்தியாகேசனையே முதற்கடவுளாக நினைத்துப் பூஜை செய்து வரலானார்.

இவ்விதமாய் அவ்வேதியர் அசைவற்ற மனதுடன் ஒருநாள் பூஜைசெய்து வருகையில் நெடுநாளாய் அவரது பூஜையின் சிறப்பையும் அவர் அடைந்துவரும் மனத்தூய்மையையும் கண்டு மனக்களிப்பையடைந்த தியாகேசர் அன்று அவ்வேதியரெதிரில் விளங்கும் பூஜா கிருஹத்தின் சுவருக்கருகில் மறைந்திருந்து பூஜையைப்

பெற்றுக்கொள்ள விருப்பமடைந்தவராய் அங்கு மறைந்து தோன்றினர். தியாகராஜ பக்தராகிய அச்சிவதத்த வேதியரானவர் முதலில் சங்கல்பம் செய்துகொண்டு ஆசனத்திலமர்ந்து ஆகமமுறைப்படி அர்க்கிய பாத்யங் களினால் உபசாரங்களைச் செய்யத்தொடங்கி ஸாங்கபூஜை செய்து வருகையில் அவ்வேதியரது மனத்தில் ஓர் எண்ணம் உண்டாயிற்று.

"இந்நாள் வரையில் வெகுதூரத்தில் விளங்கும் சோழ நாட்டிலுள்ள புண்ணியக்ஷேத்திரத்தில் விளங்கும் தியாகராஜ பரம்பொருள் இன்று அவ்விடத்திலில்லாமல் நமது தேசத்துக்குள் நுழைந்து தாம்பிரபர்ணீ நதியின் சீதளக்காற்றினுல் விடாய் தீர்ந்தவராய் ஸமீபத்தில் வசிக்கிறரே: இதற்கு என்ன காரணமோ விளங்கவில்லையே: வெகுதூரத்திலீசனைத் தேடச்சென்ற நமது மனமானது அங்கு ஈசனைக்காணுமல் திரும்பி இங்கு ஸமீபத்திலேயே வண்டுபோல் சுற்றிச்சுற்றித் தடுமாறுதலை அடைகிறதே; நமது குலதெய்வமாயும், வேதவிளக்காயும் விளங்குமீசன் எவ்விடத்தில் விளங்குகிறர்? நன்கு புலப்படவில்லையே; ஈசன் நிலைபெற்றிருக்குமிடத்தை அறிந்துகொள்ளாமலும், அத்தருணத்தில் விளங்கும் அவரது திவ்யஸ்வரூபத்தை யறிந்து கொள்ளாமலும் எவ்வாறு நிவேதனங்களை யளிப்பேன் என் செய்வேன்" என்று இவ்வண்ணமாய் பலவாறு சிந்தனை செய்து மனச்சோர்வையடைந்து முகம் வாடிக் கண்ணீர் ததும்ப நின்றுர்.

இவ்விதம் அச்சிவபக்தர் வாடுகையில் அதைக்கண்டு அறிந்த அவரது தேவியானவள் தானும் முகவாட்டத்தை அடைந்து தான் தூய மனதுடனும், தூய்மையுடனும் ஈசனது நைவேத்திய முறைக்காகச் செய்த சமையல் வேலை யில் ஏதேனும் குற்றம் நேரிட்டுவிட்டதோ? அல்லது பூஜை செய்யத்தொடங்கிய தனது கணவனது மனதுதான் கலக்கமடைந்துள்ளதோ? என்று மிகவும் வருந்

இவ்விதம் அத்தம்பதிகள் மனம் வருந்தி நிற்கையில் திரிகால ஞானம் நிறைந்த ஒரு மஹரிஷியானவர் அத்தருணத்தில் அவ்வேதியரது கிருஹத்துக்கு வந்து ஓ கிருஹபதியே! ஏன் வருந்துகிறீர்? உமது பூஜையைப் பெற்றுக்கொள்வதற்காக தியாகேசர் இங்கு விளங்குகிறாரே! உமது பூஜையை மறைந்திருந்து பெற்றுக்கொள்ள எதிர்பார்த்து நிற்கிறாரே என்று கூறினார்.

அதைக்கேட்ட அவரது மனைவியானவள் பக்தியினால் வெகுவிரைவாகச் சென்று அம்முனிவரை எதிர்கொண்டு அழைத்து அதிதிசத்காரம் செய்து விஷயத்தைத் தனது பர்த்தாவுக்கு அறிவித்து நைவேத்திய முறைகளைப் பூஜா க்ருஹ மேடையில் அளித்தாள். அவைகளையெல்லாம் மந்திர ஜலத்தினால் புரோக்ஷணை செய்த அச்சிவபக்தர் தியாகராஜ பஞ்சாக்ஷர மந்திரத்தை உரைத்துக்கொண்டே ஈசனுக்கு நைவேத்தியம் செய்துவைத்தார். அப்பொழுதே அவரது மனம் தெளிவடைந்தது. தியாகேசனும் தான் நினைத்த வாறே மறைந்திருந்து அவரது பூஜையைப் பெற்றுக் கொண்டு புண்ணியபுரிக்குத் திரும்புகையில் ஒரு ஆகாய வாணி உண்டாயிற்று. அதனால் களிப்பையடைந்த அவ் வேதியர் அம்முனிவருக்கு முதலில் விருந்தளித்துப் பிறகு தானும் போஜனமருந்தி ஆன்மாவுக்கு நற்பயனைச் சம்பாதித்துக்கொண்டார். இவ்விஷயமானது அம்முனிவர் மூலமாய் உலகெங்கும் பரவியபொழுது ஜனங்கள்யாவரும் அச்சிவதத்தரை அன்புடன் பணிந்து துதிசெய்து மகிழ்ந்து ஈசனது ஸாங்கபூஜை முறையை அவரிடமிருந்து உபதேச மாகக் கற்றறிந்தார்கள்.

## 282. தானியமளித்த லீலை.

ஒருசமயம் தென்றிசையில் பன்னிரண்டு வருஷகாலம் பஞ்சம் ஏற்பட்டது பன்னிரண்டு வருஷகாலமும் மழை பெய்யாததால் நதிகளிலும், தடாகங்களிலும் ஜலம்வற்றிப் போயிற்று. புஷ்பச்செடிகளும், ஒஷதிக்கொடிகளும் உலர்ந்துபோயின. மரங்கள் தளிர் இழந்தன. மான், புறு, கிளி, காரண்டம், மயில், அணில், அன்னம் முதலியவைகள் சூரியனின் வேகத்தைப் பொறுக்கமுடியாமல் நாளடைவில் இறந்தன. பசுக்களும், எருதுகளும், எருமைகளும் குதிரைகளும், யானைகளும், ஒட்டகங்களும், நெடுநாள்வரையில் அக்கொடிய வெப்பத்தைப் பொறுத்திருந்து பிறகு சரீர வாட்டத்தை யடைந்தன. ஸ்நானபானுதி காரியங்களுக்கு தெளிந்த நீர் கிடைக்காதபடியால் மனிதர்களும் வாடினுர்கள்.

இவ்விதம் பன்னிரண்டு வருஷகாலங்களில் மழை பெய்யாததால் ஸகலஜீவராசிகளுக்கும் உணவுப்பொருள்கள் பூமியில் உண்டாகவில்லை. அக்கொடியகாலத்தைச் சிலர் பிரளயகாலமென்றே நினைத்து மனச்சோர்வை அடைந்தார்கள். சிலர் அரசர்களிடம் சென்று காலக் கொடுமையைப்பற்றி முறையிட்டார்கள். சிலர் நாடு விட்டோடினர். சிலர் ஆகாரமின்றி வாடினர்; இவ்வித கொடிய காலத்துக்குக் காரணம் யாது? என்றழுதார்கள். சிலர் சாந்தி மந்திரங்களை ஜபிக்கத்தொடங்கிஞர்கள். சிலர் தியாகராஜனுக்குச் சிறந்த அபிஷேகம் செய்துவைத்து காலத்தீங்கை மாற்றுவது உமது கருணையின் கடமை என்று துதிசெய்து நின்றனர்.

அப்பன்னிரண்டு வருஷ காலத்தில் இவ்வாறு சகல ஜீவராசிகளும் வாடுவதைக்கண்டு தியாகேசர் ஒன்பதாவது வருஷாரம்பத்தில் சகல ஜீவராசிகளுக்கும் அளவற்ற உணவுப் பொருள்கள் அளிக்கவேண்டுமென்று ஸங்கல்பம்

செய்துகொண்டார். அதற்கேற்றவாறு ஒருநாள் இரவில் சோழ அரசனது கனவிலும் ஒரு வேதியரது கனவிலும் தியாகேசர் தோன்றி 'ஓ புண்ணியசீலர்களே! நெடுநாளாய் இந்தத் தக்ஷிண பாகத்திலுண்டாகிய காலக்கொடுமையை யான் அறிவேன். இன்றுமுதல் பஞ்சகாலம் நீங்குவதற்கு மூன்று வருஷங்கள் செல்லவேண்டும். அதுவரையில் சகல ஜீவராசிகளுக்கும் உணவுப்பொருளை அளிப்பதற்காக நான் ஒரு பெரிய சாலையை வடாரணியத்தில் ஏற்படுத்தியிருக்கிறேன். அவ்வடவனத்தில் நான்கு யோஜனை அகலமும் எட்டு யோஜனை நீளமுமுள்ள பெரிய சாலையில் தானியங்கள், கனி வகைகள், தயிர், பால், தேன் வகைகளிருப்பதை ஜனங்களுக்குத் தெரிவித்து நன்மையை அடைவீர்கள்' என்றுரைத்து மறைந்தார்.

அரசனும் வேதியரும் ஒன்றுசேர்ந்து யோசித்து மறுநாட் காலையில் பறையறைவித்து இவ்விஷயத்தை நாடெங்கும் பரவச்செய்தார்கள். அதனால் மனக்களிப்பை யடைந்த சகல ஜனங்களும் தியாகேசனது திவ்ய கருணையைப் புகழ்ந்துகொண்டே அவ்விடத்திற்குச் சென்று பார்க்கும்பொழுது அவ்விடத்தில் ஒரு திவ்யபுருஷன் நின்றுகொண்டு 'வாருங்கள் ஜனங்களே! உங்களது விருப்பம் போல் இவ்வீடத்தில் குவிக்கப்பட்டிருக்கும் திரவியங்களை யடைவீர்கள்; தானியத்தைப் பெறுவீர்கள்; ஸம்பார வகைகளையடைவீர்கள்; தயிர் பால் வகைகளை எடுத்துக் கொள்ளுங்கள்; நறுமலர்களை அணிவீர்கள்; தேனுக்கள் முதலிய ஜீவஜந்துக்களுக்கும் இவ்வுணவளிப்பீர்கள்' என்று புன்சிரிப்புடன் கூறுவதைக்கண்ட ஞானிகள் யாவரும் இப்புருஷனே தெய்வம்; இவனே தியாகப் பரம்பொருளாக இருக்கவேண்டும் என்று நிச்சயித்துத் தமக்கு வேண்டிய தானியங்களையும் ஆடைகளையும் மற்றுமுள்ள பொருள்களையும் பெற்றுக்கொண்டு தமதிருப்பிடம் அடைந்து தியாகேசனைத் தியானித்துக்கொண்டே வாஸம்செய்து வரலானார்கள்.

## 283. கதவையடைத்த லீலை

தியாகராஜன் அப்பன்னிரு வருஷ க்ஷாமகாலத்தில் சகல ஜீவராசிகளின் ஆன்மாவுக்கு ஆனந்தமும், புஷ்டியும், உண்டாகும் வண்ணம் திவ்யமான பொருள்களை வாரியளித்து அம்மூன்று வருஷகாலம் முடிந்தவுடனே வருணனைக்கூப்பிட்டு வர்ஷிப்பாய் என்று கட்டளையிட்டு அவ்வடவனத்திலிருந்து மறைந்து புண்யபுரியில் விளங்கும் தேவவேதிகையில் விளங்கினர். வருணன் புஷ்கலம் முதலிய ஏழு மேகங்களையும் ஏவி உலகிலுள்ள தாபம் தணியுமாறு நன்மழை பொழிந்தான். அதனால் அப்பொழுது பூலோகத்தில் சகல முளைகளும் சகல கொடிகளும் புதிதாக உண்டாயின. ஸகல ஜீவராசிகளும் ஆதியுகம்போல் நன்னெறியில் அமர்ந்து துன்பமின்றி வாழத்தொடங்கின. இவ்வித நன்மைகளுக்கெல்லாம் தியாகராஜனே காரணம் என்றும், அவ்வாறு வடவனத்தில் அந்தக் கொடிய காலத்தில் தானியமளித்தவரும் தியாகராஜனாகவே இருக்க வேண்டுமென்றும் எல்லோரும் சொல்ல அதைக்கேட்டு ஒரு துஷ்ட மந்திரவாதியானவன் தியாகராஜனது ஆதார பீடத்திலிருக்கும் அவ்வித அற்புத சக்தியையழித்துவிட வேண்டுமென்று எண்ணங்கொண்டான்.

கொடிய அம்மந்திரவாதியானவன் விரைவாகப் புண்ணியபுரியையடைந்து அந்நகரிலுள்ள செல்வச் சிறப்பையும் தேவாலயத்தில் விளங்கும் அற்புதக்காக்ஷியையும் கண்டு கண்களில் நெருப்புப்பொறி திகழவும், மனது துடிக்கவும் பெருமூச்செறிந்துகொண்டு சிற்சில துஷ்ட மந்திரங்களையுச்சரித்துக்கொண்டு தேவாலயத்துக்குள் நுழைந்தான். ஈசனது ஸன்னிதானத்துக்கு முன்னிருக்கும் கதவானது திடீரென்று மூடிக்கொண்டது. அதைக்கண்ட சகல தொண்டர்களும் திகில் அடைந்து இவ்வித ஸம்பவத்துக்கு யாதுகாரணமென்று நினைத்து அக்கதவைத் திறக்க முயன்றபோதிலும் அக்கதவு வலிமையால்

மூடியவாறே நின்றது. அதனால் சகல தொண்டர்களும் மாலைநேர தர்சனம் கிடைக்க முடியாமல் தடைபடுகிறதே என் செய்வோமென்று திகைத்து நிற்கையில் தியாகராஜன் ஏவிய ஆகாயவாணியைக் கேட்டுச் சோழன் அனுப்பிய வீரர்கள் சிலர் உருவிய வாளுடன் விரைவாய் அங்குவந்து அம்மந்திரவாதி யார் என்று தேடலாயினர்.

அத்தருணத்தில் ஈசனுக்கே தீங்குசெய்ய நினைத்த அம் மந்திரவாதியானவன் முகச்சோர்வையடைந்து வாய் பிதற்றி உடம்பு வெடவெடத்துப் பூதத்தினால் கவரப் பட்டவன்போல் பரமேசனது நிக்கிரஹத்தைப் பெற்று கதியற்றுக் கலங்கியவனாய்க் காணப்பட்டான். அதனைக் கண்ட வீரர்கள் அப்பொழுது அப்பாவியைக் கயிற்றினால் கட்டி இழுத்துக்கொண்டுபோய் அரசன் முன்னிலையில் நிற்கச்செய்து அவனது உத்தரவினால் சிறைச்சாலையில் சேர்த்தார்கள். அத்தேவாலயத்திலிருந்து அம்மந்திரவாதி சென்றவுடனே ஈசனது முன் விளங்கும் பொற்கதவுகள் இரண்டும் தானாகவே திறந்துகொண்டன. அதனால் சகல ஜனங்களும் இடைவிடாமல் அழகிய திருமேனியைத் தரிசிக்கையில் ஈசனிவ்விதமாய் அத்துஷ்டனுக்காகக் கதவை மூடிய லீலையின் சிறப்பைத் தொண்டர்களின் கோஷ்டியில் பரவச்செய்து சோழராஜன் பரமானந்தமடைந்து சிம்மாசனத்திலமர்ந்து விளங்கினான்.



## 284. வறுத்த பயறை முளைப்பித்த லீலை

மஹோததியின் கரையில் மகேந்திரபுரமென்னும் சிறந்த நகரமொன்று உண்டு. அந்நகரில் வைச்ய வம்சத்தில் உதித்த ஸீரன் என்னும் ஒரு வைச்யோத்தமன் வேதியர் களிடத்தில் அன்புகாட்டி அவர்களிடமிருந்து நானாவித தத்துவார்த்தங்களைக் கேட்டும் அவர்களை வணங்கியும், அவர்களுடைய அருள்பெற்றும் பரமேசுவர பக்தியின்

சிறப்பை அறிந்துகொண்டான். விசேஷமாய்த் தியாகராஜ னிடத்திலும் தில்லையம்பலத்தில் விளங்கும் நடனமூர்த்தியி னிடத்திலும் ஒப்பற்ற பக்திவைத்த அவ்வைச்யன் தான் அடைந்திருக்கும் செல்வத்தைச் சன்மார்க்க வழியிலும் ஈசனது தொண்டு வழிகளிலும் செலவுசெய்து நற்கீர்த்தி யுடன் வாழ்ந்துவந்தான். அவ்வைச்யன் நல்ல சுப முகூர்த்தத்தில் அக்னி சாக்ஷியாய் முறைப்படி விவாகம் செய்துகொண்ட மனைவியினிடத்தில் நெடுநாள் வரையில் ஸந்தானோத்பத்தியை அடையவில்லை. அதனால் மனச் சோர்வையடைந்த அவ்வைச்யன் ஒருநாள் வேதியர்களின் சமாஜத்தையடைந்து பணிந்து தனது துர்ப்பாக்கியத்தை அவர்களிடம் அறிவித்தான்.

தத்துவஞானம் நிறைந்த அவ்வேதியர்களில் ஒருவர் அவ்வைச்யனுரையைக் கேட்டுச் சற்று யோசித்துப்பார்த்து ஓ வைச்யோத்தமனே! நீ ஈசனிடத்தில் வைத்திருக்கும் விசேஷ பக்தியின் மேன்மையினாலும் நீ செய்துவரும் தானச் சிறப்பினாலும் உனது பாவங்கள் சீக்கிரத்தில் நீங்கிவிடும். அவ்வித பூர்வபாவங்களகன்ற பிறகு ஈசனது கருணையினால் உனது வம்சத்துக்குத் திலகம்போல் ஒரு நற்குமாரன் உண்டாகப்போகிறான். நீ அதுவரையில் அப்படிப்பட்ட திவ்யக்ஷேத்திரத்தில் உமது மனைவியுடன் வாசம்செய்யக்கடவீர். உமது பத்தினியானவள் பயறு, கடலை, துவரை, உளுந்து, எள்ளு, என்னும் இவ்வைந்து தானியங்களை வறுத்து எடுத்துக்கொண்டுபோய் எந்த க்ஷேத்திரத்தின் புண்ணியதீர்த்தக் கரையில் பூமியில் வைத்தவுடன் மூன்று நாட்களுக்குள் அவைகளில் முளை காண்கின்றனவோ அந்த க்ஷேத்திரபதியே உமதுமீது கருணை புரிவார். அந்த க்ஷேத்திரத்தில் நீர் செய்யும் தானங்களும் பதின்மடங்கு பலனையளிக்கும். அதனால் தேவர்களும் உமது பித்ருக்களும் களிப்பெய்துவார்களென்று உரைத்தார்.

இவ்வாறுரைக்கக்கேட்ட வைச்யன் அவ்விஷயத்தைத் தனது மனைவிக்கு அறிவித்து அதுபோலவே வறுத்த பயறு வகைகளை எடுத்துக்கொண்டு நற்பதிகள் தோறும் சென்றனர் அவ்விருவரும். அவ்வைச்ய தம்பதிகள் மகேசுவர மூர்த்தியினால் விளங்கும் அநேக நற்பதிகளை யடைந்து அம்மூர்த்திகளுக்குத் திவ்யாபிஷேகம் செய்து வைத்து மலரால் அர்ச்சித்து அவ்வாறு வறுத்த பயறு வகைகளை அங்குப் பூமியில் விதைத்து மூன்று நாட்கள் வரையில் முளைகிளம்புவதை எதிர்பார்த்திருந்தார்கள். அநேக க்ஷேத்திரத்தில் அவ்வாறு வறுத்த தானியங்களுக்கு முளை உண்டாகவே இல்லை அவ்வைசிய தம்பதிகள் ஈசனது திவ்ய நாமங்களை ஸ்மரித்துக்கொண்டே கடைசியில் புண்ணியபுரம் என்னும் திருவாரூர் நகரை அடைந்து அங்கு விளங்கும் கமலாலயத்தில் நீராடித் தியாகேசனைத்தரிசித்து மனமகிழ்ச்சி அடைந்து சுபசகுனங்களையும் கண்டு தாங்கள் கொண்டு வந்த வறுத்த பயறுகளைக் கமலாலயக்கரையில் வட பாரிசத்தில் பூமியில் விதைத்தார்கள்.

தர்ம சிந்தையும் ஈசவர பக்தியையும் பெற்ற அத் தம்பதிகள் புண்ணிய தீர்த்தக்கரையில் விதைத்த அவ் வறுத்த பயறுகள் தியாகேசன் அருளால் இரண்டாவது இரவில் முளைகண்டன. மறுநாள் காலையில் அவ்வைசியனும் அவனது தர்ம பத்தினியும் கமலையில் நீராடி ஜபங்கள் செய்து பிராம்மணர்களுக்கு பதினாறு விதமான தானங்களை செய்து தேவாலயத்தை அடைந்து தியாகேசனது திவ்ய திருமேனி குளிரும்படி அபிஷேகம் செய்துவைத்து அப் புண்யபுரியிலேயே சிலநாள் வாசம் செய்தார்கள். இவ்வாறு செய்ததால் வைசியனின் மனைவி கர்ப்பத்தைத் தரித்துச் சுப முகூர்த்தத்தில் நல்ல புத்திரனைப்பெற்று விளங்கினாள். அவ்விஷயத்தைக்கேட்ட பக்தர்கள் யாவரும் தியாகேசனது கருணையை நினைத்து மகிழ்ச்சி அடைந்தார்கள்.

## 285. கபடமாய்ச் செல்வத்தைக் கவர்ந்த லீலை

ஆனந்தபுரத்தில் ஹடஜடன் என்னும் தனிகன் ஒருவன் இருந்தான். வைச்யவம்சத்திலுதித்த அந்தத் தனிகன் பூர்வஜன்ம புண்ணியத்தினுல் செல்வத்தால் குபேரனுக்கு நிகராக விளங்கியபோதிலும் அவனுக்குத் தர்மத்தில் புத்தி செல்லவில்லை. வர்ணுசிரம தர்மத்தை மீறி நடத்தல், தானத்தின் மகிமையை இகழ்தல், ஈசுவர பக்தர்களின் மேன்மையை நிந்தித்தல், பரதத்துவத்தைப்பற்றிச் சந்தேகப்படுதல், புசழுத்தகாதவைகளைப் புகழ்ந்து பேசுதல், ஸத்தியத்தை மீறுதல் முதலிய அநேக துர்க்குணங்கள் அவனிடத்தில் நிலைபெற்றிருந்தன. கமலநாயகி தேவியாருடன் தேவவேதிகையின் மீது மணியென விளங்கும் தியாகேசன் அவ்வித தனிகனையும் தனது பக்தனுகச்செய்து கொள்ளவேண்டுமென்று சங்கற்பம் செய்துகொண்டார்.

தியாகேசனுடைய அவ்வித சங்கற்பத்திற்குத் தக்கவாறே ஒருநாள் அத்தனிகனுக்குப் பொறுக்கமுடியாத வயிற்றுவலி உண்டாயிற்று. அக்னியின் அருகில் துள்ளும் புழுப்போல் துடிக்கும் அத்தனிகன் ஆ! ஆ! என்று புரளுகையில் சில வைத்தியர்கள் மருந்துகளை அளித்தனர். சில மாந்திரிகர்கள் சுத்தஜல ஸ்நானம் செய்துவைத்துப் பிசாசரக்ஷாபந்தனம் கட்டி வைத்தார்கள். சில ஜோதிடர்கள் நவக்கிரகங்களின் ப்ரீதிக்காக நவதானியங்களைத் தானம் செய்துவைத்தார்கள். மற்றும்பலர் பற்பல உபசாரங்களைச் செய்யலாயினர். இவ்விதமெல்லாம் செய்தபோதிலும் அவ்வயிற்றுவலியானது அவனுக்குச் சற்றேனும் தணியவில்லை. அதனுல் மிகவும் வருத்தமடைந்த அவ்வைசியன் உலகமெங்கும் தியாகராஜனென்னும் ஓர் அற்புத தெய்வத்தைப் புகழ்ந்து பேசுகிறுர்களே. அத்தியாகேசனுவது இத்தருணத்தில் அனுக்கிரகம் செய்யவில்லையே. ஐயோ! நான் என் செய்வேன். என்னுடைய வயிற்றுவலியானது சீக்கிரம்

நீங்குமாயின் நான் அத்தியாகேசனுக்குச் சிறந்த ரத்தினங்களை அளிப்பேன் என்று மனத்தில் நினைத்தான்.

அவ்வைச்யனுடைய எண்ணத்தை அறிந்துகொண்ட தியாகேசர் அவனுக்கு நற்புத்தியளிக்கக்கருதித் தனது திவ்ய சக்தியினால் அப்பொழுதே நோயை நீக்கிவைத்தார். திடீரென்று நோயின் தணிவையடைந்த அவ்வைச்யன் மிகவும் மகிழ்ச்சியடைந்து தியாகராஜ பரம்பொருளின் பாதமலர் தியானத்தினால் தனது வியாதி நீங்கியதென்று நினைத்தான். நாளடைவில் அவனது அஞ்ஞான குணம் வளரவே சிலநாள் சென்றபிறகு ஈசனருளால் தனக்கு நேரிட்ட நன்மையை முற்றிலும் மறந்துவிட்டுச் செல்வத்தின் மதத்தினால் மத்தகஜம்போல் கர்வமடைந்து திரியலானான். அத்தருணத்தில் பரமேசன் ஒரு தூதன்போல் வேஷங்கொண்டு அவனருகில் தோன்றிச் “சில நாட்களுக்கு முன் நீர் தியாகராஜனுக்கு அளிப்பதாய்ப் பிரார்த்தனை செய்துகொண்ட ரத்தினங்களை என்னை வாங்கி வரும்படி அனுப்பியிருக்கிறார். அவ்வித ரத்தினங்களைக் காலவிளம்பமின்றிக் கொடும்” என்று கூறினான்.

அத்தூதனது மொழியைக்கேட்ட வைச்யன் அஞ்ஞானத்தை அடைந்திருந்தபடியால் அத்தருணத்தில் நகைத்துத் தியாகராஜன் தனக்கு உதவி செய்யவில்லை என்றும், தானும் அவருக்கு ரத்தினமளிப்பதாய்ச் சொல்லவில்லையென்றும், பலவாறு இகழ்ந்து கூறினான். அதைக் கேட்ட தூதனாகிய பரமேசன் நீ பிணியுடன் துன்பப்படும் தருணத்தில் ஈசனுக்களிப்பதாய் ஒத்துக்கொண்ட பொருளை நீ நல்ல மனத்தினால் அளிக்காவிடினும் அப்பொருளை இப்பொழுதே அவ்வீசனிடம் சேர்த்து விடுவதற்கு எனக்குச் சக்தியுண்டு பார் என்று உரைத்துக்கொண்டே அவனைத் தனது கடாக்ஷத்தினால் குளிரநோக்கி அந்தக்ஷணத்திலேயே மறைந்துவிட்டார். அம்மொழியைக் கேட்ட அவன் தனது தனசாலையில் நுழைந்து பார்க்கும்பொழுது தான்

மனத்தினால் குறிப்பிட்ட சிறந்த ரத்தினங்களைக் காணுமல் முதலில் மோஹத்தினல் சற்று அழத்தொடங்கினன். பிறகு ஈசனது தர்சனம் அவனுக்குக் கிடைத்தமையால் ஞானேதயம் உண்டாயிற்று.

அதனால் இருகைகளையும் சென்னியில் சேர்த்து, ஹா! ஹா! நான் மகாபாவியாகிவிட்டேனே. ஈசனிடத்திலேயே அஸத்தியத்தைக் கூறினேனே. இந்த அற்பச்செல்வத்தினால் நான் மோகத்தையடைந்து ஸத்தியவாக்கியத்தை மீறி உரைத்தேனே. லோகநாதனுகிய தியாகராஜனே எனக்கு இன்று ஞானமளித்தார். மந்திரத்தினாலும், மருந்துகளாலும் தணியாத எனது பிணியை நீக்கிவைத்த பரமேசன் அனுப்பிய தூதனிடம் பொய் கூறியதற்கு என்ன பாதகங்கள் நேரிடுமோ: என்று இவ்வாறு அலறிப்புலம்பி வேதியர்களால் உபதேசிக்கப்பட்டவனாய் ஆனந்தபுரியிலிருந்து திருவாரூர் நகரையடைந்த அவ்வைச்யன் அந்தத் தியாகராஜ மூர்த்தியை நேரில்கண்டு பணிந்து தன் குற்றத்தை மன்னிக்க வேண்டுமென்று கூறித் தனது அளவற்ற செல்வத்தை ஈசனுக்கு அர்ப்பணம்செய்து பெரியோர் புகழத் தியாகராஜ பக்தியுடன் விளங்கினன்.



## 286 பாண்டியனைவென்ற லீலை.

பரசிங்கன் என்னும் சோழ மகாராஜன் மற்றொரு சமயத்தில் முறைப்படி தர்மாஸனத்தையடைந்து மனுநெறி தவருமல் ஆண்டுவருகையில் சில துர்மந்திரிகளின் துராலோசனையினால் பாண்டியமன்னன் தனது சேனையை ஏவி சோழநாட்டைக் கவரும்படி கட்டளையிட்டான் பாண்டியனுல் அனுப்பப்பட்டுக் கர்வத்தினாலும் மதத்தினாலும் அட்டஹாஸம் செய்துவரும் பாண்டிய சேனை வீரர்களில் சிலர் சோழநாட்டிலிருக்கும் சோழ

களில் நுழைந்து மலர்களைக் கொய்து கனிகளையுண்டு செடி கொடிகளை முறிக்கலாயினர். சிலர் அம்பினால் அங்குள்ள பக்ஷிகளைக் கொல்லலாயினர். சில வீரர்கள் குற்றமற்ற ஜனங்கள் வசிக்கும் கிராமங்களை அழித்தார்கள். சோழ ராஜன் சிறையிலடைக்கப்பட்டான் என கூறினார்கள். சில குதிரை வீரர்கள் சோழபூமியையழிக்கலாயினர்; சிலர் சோழநாட்டை பாண்டியநாடாகவே செய்துவிட்டோம் என்று ஆரவாரித்தார்கள்.

திடீரென்று பாண்டியசேனை தமதுநாட்டில் நுழைந்து பகையின் கொடுமையைக் காட்டித் துணிந்து நான்கு திசைகளிலும் செய்துவரும் பாழ்த்தறிகளைக் கண்ட புருஷர்களும் மாதர்களும், சிசுக்களும் ஓ வேதச்சுடரே! தியாகேச! எம்மைக் காத்தருள்வாய் ஓ சோழகுல திலகமே! எம்மை இவ்வாறு இடரிலிருந்து காத்து அருள்வது உமக்கு அழகல்லவா என்றுரைத்து அழுதகண்ணீருடன் வாடலாயினர். அவ்வண்ணம் நாடெங்கும் சூழ்ச்சியையடைந்தும் நியாயமுறை குன்றியும், பிரஜைகளுக்குண்டாகிய துன்பத்தைக்கண்டு சோழ பூபாலனாகிய பரசிங்கன் மந்திரிமார்களுடன் ஆலோசித்துச் சேனைபதிகளை ஏவுவதற்குள் திருவாரூர் நகரின் கோட்டைவாயிலையும், மணிக்கோபுர நிலைகளையும், பாண்டிய வீரர்கள் சூழ்ந்துகொண்டு ஜய பேரிகை முழங்கத் தொடங்கலாயினர்.

அகாலத்தில் தமதுமீது படையெடுத்துவந்து செய்துவரும் கொடுமைகளைக்கண்ட மந்திரிமார்களுள் ஒரு கிழ மந்திரியானவர் தனது கையைத்தூக்கி ஓ பூபால ரத்தினமே! இத்தருணத்தில் நாம் நமது படையை ஏவி பகைவரை வெல்லுவது மிகவும் அரியகாரியமாகும். போர்புரிவோமாகில் ஜயலக்ஷ்மியானவள் தனது சஞ்சல குணத்துக்குத் தக்கவாறு எந்த ராஜனது தோளை விரும்புவாளோ? அதை நாம் நிச்சயிக்க முடியாதாகையால் இவ்வித துன்ப காலத்தில் ஸகலலோக ரக்ஷகனையும், பஞ்சபூத ஸ்வரூபி

யாயும் விளங்கும் தியாகேசனையே நாம் சரணமடைவோமாகில் நம்மீது ஈசனருளும், ஜயலக்ஷ்மியின் நோக்கும் உண்டாகுமென்று கூறினன்.

இவ்விதம் அம்மந்திரியுரைத்த உபதேசத்தைச் சிறந்ததென நினைத்த சோழன் அத்தருணத்தில் பூசுரர்களை முன்வைத்துக்கொண்டு ஆலயத்திற்குச்சென்று முறைப்படி நமஸ்கரித்துத் துதிசெய்து நின்றான். அத்தருணத்தில் ஸகல ஜீவராசிகளையும் காக்கக் கருதிய தியாகராஜன் ஒரு திவ்யபுருஷன்போல் தோன்றிக் கையிலேந்திய ஒரு பையிலிருந்து திருநீறென்னும் தனது திவ்ய பஸ்மத்தை அரசன் கையிலளித்து இதைக் காற்றில் தூற்றுவாயாகில் அப்பகைமன்னன் சேனை பஞ்சுபோலாகுமென்றுரைத்து மறைந்தார். முகமலர்ச்சியுடன் அந்தப் பஸ்மத்தைக் கையில்பற்றிய சோழன் தியாகராஜனது திருக்கோயிலை வலஞ்செய்து திரும்பிவந்து அந்நகரத்தின் கோட்டை வாயிலையடைந்து தனது கையிலிருந்த அந்தப் பஸ்மத்தைக் காற்றினால் பறக்கும்படி வீசினன். அந்தச் சமயத்தில் ஈசனது திருவுள்ளத்துக்கிசைந்தவாறு அநுகூலக் காற்று வீசவே அக்காற்றினால் இழுக்கப்பட்டுச் செல்லும் அந்தப் பஸ்மராசியானது அப்பகைமன்னர் சேனையின்மீது படியும்பொழுது அதனால் சில வீரர்கள் கால்முறிவையடைந்தனர்; சிலர் பயந்தோடினர்; சிலர் திகைத்து நின்றனர்; சில குதிரைகள் பயந்தோடின; சிலர் வலிமை இழந்தனர்; சிலர் சோழனை நாம் எவ்வாறு வெல்லுவோமென்று மனங்கலங்கினர்.

இவ்விதமாய் ஈசனளித்த பஸ்மத்தினால் பாண்டியனுடைய சேனை பிளவுபட்டுத் திசைதிசையாய் ஓடத்தொடங்கியதைக்கண்ட பகைவர் தமக்குத் திடீரென்று இவ்வாறு நேரிட்ட துன்பத்துக்குத் தியாகராஜனது நிக்ரஹமே காரணமென்று நினைத்து மிகுந்த வருத்தத்துடன் பாண்டியநாட்டையடைந்து தமக்கு நேரிட்ட

பங்கத்தைப் பார்வேந்தனிடம் முறையிட்டார்கள். அதைக்கண்ட சோழநாட்டவர் எல்லோரும் ஈசனது பஸ்ம மகிமையையறிந்துகொண்டு பகைமன்னர் பயம் நீங்கிய திருவாரூர் நகரில் நுழைந்து ஈசனது திருமேனிக்குப் பற்பல விதமாய் அபிஷேகங்களையும் அர்ச்சனைகளையும் நிறைவேற்றித் துன்பம் துடைக்கும் தியாகேச! என்று போற்றி மகிழ்ந்தார்கள்.



## 287. சர்மநோயையொழித்த லீலை.

துவராபுரியில் தர்மபூபாலனென்னும் அரசன் தர்ம முறைப்படி ஆண்டுவருகையில் அவ்வரசனது பட்டமகிஷியானவள் ஒருநாள் நித்திரை செய்யும்பொழுது தனது கனவில் ஒரு திவ்யபுருஷன் தோன்றி ஓர் கனியையளித்து இதை நீ புசிப்பாயாகில் உனக்குச் சிறந்த குமாரன் பிறப்பான். ஆயினும், நீயும் உனது கணவனும் பூர்வ ஜன்மத்தில் பிராம்மண நிந்தனை செய்ததின் பலனாக உங்களுக்குப் பிறக்கும் குமாரனுக்குக் குஷ்டரோகமும் நாளடைவில் உண்டாகும். அக்கொடிய நோயை நீக்குவதற்கு நீ தென்றிசை சென்று நானிருக்குமிடத்துக்கு வந்து எனது புண்ய ஸரஸில் அக்குமாரனை நீராட்டிவைப்பாயாகில் அத்துன்பமும் தீருமென்றுரைத்து மறைந்தார்.

காலையில் கண்விழித்த பட்டமகிஷியானவள் தனது கணவனது சமீபத்தை விரைவாயடைந்து தனது கனவில் திவ்யபுருஷன் தோன்றிக் கூறிய விஷயத்தைக் கூறினாள். அதைக்கேட்ட அரசனும் மனக்களிப்புடன் அப்புருஷன் ஈசனாகவே இருக்கவேண்டுமென்று நினைத்துச் சிவபக்தி செய்துகொண்டு காலங்கழித்து வருகையில் ஈசனருளால் அவள் கர்ப்பத்தைத் தரித்தாள். அவ்வரசனும் சமயத்தில் வேதியர்களையும், குலகுருவையும் அவர்கள் மூலமாய் ஸீமந்தம் முதலிய நற்காரியங்களை

நிறைவேற்றினன். நற்சுப முகூர்த்தத்தில் இந்திராணி ஜயந்தனைப் பெற்றது போலச்சிறந்த ராஜலக்ஷணமுள்ள ஒருகுமாரனைப் பெற்றாள். அக்காலத்தில் செய்யவேண்டிய நானாவித தானங்களை முறைப்படி செய்த அரசன் அப் புத்திரனைகண்டு களித்து வருகையில் இரண்டு வயதுகாலம் செல்வதற்குள் அக்குழந்தையின் சரீரத்தில் கொடிய குஷ்டரோகம் பரவ ஆரம்பித்தது. அதனால் வருத்தம் அடைந்த அரசன் தனது ராஜ்ய கார்யத்தை மந்திரியிடம் ஒப்படைத்துவிட்டுப் பத்தினியை அழைத்துக்கொண்டு அளவற்ற திரவியங்களையெடுத்துக் கொண்டு தென் திசைக்குப் பாதசாரியாய் வரலானான்.

அங்கங்கு விளங்கும் மஹேச்வரமூர்த்திகளுக்கு அபிஷேகார்ச்சனை முதலிய முறைகளைச் செய்துகொண்டும் பிராம்மணோத்தமர்களுக்கு க்ஷேத்ரதானம் செய்து கொண்டும் நாளடைவில் சோழநாட்டிற்குத் திலகம்போல் விளங்கும் திருவாரூர்த் திருப்பதியையடைந்தான். அப் பொழுது அந்த ராஜமகிஷியானவள் அந்நகரங்களில் விளங்கும் ஈசனது பதியைக் கண்டும் வியப்புடன் கோபுரத்தின் அழகையுற்று நோக்கிக்கொண்டிருக்கையில் அவளது கண்களுக்குத் தியாகராஜமூர்த்தியின் தர்சனம் காணப்பட்டது. அதனால் பரமானந்தமடைந்த பட்ட மகிஷியானவள் அஞ்சலி செய்துகொண்டு நான் முன் கனவில் கண்ட திவ்ய புருஷன் இவ்வீசனே! சோணாசலத்திலும், சிதம்பரத்திலும் தர்சனம் அளித்தவர் இவ்வீசனே! என்று துதிசெய்யத் தொடங்கினாள். அதைக்கண்ட அரசன் இவ்வீசனது அருளினாலேயே தனது மைந்தனது சர்மரோகம் தணிய வேண்டுமென்று நினைத்து அப் பொழுதே சங்கற்பம் செய்துகொண்டு க்ஷேத்திரதானம் செய்தபிறகு அக்குமாரனைக் கமலாலயத்தில் நீராடச்செய்து தியாகராஜ கற்பகத்தின் எதிரில் வந்து துதிசெய்து நின்றார்கள்.

தியாகேசனிடத்தில் அவ்வரசனுக்குண்டாகிய பக்தியின் சிறப்பையும் அவனது குமாரனுக்கு உண்டாயிருக்கும் நோயின் கொடுமையையுங்கண்டு ஈசனேகதி என்று நம்பித் துதிசெய்த அவ்வரசன் மனோரதம்போலவே அங்குள்ள தொண்டர்கள் ஆயிரக்கலசாபிஷேகத்தையும் திவ்ய நைவேத்யங்களையும் தியாகேசனுக்கு நிறைவேற்றிவைத்தார்கள். இவ்விதமாய் அவ்வரசனது பணிவிடையைக் கண்டு மனம் களித்த தியாகேசன் தனது திவ்ய சக்தியினால் அக்குமாரனது நோய் நீங்கும்படி அருள்புரிந்தார். கமலாலயத்தில் ஸ்நானம்செய்த பலத்தினாலும், ஈசனருளாலும் மறுநாட்காலையில் அக்குழந்தையினுடைய ரோகம் மறைந்துபோய் லாவண்யம் பெருகி விளங்கலாயிற்று. அதைக்கண்ட தொண்டர்கள் ஈசனருளே இதற்குக் காரணமென்று ஒருவருக்கொருவர் நினைத்துப் புகழ்ந்து பேசுகையில் சோழ அரசன் அங்குவந்து வணங்கி முறைப்படி அவனுக்கு மரியாதைசெய்து சிலநாள் வரையில் தியாகேச தர்சனத்தை விசேஷமாய் அளிப்பித்துப் பிறகு அவ்வரசனைத் துவரைப்பதிக்கு அனுப்பிவைத்தான்.



## 288. சிஷ்யனைக் கிரயம்செய்வித்த லீலை

பச்சைப் புற்களும் மான்களும் நிறையப்பெற்று முனிவர்களின் வேதவொலி சூழ்ந்து விளங்கும் கடம்பவனத்தில் முன்பு ஒரு சமயத்தில் குத்தாலர் என்னும் மஹரிஷி ஒருவர் இருந்தார். அம்மஹரிஷியானவர் தனது தபோமஹிமையினால் பரமேசனை நேரில் கண்டு அவரது அருளால் சிவதத்துவ ஞானத்தைப்பெற்று, அவ்வரிய தத்துவத்தை நற்குணங்கள் பொருந்திய சிஷ்யர்களுக்கு உபதேசித்துவந்தார். அவ்வித சிஷ்யர்களுள் ஒருவன் ஒருநாள் குருவின் சிவபூசைக்காக வில்வம், புஷ்பம், இத்மம், தர்ப்பம் இவைகளைக்கொண்டு வருவதற்காக வனத்திற்குச்

சென்று, தெய்வச்செயலால் அங்கு ஓடிவந்த ஒரு சிங்கத்தினல் கொல்லப்பட்டு பரகதியையடைந்தான்.

அவ்விஷயத்தை அறிந்துகொண்ட அச்சிஷ்யனது மாதாவாகிய ரிஷிபத்னியும், பிதாவாகிய ஹேமகல்ப மஹரிஷியும் தமது புத்திரசோகத்தை ஸஹிக்கமுடியாதவர்களாய்ப் பெருமூச்சுவிட்டு அழத்தொடங்கினர்கள். ஓ லோகேச! பரம்பொருளே! பிறப்பு முதல் கண்ணையிழந்து அந்தகர்களாய் இருக்கும் எங்கள்மீது கருணைபுரிந்த முழுமுதற்காரணமே! நாங்கள் இனி எவ்வாறு வர்த்திப்போம். எங்களுக்குப் பணிவிடை செய்பவர் யார் இவ்வுலகில் உண்டு. நாங்கள் புத்திரனற்றபடியால் இதுமுதல் கர்மப்பிரஷ்டர்களாய்க் களைத்தவராய் ஆகப்போகிறோம். என் செய்வோம்? லோகேச! என்று புலம்புவதைக் கேட்ட குத்தால மகரிஷியானவர் அவர்களுக்கு ஆறுதல் கூறி அப்புத்திரனுக்குப் பதிலாகத் தமது சிஷ்யர்களுள் மற்றொருவனை அளிப்பதாக வாக்களித்தார். அத்தருணத்தில் அந்த குத்தால மஹரிஷியினல் துதி செய்யப்பெற்ற லோகநாதனுகிய தியாகேசன் ஒரு ஆகாய வாணியை ஏவி அம்மகரிஷிகளின் மனக்கருத்துப் போலவே உமது சிஷ்யரில் ஒருவனும் என்னிடத்தில் பக்தி நிறைந்த மனமுள்ளவனுயுமிருக்கும் சிவதாஸனை அரசன் முன்னிலையில் அவர்களுக்காக விற்றுவிடு என்று ஏவியும், அப்பொழுதே புண்ணியபுரியில் விளங்கும் சோழ அரசனுக்கும் அறிவித்து அவ்வரசனையும் அம்மகரிஷியின் ஆச்ரம பூமியையணுகச் செய்தார். அவ்வாறு அங்கு ஈசனுரையால் தோன்றிய அரசன் முன்னிலையில் குத்தால மஹரிஷியானவர் அகாரணமாய்க் காட்டிலுள்ள ஒரு சிங்கம் ரிஷிகுமாரனை கொன்றதற்கு அரசனே காரணம் என்றுரைத்து அப்பூபாலனுக்கும் அநேக ராஜநீதிகளையும் உபதேசித்துப் பிறகு சிவதாஸன் என்னும் சிஷ்யனை அந்த ரிஷியின் கோத்திரத்திற்கே ஸ்வீகாரணம்போலவே கிரயம்செய்து வேதவாக்யத்தினலே ஆசிகூறி அவ்விஷயத்தை ரிஷிகளுக்கு அறிவித்தார்.

அத்தருணத்தில் தமது குமாரனாகிய சிவதாஸன் மற்றொருவருக்குக் குத்தாலகரால் விற்பனை செய்யப்பட்டான் என்னும் விஷயத்தையறிந்துகொண்டு மனக் கலக்கத்தை அடையாவண்ணம் அவர்களுக்குத் தெரிவித்து முக்தியளித்து அச்சிவதாஸனுக்கும் அவ்வந்தக ரிஷிகளுக்கும் தமது திவ்யஸ்வரூபத்தைக் காண்பித்து விளங்கினார். இவ்விஷயங்களெல்லாம் எங்கும் பரவியபொழுது எல்லோரும் தியாகேசனைத் தொழுது வணங்கினார்கள்.

## 289. மாங்கலியத்தை யாசித்த லீலை

ஒருநாள் இரவில் தியாகராஜர் தேவியாருடன் உல்லாஸமாய்ப் பேசிக் களித்திருக்கையில் சரவணபுரியிலுள்ள ஜனங்களின் பக்தியையும் மனக்கருத்தையும் பரீக்ஷை செய்து பார்க்கவேண்டுமென்று கமலநாயகியாரால் ஏவப்பட்டார். மறுநாட்காலையில் அத்தேவியார் ஒருபண்டாரமாதுபோலும் தியாகேசன் ஒரு கிழப்பண்டாரம்போலும் வேஷம் தரித்துகொண்டு காஷாய ஆடையுடுத்தி பஸ்மருத்திராக்ஷமாலைகளையும் முறையே அணிந்துகொண்டு சரவணபுரியின் வீதியில் தோற்றினார்கள்.

ஜனங்களின் பக்தியையும், மனக்கருத்தையும் சோதிக்கக்கருதிய தியாகேசன் இவ்வாறு அங்குத் தோன்றி ஓர் வீட்டின் முன்வாயிலையடைந்து ஹர! ஹர! சங்கர! சம்போ! என்று சற்றுநேரம் சிவநாமசங்கீர்த்தனம் செய்தபிறகு அவ்வீட்டின் அதிபதியைக்கண்டு யாசித்தார் அவ்விதமாய் ஈசன் யாசனை செய்ய ஆரம்பித்தபொழுது அந்நகரில் சில வீதிகளில் சன்னியாசிபோலவும், சில வீதிகளில் கிழ வேதியர்போலவும், சில வீதிகளில் சிவ முனிவர் போலவும், சில வீதிகளில் ராஜவல்லபன் போலவும், சில வீதிகளில் ஏழ்மையும் ரோகமும் நிறைந்த யாசகன் போலவும் தோற்றி யாசிக்கலானார். தனது அற்புத சக்தி

யினல் பலவிடங்களில் பற்பலவிதமாய்த் தோன்றித் திரவிய யாசனைசெய்யும் அவ்வீசனைக்கண்டு சிலர் இந்தச் சன்னியாசி ஏன் திரவிய யாசனை செய்கிருர் என்று உரைத் தார்கள். சிலர் ஸன்னியாசிக்குத் திரவியமளித்தால் பாவம் வளரும் என்றுரைத்தார்கள். சிலர் இந்தச் சன்னியாசி மகாபாவி ஒரு தெருவில் வேதியர்போல் தோன்றுகிருன். மற்ருெருவீதியில் முனிவர்போல் தோன்று கிருன். இவனுக்குப்பொருள் அளிப்பது சிறந்தது அல்ல கபடமாயாவிகளின் அருகிலும் நெருங்கலாகாதென்று கூறினர். சிலர் தேஹி என்பவனுக்கு பொருள் அளித் தால் நன்மையேதவிற பாதகம் நேரா என்று விளம்பினர். சிலர் தானத்தின் சிறப்பை நன்ருய் அறிந்தபடியால் முக மலர்ச்சியுடன் தம்மாலியன்ற பொருளை அந்தச் சன்னி யாசிக்கு அளித்து நமஸ்கரித்துச் சென்ருர்கள்.

இவ்விதமாய்த் தியாகேசனும், கமலைநாயகியும் ஜனங் களின் மனக்கருத்தை யறிந்துகொண்டும் அவர்களது பேச்சைச் செவியினல் கேட்டுக்கொண்டு ஒருவருக்கொருவர் மீது புன்சிரிப்புடன் கண்ஜாடை காட்டிக்கொண்டும் மற்ருெருவீதியில் நுழையும்பொழுது அங்கு எதிர்நோக்கி வரும் ஒரு மாதைக்கண்ட தியாகேசன் ஓ மாதரசியே! எனக்கு அளவற்ற திரவியத்தில் ஆசை உண்டாகிறது. உனது சக்திக்கு ஏற்றவாறு ஏதேனும் திரவியம் அளிக்க முடியுமா! என்றுரைத்தார். அம்மாது அவ்வீசனது வார்த்தையைக் கேட்டவுடனே அந்தச் சன்னியாசியின் மலரடியில் வணங்கி ஓ முனிவரே! தானத்தின் சிறப்பை எனது தந்தை கூறக்கேட்டிருக்கிறேன். என் கழுத்தில் விளங்கும் மாங்கலியம் தவிர வேருெரு பொருளும் என்னிடத்தில் இல்லையே. இந்த மாங்கல்யத்தில் ஜ்வலிக்கும் ஸ்வர்ணத்தின் மீது உமக்கு விருப்பம் உண்டாகுமேயாயின் நான் இதை இக்கணமே அளிக் கின்றேன் என்றுரைத்து வணங்கி நின்ருள். அவளது மனக்கருத்தை உலகில் பரவச்செய்வதற்காகவே பரமேசன்

அத்தருணத்தில் அவள் கூறிய சொல்லுக்கிசைந்து அவளது மாங்கல்யத்தை யாசித்தார்.

உத்தமிகளுள் சிறந்தவளாயும் தான சாஸ்திரத்தின் சிறப்பையறிந்தவளாயும் விளங்கும் பவானீ என்னும் அம்மாது முகமலர்ச்சியுடன் அப்பொழுதே காலவிளம்பம் நேரிடாமலே தனது கணவனது பாதமலரையும், பரமேசனது பாதபத்மத்தையும் மனத்தில் நினைத்துக் கொண்டு தனது மாங்கல்யத்தைக் கழற்றி எடுத்து அந்தச் சன்னியாசியின் கையில் கொடுத்தாள். அவளது பக்தியையும், தானத்தின் மேன்மையைப்பற்றி அவள் அறிந்து கொண்ட ஞானத்தின் சிறப்பையும் கண்டு மகிழ்ந்த தியாகேசன் தேவீ ஸஹிதராய்த் திடீரென்று மறைந்து விட்டார். அத்தருணத்தில் அம்மாதின் சென்னியில் தேவர்கள் மலர்மாரிப் பொழிந்தனர். அப்பொழுது உண்டாகிய ஆகாய வாணியைக் கேட்டு மனமகிழ்ந்து அம்மாதின் நற்குணத்தைப் புகழ்ந்தும், தமது தூர்க்குணத்தை இகழ்ந்தும், அதுமுதல் தமக்குத் தியாகேசனே நற்குணங்களையும், தானச்சிறப்பையும் உபதேசித்தார் என்று அறிந்துகொண்டார்கள். யாசகர்களின் மன விருப்பத்தைக் காலவிளம்பமின்றி நிறைவேற்றவேண்டும். இல்லாவிடில் நரக தண்டனை உண்டாகும் என்னும் விஷயம் முதலான தானச்சிறப்பை அந்நகரவாசிகளாகிய நான்கு வர்ணத்தோரும் வெளியிட்டு ஈசுவர பக்தியினால் மேன்மையுடன் விளங்கலாயினர்.



## 290. பூமியைப்பிளந்து லிங்கமாய்த் தோற்றிய லீலை

பவானீ என்னும்மாது களிப்புடன் தனது கழுத்திலிருந்து மாங்கல்யத்தை நீக்கி எடுத்து அம்முனிவரது பாதமலரில் வைத்துப் பணியும்பொழுது அவர் திடீரென்று மறைந்தவுடனே அம்மாங்கல்ய சின்னமானது மறுபடியும்

அம்மாதின் கழுத்திலேயே விளங்கக்கண்டு அற்புதத்தையும் ஆனந்தத்தையுமடைந்த அவளது கணவனும் அவளும் அவளது சுற்றத்தாரும் ஆனந்தக் கண்ணீர் சொரிந்து அவ்வாறு யதிரூபமாய்த் தோற்றி பலவிடங்களில் பலவாறு யாசனை செய்தபிறகு மாங்கல்யத்தை விரும்பியவர்போல் உரைத்தவர் லீலாப் பிரியராகியும், மூவுலக நாதனுயும் புண்ணியபுரிச் செல்வனுயும் விளங்கும் தியாகேசனே என்று நிச்சயித்து, அவ்வீசனது திவ்யதர்சனமும் கமலநாயகி தேவியாரின் திருவருளும் தமக்குக்கிடைக்கவில்லையே என்று அலற்றிப் புலம்பிக்கொண்டு தியாகேசன் வாஸம் செய்யும் திருவாரூர் திருப்பதியையடைந்து அவரது திருமேனியைக் கண்ணாரக்கண்டு களிப்போமென்று நினைத்து அவர்களெல்லோரும் சிவநாம ஸங்கீர்த்தனையுடன் புண்ணியபுரியை நாடிச் செல்லலாயினர்.

அவர்களெல்லோரும் அவ்வாறு பக்தியினுல் இழுக்கப் பட்டவர்களாய்ச் செல்லுகையில் சமுத்திரக்கரையின் அருகில் விளங்கும் உத்பலவனத்தில் நெடுநாளாகத் தவம் செய்துகொண்டிருக்கும் த்ருணபிந்து மகாராஜனது ஆச்ரமத்தையடைந்து அங்குள்ள புண்ணிய தடாகத்தில் நீராடி வழிநடைவிடாய் ஆற்றிக்கொண்டிருக்கையில் தியாகேசனுல் ஏவப்பட்ட ஒரு ஆகாயவாணியானது அங்கு உண்டாயிற்று. "கேளீர்! பரமசிவ பக்தர்களே! ஸகல லோகத்துக்கும் மூலகாரணமாகிய ஸோமாஸ்கந்த மூர்த்தியைக் குறித்து நெடுநாளாய் தவம் செய்துவரும் இந்த த்ருணபிந்து மகாராஜனுக்கும், ஜாதரோம மகரிஷிக்கும், ஜரத்காருரிஷிக்கும் அவர் காட்சியளிக்கப் போகிறுர். அப்பொழுது உண்டாகும் பூகம்பத்தைப் பற்றி நீங்கள் நடுங்கவேண்டாம்" என்றுரைத்தது.

ஆகாயவாணியினுல் அவ்வாறுரைக்கப்பட்டவர்களா யும், திருவாரூர் நாதனது நாமஸங்கீர்த்தன பராயுமுள்ள அத்தொண்டர்கள் அஞ்சலிசெய்துகொண்டு நான்குதிசை களையும் திரும்பித் திரும்பி உற்றுநோக்கிக்கொண்டிருக்கை

யில் அம்மூன்று தவசிகளின் ஆச்ரமத்திற்கு ஈசான பாகத்தில் முதலில் தேவதுந்துபி ஒலியுண்டாயிற்று. பிறகு அரம்பையர்களின் சிலம்பொலி உண்டாயிற்று. பிறகு கோடி சூரியப்பிரகாசமுள்ளதாய்ப் பகலோனது காந்தியை மழுங்கச்செய்வதாய் ஒரு சுடர் தோன்றிற்று. அவ்வித சுடரானது பூமியிலிருந்து வெளிக்கிளம்பித் தோன்றுகை யில் பூமி அதிர்ச்சி உண்டாயிற்று. அவ்வாறு பூகம்பம் உண்டாகிய போதிலும் ஆகாய வாணியினுல் தைரியத்தைப் பெற்றிருந்த அப்பக்தர்கள் தமது எதிரில் பூலிங்க ஸ்வரூபி யாய் விளங்கும் பரமேச மூர்த்திக்குத் திவ்யாபிஷேகம் செய்யக்கருதிப் புண்ணியதீர்த்தத்தை எடுத்துவர முயன் ருர்கள். அதற்குள் வாசவனும் மற்றுமுள்ள தேவகணங் களும் ஐராவதச் சென்னியின்மீது கங்கா தீர்த்தத்தை வாரி எடுத்துக்கொண்டுவந்து அந்த லிங்கேசனுக்கு மந்திர கோஷத்துடன் அபிஷேகம்செய்ய ஆரம்பித்தார்கள். அத் தருணத்திலேயே நெடுநாளாய்த் தவத்திலமர்ந்திருந்த அம் மூவரும் ஈசனுல் ஏவப்பட்டவர்களாய்த் தமது அந்தக் கரணத்தில் சதாசிவமூர்த்தியைச் கண்டுகளித்தபிறகு தவத்திலிருந்து இறங்கி லிங்கேசமூர்த்தியைத் தர்சனம் செய்ய ஆவலுடன் ஓடிவந்து பணிந்து துதிசெய்ய ஆரம்பித்தார்கள்.

அத்தருணத்திலேயே அந்த வனத்திற்கருகிலுள்ள அநேக மகரிஷிகளும், ஞானிகளும், பிராம்மணோத்தமர் களும் அங்கு வந்து கூடி லிங்கேசனுக்கு வாசவன் செய்யும் அபிஷேக முறையையும் ஜாதரோம மஹரிஷி செய்யும் துதியையும் கண்டு பரமானந்தமடைந்தார்கள். திருவா ரூருக்குச் செல்லும் அத்தொண்டர்கள் அவ்வதிசயங்களை எல்லாம்கண்டு தமது ஆன்மாவுக்கு நற்பயனையடைந்திருந்த போதிலும் தியாகராஜபக்தியினுல் இழுக்கப்பட்டவர் களாய் அங்கிருந்து புறப்பட்டுப் புண்ணியபுரியையடைந்து கமலையில் நிராடித் தியாகேசனைக் கண்டுகளித்துக் கூத்தாடினுர்கள்.

## 291. பாலனுக்குத் தத்துவமுபதேசித்த லீலை.

முன்பு ஒரு சமயத்தில் ஸாரங்கபுரத்தில் தேவக்ஞன் என்னும் வேதியர் ஒருவரிருந்தார். அவர் சந்திரசேகரனது பாதாரவிந்தத்தினிடத்தில் வைத்திருந்த அன்பினால் அவர் நினைத்த காரியங்களையெல்லாம் நிறைவேற்றிக் காப்பாற்றி வந்தார். அதனால் அவ்வேதியன் மீது பரமசிவனருள் விளங்கி வருகிறதென்றறிந்த ஞானியர் யாவரும் அந்நகரத்தில் அவரையே சிறந்தவராக மதித்து வந்தார்கள். சிற்சில புண்ணிய காலங்களிலும் அந்நகர் நாதனாகிய கௌரீசனது திருவிழாக்காலங்களிலும் அங்கு வந்து கூடும் ஈசுவரபக்தர்களுக்கு அவ்வேதியர் வேதாந்தப் பொருளின் சாரத்தை விளக்கிவந்தார்கள்.

ஒரு நாள் காவிரிக்கரையினருகிலுள்ள சரத்கால மண்டபத்தில் கௌரீசனும் கௌரீ தேவியாரும் திருவிழாக் கண்டருளுகையில் தேவக்ஞன் என்னும் வேதியர் மெய் மறந்தவராய் ஈசகுணங்களைப் புகழ்ந்து துதிக்கையில் நாடுகள் தோறும் தமது திவ்ய லீலையைக் காண்பித்துத் தொண்டர்களைக் காத்துவரும் ஈசனது லீலையையுரைப்பீர் என்று பக்தர்களால் கேட்கப்பட்டவராய் அவ்வேதியர் மூன்று முகூர்த்த காலம் தியாகேசனது திவ்ய குணச் சிறப்பைக் கூறினார். முடிவில் லீலைகளின் சிறப்பையும் தனது மெய்ஞானத்தால் கண்டறிந்த ஈசுவர தத்துவச் சிறப்பையும் கூறி அப்பொழுது அவ்வீசன் அங்கு நடித்துக் காட்டப்போகிற லீலையின் சிறப்பையும் கண்ணாரக்கண்டு களிப்பீரென்று உரைத்து ஓய்ந்தார். அத்தருணத்திலேயே சிற்சில சுபசகுனங்கள் அங்கு காணப்பட்டன: மெய்ஞ் ஞானிகளின் மனமும் சரத்கால சந்திரமண்டலம்போல் தெளிவுடன் விளங்கலாயிற்று. மந்தமாருதமும் அக் காவிரிக்கரையில் உலாவியது. இவ்வித நற்சகுனங்களைக் கண்டவரனைவரும் உளமகிழ்வுடன் வீற்றிருக்கையில் அங்கொரு ஆகாயவாணி உண்டாயிற்று.

ஸாரங்கபுரவாஸிகளாகிய சிவபக்தர்களே! தேவனும் ஸிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரகர்த்தனுமாகிய தியாகேசன் ஒரு யோஜனை தூரத்திலுள்ள பாணலிங்க வனத்தில் ஒரு சிறு குழந்தையின் அழுகையினால் கவரப் பட்ட மனமுடையவராய் அச்சிறுவனது எதிரில் தோன்றி அவனுக்குத் தத்துவம் உபதேசித்த சிறப்பையறிந்து புகழ்வீர் என்றிவ்விதமாய் ஆகாயவாணியுரைத்ததைச் செவியுற்ற தொண்டர்களனைவரும் விரைவாய் அப்பாண லிங்க வனத்தினருகில் சென்று அங்குள்ள ஒரு ஜம்பு மரத்தினடியில் ஐந்து வயதுள்ள சிறுவன் ஒருவன் தியாகேசனது பிரிவைப்பற்றி அழுத கண்ணீருடனும், கூப்பியகையுடனும் நிற்பதைக்கண்டு பாலக! நீ யாரென்று வினவினார்கள்.

பரமேச்வர பக்தர்களால் அன்புடன் விசாரிக்கப்பட்ட அச்சிறுவன் சற்று ஆறுதலடைந்து விம்மி விம்மி அழுவதை யும் அடக்கிக்கொண்டு அவர்களின் பாதத்தில் பணிந்து கூறலானான். கேளீர் புண்ணிய புருஷர்களே! வீரகேது மஹாராஜனுக்குப் புத்திரனையும், மாடரி மஹரிஷியினிட மிருந்து அஸ்திரக்கலையை கற்றறிந்தவனையும் ஜயகேது என்னும் நாமதேயமணிந்த எனது வந்தனத்தைப் பெறுவீர்கள். நான் இவ்வுலகில் ஜனித்த காலத்திலேயே எனது தந்தையின் ராஜச்செல்வியானவள் பகைமன்னரை யடைவாளென்று சோதிடருரைத்த சொல்லையறிந்து மந்திரிமார்களாலும், தந்தையினாலும் வனத்தில் விடப் பட்ட நான் மாடரி மகரிஷியின் ஆச்ரம வாயலில் விளையாடி அவரால் பரிபாலிக்கப்பட்டவனாய் அவரது அருளால் அஸ்திர ஞானத்தைப் பெற்ற பிறகு யோகத்தின் பொருட்டு ஏவப்பட்டவனாய் இவ்வனத்தில் நான் யோகத்தில் அமர்ந்திருக்கையில் ஸகலலோகநாதனும், புண்ணியபுரிமணியாயும் விளங்கும் பரமேசன் தனது காரணமற்ற கருணையினால் எனது முகத்தைத்துடைத்து எனக்குச்சிறந்த தத்துவத்தை உபதேசித்துவிட்டார். அவ் வீசனது திருமேனியை நான் கண்ட பிறகும் தத்துவப்

பொருளைப் பெற்ற பிறகும் இவ்வுலகத்திலுள்ள எவ்வித விஷயமும் என் மனதுக்கு விஷயமாகப் புலப்படவில்லையே! என் மனம் ஈசனையே நாடிச்செல்கிறதே! பாலகனாகிய நான் என் செய்வேன் என்று இவ்வாறு கூறுகையில் அவனது உரையைக்கேட்ட ஸாரங்கபுர பக்தரனைவரும் அவன்மீது தியாகேசன் செய்த கருணையைப்பற்றிப்புகழ்ந்த பிறகு தேவகனூர் மற்றும் சிலதத்துவங்களை அவனுக்கு உபதேசித்தார்.

## 292. தொண்டரை யிகழ்ந்தவனுக்கு ஜயமளித்த லீலை.

ஜயகேது என்னும் அந்த ராஜகுமாரன் தியாகேசனைத் தனது யோகதாரணையில்கண்டு அவரிடமிருந்து தத்வோபதேசங்களைப்பெற்ற பிறகு ஆகாயவாணியினால் அழைக்கப்பட்டு அங்கு வந்து தோன்றிய பிராம்மணோத்தமர்களின் உபதேசத்தைமீற மனம் எழும்பாதவனாய் அவர்களின் கட்டளைபோலவே சிலகாலம் பிரஜாபரிபாலன ஸௌகிருதத்தையும் அடையவேண்டுமென்று நினைத்து அவ்வேதியர்களின் ஆசீர்வாதத்தைச் சென்னியில் அணிந்துகொண்டு தனது தந்தையின் நாடாகிய கொங்குமண்டல தேசத்தைப் பகைமன்னரிடமிருந்து மீளவும் கவர எண்ணித் தனது எதிரில் தோன்றிய தியாகராஜனை போரில் ஜயமளிக்க வேண்டுமென்று மனதில் ஈசகுணங்களைத் துதிசெய்துகொண்டே அக்காட்டில் தனக்குத் துணைவனாக வந்த சலபன் என்பவனுடன் பேசிக்கொண்டே செல்லலானான்.

அவ்விதமாய் அந்த ஜயகேதுவென்னும் அரசன் அந்தச் சலபன் என்னும் வேடனுடன் பேசிக்கொண்டு செல்லுகையில் ஆதிதேவனாயும், சுத்த ஸ்வரூபியாயும், கர்மபந்தனங்களால் கட்டுண்டு துன்பப்படாதவராயும், கிரீடாதிபாதம் வரையில் நிகரற்ற சோபையுடையவராயும், ஸகலலோக நாயகனாயும், விச்வ பூதஸ்வரூபியாயும், ப்ரகிருதி ஸ்வரூபி

யாயும், கல்பகால ஸூரியன்போல் சுடர் வீசப்பெற்ற வராயும், பக்தர்களுக்காக அசுரரையழிப்பவராயும் பக்தர்களுக்குத் தான் தூதனாய் அருள்புரிபவராயும், பக்தர்களின் மனத்தாமரையில் விளங்குபவராயுமுள்ள தியாகேசனது திவ்ய சக்திகளையும், அங்குவந்து கூடி தனக்கு உபதேசித்த பிராம்மணோத்தமர்களின் மேன்மைகளையும், அவ்வித பிராம்மணர்கள் நடந்துசெல்லும் பூமிக்கு உண்டாகும் மேன்மையையும் பலவாறு புகழ்ந்துரைத்துக்கொண்டே செல்லலானான்.

சலபனென்னும் அவ்வேடன் ராஜகுமாரன் புகழ்ந்து பேசும் தியாகராஜனது திவ்ய குணங்களை மாத்திரம் அன்புடன் கேட்டிருந்து பிறகு தியாகேச பக்தர்களின் சிறப்பை யுரைக்கும் காலையில் அந்தப் பக்தர் குணச்சிறப்பை அலக்ஷ்யம் செய்து கேட்கலானான். பக்தரின் குணத்தில் நம்பிக்கையை இழந்தான். உலகில் ஸாதாரண மனுஷ்யர்களாய் தோன்றும் இவர்களுக்கு அவ்விதச் சிறப்பு ஏது என்று இடையில் வாதம் செய்யலானான். இவ்வண்ணமாய் அவ்வேடன் சாதிகுணத்தினாலும், அஞ்ஞானப் பெருக்கினாலும் பரமேச்வர பக்தர்களது குணங்களைச் சில சமயத்தில் இகழ்ந்தும், சில சமயத்தில் அலக்ஷ்யம் செய்தும் வந்தமையால், அக்காட்டில் அவ்வரசனுக்குத் துணைவனாய் வந்த அவ்வேடனுக்கு நன்மதியளித்து அவனைக் காப்பாற்ற வேண்டுமென்று சங்கற்பம் செய்துகொண்ட புண்ணியபுரநாதன் தேவவேதியின் மீது அமர்ந்து வீற்றிருந்தே தனது நிக்ரஹ சக்தியினால் மனதில் ஓர்வித சங்கற்பம் கொண்டார் அவ்வீசன் கைக்கொண்ட அச்சங்கற்பத்துக்கேற்றவாறே அவ்வேடன் அப்பொழுது நடுவழியில் நடந்துசெல்லுகையில் திடீரென்று அவனது சரீரத்தில் ஜ்வரவேகம் கிளம்பிற்று.

காரணமின்றித்தனது சரீரத்தில் எழும்பிய ஜ்வரத்தின் வேகத்தினால் தளர் நடையைப்பற்றிய அவ்வேடன்

நாக்குழறிக் கண் சிவக்கப்பெற்றுப் பெருமூச்சுடன் ஒரு மரத்தடியில் உட்கார்ந்து ஓய்ந்தேன் என்று உரைக்க லானான். பலவாறு பிதற்றலானான். ஞாபகத் தடுமாறுதலையுமடைந்தான். இவ்வாறு அவ்வேடன் அங்கு அயர்ந்து வீழ்ந்திருப்பதைக்கண்ட ஜயகேது என்னும் ராஜ குமாரன் அவனது சரீரத்தில் தோன்றியிருக்கும் ஜ்வரத்தின் குறிகளைக்கண்டு முதலில் சற்றுப்பயத்தையடைந்தான். பிறகு அவ்வேடன் பரமேச்வரத்தொண்டர்களிடத்தில் செய்த குற்றத்தினால் இவ்வாறு ஜ்வரநோய் உண்டா யிருக்கலாம் என்று ஊகித்து நிற்கையில் அச்சமயத்தில் சில குறிகள் தோற்றின. அக்குறிகளைக்கண்ட அவ்வரச குமாரன், அதே காரணமாயிருக்கலாம் என்று நிர்ணயம் செய்துகொண்டு அவ்வேடனது அருகில் சென்று அவனுக்குச்சில தைரியமொழி பகன்று ஓ நண்பனே! நீ பரமேச்வர பக்தர்களின் பாதகமலங்களை உனது மனதினால் கருதுவாயாகில் அதுவே உனக்கு இத்தருணத் தில் அருமருந்தாகும் என்று அமிர்தம் போன்ற இவ்வரிய சொல்லையுபதேசித்தான்.

அவ்வேடனும் அவ்வாறே அந்நேரத்தில் தனது இரு கைகளையும் சென்னியில் குவித்து மனதில் ஈசுவரத் தொண் டர்களின் பாதமலரைத் தியானித்து மூடனாகிய யான் உங்களிடத்தில் ஏதேனும் குற்றம் படைத்திருந்தபோதிலும் கருணைக்கடலென விளங்கும் நீங்கள் அக்குறையைமறந்து எனது ஜ்வரநோயைத் தணித்தருளவேண்டும் என்று வணங்கினான். சகல ஜீவராசிகளின் ஆன்மாக்களிலும் ஆதாரநாடியாக விளங்கும் தியாகேசனுடைய சங்கற்பத் தினால் மறுபடியும் அவ்வேடனுக்கு நிமிஷநேரத்தில் சரீர ஆரோக்கியமுண்டாயிற்று அவ்வித துன்பநேரத்தில் தனது நன்மையை விரும்பிய அரசகுமாரன் தனக்குச் செய்த நல்லுபதேசத்தைக்கேட்டு அவனைப் புகழ்ந்து போற்றி அவனுக்கு உறுதுணையாய் போரில் நின்று அம்மன்னனது பகைவரைத் தனது ஸேனையினால் திசைகளில் ஓடச்செய்து

அச்சயகேது மன்னனைச் சிங்காதனத்தில் வீற்றிருக்கச் செய்து தான் அதுமுதல் ஈசனுடைய தொண்டர்களுக்கே தொண்டுசெய்வதாய் உறுதி செய்துகொண்டு வாழ்நாட்கள் முழுவதும் தொண்டர்களுக்குத் தொண்டுசெய்து அதனால் மேன்மையையடைந்து அதனால் உயர்ந்த பதவியையும் முடிவில் பெற்று விளங்கினன்.



## 293. அதிகாரத்தைக் காப்பாற்றிய லீலை.

சோழ அரசனிடத்தில் இரத்தினாதிகார வேலையிலமர்ந்திருந்த விமலன் என்னும் தனிகன் ஒருவன் இருந்தான். அவன் பாலியம் முதல் ஈசனிடத்திலும், ஈசுவர பக்தர்களிடத்திலும் மிகவும் அன்பு பூண்டவனாய் அல்லும் பகலும் அவர்களது தியானத்தினால் தூயமனதுடன் தனக்குப் பூபாலனிட்ட கட்டளைகளைக் குற்றமின்றி நிறைவேற்றிக்கொண்டு அதிகாரத்தில் அமர்ந்திருந்தான். வளர்பிறைச் சந்திரன்போல் அவனது மனதில் நாடோறும் வளர்ந்துவந்த ஈசுவர பக்தியானது அவனை உன்னத நிலையில் ஈடுபடுத்தியபடியால் அவ்வித பக்தியினால் கவரப்பட்ட மனமுடைய அவ்விமலன் சோழபதியின் கோச சாலையிலிருந்த விலையற்ற ரத்தின ராசிகளையும், தனது செல்வத்தையும் நாளடைவில் பக்திமார்க்கத்தில் செலவிட்டு வரலானன்.

அரசனது கோச சாலாதிபதிகள் மற்றொரு சமயத்தில் ரத்தினக்கணக்கிடுகையில் மூவாயிரம் பத்மராகக் கற்களும் ஏழாயிரம் நீலமணிகளும், பதின்மூன்றுயிரம் முத்துமணிகளும், பதினேழாயிரம் பச்சைக் கற்களும், முப்பதினாயிரம் வஜ்ரமணிகளும், பதினாயிரம் முத்துமணிகளும், பதினேழாயிரம் கோமேதக் கற்களும் குறைந்திருக்கக்கண்டு இவ்வாறு நேரிட்டதற்குக்காரணம் யாது என்று பரீக்ஷகரால் கேட்கப்

பட்டதற்கு மறுமொழியளிக்க வெள்கி நின்ற அவ்விமலனை மந்திரிமார் முதலிய ராஜப்ரதானிகளனைவரும் நிந்தனை செய்து, கசையினால் அடித்துப் பயமுறுத்திப் பல இன்னல்களைக் கொடுத்தார்கள். ஈசுவர பக்தியில் மூழ்கிய விமலனோ வெனில் அவர்களுக்கு எவ்வித மறுமொழியும் அளிக்காமல் ஈசனது பாத கமலத்தையே மனதில் நினைத்துக்கொண்டு தியாகேசனுக்கும், தொண்டர்களுக்கும் செய்யவேண்டிய திருத்தொண்டு தடைபடுகின்றதே என்று வாடிய முகத்துடன் அசைவற்ற மரம்போல் நின்றான்.

தியாகேசனது திருத்தொண்டு விஷயத்திலும் தொண்டர்களுக்கு அமுதளித்தல் முதலான நற்காரியம் செய்துவந்த விஷயத்திலும் அந்நகரில் மிகவும் பிரசித்தி பெற்ற அவ்விமலனுக்கு இவ்வாறு நேரிட்டதைக் கண்டு மனச் சோர்வையடைந்த நகரவாஸிகளாகிய புண்ணிய சீலர்கள் யாவரும் பார்த்துத் திகைத்திருக்கையில் ராஜாபராதியாகிய விமலனைக் காவற்காரர்கள் சிறைப்படுத்தினர். மறுநாட்காலையில் வாசவன் திசையில் சூரியன் உதித்தவுடனே விமலனென்னும் அவ்வீச பக்தனைக் கசையினால் அடிக்கச்செய்த ராஜப்ரதானிகளின் சரீரத்தில் கசையடி வடிவும், பிணியும் உண்டாயிற்று. அவ்வாறு நேரிட்டதற்கு காரணம் ஈசனே என்று அறிந்துகொள்ளாத அம்மந்திரி பிரதானியர் யாவரும் தமது முறைப்படி ராஜஸபையில் அமர்ந்திருந்து ராஜகாரியங்களை நிறைவேற்றிவரத் தொடங்கினார்கள்.

அச்சமயத்தில் லீலாலோலனாகிய புண்ணியபுராநாதன் தனது அற்புத லீலையை மற்றொருகால் அம்மந்திரி பிரதானிகளுக்குக் காண்பிக்கக் கருதியவராய் சங்கற்பம் செய்துகொண்டு தனக்கு மிகவும் பிரிய பக்தனாகிய அவ்விமலன் போலவே உருவமெடுத்துக்கொண்டு பூபாலனது ராஜக்ருஹத்தில் புகுந்து முன்போலவே ரத்தின காரிய வேலையில் அமர்ந்து வரலானார். பரமேசன் செய்துவரும் இவ்வற்புதச்

செயலை அங்குள்ளவர் யாவரும் சிலநாள் வரையில் அறிந்து கொள்ளவில்லை. மந்திரிமார் விமலனுக்குச் சிக்ஷை விதித்த வரலாறும் சோழ அரசனது செவியில் புகவில்லை. இவ்வாறிருக்கையில் ஒருநாள் சரத்கால சந்திரகாந்தியினால் விளங்கும் வானத்தின் அழகைச் சோழன் உற்றுநோக்கியிருக்கையில் ஆகாயத்தில் அந்நேரத்தில் பறந்து செல்லும் இரண்டு சகோர பக்ஷிகள் ஒன்றுக்கொன்று பேசிக்கொண்டே செல்வதைக்கண்டும் அப்பறவைகள் உரைத்த தனது மதியின்மையைக்கேட்டும் வெள்கி மனம் உருகிய அரசன் அத்தருணத்திலேயே அமைச்சரைக்கூப்பிட்டு விசாரிக்கலானான்.

பிறகு அவ்வரசன் சிறையிலிருக்கும் விமலனை அன்புடனழைத்து விசாரிக்கத் தொடங்குகையில் தியாகேசன் ஏவிய ஆகாயவாணியினால் சிலநாள் தொடங்கி தமது கண்களுக்கு விமலனெனத்தோன்றி ரத்தினக் கணக்கிட்டு வந்தவன் தியாகராஜனே என்றறிந்துகொண்டு அப்பொழுதே மந்திரிமார் புடைசூழ, வேதியர் வேதகானம் செய்ய மங்களவாத்தியம் முழங்க அந்நிலாத்தோற்றத்தில் தியாகேசனுக்கு ஓர் திருவிழாவைச் செய்துவைக்கக்கருதி அவ்விமலன் மனக்கருத்துப்போலவே அத்திருவிழாவையும் செய்துவைத்து ஈசனைப்பணிந்து வேறுருவம் கொண்டு தொண்டனது அதிகாரத்தைக்காப்பாற்றிய கோவே! எம்மைக் காத்தருள்வீர் என்று புகழ்ந்து துதி செய்தான். அவ்விமலனும் அந்நகரிலிருக்கும் மற்ற புண்ணியசீலர்களும் தியாகேசன் ரத்தினாதிகாரியாய் விளங்கிய அற்புதத்தை நினைத்து நினைத்து ஆனந்தக்கடலில் ஆழ்ந்து விளங்கினார்கள்.

## 294. நாட்டுப்பெண்ணுக்கு நன்மையளித்த லீலை

காவிரிக்கரைக்குத் திலகம்போல் விளங்கும் கோபுரியில் கௌரி என்னும் ஓர் வைச்யப் பெண்ணிருந்தாள். அவளது தந்தையும் தாயும் நற்சுப முகூர்த்தத்தில் அவளை மற்றொரு நகரிலுள்ள வைச்ய யுவனுக்கு மணம் புரிவித்தார்கள். தக்ககாலத்தில் தாயினாலும், தந்தையினாலும் கணவனது கிருஹத்தையடைவிக்கப்பட்டு கௌரி என்னும் அப்பெண் மணியானவள் வாழும்நாளில் அவளது புத்தியில் உலக வாழ்க்கைக்கேற்ற நற்குணங்களும் நல்லொழுக்கங்களும் இயல்பாய் தோற்றவில்லை. ஆதலால் ஒருநாள் கணவனால் மிகவும் உபேக்ஷை செய்யப்பட்டவளாய் உறுதுணையின்றி மதிகலங்கிக் காட்டில் தனிமையாய் அழுதுகொண்டிருக்கும் பொழுது அக்கௌரியானவள் ஓ லோகநாத! துன்ப காலத்துணைவனே! பாவியேனாகிய என்மீது உமது கருணை படியலாகாதா என்று அழுது நின்றாள்.

கௌரி என்னும் அப்பெண்மணியானவள் இவ்வாறு அழத்தொடங்கியபொழுது தயாநிதியாகிய தியாகேசன் அப்பெண்ணரசிக்கு விவேகமளிக்க விரும்பியவராய் ஒரு கிழப்பிராமணர்போல் உருவமெடுத்துக்கொண்டு வந்து கையில் ஊன்றிய கோலுடன் அவளது அருகில் வந்து பெண்ணே! நீ ஏன் இவ்வனத்தில் தனிமையாய் நின்று அழுகிறாய்? உனது மனக்கருத்தை யானறிவேன். நீ பூர்வ ஜன்மத்தில் வேதியன் ஜாதியிலுதித்து ஒரு வேதியனுக்குத் திரவியமளிப்பதாய் உரைத்ததை மீறியபடியால் உனக்கு இச்சன்மத்தில் சாதித்தாழ்வும் நற்குணக்குறைவும் உண்டாயிற்று. இவ்வித குறைவைப்பற்றி நீ மதிகலங்கவேண்டாம். பூர்வ ஜன்ம புண்ணியத்தினால் இப்பொழுது நீ எனது நாமத்தைக்கூவியழைத்தமையால் நான் உனக்குச் சகல நன்மைகளும் உண்டாகக்கடவதென்று ஆசிகூறுவதற்காகவும் தைரியம் அளிப்பதற்காகவும் இங்குத்தோன்றினேன். வேதமும் வேதாந்தமும் முனிவர் மனமும் காண்டர்க்கரிய

தாகிய எனது திவ்யரூபத்தை நீ இன்று கண்டமையால் இதுமுதல் நீயே இவ்வுலகிலுள்ள மாதரனைவருக்கும் நற்குணோபதேசியாக விளங்கக்கடவாய் என்று உரைத்து அவ்வனத்திலே சற்றுச்செல்பவர்போல் தோற்றிப் பரமேசன் மறைந்துவிட்டார்.

வைச்யகுலத்துக்கணியென விளங்கும் அம்மாது இவ்விதமாய் ஈசனுலுரைக்கப்பட்டவளாய் விடாய் தீர்ந்தவள்போலவும், நிதியைப்பெற்றவள் போலவும் அடங்காக் களிப்பையும், பரமானந்தத்தையும், நற்குணங்களையுமடைந்தவளாய் அங்ஙனமே தனது கணவன் மாளிகைக்குத் திரும்பலானுள். அம்மாது இவ்விதமாய்த் தனது பாக்கியத்திரளால் தன் முன் தோன்றித்தனக்கு அருள்புரிந்து நன்மையளித்தவர் திருவாரூர்ச்செல்வரும் இருக்கவேண்டும் என்று நினைத்துக்கொண்டு கண்களில் ஆனந்தக்கண்ணீர் மல்கும் வண்ணம் முகமலர்ச்சியுடன் திரும்பிக் கணவனது அருகில் வருவதற்குள் அக்கோபுரிக்கு அதிதேவதையாகிய காளியம்மன் அக்காட்டில் நடந்த வரலாற்றையறிந்துகொண்டு அம்மாதின் கணவனது கனவில் தோன்றிக் கானத்தில் நடந்த தியாகேச லீலையின் சிறப்பைக்கூறி மறைந்தாள். காளிகாதேவியிஞல் நித்திரையிலறிவிக்கப்பட்ட அவளது கணவன் வெகு விரைவாய் எழுந்து கைகால்களைச் சுத்திசெய்துகொண்டு காளிகாதேவியின் ஸன்னிதானத்தையடைந்து பணிந்து பலவாறு துதிசெய்து அம்பிகையாலும் தியாகேசனுலும் தமக்கு நேரிட்ட நன்மையைக்குறித்துப் புகழ்ந்து வலஞ்செய்து தனதிருப்பிடம் திரும்புகையில் தனது மனைவியைக் கண்டான். காளிதேவியின் ஸன்னிதான வழியில் கணவனைக்கண்ட கௌரியும் அவ்வம்மனையும், தனது கணவனையும் பணிந்து தனது இருப்பிடம் வந்தாள்.

தியாகேச பக்தி நிறைந்த உளமுள்ள கணவனுல் அன்புடன் கேழ்க்கப்பட்ட கௌரியும் காட்டில் நடந்தவைகளை

ஆதியோடந்தமாக வுரைத்துத் தியாகேசனது மொழியின் சிறப்பை யுரைத்துக்கொண்டே அன்றிரவை நிமிஷம்போல் நீக்கினாள். மறுநாட்காலையில் கதிரவன் உதிப்பதற்குமுன் அக்கோபுரியிலிருக்கும் மாதரனைவரும் தனித்தனியாய் தமது நித்திரையில் காளிதேவியினாலுரைக்கப்பட்டு விஷய மெல்லாமறிந்துகொண்டு அவ்வைச்சியமாதின் வாயிலை சூழ்ந்துகொண்டு இல்லத்திற்கு உரிமையுடையவளே! உனது நாட்டுப் பெண் செய்த புண்ணியத்திரள் மெச்சத் தகுந்தது. புண்ணியபுரநாதன் உனது நாட்டுப் பெண்ணின் கண்களுக்குப் புலப்பட்டு மாதர்களின் தர்மமுறை முழுவதையும் உபதேசித்தனரே! இவ்வித பாக்கியத்தை யாம் எவ்வாறு கூறுவோம். உனது நாட்டுப் பெண்ணாகிய கௌரியிடமிருந்தே நற்குணங்களையும், நல்லொழுக்கங்களை யும் நாங்கள் கற்பதற்கு இங்குவந்து கூடியிருக்கிறோம் என்று கூறினார்கள். இவ்விதவுரையைச் செவியினால் பற்றிய கௌரியும் தனது மாமியின் கட்டளையையும், கணவரது கட்டளையையும் ஏற்றுக்கொண்டு அதுமுதல் அந் நகரமாதருக்கு நற்குணோபதேசம் செய்யலானாள் இவ்வித மாய் கௌரி என்னும் அம்மாதினால் தியாகேசனின் சிறப்பு பரவியதைக் கேட்டவரனைவரும் களித்தனர்.



## 295. மண்பிம்பத்தைப் பேசவைத்த லீலை.

முன்பு ஒரு சமயத்தில் அர்ஜுனாரண்யத்தின் தக்ஷிண பாகத்தில் ஒரு வேடச்சேரியிருந்தது. அச்சேரியில் கண குண்டன் என்னும் வேடன் ஒருவன் இருந்தான். அவன் சிறுபிராயம் முதல் அவ்வேடச் சேரிக்கருகிலுள்ள வழியில் நிரந்தரமாய்த் தொண்டர்கள் திருவாரூருக்குச் செல்வதை பார்த்துக்கொண்டிருந்தான். இவ்வண்ணமாய் அல்லும் பகலும் அவ்வேடன் புண்ணியபுரிக்குச் செல்லும் அடியார் களின் தர்சனத்தை அடைந்து வந்தமையால் ஒரு நாள்

அவனது மனதுக்குத் தெளிவுண்டாயிற்று. அதனால் கணகுண்டனென்னும் அவ்வேடன் தனது சுற்றத்தாரையும், தாய்தந்தையரையும், சகோதரர்களையும், மனைவிமக்களையும் அன்புடன் அருகில் அழைத்து வைத்துக்கொண்டு முகமலர்ச்சியுடன் தியாகேசனது சிறப்பையும் அவ்வீசனைத் தர்சிக்கச்செல்லும் தொண்டர்களின் சிறப்பையும் புகழ்ந்து பேசலானான்.

வேடர்சாதியிலுதித்து ஞானமற்றவனாயிருந்த போதிலும் அவ்வேடன் வெகுகாலமாய் ஈசனிடத்திலும் அவரது தொண்டரிடத்திலும் வைத்திருந்த அன்பினால் அவனது வாயிலிருந்து நல்லுரைகளும் நற்பதங்களும் கிளம்பிக் கேட்போர்களின் மனதைக் கவரக்கூடியதாய் இருந்தன. கணகுண்டன் தனது சுற்றத்தாருக்கு உரைத்துக்கொண்டு வருகையில் ஒருநாள் அவனது குடிசையின் வழியாய்ச் சென்ற வேதியர் ஒருவர் சற்று நேரம் அங்குத் தங்கி அவன் கூறிவரும் மொழிகளைக்கேட்டு அவனது பக்தியின் சிறப்புக்காக ஆனந்தமடைந்து கிளம்பிய அவ்வேதியன் அவ்வேடனைத் தனிமையாய்க் கூப்பிட்டு அவனது வலதுகாதில் நன்மொழியையுபதேசித்து நீ இவ்வுலகில் ஈசுவரபக்தியால் சிறப்புடன் விளங்குவாய் என்று கூறிவிட்டுத் திருவாரூர் வழியைப்பற்றிச் செல்லலானார். உபதேசத்தைப்பெற்ற அவ்வேடன் அந்நிமிஷத்திலேயே கைலாசபதியை மனதில் தியானித்துக் கொண்டு பரிசுத்தமுள்ள ஸ்தலத்தையடைந்து பணிந்து வலஞ்செய்து அப்பூமியிலுள்ள களிமண்ணை எடுத்துக் கொண்டு வந்து தனது வேடச்சேரியின் அருகில் கிழக்கு முகமாய் அம்மண்ணினால் ஒரு சிவபிம்ப நிர்மாணம் செய்யலானான்.

வேடன் மிகுந்த சிவபக்தியினால் பரமேசனது திருவுருவைக் களிமண்ணால் அமைக்க முயன்றபொழுது அவன் மீது ஈசன் செய்த கருணை விசேஷத்தினால் ஒருகையில்

சூலமும் மற்றொரு கையில் அங்குசமும், சென்னியில் கங்கையும் சடையும் நிறைந்து விளங்கும் ஈசமூர்த்தியின் பிம்பமானது மிகவும் அழகும் லக்ஷணமும் நிறையப் பெற்றதாய் அமையப்பெற்று விளங்கலாயிற்று. பிம்ப நிர்மாண லக்ஷணத்தைச் சற்றுமறியாத கணகுண்டன் பக்தியின் மேன்மையினால் இவ்வண்ணம் ஈசபிம்பத்தை நிர்மாணம் செய்து முடித்தபிறகு அம்மூர்த்திக்கு நான்கு புறத்திலும் சிறியதொரு சரவணமுமிட்டுத் தோரணம் கட்டி அலங்கரித்து அன்றுமுதல் அவ்வனத்திலுள்ள பரிமளமுள்ள புஷ்பங்களையும், சிறந்த கனிகளையும் பறித்து அர்ச்சித்து நைவேத்தியம் செய்து வலம் வந்து தனது சுற்றத்தாருக்கு அம்மூர்த்தியின் பெருமையைப் பலவாறு புகழ்ந்து கூடி

மூன்று வருஷகாலம் செல்லும் வரையில் அவ்வேடன் அளவற்ற பக்தியின் சிறப்பினால் ஈசமூர்த்தியைப் பூஜித்துத் துதி செய்துவருகையில் அவனிடத்தில் தனது கடாக்ஷத்தை செலுத்தி நன்மை அளிக்கவேண்டும் என்று கருதிய தியாகேசன் ஒருநாள் விடியற்காலையில் ஸன்னியாஸியின் வேஷத்தையணிந்து சிவ நாமஸங்கீர்த்தனையுடன், அவ் வேடச்சேரியின் அருகில் சென்று அவ்வேடனைக்கண்டு ஓ வேட! நீ கொய்துவரும் மலர்களில் ஏதேனும் சில மலர்களை எனக்கு தருவாயாக என்றுரைத்தார். அதைக்கேட்ட அவ்வேடன் ஓ பிரம்ம மூர்த்தியே! நான் இன்று காலையில் எழுந்திருக்கும்பொழுதே மலர்களைக்குறிப்பிட்டு இம்மலர் களால் இன்று எனது ஈசமூர்த்தியைப் பூசிக்கக்கடவேன் என்று சங்கற்பம் செய்துகொண்டே நூற்றெட்டு மலர் களைக் கொய்து வந்திருப்பதால் நீர் விளம்புமாறு நீர் செய்யும் பூஜைக்கு இன்று இம்மலர்களை அளிப்பது நியாய மாகாதென்று மறுமொழி கூறினன்.

அவ்வுரையைக்கேட்ட பரமேசுவரன் சற்றுப் புன்னகை யுடன் ஏ வேடனே! அளவற்ற பக்தியுடன் நெடுநாளாக

நீ பூஜித்துவரும் அம்மூர்த்தியே 'எனக்குப் புஷ்பம் அளிப்பாய்' என்று உனக்கு உத்தரவு அளிக்குமேயாகில் அது உனக்குச் சம்மதமா என்று கேட்டார். அவ்வுரையைக் கேட்ட வேடனும் அதற்கு இசையவே பரமேசன் தனது திவ்ய சக்தியை அந்த மண் பிம்பத்தின்மீது ஏவினார். அத்தருணத்திலேயே அந்த மண் பிம்பமானது எதிரில் வணங்கி நிற்கும் அவ்வேடனைக் குறித்து ஏ தொண்டனே! நீ இம்முனிவருக்கு மலர் அளிப்பாய் என்றுரைக்கவே அத்தருணத்தில் ஞானோதயத்தையடைந்த அவ்வேடன் இவ்வாறு மண் பிம்பத்தைப் பேசச் செய்த சன்னியாசியானவர் தியாகராஜனாகவே இருக்கவேண்டுமென்று நினைத்து நறுமலர்களைத் தனது இரு கைகளாலும் வாரி எடுத்துக்கொண்டு அவரது அருகில் நெருங்குகையில் அவ்வாறு சன்னியாசியாய்த் தோன்றிய ஈசன் மறைந்துவிட்டார்.



## 296. நர்த்தனம் காண்பித்த லீலை.

கணகுண்டனென்ற வேடன் தான் வேண்டியவாறு நறுமலர்களையளிக்கத் தனதருகில் ஆவலுடன் நெருங்குகையில் திரோதானத்தையடைந்த தியாகராஜன் அவ்வேடன் நெடுநாளாய் மண் பிம்ப மூர்த்திக்குச் செய்துவரும் பூஜோபசார திறமை நியமங்களையும் அவனது பக்தியின் சிறப்பையுங் கண்டு அளவற்ற ஆனந்தத்தையனுபவித்துப் பிறகு அவ்வேடனுக்கும் அவனது சுற்றத்தாருக்கும் தனது மற்றொரு அற்புத லீலையைக் காண்பிக்கவேண்டும் என்று சங்கற்பித்துக்கொண்டு ஆகாயத்தில் சற்று நேரம் நிலைபெறலானார். தியாகராஜனது அவ்வித சங்கற்பத்தையறிந்து கொண்டு இந்திராதி தேவர்களும் நாரதாதி முனிவர்களும் அந்தக்ஷணத்தில் அவ்வேடச் சேரியின் அருகில் அருச்சுனாரண்யத்தின் தென் பாகத்தில் வந்து கூடி கைலாசபதியின் கருணையின் சிறப்பையும் அற்புத சக்தியையும் துதிசெய்யத் தொடங்கினார்கள்.

சுப முகூர்த்தம் கூடி விளங்கும் அன்று காலை நேரத்தில் இவ்விதமாய்த் தேவர்களும் முனிவர்களும் அவ் வன பூமியில் வந்து நிறையக்கண்ட எல்லா வர்ணத்தாரும் உள மகிழ்வுடன் அங்கு வந்து தேவர்களையும் முனிவர்களையும் பணிந்து மறு மூகூர்த்தத்தில் தியாகராஜன் அங்குள்ள பக்தர்களுக்குக் காண்பிக்கப்போகும் ஆனந்த நர்த்தன லீலா தர்சனத்தைத் தாமும் அடையக் கருதியவர்களாய் அங்கு வந்து கூடினர். பக்தர்களில் சிலர் தியாகராஜன் மண் பிம்பத்தைப் பேசவைத்த லீலையைப் புகழலாயினர். சிலர் முனிவர்களிடம் தத்துவார்த்தங்களை அறிந்து கொள்ளலாயினர். சிலர் களங்கமற்ற மனதுடன் பக்தி செய்யும் புண்ணியசீலர்கள்மீது தியாகராஜன் செய்துவரும் அருளின் சிறப்பைப் பற்றிப் புகழ்ந்து கொண்டாடலாயினர். மற்றும் சிலர் திருவாதிரை நக்ஷத்திரம் கூடி விளங்கும் இப்புண்ணிய தினத்தில் கைலாஸபதியாகிய தியாகராஜன் முன்பு சிற்சபையில் ஆனந்த நர்த்தனம் செய்ததுபோலவே இப்பொழுது இங்கு ஆனந்த நர்த்தனம் செய்யப்போகிறாரோ; இந்நடனத்தைக் காணத் தாம் செய்த பாக்கியமே சிறப்புவாய்ந்ததாகுமென்று உரைத்து நடனச் சிறப்பைப் புகழலாயினர்.

இவ்விதமாய்க் கணக்கற்றவர்ணத்தோரும் முனிவரும் தேவர்குழாமும் திடீரென்று அங்குக் கூடி ஈசனது திவ்ய குணங்களைத் துதி செய்துகொண்டு நிற்பதைக் கண்ட கண குண்டன் என்னும் அவ்வேடன் விரைவாய் வேடச்சேரியினுட் புகுந்து வாரீர் சுற்றத்தோர்களே! இதுவரையில் நான் பக்தியுடன் பூஜித்துவந்த மண் பிம்ப மூர்த்தியானது இப்பொழுது பேசியதைக் கேட்டீரோ. சாதியினாலும் நற்காரியங்களினாலும் புண்ணியத்தினாலும் நற்குணங்களினாலும் குறைவையடைந்த நமது வேடச்சேரியினருகில் இவ் வருச்சுன வனத்தில் இப்பொழுது தியாகராஜன் ஆனந்த நர்த்தனத்தை நடத்திக் காண்பிக்கப் போகிறார் என்பதைத்

தமது ஞானக்கண்களால் முன்னமே அறிந்துகொண்ட இம் முனிவரும் தேவரும் இங்கு வந்து கூடுவதைக் காண் பீர்கள் என்று கூவியழைத்துச் சுற்றத்தாருடன் அவ் வேடன் அங்குப் பூசுரராருகில் நெருங்குவதற்குள் தியாக ராஜன் நான்கு புஜங்களுடன் நடன மூர்த்தியாய்த் தோன்றி ஆனந்ததாண்டவ நர்த்தனத்தைக் காண்பித்தார். அத்தருணத்தில் அவ்வாறு ஈசனது நிருத்த தர்சனத்தை அடைந்த தொண்டர் குழாம் யாவும் ஹர! ஹர! கைலாச நாத! தியாகராஜ! வானவர் தெய்வமே! மாசற்றமணி விளக்கே! கங்காதரனே! என்று துதிசெய்து ஆனந்தக் கண்ணீர் மல்க நின்று களித்தார்கள். அத்தருணத்தில் ஆகாயத்தில் வந்து கூடிய கந்தர்வரும், கின்னரரும், ஸித் தரும், தேவர்களும் மலர்மாரி பொழிகையில் தியாகராஜன் மறையவே வாடிய முகமுடையவர்களாய்ச் சற்று நேரம் அங்கு நிலைபெற்றிருந்து பிறகு ஈசனது திவ்ய நடன தர்சனத்தைப் பெற்ற சிறப்பினால் மேன்மையையுமடைந்து தமதிருப்பிடமடைந்தார்கள்.

## 297. அழகை நேரிலுண்ட லீலை.

பரத்வாஜ முனிவரது உபதேசத்தால் அங்குள்ள தொண்டர்கள் யாவரும் ஒன்றுகூடி., அவ்வனத்தின் வாயு மூலையில் ஒரு திருக்கோயிலமைத்து அதில் அந்நடன மூர்த்தியை ப்பிரதிஷ்டை செய்துவைத்துக் காவிரி தீர்த்தம் முதலிய புண்ணிய ஜலங்களால் அபிஷேகம் செய்து வைத்து முக்காலத்திலும் பூஜைசெய்து வரலாயினர். இவ்வித விஷயங்களை யெல்லாம் அறிந்துகொண்ட சோழன் அத் தியாகராஜ பரம்பொருளின் பக்திக்கு ஸ்வாதீனமானவனாய்க் கொண்டு பரத்வாஜர், காச்யபர், சாண்டில்யர், நாரதர் முதலிய மகரிஷிகள் வெளியிட்ட தியாகராஜ தத்துவச் சிறப்பையும், லீலையின் அற்புதங்களையும் அங்கு விளங்கிய

பெரியோர் சொல்லக்கேட்டுப் பரமானந்தமடைந்தான். அதுமுதல் அச்சோழ சக்ரவர்த்தியின் மாளிகையிலுள்ள ஸகல ஜனங்களும் தியாகேச வைபவத்தையே எப்பொழுதும் புகழ்ந்துவரலாயினர்.

இவ்வாறிருக்கையில் பரமேசனருளால் அச்சோழனுக்கு நற்புத்திரன் ஒருவன் பிறந்தான். வளர்பிறைச்சந்திரன் போல் வளர்ச்சியையடைந்து வரும் அந்த ராஜகுமாரன் விளையாட்டுக்களைப் பயின்றுவருகையில் அரண்மனையில் உள்ள ஜனங்கள் யாவரும் அல்லும் பகலும் தியாகேசனது குணச்சிறப்பையுரைப்பதைக் கேட்டுவரலானுன் நான்காவது வயதில் அந்த ராஜகுமாரன் ஒருநாள் தனது தோழர்களுடன் கூடித்தானும் அவ்வாறே பரமேச குணச்சிறப்பைப் புகழலானுன். ஆகிலும், நாளடைவில் அந்த ராஜகுமாரன் தியாகராஜனிடத்தில் மிகவும் அன்பு வைத்தவனுய் விளையாடும் தருணங்களில் ஈசகுணங்களைப் பேசிக்கொண்டும், போஜனம் உண்கையில் முதலில் ஒருபிடி அன்னத்தைத்தனது சிறுகையினுல் எடுத்து எனது தியாகேசனுக்கு இஃதென்று எதிரில் அன்புடன் வைக்கலானுன். அவ்வாறு அச்சோழ குமாரன் அன்புடன் எடுத்து வைக்கும் அன்னத்தை அங்கீகரிக்கக் கருதிய பரமேசன் தனது அற்புத சக்தியினுல் மறைந்திருந்து அப்பிடி அன்னத்தை எடுத்துண்ணலானுர்.

இவ்விதமாய் அந்த ராஜகுமாரன் நாடோறும் தான் புசிக்கும் தருணத்தில் எனது தோழனுகிய தியாகராஜனுக்கு இது பருப்பு அன்னம், எனது [illegible] பாயஸம் இது பால் என்று இவ்வண்ணமாய் ஒவ்வொரு ஸமயங்களிலும் தான் அனுபவிக்கும் ஸகல சுகங்களையும், எனது தியாகேசனுக்கு என்றுரைத்துக்கொண்டே வந்தான். அப்பாலகன் இவ்விதமாய் அன்புடன் தியாகராஜனுக்கு என்று எடுத்து வைத்து வருவதையும் பிறகு சற்றுநேரம் செல்வதற்குள் அவைகள் எல்லாம் மறைந்து விடுவதையும்

கண்டுகொண்டிருந்த எல்லோரும் இவ் அற்புதச் செயலை வியப்புடன் அரசனிடம் தெரிவித்தார்கள். அஃதறிந்து பூமிபுரந்தரனும் வெகு ஆச்சரியத்துடன் அப்படிப்பட்ட தனது மைந்தனைக்காண விருப்பம் கொண்டவனாய் மைந்தன் உண்ணும் தருணத்தில் ஓடிவந்து அவனருகை அடைந்து சோழகுலச் செல்வமே! மைந்த! நீ நெடு நாளாக உண்ணுதல் முதலிய காரியங்களில் தோழனுக்கு இவை என்று உரைத்து வருகிறாயே அத்தோழனைக் கண்டாயா? அவனுடன் நீ பேசி இருக்கிறாயா? அப்படியாகில் அத்தோழனை நீ இப்பொழுது உன்னுடன் சேர்ந்து உண்ணும் பொருட்டு அழைப்பாய் என்று கூறினான்.

அம் மைந்தனும் பிதாவின் வார்த்தையைக் கேட்டவுடனே ஓ தியாகேச! எனது தந்தையின் விருப்பம்போல இப்பொழுது என்னுடன் உண்ண வருவாயாக என்று அழைத்தான். அன்புடன் அழைப்போர்களின் மீது கருணைபுரிவதற்காகவே புண்ணிய க்ஷேத்திரத்தில் விளங்கும் தியாகேசன் அத்தருணத்தில் அந்த ராஜகுமாரனது குரலைக் கேட்டு வருகிறவன்போல் சிறுவன் போல் அங்குத் தோன்றி அவனருகில் உட்கார்ந்து இனிமையாய்ச் சற்று நேரம் பேசி விளையாடிய பிறகு அமுதையுண்டு ஒருவரையொருவர் கட்டியணைத்து முத்தமிட்டுக்கொண்டு மறைந்தார். தியாகேசர் ராஜமாளிகையில் ஒரு சிறுவனாய்த் தோன்றி அவ்வரச குமாரனுடன் சேர்ந்து நவரத்தின மிழைக்கப்பெற்ற கலத்திலுண்டு மறைந்ததைக் கண்ட மன்னன் முதலிய சகல ஜனங்களும் வியப்பினால் அசைவற்றிருந்து பிறகு அவ்வரசகுமாரனை அழைத்துக்கொண்டு திருக்கோயிலையடைந்து பரமசிவனைத் தரிசித்து தமதிருப்பிடம் வந்து சிறப்புடன் விளங்கலானார்கள்.

## 298. கனியளித்த லீலை.

கைலாஸபதியானவர் நடனம் செய்யும் தலங்களில் முதன்மையான புண்டரீகபுரியில் வஸித்துவந்த விஞ்ஞானன் என்னும் வேதியர் ஒருவர் இருந்தார். அவர் காஞ்சி க்ஷேத்திரத்திலிருந்து ஐராவத வனத்தை அணுகுகையில் கலியின் கொடுமையினால் அவருக்கு அபகீர்த்தியை உண்டுபண்ணவேண்டும் என்று கருதிய அவ்வனத்திலுள்ள சில துஷ்டர்கள் ஒன்றுசேர்ந்து ஆலோசனை செய்து அவ்வேதியரின் எதிரில் வந்து நின்று முத்திப்பதி என்னும் காஞ்சி நகரில் நெடுநாளாய்த் தவம் செய்து திரும்பிய வேதியரே! நீர் எமக்குச் செல்வமளிக்கவேண்டும் என்றுரைத்தார்கள். அவர்களுடைய துராலோசனையையும் துஷ்டத்தன்மையையும் முன்னமே அறிந்துகொண்ட அவ்வேதியர் நான் இவ்வுலகச் செல்வத்தை இழந்து விட்டேன். இவ்விதம் என்னிடத்தில் நீங்கள் பொருள் யாசிப்பது பயனையளிக்குமா? என்று கூறுகையில் திடீரென்று சினங்கொண்ட அப்பாவிகள் தாங்கள் ஒரு செல்வனது வீட்டிலிருந்து சோரம் செய்து எடுத்துவந்த ஒரு பொன் மணியை அவரது வஸ்திரத்தில் வலுவில் முடிந்து அப்பொருளை அவரே சோரம் செய்தார் என்று உரைத்துக்கொண்டே அச்செல்வனுக்கறிவித்து அப்பொன் மணி அவ்வேதியரது வஸ்திரத்திலிருந்து நடுவழியில் விழக் கண்டோமென்றுரைத்து அவ்வேதியரையும் அவனுக்குக் காண்பித்துவிட்டனர்.

பொருளிழந்த செல்வனும் அப்பொழுது அவ்வேதியர் மீது எவ்விதமும் கூறமுடியாமல் அவ்வரலாற்றைக் காஞ்சி நகர் அதிபதிக்கு அறிவித்தான் அதையறிந்து அரசனும் உண்மையையறிய சக்தியற்றவனாய், சற்றுநேரம் ஈசனைத் தியானித்து வேதியர் கூறுவது உண்மையா? அச்செல்வனும் வனவாசிகளும் கூறுவது உண்மையா? உண்மை விளங்கவில்லையே. என்செய்வேன்? என்று சிந்தித்துப்

பிறகு அமைச்சருடன் ஆலோசனை செய்து காட்டில் வசிக்கும் அச்சோரர்களையும் அவ்வேதியரையும் சிறைச் சாலையில் வைத்து நீங்கள் ஏதேனும் ஒரு அற்புத வேலையை இச்சிறைச்சாலையில் இன்னும் ஒரு முகூர்த்த காலம் செல்வதற்குள் காண்பிப்பீராகில் அவ்வாறு அற்புதத்தைக் காண்பிப்பவரே குற்றமற்றவராவர். இதற்குப் பரமேசனே ஸாக்ஷி என்றுரைத்தான். கலியின் கொடுமையினாலும் துஷ்டர்களின் கலகப் பேச்சுக்களாலும் உண்மையை நிலை நிறுத்தச் சக்தியற்ற அவ்வரசன் இவ்விதமாய் உரைத்து ஒய்வடைகையில் காரணமின்றிப் பழியை சுமந்துகொண்ட அவ்வந்தணோத்தமர் சற்று மனக்கலக்கமுடையவராய் கை கூப்பி நின்று கண்களை மூடிக்கொண்டு தியானம் செய்து, ஓ லோகேச! என்னைக் காப்பாற்றுவது உமது கடமை அல்லவா? என்று கூறி ஈசனைத் தனது தெள்ளிய மனதில் நினைத்தார். பக்தர்களைக் காப்பதற்காகவே பூவுலகில் தோற்றிய பரஞ்சுடராகிய தியாகேசர் அத்தருணத்தில் அவ்வேதியர்மீது கருணைசெய்ய சங்கற்பம் கொண்டவராய் தனது அற்புத சக்தியினால் அங்குத் தோன்றித் தேவாமிருதத்துக்கொப்பாகிய ருசியுள்ள சிறந்ததொரு மாம்பழத்தை அவ்வேதியனது கையிலளித்து மாயையினால் மறைந்தார். அவ்வந்தணன் தனது கையில் சிறந்ததொரு மாம்பழம் விளங்கக் கண்டு இஃது என்னவென்று சற்று வியப்புடன் நின்றார். அதனால் மற்றொரு பழி வருமோ என்று பயந்தார். ஈச! சம்போ! தியாகேச! என்று நாமஸங்கீர்த்தனம் செய்து மெய்ச்சிலிர்ப்புற்றார்.

இவ்விதமாய் அவ்வந்தணர் நிற்கும் நிலையையறிந்த சிறைச்சாலைக் காவலாளிகள் அவ்விஷயத்தை அக்கணமே அரசனுக்கு அறிவித்தார்கள். அதைக்கேட்ட அரசன் ஓடிவந்து அவ்வந்தணரைச் சிறையிலிருந்து வெளிநீக்கி அவரது பாதத்தில் பணிந்து அஞ்ஞானத்தினால் செய்த தண்டனையை மன்னிக்கவேண்டும் என்று வணங்கி நின்று அவரது ஆசிபெற்ற பிறகு வனசர சோரர்களுக்குத்

தண்டனை விதித்து மகிழ்வெய்திய அரசன் அந்த அந்தண ருடன் புறப்பட்டுப் புண்டரீகபுரியையடைந்து அங்குக் கனகசபையில் விளங்கும் நடனமூர்த்தியைத் தரிசித்துப் பிறகு அத்திருவாரூரையடைந்து தியாகேசனையும் தரிசித்து மகிழ்வுடன் நீதியுடன் பூமண்டலத்தை ரக்ஷிக்கலானான்.

## 299. பக்தியளித்த லீலை.

தக்ஷிண கங்கை என உலகோரால் புகழப்பட்ட காவிரி யின் கரையில் முன்பு ஒரு சமயத்தில் காச்யப மஹரிஷி தவம் செய்யலானார். அஷ்டாங்க நியமம் தொடங்கிய அவ்வரியதவமானது முறைப்படி முடியுந் தருணத்தில் பர மேசன் அவரது எதிரில் தோன்றி அவர் விரும்பியவாறு சித்தஸமாதியையும், தியானமுறையையும் பரதத்து வத்தின் உட்பிரிவுகளையும் உபதேசித்துத் தமது இருப்பிட மடைந்தார். இவ்வாறு ஈசனருள் பெற்ற காச்யபர் திருவாரூரையடைந்து கமலையில் நீராடித் தியாகேசனைப் பணிந்து துதிசெய்து தீர்த்தக்ஷேத்திர ஸஞ்சாரம் செய்ய விருப்பமுடையவராய்த் தமது சிஷ்யகணத்துடன் அங் கிருந்து வடதிசை நோக்கிச் செல்லுகையில், அந்தக் காச்ய பர் போகும் வழியில் பஹுபர்வதம் புலப்படலாயிற்று. அம்மலையின் சார்பில் விளங்கும் ஆனந்த தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து எழுந்த மஹரிஷியானவர் அத்தீர்த்த க்ஷேத்திரத்துக்கு அதிபதியாகிய முருகக்கடவுளது ஸன்னி தானத்தை அடைந்து தேவஸேனாபதியாயும், வல்லி வல்லபனையும், தாரகாசுரனை அழித்தவராயும் தொண்டர் களைக் காப்பதற்காகப் பூவுலகில் அங்கங்குத் தோற்றும் மூர்த்தியாயும், கிரவுஞ்சமலையைக் குடைந்தவராயும் விளங் கும் அறுமுகனைப் பணிந்து துதிசெய்து நின்றார்.

காச்யப முனிவரைக் கண்ட முருகக்கடவுள் ஓ காச்யப முனிவரே! உமது வரவைக் கண்டவுடன் நான் நெடு

நாளாய் மனத்தில் வைத்திருந்த பெரியதொரு சந்தேகத்துக்கு முடிவு ஏற்படும் என்று நினைக்கிறேன். சகலலோக நாதனாகிய பரமேசனது அருளால் மண் பொன்னாகும். நெருப்புத் தண்ணீராக மாறும். மற்றுமுள்ள பற்பல அற்புத காரியங்களும் நிறைவேறும். இவைகளெல்லாம் ஈசனது திவ்ய சக்திக்கு யுக்தமேயாகும். ஆகிலும் மிகவும் பாபியாயும் எக்காலத்திலும் பக்தியை வேண்டாதவனாயும் துர்க்குணங்களுக்கு இருப்பிடமாயுமுள்ள ஒரு ஜீவனை ஈசன் எவ்வாறு காப்பாற்றுவார் என்னும் இவ்விஷயமாய் நீர் அறிந்திருப்பது ஏதேனுமுளதா? என்று வினவினார். அதைக்கேட்ட முனிவரும் அகிலாண்ட நாயகனாய் நிகரற்றவராய், பக்தப்ரியராய்ப், புண்ணியபுர பதியாய் விளங்கும் தியாகராஜனது திவ்ய லீலைகளையறிந்தவர்களுக்கு இவ்வித சந்தேகம் உண்டாகாதே என்று உரைக்கையில் முருகக் கடவுள் மெய்சிலிர்க்க ஆநந்தக் கண்ணீர் சொரிந்து உலகுக்கோர் தந்தையாயும் தனக்குத் தந்தையாயும் விளங்கும் தியாகராஜனை மனதில் ஸ்மரித்தார். அத்தருணத்தில் பக்தப்ரியராகிய தியாககற்பகம் அங்கு ஒரு வேடன்போல் தோன்றலானார். அப்பொழுது அம்மலையின் சார்பிலேயே நெடுநாளாய் ஜீவவதை செய்துவந்தவனாயும் பாபியாயும் ஈசுவர தியானமற்றவனாயும் லோபியாயும் கர்மப்ரஷ்டனாயுமுள்ள ஒரு வேதியன் அவ்வேடனது எதிரில் தோன்றி ஓ வேடனே! எனது எதிரில் தோற்றுபவர் யாரேனும் அவர்களின் மனதைக் கலைக்கும் வல்லமை பெற்றவன் நான். இதுவே எனக்கு இயல்பு. நீ யார்? உனது இயற்கைக் குணமென்ன? இதற்கு நீ தகுந்த மறுமொழியளிக்காவிடில் நீ ஜீவனுடன் திரும்புவது அரிதாகும் என்று உரைத்தான். பரமகாருணிகனாகிய பரமேசன் அவ்வித வேதியனது உரையைக் கேட்டுப் புன் சிரிப்புடன் ஜாதிப் பிராமணனே! கேளாய்! உனது இயற்கைக் குணம் இவ்வாறு இருக்கலாம். எனது குணமோவெனில் யார் எப்பொருளைத் தனக்கு வேண்டாமென்று உரைக்கிறார்களோ,

நான் அவர்களுக்கே அப்பொருளை அளிக்க வல்லவன் என்று உரைக்கையில் அவ்வித வேடன் அவ்வாறு கூறு வதைக்கேட்ட காசியபரும் முருகனும் தமது திவ்ய த்ருஷ்டி யினால் அவ்வேடன் தியாகராஜனாகிய பரம்பொருளே. தமது ஸந்தேகத்தை நீக்குவதற்காக இவ்வாறு இங்குத் தோன்றினார் என்று நினைத்து கூப்பிய கைகளை யுடையவர் களாய் வேடனாய்த் தோற்றும் அவ்வீசனது திருமேனியைத் தர்சித்துக்கொண்டே நின்றார்கள்.

பதிதனாயும், பாபியாயுமுள்ள அவ்வேதியன் மீது தனது அகாரண கருணையை அச்சமயத்தில் செலுத்திய தியாகேசர் முருகருக்கும், ரிஷிக்கும் உண்டாகிய சந்தே கத்தை நீக்கக் கருதியவராய் அவ்வேதியன் முன் சற்று நின்று தனது திவ்ய சக்தியினால் அவனது மனதை மாற்றி விட்டார். அவ்வாறு ஈச சக்தியினால் மாறிய மனமுடைய அப் பிராமணன் ஐயோ ! நான் மகாபாபியாய் விட்டேனே எனது வாழ்நாட்கள் யாவும் பாவத்தொழிலிலேயே சென்று விட்டதே. இன்றல்லவா இப் புருஷனுடைய திவ்ய சக்தி யினால் நான் சிவ தத்துவச் சிறப்பை அறிந்தேன். வேதியர் குலத்திலுதித்த எனது வாழ்நாட்கள் யாவும் வேத மோதுதலின்றி, ஜபமுறையின்றி வீணாகக் கழிந்தனவே இன்றே நான் வேதப் பொருளைக் கண்டு கொண்டே னென்று மகிழ்வுடன் அவ்வேடனைக் குருவென்றே ... நார் ...................... (முடியவில்லை)

## 300. மாக்காலால் படியளந்த லீலை.

மானேந்துகையினன் தானே யருள்புரிவான்
வானோ ரிறைஞ்சும்பதம் நானும் அறியவல்லேன்.

முன்பு ஒருசமயத்தில் வாக்கால் வர்ணிக்கமுடியாத வர்ஷாகாலத் துன்பமானது சோழ தேசத்தில் நேரிட்ட பொழுது மேகவாகனனாகிய இந்திரன் கடுஞ்சினம்

கொண்டவன்போல் மேகங்களை ஏவினன். அவ்வித ஸப்த மேகங்களும் ஒன்றுசேர்ந்து ஸம்வர்த்த மேகத்தை முன்னிட்டுக்கொண்டும் கோபாக்கினி போன்ற மின்னலை வெளியில் வீசிக்கொண்டும் மழை பொழிய ஆரம்பித்தன. மழையினால் அந்நாட்டின் எண்டிசைகளிலும் ப்ரளயகாலம் போன்ற வெள்ளப் பெருக்குப் புலப்பட்டது. மானவர்களும் தேனுக்களும் மான்கள் முதலிய ஜீவராசிகளும் குளிராலும் மழையினாலும் காற்றினாலும் பசியினாலும் வாஸஸ்தலமின்மையாலும் பலவிதத் துன்பங்களை அனுபவிக்கையில் அவர்களெல்லோரும் தியாகேசனையே சரணமடைந்தனர். சோழனும், ஞானியரும் ஈசனை வேண்டலாயினர்.

இடைவிடாமல் மாரி பொழிகையில் ஸகல ஜீவராசிகளும் வாடுகையில் இஃது பிரளயகாலமா என்றுரைத்துக் கொண்டே நடுங்குகையில் நிகரற்ற தெய்வமென விளங்கும் தியாகராஜன் அருளால் அப்பொழுது திசைகளில் பெருகிய வெள்ளமும் கரைபுரண்ட காவிரி வெள்ளமும், நகரங்களையும், கிராமங்களையும் மூழ்கச்செய்த வெள்ளமும் தணிந்தது. வெள்ளம் ஏற்பட்டபடியால் சோழ நாட்டில் எவ்வித உணவுப்பொருளுமின்றி ஜீவராசிகள் வாட்டத்தை அடையலாயின. அத்தருணத்தில் தயாநிதியாகிய தியாகேசன் ஒருநாள் மாலைநேரத்தில் ஓர் ஆகாயவாணியை ஏவி உரைத்ததாவது: 'கேளீர் சோழன் முதலான தொண்டர்களே! இந்நாட்டில் இவ்வாண்டில் ஏற்பட்ட துன்பத்தை யானறிவேன். ஸகல ஜீவராசிகளுக்கும் உணவுப்பொருள் யாவும் குன்றியிருக்கும் இத்தருணத்தில் நீங்கள் யாவரும் தியாகராஜனது ஸன்னிதானத்தை அடைந்து அங்குள்ள திவ்யபுருஷன் அளக்கப்போகும் தானியப்படியைப்பெற்றுக்கொண்டு சிலகாலம்வாழ்வீர்கள் என்று இவ்வாறு தோற்றிய அசரீரியைக் கேட்டவர் யாவரும் முகமலர்ச்சியுடன் அரசன் மூலமாய் அந்நாடெங்கும் பறையறிவித்து மறுநாட் காலையில்

உண்வுப்பொருள் விரும்பிய யாவரும் ஈசனது ஸன்னி தானத்தை அனுகும்படி செய்தார்கள்.

அவ்வண்ணமே கணக்கற்ற ஜனங்கள் தமது சென்னி யில் கணக்கற்ற கூடைகளையும் கட்டுப் போர்வைகளையும் தாங்கிக்கொண்டு ஈசுவரநாம கீர்த்தனையுடன் புண்ணிய புரியையடைந்தார்கள். அவ்வர்ஷாகாலத்தில் நாடெங்கும் சூழ்ந்த வெள்ளப்பெருக்கமானது அத்திருவாரூர் நகரை மாத்திரம் அணையினல் தடுக்கப்பட்டதுபோல் ஒதுக்கி இருக்கக்கண்டும் அதற்குக் காரணம் தியாகராஜ கற்பகத் தின் சக்தியே என்றறிந்துகொண்டும் கமலையில் நீராடிக் காலைக் கடமைகளை நிறைவேற்றிவிட்டுத் தாம் சுமந்துவந்த கூடைகளைக் கையிலேந்திக்கொண்டு தியாகேசன் ஸன்னி தானத்தில் பணிந்து துதிசெய்து நிற்கையில் ஆகாயவாணி உரைத்ததுபோலவே தியாகராஜன் ஒரு திவ்யபுருஷன்போல் தோன்றி அவ்வாலயத்தின் அக்னிபாகத்தில் சுவர்ணக் குவியலென விளங்கும் தானியக்குவியலிலுள்ளளந்து ஜனங் களுக்குப் படியளக்கலானுர். அத்திவ்ய புருஷனது தோற்றத்தையும் அங்கு விளங்கும் தானிய ராசியின் சிறப்பையும் கண்டு வியப்படைந்த ஜனங்கள் தமக்கு அப் புருஷன் அளந்து அளித்த தானியங்களைக் கூடைகளிலும் கட்டுப்போர்வைகளிலும் அடக்கிக்கொண்டு தியாகராஜனை புகழ்ந்துகொண்டே தமதிருப்பிடம் அடைந்தார்கள். அவர்கள் அவ்வாறு திரும்புகையில் படியளந்த திவ்ய புருஷன் பரமேசனுகவே இருக்கவேண்டுமென்றுரைத்தனர் சிலர். சிலர் துன்பம் துடைக்கும் இவன் தியாகராஜனே இவ்வாலயத்தில் இந்நாட்டவரெல்லோருக்கும் அளக்கக் கூடிய தானிய ராசிகள் ஈசனருளன்றி விளங்காவென்றும் உரைத்துக்கொண்டே தமதிருப்பிடமடைந்தார்கள்.

## 301. நந்தியினுல் மகிமை காட்டிய லீலை

சோழநாட்டவர் எல்லோரும் இவ்விதமாய் அந்தத் திவ்ய புருஷன் அளந்து அளித்த தானிய ராசிகளைச் சென்னியில் சுமந்துகொண்டு தமதிருப்பிடமடைந்து தியாகேசத்தியானத்துடன் அன்றிரவைக்கழித்து மறுநாட் காலையில் கண்விழித்தெழுந்திருக்கையில் தாங்கள் சென்னியில் சுமந்து வந்த தானிய ராசிகள் யாவும் பதின்பங்கு அதிகமாக அப்பொழுது தோற்றக்கண்டு ஆலயத்தில் அவ்வாறு தமக்கு படியளந்த திவ்யபுருஷன் தியாகராஜனுகவே இருக்கவேண்டும் என்றும் புகழ்ந்து பேசத் தொடங்கினுர்கள். ஜனங்கள் தமது சென்னியில் தூக்கிச் சென்ற தானிய ராசிகள் யாவும் மறுதினத்தில் ஈசனருளால் பதின்பங்கு அதிகமாக மாறின என்னும் இவ்வற்புதத்தையும் அவ்வாறு அதி வர்ஷக்ஷாம காலத்தில் ப்ரகிருதியின் மீது கருணை செய்த தியாகேசனது நற்குணங்களையும் உலகோர் உரைக்க அறிந்துகொண்ட சோழபூபாலனுகிய ப்ருதுஸேனன் அதுமுதல் தியாகராஜமூர்த்தியின் பாத மலரில் ஒப்பற்ற பக்தியை வைக்கலானுன்.

சோழமண்டல வாசிகளுக்குத் தயாசாகரனுகிய தியாகேசன் அத் துன்பகாலத்தில் படியளந்து நன்மை அளித்தமையைக் கேட்டது முதல் அச்சோழனுக்குத் தியாகேசனிடத்தில் பக்தி வளர்ந்து வரவே அம்மூர்த்திக்கு வடத் திருக்கோபுரம் நிர்மாணம் செய்ய ஆரம்பித்தான். அவ்வரசனது கருத்துப்போலவே அமைச்சர் முதலானவர்கள் யாவரும் தமக்குச் சிறந்த நன்மையானது ஈசனது அருளால் உண்டாகவேண்டும் என்று நினைத்து நற் சுப முகூர்த்தத்தில் கோபுர நிர்மாணத் திருப்பணியை செய்ய ஆரம்பித்தார்கள். வேலையாட்கள் ஒவ்வொருவரும் ஈசனது பக்தியினுல் கவரப்பட்ட மனமுடையவர்களாய்க்கொண்டு மிகவும் அன்புடன் செங்கல் சுமப்பவரும், சுண்ணும்பு கடைவாருமாய் அக்கோபுர நிர்மாண வேலையை நிறைவேற்றிவரலாயினர்.

இம்மாதிரியாய் நெடுநாளாய் அக்கோபுரங்கட்டும் வேலையில் அமர்ந்து அல்லும்பகலும் வேலைசெய்து அதனால் சரீரமெலிவையடைந்த அத்தொழிலாளிகளில் சிலர் ஒரு நாள் மிகவும் பலக்குறைவையடைந்தவர்களாய் ஒபரமேச! தியாகேச! உமது அருளால் ஆகாயத்தை அளாவியதாய் இக்கோபுரத்தைக் கட்டி நிறைவேற்றி வருகிறோமே; இவ்வளவு காலம் சென்றபிறகும் இக்கோபுரத்தின் சிகரவேலை முடிவடைய வில்லையே; இதற்குள் எங்களது சரீரம் மிகவும் தளர்ச்சியடைந்து வருகின்றனவே; என்செய்வோம் என்று மனச்சோர்வுடன் ஈசனை மனதில் ஸ்மரித்து நின்றனர். அந்நாள் வரையில் தமது சரீர சுகத்தைச் சற்றும் கருதாமல் கோபுர நிர்மாண வேலையில் அமர்ந்து வேலைக்காரர்கள் இவ்வாறு தன்னை நினைத்து வாடிப் புலம்புவதை யறிந்த தியாகேசர் அன்றிரவில் அரசனது கனவில் தோன்றி அவ்வாறு கோபுரவேலை செய்து வாடிய தனது பக்தர்களாகிய அவ்வேலைக்காரரின் வேண்டுதலுக்குத்தான் உளமகிழ்ச்சி அடைந்ததாயும், அவ்வடக்குக் கோபுரமானது சிகர படலத்தையடையாமல் அவ்வாறு விளங்குவதே தனக்குச் சம்மதமென்றும், தனது எதிரில் நின்று விளங்கும் நந்தி தேவர் அன்றிரவில் எவ்வளவுவரையில் ஆகாயத்தில் உயர்ந்து விளங்குகிறரோ அவ்வளவையுடையதாகவே அக்கோபுரம் உயர்ந்து விளங்குக என்றும் உரைத்து மறைந்தார்.

அன்றிரவின் நடுவிலேயே கண் விழிப்பை அடைந்த சோழன் தியாகேசன் தனது கனவில் தோன்றியுரைத்த விஷயத்தை மந்திரிமார்களிடம் மொழிந்தும், அப்பரமேசன் தொண்டர்களிடத்தில் வைத்திருக்கும் அன்பைப்பற்றிப் புகழ்ந்தும் அன்றிரவைக் கழித்து மறுநாட்காலையில் கதிரவன் உதிப்பதற்கு முன்னமே ஈசனது திருக்கோயிலுட் புகுந்து அக்கோபுரத்தின் அருகில் நெருங்குகையில் ஈசனது எதிரில் விளங்கும் நந்தியானது அக்கோபுரத்தின் மேல்நிலையிலுள்ள பதுமபாகத்திற்குச் சமமாய் அவ்வளவு உன்னத

மாய் உயர்ந்திருக்கக் கண்டான். சோழன் அக்கோபுரத்தை முற்றிலும் முடிக்க சங்கற்பம்கொள்ளாதவனுய் ஈசன் கனவில் கூறியதுபோலவே இஃதே தியாகராஜனது விருப்பம் என்று நினைத்து அவ்வேலையாட்கள் அனைவரையும் அன்புடன் அழைத்து முறைப்படி வெகுமதிகளை அளித்து விடைகொடுத்தனுப்பினுன்.



## 302. மகனுய்த் தோன்றிய லீலை

கலியாண நகரில் வேதகுடி என்னும் வேதியர் ஒருவர் இருந்தார். அவர் ஒருநாள் மலையமலையிலிருந்து திரும்பி வரும் ச்யவன மஹரிஷியைக் கண்டு அவர்களை வணங்கிப் புண்ணியசீலர்களே! தவத்தில் சிறந்த மஹரிஷிகளே! உங்களது தர்சனத்தைப் பெற்றபிறகு இனி எனக்குக் குறைவு யாது? ஆகிலும் புத்திரஹீனனுக்கு நற்கதி இல்லையென்று வேதார்த்தங்களை அறிந்தவர்கள் கூறுகிருர்களே. புத்திரஹீனனுகிய எனது கிருஹத்துக்கு அதிதியாய் வருவதற்கு நீங்களும் முன்வரமாட்டீர்களே? பூர்வஜன்ம பாவங்களைத் திரட்டி வாரியணிந்திருக்கும் எனது மனக்குறை நீங்குமாறு ஏதேனும் ஒரு உபாயத்தை கூறி என்னை காத்தளிப்பது உமது கடமை எனக்கூறி அவர்களது பாத மலர்களை மறுபடியும் வணங்கலானுர்.

சோர்ந்த மனதுடன் அவ்வேதியர் இவ்வாறு புலம்புவதைக் கண்ட ச்யவன முனிவர் தனது ப்ராணுயாமத் திருஷ்டி ஞானத்திஞல் தத்துவத்தைக் கண்டு ஆலோசனை செய்தபிறகு அம்மறையவரை அன்புடன் அருகில் அழைத்து ஓ வேதியரே! நீர் ஈசனைக் குறித்துப் பன்னிரு வருஷம் வரையில் தாரணையுடன் தவம் புரிவீராகில் பரமேசனே உமக்குப் புத்திரனுகத் தோற்றுவார் என்று உரைத்தார். ச்யவன மஹரிஷியின் உபதேசப்படியே வேதகுடி என்னும் அவ்வேதியர் சிவபக்தியை உறுதுணை

யாய்ப் பற்றிப்புஜங்க வனத்தின் ஈசானபாகத்தில் தவம் செய்யத் தொடங்கலானார். அத்தருணத்தில் அவரது தர்ம பத்தினியும் அவருக்குப் பணிவிடை செய்துகொண்டு அவரருகிலேயே நிலைபெற்றுச் சிவத்தியானத்தில் அமர்ந்து இருக்கலானாள். மூக்கின் நுனியில் கண்ணோக்கத்தைச் செலுத்தியும் தியாகேசனது பாதமலரை மனதில் நினைத்தும் இரு கைகளை ஆகாயத்தில் நீட்டியும் வாயு பக்ஷகராயும் சில வருஷ காலம் நிலைபெற்றிருந்து பிறகு ச்யவனருபதேச முறைப்படி தாரணையிலமர்ந்து யோகமுறையையும் அநுஷ்டித்து அப்பன்னிரு வருஷ காலங்களையும் இடரின்றி கழித்துவந்தார்.

வேதகுடி என்னும் அவ்வேதியரது தவ நிலைமையானது இவ்விதமாய் எவ்வித இடருமின்றிச் சிறப்புடன் முடியும் தருணத்தில் அவரது தூய மனதையும் தவச் சிறப்பையும் கண்டு களித்த பரமேசன் அம்பிகா சமேதராய் அவரது முன் தோன்றி ஓ மறையவரே! உமது தவச் சிறப்பைக் கண்டு நான் களிப்படைந்தேன். உமது விருப்பம்போல் நான் உமக்குப் புத்திரனாகப் பிறந்து உமது ஜன்மம் முடியும் வரையில் நான் உமது வீட்டில் அருமைப் புத்திரனாகவே நிலைபெற்றுவருகிறேன் என்னும் இவ்விஷயத்தை நீர் பிறருடன் எப்பொழுதுமுரைக்கக்கூடாது. இவ்விஷயத்தை ஞானியர் அறிந்தால் பரவாயில்லை என்று உரைத்து மறைந்தார். அவரது மனைவி ஈசனருளால் கர்ப்பத்தைத் தரித்தாள். வேதகுடியானவர் மனக்களிப்புடன் கலியாண நகரில் உறையும் தருணத்தில் ஸீமந்த காரியங்கள் நிறைவேற்றப்பட்டன. பிறகு நல்ல சுப முகூர்த்தத்தில் ஒரு புத்திரனைப் பெற்றாள். அப்புத்திரன் பரமேசனது அம்சமாய் உதித்தபடியால் அக்குழந்தையின் ஒளியையும் சிறப்பையும் கண்டு மகிழ்ந்த தாயும் தந்தையும் தமக்குக் குமாரனாய்த் தோற்றித் தமது கிருஹத்தில் வளர்ந்து வருபவர் பரம்பொருளே என்று நினைத்து உளமகிழ்வுடன் வாழும் நாளில் ஒருநாள் அவர் யாகம் செய்ய விருப்பங் கொண்டவராய் ... ... ...

(முடியவில்லை)

## 303. நெருப்பினால் தண்ணீரை வற்றச்செய்த லீலை
## 304. ரக்ஷாபந்தனமளித்த லீலை

சாகாபுரியில் சதுரன் என்னும் தனிகன் ஒருவன் இருந்தான். அவன் செல்வத்தினால் குபேரனுக்கு நிகரானவனாயிருந்தபோதிலும், சாஸ்திரங்களிலும் சிவ தத்துவச் சிறப்புக்களிலும் நம்பிக்கையையடையவேயில்லை. ஆகிலும் அவன் பாலப் பிராயம் தொடங்கித் தர்மசீலர்களின் அருகில் வசித்துவந்தமையால் சற்பாத்திரத்தில் தானம் செய்வதிலும் நற்கீர்த்தியையடையவேண்டுமென்பதிலும் அளவற்ற ஆவலையடைந்துவரலானான்.

அப்படிப்பட்ட தன்மைவாய்ந்த அ; சமீபத்தில் விசுத்தசர்மன் என்னும் வேதியர் ஒருவர் துலா மாஸ ஸங்கிரம புண்ணியகாலத்தில் தானத்தை விரும்பியவராய் வந்து அணுகினார். அவ்வேதியர் பரமேசுவர பக்தர்களுக்கு அன்னமளிப்பதற்காகவும் மஹேசலிங்க மூர்த்திகளுக்கு க்ஷீராபிஷேகம் செய்துவைப்பதற்காகவும் புண்ணியசீலர்களிடம் சென்று நெடுநாளாய்த் திரவியம் யாசித்து வருகிறவராதலால் அவ்விதக் கொள்கையுடன் சதுரனிடம் வந்தார். வேதியர்குல திலகராயும் சிறந்த பக்தராயும் விளங்கும் அவ்வந்தணரைக்கண்டு மனக்களிப்புடன் அத்தனிகன் அவருக்குக்காலோசித மரியாதைகளைச் செய்து வணங்கி அவரது ஆசிபெற்றபிறகு அவர் தர்மப் பொருளை விரும்பியவராய்த் தன்னிடம் வந்ததாய் அவரது மொழியிலிருந்து அறிந்துகொண்டான். அவ்வண்ணமிருந்தபோதிலும் அத்தனிகன் தனது குதர்க்க புத்தியினால் ஏவப்பட்டவனாய் ஓ அந்தணரே! மஹேசலிங்க மூர்த்திகளுக்கு நாம் க்ஷீராபிஷேகம் செய்தால் நமக்கு எவ்வித பயன் வாய்க்கும்? அன்னமளிப்பதின் பயன் எவ்வாறு? ஸகல பாபங்களுக்கும் இருப்பிடமாகிய இக்கலியுகத்தின் ஆரம்பத்தில் தானம் செய்வதினாலுண்டாகும் பயன்கள் யாவும் பலிக்கச் சக்தியிழந்தவைகளே. இப்படியிருக்கையில் உமது தர்ம

காரியத்திற்கு நான் பொருள் அளிப்பேனாகில் எனக்கு நன்மை கிடைப்பதரிதே; அதர்மங்களுக்கு ஆதாரகாலமாகிய இந்த யுகத்தில் பரமேச மூர்த்திகளும் மகிமை குறைந்து ஒளிந்தனரே. மற்ற யுகங்களிலுள்ள தானச் சிறப்பை இக்காலத்தில் யாரும் அடையமுடியாதே. ஆதலால் இக்கலியுகத்திலும் மஹேச மூர்த்திகளுக்கும் பரமேசுவர பக்தர்களுக்கும் அற்புத சக்தி விளங்கும் என்பதை என் மனம் களிக்குமாறு நீர் காண்பிப்பீராகில் நீர் வேண்டும் பொருளைக்காட்டிலும் பதின்மடங்கு அதிக திரவியத்தை நான் அன்புடன் அளிப்பேன் என்று உரைத்தான்.

சதுரன் என்னும் தனபாலன் மொழிந்ததைக் கேட்ட பிராம்மணோத்தமராகிய விசுத்த சர்மன் சகல வுலகங்களுக்கும் ஆதிமூலப் பொருளாகிய தியாகராஜனது திவ்ய லீலைகளினாலேயே இத் தனிகனது மனம் களிக்கவேண்டுவதேயன்றி மற்றிலவென்று நிர்ணயம் செய்து கொண்டு அச்சாகா நகரிலிருந்து விரைவாய்ப் புறப்பட்டுப் புண்ணிய பதி என்னும் திருவாரூரையடைந்து தியாகேசனது ஸன்னிதானத்தில் பணிந்து ஓ பரம் பொருளே! நான் பரமேச மூர்த்திகளுக்கு க்ஷீராபிஷேகம் செய்து வைக்கக்கருதிய விரதத்தை நிறைவேற்றி வைப்பது உமது கடமையாகும். ஆதலால் இக்காரியங்களுக்கு நான் விரும்பும் தனத்தைக் காட்டிலும் பதின்மடங்கு அதிகமாய்ப் பொருளளிக்க அச் செல்வனது மனமுருகுமாறு உமது திவ்ய லீலையைக் காண்பிப்பது உமது கடமையாகும். தர்மச் சிறப்பைக் குலைத்து வருமிக்காலத்தில் உமது திவ்யசக்தியானது வெளியாகாவிடில் அச்செல்வனுக்கு நிகராகிய பலருடைய மனமானது தர்மசிந்தையற்றதாய்ப் போய்விடும். ஆகையால் ஓ பரம் பொருளே! எனது எண்ணம் நிறைவேறும் வண்ணம் அருள்புரிவாய் என்று இவ்விதமாய் அவ்வேதியர் சுத்த மனதினால் செய்யும் விண்ணப்பத்தைக் கேட்டருளியு

தியாகராஜன் ஆகாயவாணியினால் அவ்வேதியரைத் தேற்றி அவ்வண்ணமாய்ச் செய்வதாய் சங்கற்பம் செய்து கொண்டார்.

அவ்வேதியர் வேண்டியவாறே அசரீரி உண்டானமையால் உலகரக்ஷகனாகிய இத்தியாகராஜனே நமது விருப்பத்தை நிறைவேற்றி வைக்க வல்லவர் என்று உணர்ந்து கொண்டு மதித் தெளிவுடன் மறுபடியும் விரைவாய்ச்சாகா நகருக்குத் திரும்பி அச்செல்வனது மாளிகை வாயிலையடையலானார். அத்தருணத்தில் தியாகராஜனும் அவ்வேதியருக்குத்தான் வாக்கு அளித்ததுபோலவே அந்நகரில் இருக்கும் அத்தனிகனது எதிரில் தோன்றித் தனது அற்புத சக்தியையும், தான் பக்தருக்குச் சுவாதீனமாய் நடந்து வருவதையும் காண்பிக்கக்கருதியவராய் சங்கற்பம் பூண்டு அங்கு அவ்வாறே ஒரு சிவயோகிபோல் தோற்றலானார். அதையறிந்த அவ் வேதியர் அப்பொழுது தனக்குத் தைரியமளித்த பரமேசனாகவே யிருக்கலாமென்று, நினைத்துக் கொண்டு அப்பொழுதே அத்தனிகனைக் கூப்பிட்டு ஓ புண்ணியசீலனே இந்தச் சிவயோகியின் சிறப்பை யான் அறிவேன். உன் மனம் களிக்குமாறு இவர்மூலமாய் எவ்வாறேனும் பரீக்ஷை செய்து கொள்வாய் என்றுரைத்தார். அதைக்கேட்ட சதுரன் விநயத்துடன் அச் சிவயோகியின் அருகையடைந்து பணிந்து பணிந்து ஓ முனிவரே ! அதர்மங்களுக்கும், பாவங்களுக்கும் உறைவிடமாகிய இக் கலியுகத்தில் சிவயோகிகளுக்கும், சிவலிங்கமூர்த்திகளுக்கும் சிறப்புளதோ ? இக்காலத்தில் செய்யும் தர்மங்களுக்கும் நற்காரியங்களுக்கும் பயன் யாது ? இதை எனக்கு விளங்க மொழிவீரென்றுரைத்தான். அம் மொழியைக் கேட்ட பரமேசனாகிய யோகியானவர் வாயினால் மறுமொழி கூறாமல் அவனது கண்கள் களிக்குமாறு அவனது எதிரில் ஒரு ஜலகுண்டத்தை ஏற்படுத்தி அதில் சுத்தஜலத்தை ஊற்றித் தேக்கிய பிறகு தனது கரஸ்பர்சத்தினால் அத்தண்ணீரின் மீது அக்னியை உண்டாக்கி அவ்வக்னியானது

அந்த ஜலத்தைக் கொஞ்சம் கொஞ்சமாய் உண்டு வற்றும்படி செய்தார். இவ்வற்புதங்களை எல்லாம் அச் சதுரனும், அவ் வந்தணரும் அங்கு வந்து கூடிய அந் நகரவாஸிகளும் நோக்கிக்கொண்டிருக்கையில் அந்த யோகீசன் ஒருநூல் வடத்தை எடுத்துத்தனது திருக்கையினால் தடவி துடைத்து அச்சதுரனது கழுத்தில் மாலைபோல் அளித்தார். அவனும் அதை வணக்கத்துடன் பெற்றுக்கொண்டு அந்த யோகியைப் பார்த்து வியப்படைந்து துதிமொழி கூற முயலுகையில் அந்த யோகி திடீரென்று மறையலானார்.

அத்தருணத்திலேயே ஒரு அசரீரியும் அங்கு உண்டாயிற்று. கேளீர் பக்தர்களே! இங்கு யோகிபோல் தோன்றியவர் புண்ணியபுர நாதனாகிய தியாகராஜனேயன்றி மற்றெவருமன்று. பக்தரது கருத்துப்போலவே நடந்துவருமிவ்வீசன் இவ்வந்தணோத்தமரது வேண்டுகோளின்படியே இங்கு ஒரு சிவயோகிபோல் தோன்றி அக்னியினால் இக்குண்டத்திலுள்ள ஜலத்தை வற்றச் செய்து இச்சதுரனது மனம் களிக்குமாறு தன் சக்தியை வெளியிட்டார். இச்சதுரனுக்குத் தனது பாதபக்தியையளித்தார். இத்தனிகனுக்கு இன்னும் சில வருடங்கள் சென்றபிறகு நேரிடக்கூடிய துன்பங்களை விலக்குவதற்காக ரக்ஷாபந்தன மாலையையுமளித்தார். ஆதலால் எக்காலத்திலும் பரமேசனது மகிமையும் தானத்தின் சிறப்பும், நற்காரியங்களின் பயனும் குன்றாது. சிவபக்தர் மஹிமையும், சிவலிங்கமூர்த்தியின் சக்தியும் எக்காலத்திலும் மழுங்காது. இப்பரமேசனது தர்சனத்தைப்பெற்ற இந்நாள்முதல் கலியின் மோஹத்தையடையாமல் விளங்குவீர்கள். தியாகராஜ பக்தியினால் உயர்பதவியைப் பெறுவீர்கள் என்று இவ்விதமாய் ஆகாயவாணியைக் கேட்டவர் அனைவரும் பரமானந்தமடைந்து அத்தனிகனையும், சுத்தசர்மனையும் முன்வைத்துக்கொண்டு திருவாரூரையடைந்து அங்கு தியாகேசனைக்கண்டு துதிசெய்தனர். அத்தனிகனும்

தனது அளவற்ற செல்வத்தை அவ்வந்தணர் மூலமாய் க்ஷீராபிஷேகச் சிறப்புக்கும், அன்னதானச் சிறப்புக்குமாக வகுத்து அவ்வாறே அச்சிறப்புக்களை நடத்திவைத்துத் தியாகராஜனது அற்புத லீலைகளைக் கானம் செய்து கொண்டே ஈசனளித்த ரக்ஷாபந்தன மாலையினால் வருமிடர்களை நீக்கி நன்மையுடன் விளங்கலானான்.

## 305. நாவிதனை வஞ்சித்த லீலை

திருவாரூர் நகரில் புதியனென்னும் நாவிதன் ஒருவன் இருந்தான். அவன் ஜாதியில் அம்பட்டனாயிருந்த போதிலும் அநேக நற்குணங்கள் நிரம்பப்பெற்றவனாய், சிவபக்தனாய் அந்தணர் முதலிய நான்கு வர்ணத்தாரிடத்திலும் மிகுந்த பக்தியுடன் இருந்தான். புண்ணிய காலங்களிலும் திருவிழாக்காலங்களிலும் வந்து கூடும் அன்பர்களைக்கண்டு பணிந்து இந்நகரில் விளங்கும் தியாகராஜனது திவ்ய தரிசனத்தைப் பெற்று மகிழ்ந்து துதிசெய்து மேன்மையடைந்துவரும் இப்புண்ணியசீலர்கள் என்ன பாக்கியம் செய்தார்களோ சாதியினாலும் புத்தியினாலும் தொழிலாலும் ஈனத்தன்மையடைந்த நான் தியாககற்பகத்தின் அருளை எவ்வாறு பெறுவேன்? நான் உய்யும் வகையை யார் உபதேசிப்பார்? என்று இவ்விதமாய் அந்நாவிதன் சிற்சில ஸமயங்களில் மனமுருக்கத்தையடையலானான்.

புதியன் என்னும் அந்நாவிதன் இவ்விதமாய் மனத்தில் சிந்தனைசெய்துகொண்டு நான்கு வர்ணத்தாரின் க்ஷெவரவேலையில் அமர்ந்தவனாய்க் காலம் கழிக்கலானான். அவன் நாடோறும் விடியற்காலையில் ஈசுவரத்யானத்துடன் படுக்கையைவிட்டெழுந்து கமலையில் நீராடி வீதிவிடங்க தேவனது பொற்கோயிலையும், கமலநாயகியின் பொற்கோயிலையும் வலம் வந்து பணிந்து பரமேச! பாவியேனுகிய

என்பால் அருள்புரிவது எந்நாளோ? என்று சிந்தனை செய்துகொண்டே தன் தொழிலில் அமர்வான். வேடர்கள் புறுக்களை வதைப்பதும் செம்படவர்கள் மீன்களைப் பற்று வதும், வைத்தியர் நோயாளிகளுக்குத் தக்கவாறு மருந்து அளிப்பதும் சாஸ்திரம் உரைத்த பொருள் என்று பெரியோர்கள் கூறுவதை அன்புடன் கேட்டிருந்த அவ் வம்பஷ்டன் தியாகராஜ பக்தியினால் தூயமனதையடைந்து பெரியோர்களின் பாதங்களையே தன் சென்னிக்கணியாக நினைத்துவருகையில் அவனது மனத் தூய்மையைப் பரீக்ஷை செய்து அவனுக்கு நன்மையளிக்க வேண்டுமென்று கருதிய தியாகேசன் ஒருநாள் காலை நேரத்தில் கிழவேதியர்போல் உருவம் எடுத்துக்கொண்டு கையிலேந்திய கோலுடன் தளர்நடையுடன் மெதுவாக நடந்துசென்று அவன் அருகில் வந்து ஓ அம்பஷ்டனே! நான் இதுவரையில் தவவேதிகை யில் அமர்ந்து இன்று தியானமுறையை நிறைவேற்றிவிட்டு வரலானேன். எனது சரீரத்திலிருக்கும் ரோமராசியை நீக்குவாய் இதற்கு நீ எவ்வித வெகுமதி கேட்பாயாகிலும் அதை நான் அளிப்பேன் என்றுரைத்தார்.

இவ்விதமாய் அக்கிழவேதியர் உரைத்ததற்கு இணக் கத்தையடைந்த அம்பஷ்டன் முதலில் அவரது பாதமலரை வணங்கிப் பிறகு அவரை எதிரிலுள்ள ஓர் உன்னத மேடை யில் மெதுவாய் வீற்றிருக்கச்செய்து தனது கூர்மையான கத்தியினால் அவரது ரோமங்களை வெட்ட முயலுகையில் அவர் கத்தியின் கூர்மையினால் இங்கு எனக்குத் துன்பம் ஏற்படுகிறதே; இந்நரம்பின் பலம் குன்றுகிறதே; புண் களின் துன்பம் வளர்கிறதே என் செய்வேன் என்று கூக்குரலிடலானார். அக்குரலைக் கேட்டு அவன் ஐயா பெரியவரே! சற்றுச் சகித்துக்கொள்ளுங்கள். நான் கத்தியைப்பாய்த்து உரோமங்களை வெட்டுவதற்கு முன்னமே உங்களுக்கு இவ்வண்ணம் நோய் உண்டாகுமே யாகில் நான் என்செய்வேன்? தியாகேச! இப்பிராமண ரிடத்தில் மிகுந்த பக்திவைத்த நான் தொழிலைச் செய்ய

முயலுகையில் இவர் இவ்வண்ணம் பிணியையடைகிறாரே, நான் மறுமைக்கு நன்மையை வேண்டி அந்தணரிடத்திலும், சிவயோகிகளிடத்திலும் பக்திசெய்து வருவது உண்மையாகில் இவரது பிணி தணியவேண்டும். ஓ புண்ணியபுரநாத! நான் உமது பாதபக்தியையே நம்பியது உண்மையாகில் இவ்வேதியரது மனம் வாடாமல் இருக்கவேண்டும் என்று வேண்டிக்கொண்டு மறுபடியும் தனது கத்தியை அவரது சென்னியில் நாட்டி மயிர்களைச் சேதிக்கத் தொடங்கினன்.

அவர் முன்போலவே கூக்குரலிட்டு அழுவதைக்கண்டு மிகவும் பயத்தையடைந்த அம்பட்டன் அலறி ஐயோ! நான் என்செய்ய வல்லேன். எனது தொழில் இன்று மகா பாதகத்தை விளைவிக்கும்போல் தோன்றுகிறதே. இந்த யோகிக்குப் பிணியை உண்டுபண்ணி இவரது மனதை வாடச்செய்து அதனால் எனக்குப் பாவம் வளருமேயாகில் அவ்வித பாவங்களை யான் எங்கு எவ்வாறு தணிக்க வல்லேன். *புண்ணியபுரபதியாகிய தியாகராஜ! இன்று நான் இக்கிழயோகியின் சார்பில் இவ்வண்ணம் பாவியாய் நிற்குமாறு அருள்புரிவது நமக்கு அழகு ஆகுமா என்று உரைத்து விம்மி விம்மி அழுதுகொண்டும் தனது பரிசுத்த மனத்தில் தியாகேசனை நினைத்துச் சற்றுத் திகைத்து நிற்கையில் கிழயோகியாய்த் தோற்றிய அப்பரமேசனை திடீரென்று மறையலானார். அவ்வீசன் அவ்வாறு மறைந்துபோகும் தருணத்தில் கொஞ்சநேரம் முனிவர் போலவும் கொஞ்சநேரம் அந்தணர்போலவும் இவ்வாறு பற்பல விதமாய்த் தோற்றி மறைந்தபடியால் அவ்வித தோற்றங்களைக் கண்டும் அவர் கூறிய மொழிகளைக் கேட்டும் வியப்படைந்த அப்புதியன் என்னும் அம்பட்டன் கத்தியைப் பூமியில் வீசியெறிந்துவிட்டுத் தன்னிருகரங்களையும் சென்னியிலமர்த்தி அஞ்சலிசெய்து பரமேச! சங்கர! சம்போ! என்றுரைத்துத் திருக்கோபுரங்களை நோக்கி

ஆனந்தபரவசனாய் நின்றான். அவனைக்கண்ட சில ஞானியரும் வேதியரும் அவ்வண்ணம் கிழவராய்த் தோற்றி அவனது எதிர்நின்றவர் பரமேசனே என்று நினைத்துத் தியாகேசனது தர்சனத்தைப்பெற்ற அம்பட்டனே சிறந்த பாக்கியசாலி என்று அவனைப் புகழலானார்கள்.

## 306. ஜாமீனாய் நின்ற லீலை

தசநாதன் என்னும் வேதியர் ஒருவர் சரற்காலத் திருவிழாவில் வந்துகூடும் வேதியர்களுக்கு அன்னமளிப்பதாகத் தேசங்கடோறும் சென்று திரவிய ஸம்பாதனம் செய்துவரலானார்.

அவ்வேதியர் இவ்விதமாய் நானாவிதப்பொருள்களை ஸம்பாதித்துக்கொண்டு துலாஸங்கிராந்தி புண்ணிய காலத்தில் கணக்கற்ற வேதியர்களுக்கு அன்னமளிப்பதற்காகத் திருவாரூர் திருப்பதியை நாடிவருகையில் கலிபுருஷனோ, பாபராசியோ, பிரளயகால காலனோ, காலகூட விஷப்பெருக்கோ என்று உவமிக்கத்தக்கவனாய்க் கோரப்பற்களையுடையவனாயுள்ள வனசோரன் ஒருவன் அவ்வேதியரது வழியில் தோன்றிச் சிங்கநாதம் செய்து தோள் தட்டிக்குதித்து அவரது மார்க்கத்தைத்தடுத்தான். புலியைக்கண்ட மான் நடுங்குவது போல் உடம்பு நடுங்கி அவ்வேதியன் அவனைக்கண்டவுடனே நாகுழற அலறிப் புண்ணியசீலனே! நீ என்னைக்காப்பாற்றுவாய் என்று உரைத்தார். அவ்வேதியரது அவ்வித உரையைச் சற்றும் காதில் கொள்ளாத அவ்வனசோரன் அப்பொழுது கொடியதோர் அட்டஹாசம் செய்து ஓ வேதியரே! இன்று நான் உமது பொருள்கள் யாவையும் அபகரிக்காமல் விடமாட்டேன். உமது மொழிகள் யாவும் இன்று என் செவியில் புகா என்று பயமுறுத்தலானான். அவனது

கடுஞ்சொற்களையும் ஆரவாரத்தையும் கண்டஞ்சிய அவ் வேதியன் அத்தருணத்தில் புண்ணியபுர நாதனாகிய தியாக ராஜனையே முக்கிய சரணாக நம்பி ஓ பரம்பொருளே! வேதம் வல்ல வேதியர்களை உண்பிக்கும்பொருட்டு நான் பலவிடம் சென்று சேகரித்த பொருளை இச்சோரன் கொள்ளை கொள்கிறானே! என்செய்வேன். உமது பாத மலரையே சரணெனப்பற்றிய என்னையும் இப்பொருளையும் இப்பொழுது நீர் காத்தளிக்காவிடில் சரணடைந்தோரைக் காக்கும் தெய்வம் நீர் ஒருவரே என்னும் உமது விருதுக் கொடியும் நற்குணங்களும் பொய்யாகிவிடும் என்றிவ் வண்ணம் கதறி முறையிடலானார்.

பக்தரில் சிறந்தவராகிய அவ்வந்தணோத்தமரின் அழு குரலை வெகு தூரத்திலிருந்து செவியினால் கொண்டருளிய தியாகராஜன் விரைவாய் அவரைக் காக்கக் கருதியவராய் ஒரு ரத்தின வியாபாரி போல் உருவமெடுத்துக்கொண்டு தசநாதன் என்னும் அவ்வேதியர் எதிரில் தோன்றி அவருக்கு அபயமளித்த பிறகு அச்சோரனை நோக்கி ஓ புருஷ! நீ ஏன் இவ்வேதியனது பற்பல அற்பப்பொருளை கவரச்செய்கிறாய். இவரிடத்திலுள்ள பொருள்களுக்கு எவ்வளவு விலையோ அவ்விலைத்திரவியத்தை இன்னும் சில தினங்கள் செல்லுவதற்குள் இவரே உனக்கு அளிக்கும்படி செய்கிறேன். இல்லாவிடில் நான் உனக்கு அப்பொருளை அளிக்க வல்லவன். இவ்வேதியர் உன்னிடம் வாக்குத் தானம்செய்து பிறகு அப்பொருளின் விலையை உனக்கு அளிக்காவிடில் என்வசத்திலிருக்கும் இந்த நவரத்தினக் குவியல்களையும் நீ ஜாமீனாய்ப்பற்றிக்கொள் என்று சொன்னார். தியாகேசன் அவ்வாறு ரத்தின வியாபாரி போல் தோன்றிக் கம்பீரமாய் உரைக்கும் சொல்லைக் கேட்டவுடனே மிகவும் பயங்கரமாகக் கர்ஜனைசெய்து நின்ற அச்சோரனது மனம் சற்றுத் தேறுதலையடைந்தது. அதனால் அவன் அந்த இரத்தினபதியின் பேச்சுக்குட்பட்ட வனாய் அவ்வேதியரை அவரது பொருளுடன் திருவாரூருக்கு

அனுப்பிவிட்டு அவ்வியாபாரியின் அருகில் வந்து உட்கார்ந்துகொண்டு நீர் ஜாமீனாய்க் குறிப்பிட்ட நன்மணிகளைக் காட்டுவீரென்றுரைத்தான்.

பக்தருக்காக ஜாமீனாய் வந்து தோன்றிய பரமேசன் தனது கம்பளப்பையிலிருந்து விலையற்ற நவரத்தின மாலைகளையும், பற்பல அணிகளையும் வெளியில் எடுத்துக் காட்டினார். அவைகளைக் கண்டவுடனே அச்சோரனது மனமானது முற்றிலும் மாறுதலையடைந்து முகமலர்ச்சியுடன் வியாபாரிபோல் மரத்தடியில் வீற்றிருந்து விளங்கும் பரமேசனை அச்சோரன் அப்பொழுது வலஞ்செய்து பணியலானான். ஓ புண்ணிய சீலனே! உமது தர்சனத்தினால் எனது மனம் சந்தோஷத்தையும் தத்துவச்சிறப்பையும் அடைகிறது. நான் மனத்தில் நினைத்திருந்த சோரத்தன்மை யாவும் சூரியனைக்கண்ட பனித்துளிபோல் மறைந்தன. பரமேசனிடத்திலும் பரமேசனது பக்தரிடத்திலும் இப்பொழுது என்மனம் அன்பையடைகிறது. அவ்வேதியரது பொருளைக் கவரும்பொருட்டு நான் செய்த முயற்சிக்காக எனக்கு எவ்வித பாபம் நேரிட்டதோ என்று என் மனம் கொதிப்பையும் நடுக்கத்தையுமடைகிறது. உமது தர்சனம் ஒன்றினாலேயே என் மனதுக்கு இவ்வித எண்ணங்கள் உண்டாகிறபடியால் நீர் ஸாதாரணமானவரல்லவென்று தோன்றுகிறது. என்றிவ்வாறுரைத்துப் பக்தியுடன் அச்சோரன் நிற்கையில் அந்தப்பரமேசன் அச்சோரனாகிய வனசரன்மீது அருள்சுரந்து அவருக்குப் பூர்வ ஜன்ம ஞானத்தையும் பக்தியையும் அளித்து மறைந்தார்.



## 307. சிரஞ்சீவியளித்த லீலை

தியாகராஜகற்பகம் ஜாமீனாய் நின்ற லீலைக்கு முதற் காரணமாகிய அவ்வேதியன் செல்லுமிடங்களில் அவரது மஹிமையையறிந்துகொண்ட பூபாலர் முதலானோர்கள்

வெகு பக்தியுடன் அவரை உபசரித்தும் பக்தருக்காக ஜாமீனாய் நின்று விளங்கிய புண்ணியபுரநாதனைப்புகழ்ந்தும் வருகையில் மதுராபுரி நாதனாகிய சங்கபாண்டிய மகா ராஜனது பட்டமஹிஷியானவள் அவ்வேதியரது மஹிமையையறிந்துகொண்டு அவரது பாதத்தில் வீழ்ந்து பணிந்து எனது கணவனுக்கு நீண்ட ஆயுளையளிப்பீர் என்று வேண்டி நின்றாள். அப்பட்டமஹிஷியின் இனிய மொழியைக்கேட்ட அப்பிராமணோத்தமர் ஓ சந்திரமுகி! நீயோ பாண்டியராஜனது பட்டமகிஷி. நானோ கொடும் பாவியாயும், கர்மப்ரஷ்டனாயும் நிலைகுலைந்து நின்று இப்பொழுது சில நாட்கள் தொடங்கி ஈசனருள்பெற்று வருகிறபடியால் பிராம்மணனென வழங்கலானேன். உனது மனக்கருத்தை நிறைவேற்றிவைக்கவல்ல தெய்வம் தியாக ராஜனே. அவரது பாதமலரையல்லவா நீ சரணமாகப் பற்றவேண்டும். பக்ஷபாதமற்றவனாயும், சாதிபேதத்தைக் கருதாதவனாயும், ஏழைகளுக்குச் சுலபனாயும் பக்தருக்கு இனியவனாயும், பகைவருக்குக்காலனாயும், தூயமனமுடைய அன்பர்களுக்கமுதாயும், நற்பலனளிக்கும் கற்பகமாயும், உற்றதுணையாயும் லோககாரணமாயும், இன்பமாயும், துன்பமற்றவனாயும், தாயாயும் தந்தையாயும், பஞ்சபூத ஸ்வரூபியாயும், முச்சுடராயும் விளங்கும் தியாகேசனைக் குறித்து நீ தவம் செய்வாயாகில் அப்பரம்பொருளே உனது கணவனுக்கு நீண்ட ஆயுளையும் சிறந்த நன்மைகளையும் அளிப்பாரென்று இவ்விதமாய் உபதேசம் செய்தார்.

அவ்வேதியருரைத்தபடியே அப்பாண்டிய ராஜனது பட்டமகிஷியும் விரைவாய்த் திருவாரூர்பதியை நாடி கமலாலயக்கரையின் வாயுகோணத்தில் பர்ணசாலையை அமைத்துக்கொண்டு ஐம்புலன்களை அடக்கிக்கொண்டு தியாகராஜனது பாதமலரை மனதில் மலரச்செய்து கொண்டும் நியமத்துடன் மூன்று வருஷகாலம் வரையில் தாரணையோக முறையைக் கைப்பற்றலானாள். அவ்வித மாய் அப்பட்டத்தரசி தவச்சிறப்புடன் தன்னைத் தியானம்

செய்துவருவதை அறிந்த தியாகேசன் ஒருநாள் மாலை நேரத்தில் அவளது கண்களின் எதிரில் பரஞ்சுடராய்த் தோன்றிப் பாண்டியன் செல்வியே! உனது தவத்தன்மையையும் மனத் தூய்மையையும் என்னிடத்தில் செய்துவரும் பக்தியையும் கண்டு நான் களித்தேன். நீ விரும்பிய வரத்தைக் காலதாமதமின்றி என்னிடமிருந்து பெற்றுக் கொள்வாய் என்று விளம்பினார். சந்திரோதயத்தைக் கண்ட கடல்போல் ஈசனைக்கண்டு சந்தோஷப்பெருக்கை யடைந்த பாண்டியன் பட்டமகிஷியானவள் ஈசனைக் கண்ணாரக்கண்டு வணங்கித் துதிசெய்த பிறகு எனது கணவனது ஆயுள் விஷயமாய் சோதிடருரைத்த சொல்லைக் கேட்டுப் பயமடைந்த நான் வேதியரின் மூலமாய் உமது திவ்ய சக்தியையறிந்துகொண்டு இங்கு வந்து தவம் செய்யலானேன் என்மீது உமது கருணை தோற்றுமாயின் எனது கணவன் சிரஞ்சீவியாய் இருக்கும்படி செய்வீரென்று அஞ்சலி செயது நின்றாள். தியாகராஜனும் அம்மாதுக்கு அவ்வாறே வரமளித்துவிட்டு முன்போல் அவ்வழகிய மாலை நேரத்தில் தேவவேதிகையில் விளங்கலானார்.

## 308. தேகபரிமளத்தை வெளியிட்ட லீலை.

திருவாரூர் நகரில் வேதவதி என்னும் தாஸி யொருத்தி இருந்தாள். அவள் விலைமாதின் வம்சத்தில் தோன்றிய போதிலும் பிராம்மணபக்தி, தேவபக்தி, சிவபக்தி, ஸத்தியம், தர்மம், கோபமின்மை, பொறாமையின்மை முதலிய பல நற்குணங்களுக்கு உறைவிடமாய் இருந்தாள். அவ்வேதவதி என்னும் விலைமாது யௌவன வயதில் நிகரற்ற அழகைப்பெற்றவளாய் விளங்குகையில் அந்நகரில் உள்ள ச்ருதசர்மன் என்னும் வேதியர் ஒருவர் அம்மாதின் அழகைக்கண்டு மோஹத்தையடைந்தார். அவ்வேதியர் பால்ய வயதில் குருகுலத்தில் பன்னிருவருஷம் நியமத்துடன் தங்கியிருந்து கரணங்களையடக்கி வேதங்களையும், சாஸ்திரங்

களையும் கற்றறிந்தவராயிருந்தபோதிலும் அத்தாஸியின் சரீர அழகைக்கண்டு மையல் கொண்டவராய் அதர்மவழியி லிறங்கித் தனது குலதர்ம முறைகளையும் செல்வத்தையும் அழித்து அவளது மோஹத்தில் மூழ்கிக்கிடந்து அவளது போகத்தினுல் மனகளிப்பையடைந்தவனுய் அநேக வருஷங் களைக் கழித்து வந்தான். அவள் விரும்பியவாறே சில சமயங்களில், பட்டாடைகளையும் சில சமயங்களில் சிறந்த அணிகளையும், சில சமயங்களில் சுகந்தத் திரவியங்களையும், சில ஸமயங்களில் நறுமலர்களையும் அவ்வேதியர் அம் மாதுக்கு அளித்துவரலானுர்.

அவ்விதமாய் அவ்விலைமாது அவ்வந்தணரிடமிருந்து பற்பலப் பொருள்களைக் கவர்ந்து வந்தபோதிலும் அவளது தர்மசிந்தையும், சிவபக்தியும், நற்குணங்களும் மேன்மே லோங்கிவரக்கண்டு பரமேசன் அவள்மீது கருணை செய்ய லானுர். அத்தகைய தருணத்தில் அவ்விலைமாது ஒருநாள் அவ்வந்தணனை அன்புடன் தழுவியணைத்து ஓ வேதியரே நீர் இவ்வளவு காலம் வரையில் என்னிடத்தில் ஸுகத்தை அனுபவித்து வந்தது போதாதா? இச்சிற்றின்பத்தின் இகழ்ச்சியை அறிந்துகொண்டு நீர் இனியாவது சிவபக்தியை அடையலாகாதா? சிற்சில சமயங்களில் நீர் பேசும் பொழுது உமது முகத்திலிருந்து வேதவாக்கியங்கள் வெளி வருகின்றனவே. இவ்வித ஞானத்துக்கு இருப்பிடமாகிய நீர் உமது ஐம்பொறிகளை அடக்கி ஈசனைத் தியானித்தல் அரிதா? என்றுரைத்தாள். இவ்வண்ணம் அவ்விலைமாது கூறிய மொழிகளைக் கேட்டு அந்தணர் அவள்மீது செலுத்தி யிருந்த மையலைத் தணியச்செய்யச் சக்தியற்றவனுய் ஓ மாதர்களின் மணியே! நீ உரைப்பதுபோல் நான் இனி நல்வழியையே பற்றுவேன். எனது குருவின் அருளால் நான் சிறந்த ஞானத்தைப் பெற்றிருப்பது உண்மையே ஆயினும் நான் இன்னும் ஒருநாள் மாத்திரம் உனது ஸுகத்தை விரும்புகிறேன். அதற்கு நீ இணங்க வேண்டு மென நவின்றுன்.

அவ்வேதியனை நல்வழியில் திருப்பக் கருதிய வேதவதி என்னும் அவ்விலைமாது அவ்வாறே அவரது வார்த்தைக்கு இணங்கி ஓ வேதியர் திலகமே! நீர் சிறந்ததொரு ரத்தினாபரணத்தை எனக்கு அளிப்பீராகில் எனது ஆலிங்கன சுகத்தை நீர் அடையலாம். இல்லாவிடில் நீர் இனி என் சமீபம் அணுகலாகாதென்றுரைத்தாள். ச்ருதசர்மன் என்னும் அவ்வேதியர் அவ்விலைமாதினால் இவ்வாறு கூறப்பட்டவராய் மீண்டும் அவளது போகத்தையடைய பேராவலடைந்திருப்பதினால் எவ்வித அகாரியத்தையாவது செய்து அவ்விலைமாது விரும்பிய சிறந்ததொரு ரத்தினாபரணத்தையடைய ஆலோசனை செய்யலானார். அவ்வாறு தாசியின் இருஹத்திலிருந்து திரும்பிய வேதியர் ஒரு பக்ஷ காலம் செல்லுமளவும் பற்பலவிதமாய் முயற்சி செய்த போதிலும் சிறந்த ரத்தினாபரணத்தையடைய முடியவில்லை தியாகராஜனது திருக்கோயிலினுட் புகுந்தாவது ஈசன் மார்பிலணிந்திருக்கும் சிறந்ததோர் ஆபரணத்தைச் சோரம் செய்தாவது அத்தாஸிக்கு அளிக்கவேண்டுமென்று நிர்ணயம் செய்துகொண்ட அவ்வேதியர் அன்றிரவின் நடுவில் ஈசனது ப்ராகாரமதில்களைத்தாண்டிசெல்ல முயற்சி செய்யலானார். ச்ருதசருமன் என்னும் அவ்வேதியர் பெண் ஆசையினால் இவ்வித அகாரியத்தையும், ஸாஹஸத்தையும் செய்யத் துணிந்து பயத்தையும், பாவத்தையும் சற்றும் நினைக்காமல் அப்பொழுதே அம்மதிலை தாண்ட நினைக்கும் போது அஃதறிந்த தியாகேசர் அவ்வந்தணரது உயிரைக் காத்து நன்மையளிக்கக் கருதியவராய் ஒரு சோரன்போல் உருவமெடுத்துக்கொண்டு வந்து ஓ தோழ! நீ வீணில் இச் சுவரைத் தாண்ட முயற்சி செய்யாதே. நீ விரும்பும் சிறந்த அணியை உனக்கு முன் உட்சென்ற நானே அபகரித்து வந்தேன். இதை நீ பெற்றுக் கொள்வாயென்றுரைத்துக் கொண்டே அவனது அருகில் வந்த ஈசன் தனது மார்பணியை அவனது கையில் கொடுத்து மறைந்தார். சூரியகாந்திபோன்ற அவ்வணியைப் பெற்றுக்கொண்ட

அவ்வேதியன் அப்பொழுதே விரைவாய் ஓடிவந்து தாசியின் வீட்டையடைந்து கதவைப்புடைத்து அவளால் அழைக்கப்பட்டவனாய் உட்புகுந்து அவளது எதிரில் அவ்வணியை வைத்து நின்று பரமானந்தமடைந்தான்.

சிறந்த மதியுள்ள வேதவதியும் அவ்வாறு ஒளி வீசும் ஆபரணத்தைக்கண்டு ஆச்சரியமடைந்து விலையற்ற இவ் வணியை நீர் எங்கு அடைந்தீர்? இது யாருடையது? என்று கேட்டாள். அதைக்கேட்ட வேதியர் நடந்ததைச் சொல்ல, அவள் க்ஷணகாலம் தியாகேசனை நினைத்தாள். பரமேசன் அவ்வணியில் தனது சரீர பரிமளம் வீசுமாறு செய்தார் அதைக்கண்டு மெய்சிலிர்ப்பெய்திய தாசியானவள் அவ்விரவு முழுவதும் அவ்வேதியருடன் கங்காதரனது திவ்ய குணங்களையே கீர்த்தனை செய்து பரமானந்தமடைந்தாள்.

## 309. பந்தக்கால் நாட்டிய லீலை

திருவாரூரில் விளங்கும் திவாகர சோழமகாராஜனுக்கு பட்டாபிஷேக ஸமயம் நேரிட்டது ராஜகர்ம முறைப்படி அச்சோழ சக்கரவர்த்தியை ஸிம்மாஸனத்தில் அமர்த்து வதற்காக அமைச்சர் முதலிய ராஜகாரியக்காரர்கள் வெகு குதூஹலத்துடன் அதற்குரிய காரியங்களைச் செய்துவருகை யில் வேதம், வேதாந்தம், தர்க்கம், மீமாம்ஸை என்னும் சாஸ்திரங்களை அறிந்தவர்களாலும் ஜோதிஷ சாஸ்திர நிபுணர்களாலும் அவ்வரசனது பட்டாபிஷேககாரியத்துக்கு முகூர்த்தகாலம் குறிக்கப்பட்டது. அத்தகைய முகூர்த்தத் தில் வேதியர் கூட்டம் வேதம் ஓதவும், தாசிகள் நடனம் புரியவும், வாத்தியங்கள் கோஷிக்கவும் அவ்வரசனது பட்டாபிஷேகஸமயம் நெருங்குகையில் அச்சிம்மாசனத் துக்கு எதிரிலுள்ள ராஜமாளிகையின் வாயிலில் திடீரென்று ஒரு பந்தக்கால் தோன்றிற்று.

மங்களக்குறிகளும், மல்லிகை மாலையும் நிறைந்து விளங்கும் அப்பந்தக்காலைக் கண்டவர் யாவரும் வியப்படைந்து நிமிஷநேரத்துக்குள் பந்தக்கால் நாட்டியவர் யாவரென்று விசாரித்துப் பலவிதமாய்ச் சந்தேகப்படுகையில் அங்குத்தோற்றிய அசரீரியால் அது தியாகராஜன் நாட்டிய பந்தக்கால் என்றறிந்துகொண்டு அவ்வரசன் நீண்டகாலம் சிறந்த மங்களத்துடன் வாழப்போகிறான் என்பதற்கு பரமேசனது இச்செய்கையே சகுனக்குறி என்று உளமகிழ்ந்தார்கள். அப்பொழுதே அமைச்சர் அரசன் மூலமாய்த் தியாகேசனுக்குச் சிறந்ததோரபிஷேகத்தையும் செய்துவைத்து உபசாரணை செய்து பணிந்து அவ்வாறே அவ்வரசனைச் சுபமுகூர்த்தத்தில் ஸிம்மாஸனத்தில் முடிசூட்டி அவனது செங்கோலின் மகிமையினால் ஜனங்கள் யாவரும் நன்மைபெற்று ஈசுவரபக்தியுடன் விளங்கலானார்கள்.



## 310. இரும்பைப் பொன்னாக்கிய லீலை

## 311. தோழனாய் நின்ற லீலை

முன்பு ஒரு சமயத்தில அச்சோழ நாட்டில் உத்தம சோழனென்னும் சக்கரவர்த்தி அரசுசெய்து வந்தான். அம்மகாராசனிடத்தில் காமம், கோபம், லோபம், மோஹம், டம்பம், பொய்யுரைத்தல், அநீதி செய்தல் முதலிய துர்க்குணங்கள் நிலைபெறவேயில்லை. வேதமோதுதல், குரு, தேவர், பித்ரு, வேதியர் முதலியோரிடத்தில் பக்திசெய்தல், கற்றோரைப் புகழ்தல், பக்ஷபாதமின்மை, பிறர் மனைவிகளுக்குச் சகோதரனாயிருத்தல் முதலிய நற்குணங்கள் அம்மன்னனிடத்தில் இயற்கையாய் விளங்கியபடியால் அவனது குணத்திரளைக்கண்ட ஞானியர் அவனுக்கு உத்தம சோழனென்னும் பெயரையளிக்கலாயினர்.

அப்படிப்பட்ட நற்குணங்களுக்கு இருப்பிடமாகிய அரசன் தர்மாஸனத்தில் ஏறி மந்திரிமார் புடைசூழ பகைவர் வணங்க ஏக சக்கரத்தின் நிழலில் தங்கியிருந்து எண்டிசையிலும் சந்திரகாந்தி போன்ற கீர்த்தியை வளர்த்து வருகையில் அவனது கீர்த்தி வளர்வது போலவே அவனது மனதில் தியாகேச பக்தியும் வளரலாயிற்று. அவ்வரசன் அரசு செய்கையில் ஜனங்களிடத்திலும், ஈசனிடத்திலும் நிகரற்ற அன்பு வைத்தமையால் தனது அரண்மனையிலிருந்த சகல செல்வத் திரளையும் தியாகராஜனது திருக்கோயில் திருப்பணிக்காகவும், தொண்டர்களின் விருந்துக்காகவும் ஏழைகளின் அன்னதான மடத்துக்காகவும் விநியோகித்து வரலானான். இவ்விதமாய் அச்சோழன் தனது மாளிகையிலிருந்த வஸ்திரங்களையும் பட்டாடைகளையும், நவரத்தின ஹாரங்களையும், கனகக் குவியல்களையும் தேவ பித்ரு குரு யக்ஞ மானுஷ போஜன விஷயங்களில் அளித்துச் செலவு செய்து விட்டு அவர்களின் அன்பையும், அருளையும், ஆசியையும் பெற்றுக் கொண்டு துறவறத்தில் அமர்ந்தவன்போல் தோற்றலானான்.

மற்றொரு புண்ணிய காலத்தில் அப்பூபாலன் தனது ராஜ சபையில் பதித்திருந்த சுவர்ணப் படிகளையும், ரஜதப்படிகளையும் நவரத்தின பஞ்சரங்களையுமெடுத்துச் சற்பாத்திரத்தில் தானம் செய்யலானான். அவ்வரசன் இவ்வாறு தனது செல்வம் யாவையும் நாடோறும் ஈசனுக்காகவும், ஜனங்களுக்காகவும் அளித்து வந்து முடிவில் ராஜஸபையிலுள்ள விலையுள்ள பொருள்களையும், அத்தர்ம வழிக்கே அர்ப்பணம் செய்து விட்டு இரும்புப் படி, இரும்புப் பலகை, தந்த பீடம், கோரைப் பாய் இவைகளையே பரவச் செய்து அதன் மீது வீற்றிருந்து ஸத்ய முறை வழுவாமல் அரசு புரியலானான். அம்மகாராஜனது உயர்ந்த தன்மையைக் கண்ட ஜனங்கள் யாவரும் வியப்படைந்திருக்கையில் லீலாப் பிரியனாகிய தியாகேசன் தனது திவ்

விய சக்தியைக் காண்பித்து அச்சோழனைச் சிறப்பிக்கக் கருதியவராய் ஒருநாள் பகற்காலத்தில் ஒருச்ரேஷ்டிபோல் உருவமெடுத்துக் கொண்டு கையிலேந்திய 'ஓலைச் சுருளு டன் அம்மகாராஜனது சபையை யடைந்து அவ்வோலைச் சுருளை விரித்து அதிலுள்ள வழக்கைக் கூறி மகாராஜனது சபையை அருகில் சற்று நின்று சில விஷயம் கூறுவதற்கு விடையளிக்க வேண்டும் என்று சொன்னார். அச்சோழ னும் அதற்கு இசையவே அப்பொழுது அவ்வாறு வைச்ய ரூபியாய்த் தோற்றிய பரமேசன் மன்னரது சமீபத்தை யடைந்து ஓ! பூபேந்திரனே! லோக ரக்ஷணத்திற்காகச் செல்வத்தை யளித்து விட்டுக் கோரைப் பாயின்மீதும், பஞ்சுக் கட்டிலின் மீதும் வீற்றிருந்து அரசுபுரிவது அழகா? ஆகலால் நீர் எனக்கு உத்திரவு அளிப்பீராகில் நான் எனது கையினால் இவைகளைத் தொடுவேனாகில் இவைகள் யாவும் சுவர்ணமாகவும், ரஜதங்களாகவும், நவ ரத்தினங்களாகவும் மாறிவிடும். என்றுரைத்துவிட்டுத் திடீரென்று அவ்வண்ணமே ஆகுக என்று தனது மனதில் சங்கற்பம் செய்துகொண்டே மறையலானார்.

அவ்வாறு ஓலைச்சுருளுடன் வழக்கு உரைப்பவர்போல் முதலில் தோன்றியதையும் பிறகு அரசனது அருகில் உரைத்ததையும் பிறகு அத்திவ்ய புருஷன் சிற்சில பேச்சுக் களை உரைத்துக்கொண்டே மறைந்ததையும் அவர் மறைந்த சில நிமிஷங்கள் செல்லுவதற்குள்ளாகவே அச்சோழ பூபாலனது சபையிலிருந்து சிங்காதனமும், படிச்சுவரும், படி வரிசைகளும், ஸபையோர் உட்காரும் திண்ணைகளும் திடீரென்று சுவர்ணமயமாகவும், ரத்தினமயமாகவும், மாறியதையும் அவ்வாறு இரும்புமயமாயிருந்த ஜன்னல் களும், சங்கிலிகளும், மேடைகளும் நிமிஷநேரத்தில் பொன் மயமாய் மாறியதையும் கண்டு வியப்படைந்த சபையில் உள்ளோர் யாவரும் இது தியாகராஜனது லீலையாகவே இருக்கவேண்டும். அவ்வாறு வழக்குக்கோறி தோன்றிய

புருஷனும் தியாகராஜனாகவேயிருக்கவேண்டும் என்று நிர்ணயம் செய்து அந்த ராஜ ஸபையில் அப்பொழுது விளங்கும் அழகைக்கண்டு களித்திருக்கையில் தேவர்கள் அந்த ராஜஸபையின் மீது மலர்மாரி பொழிகையில் அதை யறிந்த நகரவாஸிகளும், பூபாலர்களும் களிப்புடன் அங்கு வந்து கூடுகையில் தியாகேசன் அத்தருணத்தில் மறுபடியும் அம்மன்னனது அருகில் தோழனாய்த் தோன்றி ராஜ உருவ மாய்த் தோற்றி அவ்வுத்தம சோழனது அருகில் பற்பல ராஜநீதிகளையும், உலகிலுள்ள குடும்பவிஷயங்களையும், பக்தியின் சிறப்பையும், புண்ணியபுரியின் மேன்மையையும் இரண்டு முகூர்த்தகாலம் ஓயும் வரையில் அச்சபையில் மறைந்தார்.

அவ்வற்புத விஷயங்களையறிந்துகொண்ட ஜனங்கள் யாவரும் இச்சுபதினத்தில் இவ்வுத்தமசோழ மகாராஜனது சபையில் இரும்பைச் சுவர்ணமாக மாற்றியவரும், அரசனது அருகில் தோழன்போல் நின்று ராஜவுருவத் துடன் இதோபதேசஞ் செய்தவரும், புண்ணியபுர நாத ளுகிய தியாகராஜனே என்றறிந்துகொண்டு துதி செய்து மகிழ்ந்தார்கள். அதுமுதல் நெடுநாள் வரையில் அச்சோழ நாட்டிலும் அவ்வரசனது செங்கோல் செல்லும் நாடுகளிலும் எவ்வித துன்பமும், அநீதியும் நடைபெறவில்லை. சகல ஜீவராசிகளும் சாந்தமனமுடையவர்களாய் வாழத் தொடங்கின.

※—※—※

## 312. குதிரையாய்க் கடலையுண்ட லீலை

திருவாரூர் நகரில் கோபதி என்னும் வணிகன் ஒருவன் இருந்தான். ஒரு ஸமயத்தில் அவ்வர்த்தகன் தேசங்கள் தோறும் உற்பத்தியாகிய பற்பல தானிய வர்க்கங்களைச் சேகரிப்பதும், அவர்களை மற்றொரு நாட்டுக்கு விற்பனை செய்வதுமாய் நடைபெறும் வியாபார மூலமாய் அளவற்ற

செல்வத்தைச் சம்பாதிக்கலானான். அவ்வைச்யன் அவ்வித பெருஞ் செல்வத்தில் அமர்ந்திருந்த போதிலும் நெடுநாள் வரையில் யாசகரிடத்தில் அன்பு பாராட்டிப் பொருள் அளித்து வந்தான். பிறகு அவ்வைச்யனது மனமானது அவ்வித செல்வ மதத்தினால் மாறுதலை யடையத் தொடங்கியது அது முதல் அவன் சற்பாத்திரத்தில் தானம் செய்து வருவதை நிறுத்தி விட்டான். கொஞ்சம் கொஞ்சமாய்ச் சிவ பக்தியையும் இழக்கலானான். தனது முயற்சித் திறமையினாலேயே தனக்கும் செல்வம் வளர்ந்து வருவதாயுரைக்கலானான். இக் கலி யுகத்திலும் பரமேசன் அருளால் எவ்வித காரியத்தையும் நிறைவேற்றலா மென்று பெரியோர் உரைப்பதையும் அவன் பொய் என்று உரைக்கலானான்.

இவ்வாறு அவ்வணிகன் துர்மார்க்கத்தில் இறங்கத் துணிந்த பொழுது துஷ்டர்களை யடக்க வல்லமை பெற்றுத் தேவ வேதிகையில் விளங்கும் தியாகராஜன் அவனுக்கு நற்புத்தியளிக்க வெண்ணி ஒரு நாளிரவில் ஒரு பெண் குதிரைபோல் உருவமெடுத்துக் கொண்டு சென்று அவ் வணிகன் தனது மாளிகையில் சேர்த்து வைத்திருக்கும் கடலை முதலிய தானிய ராசிகளை விரைவாய் உண்ணலானார். சில பொதிகளை உதைத்து மிதித்துக் கடித்து நாசம் செய்யலானார். சில தானியப் பொதிகளைத் தனது நீண்ட பற்களாலிழுத்து வெளியில் வீசினார். இவ்விதமாய்த் தனது நவதானியப் பொதிகளெல்லாம் ஒரு குதிரையினால் அழிக் கப்படுவதை யறிந்து கொண்ட கோபதி என்னும் வைச்யன் கூக்குரலுடன் அங்குச் சென்று அக்குதிரையை எவ்வகையிலும் அடக்கச் சக்தியற்றவனாய் அழுது கண்ணீருடன் ஓர் வேதியரது மாளிகையை யடைந்து முறையிடலானான். உலகோர்கள் எல்லாம் உறங்கும் தருணத்தில் அவ்வாறு வைச்யன் புலம்புவதைக் கண்டு மனமுருகிய அவ்வேதியர் அவ்வைச்யனை அழைத்துக்

கொண்டு அந்நகரிலுள்ள ஸர்வக்ரது தீக்ஷிதரின் மாளிகையை யடைந்து அவனைப் பணிய வைத்து அங்கு வைச்யனது மாளிகையில் நடைபெறும் வரலாற்றை யறிவித்தார். வேதம் வல்லவராயும் தியாகேசனது பக்தியையே ஆரமெனப் பூண்டவராயும் விளங்கும் அந்தத் தீக்ஷிதர் சற்று நேரம் வரையில் கண்களை மூடித் தியானம் செய்திருந்து பிறகு அவ்வைச்யனைக் கண்டு நீ சில நாட்டொடங்கித தானச் சிறப்பை யிகழ்ந்து வருவதாலும் தானம் செய்து வந்த விரதத்தை யழித்தமையாலும், உனக்கு நன்மதியளிக்குமாறு தியாகராஜனே இவ்வண்ணம் அச்வமாய்த் தோன்றி உனது பொருளை அழிக்கிறார்.

இனி நீ நற்புத்தியை யடைவாயாகில் அக்குதிரை மறைந்து விடுமென்றுரைத்தார்.

அது கேட்ட கோபதி வியாபாரியும் சென்னியில் கூப்பிய அஞ்சலியுடன் திரும்பி வந்து அத்தலமடைந்து தியாகேச! என் மனத்துக்குப் பக்தியளித்த பரமேச! காத்தருள்வாய் எனது பொருளை யழிப்பது உமது கருணைக் கழகா? இனி நான் பெரியோரைப் பழியேன். தானச் சிறப்பையும், உமது தத்துவச் சிறப்பையும் அறிந்து கொண்டேன். நாளது முதல் வேதியர்கள் மூலமாய் உமக்குச் சிறந்ததோர் அபிஷேகம் செய்ய வல்லேன் என்றுரைத்துக் கொண்டிருக்கையில் அக் குதிரை மறைந்தது. மறுநாட்காலையில் கதிரவன் காந்தி போலவே தியாகேசன் குதிரையாய்த் தோற்றிக் கடலையுண்ட லீலையின் சிறப்பும் உலகில் பரவலாயிற்று. அது முதல் அவ்வணிகனும் நற்பதவியில் நிலை பெற்றுத் தியாகராஜ பக்தியினால் மேன்மை யடைந்தான்.



## 313. அக்ஷயபாண்டம் அளித்த லீலை

பொன்னி என்னும் காவிரிநதி சூழ்ந்த ஜம்புகேசுவர க்ஷேத்திரத்தில் ஜம்பூதாஸனென்னும் அந்தணர் ஒருவர் இருந்தார். அவ்வேதியர் ஸாங்க வேதங்களையும், ஸகல சாஸ்திரங்களையும் ஸகல சைவாகமங்களையும் கற்றுணர்ந்திருப்பதினாலும் நற்குலத்திலுதித்திருப்பதினாலும் அன்னதானத்தின் சிறப்பையறிந்துகொண்டு அதிதிகளுக்கு அன்னமிட்டு வருவதாலும் அவரது கீர்த்தியானது விளங்கலாயிற்று. பக்தியிலும், ஸத்தியத்திலும், மற்றுமுள்ள நற்குணங்களிலும் நிலைபெற்று சுவர்க்க முதலாய உலகங்களிலும் நற்கீர்த்தியுடன் விளங்கும் அவ்வேதியரது மனதைப் பரீக்ஷிக்கவேண்டுமென்று கருதிய நாரதமுனிவர் ஒருநாள் ஆயிரக்கணக்கான மகரிஷிகளையும், வேதியர்களையும் அழைத்துக்கொண்டு அவ்வேதியரது வாயிலில் வந்து தோன்றி ஈசுவரநாம ஸங்கீர்த்தனத்துடன் விளங்கலானார்.

அவ்வாறு தனது இல்லத்தின் வாயிலில் பெருங்கூட்டமாய் விளங்கும் அம்மகரிஷிகளையும் அவர்களின் முன் நாரதர் வீணாகானத்தினால் ஈசனைத் துதித்து நிற்பதையும் கண்டு மெய்சிலிர்ப்புண்டவராய் விரைவாக அங்குச் சென்று அவர்களைப் பணிந்து, உபசரித்து அவர்களது வழிநடை ச்ரமத்தை மாற்றிவந்த காரணம் யாதென்றுகேட்க நினைப்பதற்கு முன்னமே நாரதமுனிவர் ஓ அந்தணோத்தமரே! நீர் செய்துவரும் அன்னதானத்தின் சிறப்பைச் சுதர்மையில் கந்தர்வர்கள் புகழக்கேட்ட நான் உண்மைக் காண விரும்பி வருகையில் மூன்றுநாட்கள் தொடங்கி ஆகாரமின்றி வாடிவரும் இவ்வேதியர்களும் மகரிஷிகளும் என்னைப் பின் தொடர்ந்து இங்கு வரலாயினர். இவர்கள் எல்லோரும் இக்காலத்துக்குரிய ஸ்நான ஜப நியமகாரியங்களை நிறைவேற்றியவர்களாய் போஜன சமயத்தையே நோக்குகிறார்கள். நீர் காலதாமதம் செய்யாமல் எல்லாருக்

கும் அமுதளிப்பீராகில் சந்தோஷமும் ப்ரீதியுமுண்டாகும். அகாலத்தில் உம்மால் அன்னமளிக்க முடியாதென்றால் நாங்கள் வேறிடம் செல்வோமென்றுரைத்தார்.

நாரதமாமுனிவர் இவ்வாறுரைக்கக்கேட்ட ஜம்புநாதர் என்னும் வேதியர் மகரிஷியே! நீங்கள் யாவரும் மற்றோர் இடம் செல்லவேண்டாம் நான் என் நிலைமைக்கேற்ற வாறு சுத்தான்னமளிப்பேன் இன்னும் அரை முகூர்த்த காலத்திற்குள் உங்களுக்கு விருந்தளித்துத் திருப்தி செய்வேன், அவ்வாறு என்மீது நீங்கள் கருணைசெய்து இங்கு வீற்றிருக்கவேண்டுமென்று விளம்பலானார். அதைக் கேட்டு இசைந்த நாரதரிடமிருந்து விடைபெற்றுச் சென்ற அவ்வந்தணோத்தமர் தனது பாகசாலையை அடைந்து அங்குப் பாகவேலையிலமர்ந்திருக்கும் தனது தர்மபத்தினிக்கு அவ்விஷயத்தை யுரைத்துப் போஜனப்பொருள் குறைந் திருக்கும் இச்சமயத்தில் என் செய்வோம்? எங்குச் செல் வோம்? இவர்கள் எல்லோருக்கும் இம்முகூர்த்தத்திலேயே எவ்வண்ணம் அமுதளிக்கவல்லோம். இவர்களின் பசியை நாம் தீர்க்காவிடில் நமக்கு நற்பயன் ஏது? மகரிஷியின் சாபமும், சிந்தனையும் நேரிடுமே; ஈச! லோகநாதனே! பக்தர்களின் துன்பத்தைத் துடைக்கும் மணிவிளக்கே! எம்மைக் காத்தருள்வாய் என்று அஞ்சலிபுடத்துடன் அவ்வந்தணோத்தமர் மடைச்சாலையில் துதிசெய்கையில் தயாநிதியாகிய தியாகேசர் அச்சமயத்தில் அவ்வந்தணனைக் காக்க முயன்றவராய் ஒரு கிழப்பிராமணன்போல் உருவம் எடுத்துக்கொண்டு ஒரு சிறு பாத்திரத்தைக் கையிலேந்திக் கொண்டு சிவ! சிவ! என்னும் நாமோச்சாரணத்துடன் அவ்வேதியரது வாயிலில் வந்து நிற்கலானார்.

அவ்வாறு அங்குத் தோன்றியவர் கைலாஸநாதனாகிய தியாகேசனே என்று தமது திவ்ய ஞானக்கண்களால் கண்டறிந்த நாரதாதி முனிவர் யாவரும் அவரைப் பணிந் தும், துதிசெய்தும் அவ்வந்தணர் உரைத்த ஸத்தியவாக்கை

நிறைவேற்றிவைப்பதற்காக அக்ஷயபாண்டத்துடன் அவ்வாறு அங்குத் தோற்றியதைப் புகழ்ந்தும், தமது மனோரதம் நிறைவேறிற்று என்றுரைத்துக்கொண்டே வானத்தில் மறைந்து தமதிருப்பிடம் சென்று முன்போல் யோகநிலையில் அமர்ந்தார்கள். அவ்விதமாய் ரிஷிகள் செல்லும்பொழுதே வேதியர்போல் தோன்றிய பரமேசன் தனது கையில் தாங்கிவந்த அப்பாத்திரத்தை ஜம்புதாஸரது கையிலளித்து அக்ஷயபாண்டமாகுக என்று கூறி மறைந்தார். மகரிஷிக்கூட்டங்கள் மறைந்தவுடனே பாத்திரத்தைக் கொடுத்துவிட்டுத் திவ்ய ஒளிவீசப்பெற்ற அவ்வந்தணோத்தமரும் மறைந்ததைக்கண்ட ஜம்புதாஸர் ஆச்சரியமடைந்தவராய் அங்கு நிலைபெற்று விளங்கும் பூதேவர்களை அன்புடனழைத்து அவர்களை அப்பாத்திரத்தின் மகிமையினால் உண்டாகிய அன்னம் முதலியவைகளால் முறைப்படி உபசரித்து உண்ணச்செய்து அங்கு நடந்த வைபவங்களையெல்லாம் உரைத்து ஈசனளித்த அவ்வக்ஷய பாண்டத்தின் மகிமையையும் கூறித் துதிக்கையில் அவ் வேதியர் யாவரும் அவ்வேதியரது குணச்சிறப்பைப் புகழ்ந்து தமதிருப்பிடமடைந்தனர்.

## 314. படியேறி மதத்தைக் காத்த லீலை.

## 315. சைவசின்னமகிமையை வெளியிட்ட லீலை

சோழநாட்டில் சாந்தகுணம் நிறைந்த சாந்தர் என்னும் அந்தணோத்தமர் ஒருவர் சிவதத்துவமே சிறந்தது என்று நாடோறும் உபதேசம் செய்துகொண்டே தேசாடனம் செய்யலானார். அவர் அவ்வாறு உபதேசம் செய்துகொண்டு வடதிசையை நாடி வீந்தியமலையினருகில் செல்லுகையில் அங்குள்ள கபிலாநகரில் நெடுநாளாய் விவாதித்து வந்த புறச்சமயிகள் பலர் ஒன்று கூடிச் சங்கர

தத்துவத்தை இகழ்ந்து தமது அக்னிமதமும், அர்ஹ மதமுமே, சிறந்ததென்று உரைத்த வாதத்தில் ஜயம்பெற வெண்ணி ஜயபேரிகை முழங்கும்படி அந்நகர பூபாலனிடம் முயற்சி செய்யலானார்கள். அத்தகைய தருணத்தில் தென் திசையில் விளங்கும் கஜாரண்யத்திலிருந்து கபிலைப்புரியை அடைந்த சாந்தர் என்னும் அவ்வந்தணோத்தமர் தமது சிஷ்யரால் அங்கு நடைபெறும் விஷயத்தை அறிவிக்கப் பட்டவராய் அப்பூபாலனது சபையை யணுகி பற்பல ராஜநீதிகளையுரைத்து அரசர் பக்ஷபாதமின்றி நடப்பதே சிறந்த நன்மையின் பொருட்டாகுமென்று விசேஷமாய் உரைத்து அப்பூபாலனது மனதை நடுநிலைமையில் இருக்கச் செய்து அங்குள்ள அர்ஹமதத்தோருக்கும், தமது சைவ மதத்தோருக்கும் நேரிடப்போகும் வாதப்போரில் அவ் வரசனையும் அவனது அமைச்சர்களையும் மத்யஸ்தர்களாக நிற்கச்செய்து பந்தயப்பொருள் யாது என்று கேட்டார்.

அவ்வாறு சாந்தர் என்னும் வேதியர் கூறிய தர்மவாக் கியங்களைக் கேட்டுக்களிப்படைந்த அவ்வரசன் உலகில் தர்மநிலையையும், ஸத்தியச்சிறப்பையுமே நிலைநாட்டக் கருதியவனாய் மத்யஸ்த பதவியைப்பெற்று அவ்வித வாதிப் பிரதிவாதி மதத்தோரின் வாதத்தைக்கேட்க விருப்பங் கொண்டு பந்தயப்பொருளை முன்னமே நாட்டுவீரென்று உரைத்தான். அதைக்கேட்ட சிவமதத்தோர் அங்குள்ள அர்ஹ மதத்தோர் குறிப்பிடும் பந்தயப்பொருளே தமது கட்சிக்குமிசைந்ததாகும் என்று கூறினர். அதையறிந்த புறச்சமயிகள் தாம் கூறும் பந்தய நிப்பந்தத்தைத் தமது மந்திரசக்தியினால் தாமே ஜயித்துவிடலாம் என்று நினைத்து துராலோசனை செய்து ஓ பூபாலனே! உமது ராஜஸபைக்கு எதிரில் ஜ்வாலையுடன் விளங்கும் அக்கினிவளர்த்து அவ்வித ஜ்வாலைகளால் இருபத்துநான்கு லோஹப்படிகளை ஜ்வலிக்கச்செய்து அவ்விதபடிகளின் மேல் யார் நடந்து சென்று அதின் உச்சியில் ஒரு முகூர்த்தகாலம் வரையில்

தமது மதச்சிறப்பையுரைக்கிறார்களோ அவர்களின் மதமே இனி இவ்வுலகில் பரவவேண்டும். இஃதே எமது பந்தயப் பொருட்சிறப்பென்று விளம்பினார்கள். சாந்தர் முதலிய சைவமதத்தோரும் அவ்வித பந்தயத்துக்கு அங்கீகாரம் அளித்தனர்,

இவ்விதமாய் அவ்விரு மத வாதிகளும் சம்மதிக்கவே மத்தியஸ்த பதவியில் விளங்கும் அக்கபிலபுர மன்னன் பக்ஷபாதம் இல்லாத காவலாளிகளை நான்கு புறத்திலும் நிற்கச்செய்து தேவதாரு, கதிரம், நிம்பம், நீபம் முதலிய மரக் கட்டைகளினால் செந்தீயை வளர்த்து அத்தீயினால் இருபத்து நான்கு லோஹபடிகளைக் கொதிக்கும்படி செய்து முதலில் அர்ஹமதத்தோரில் ஒருவரை அப்படியில் ஏறும்படி உத்திரவு அளித்தான். அக்கினிச்சுவாலையினால் கொதிப்புண்டிருக்கும் அவ்வண்ணமே அப்படிகளில் ஏறச் சம்மதித்த அப்புற மதத்தோன் தமது பொய்த் தேவதைகளைத் தியானம் செய்து கொண்டே முதல் படியில் பாதத்தை வைத்து, இரண்டாவது மற்றொரு பாதத்தை வைக்கும்பொழுது ஆ! ஆ! இவ்வக்கினி ஜ்வாலையின் வேகத்தைச் சகிக்க முடியாது. என் செய்வேன் என்றலறி வீழ்ந்தான். அதை கண்ட புறச் சமயிகளில் மற்றும் பலர் மிகவும் தைரியத்துடன் துணிந்து மூன்று நான்கு படி வரையில் சென்று ஓய்ந்தேன் என்று வாடிய முகத்துடன் திரும்பலாயினர். மற்றும் சிலர் வெகு தூரத்திலிருந்தே அப்படிகளில் வீசும் ஜ்வாலையைக் கண்டு பயந்தனர். சிலர் தமது மதம் பொய் மதமாகுமென்று நினைத்தனர். மற்றும் சிலர் தீர்க்காலோசனை செய்யாமல் இவ்விதமாய் பந்தயப் பொருள் அமைத்துக் கொண்டது தமது மூடத் தன்மையேயாகுமென்று கதறினார்கள். அப்புறச் சமயிகள் இவ்வாறு படிகளின் தோற்றத்தைக் கண்டு அஞ்சி நடுங்குகையில் சாந்தர் என்னும் சிவபக்த சிகாமணியுடன் பின்சென்ற சில சிஷ்யர்கள் அவ்வண்ணமே பயத்தையடைந்து முகம்

வாடலாயினர். அத்தருணத்தில் அவ்வந்தணோத்தமர் ஆசனம் செய்து கிழக்கு முகமாய் வீற்றிருந்து பிராணாயாமத்தையும் நிறைவேற்றித் தனது மனத்தில் கைலாசபதியைத் தியானித்தார். அப்பொழுது லீலா ரசிகனாகிய திருவாரூர் செல்வன் அவரது மனக்கமலத்தில் தோன்றி ஓ! புண்ணிய சீலனே! நீர் பயப்படவேண்டாம்! உமது பக்தியைக் கண்டு களித்த நான் நீர் இவ்வளவு காலமாய் உரைத்து வரும் எனது அற்புத சக்தியினால் அப்படிகளேறி நின்று முகூர்த்த காலம் கடக்கும் வரையில் எனது தத்துவத்தையும் சைவ சின்னத்தின் மகிமையையும் அனைவருக்கும் உபதேசம் செய்வேன். நீங்கள் கேட்டுக் களிப்பீரென்று உரைத்து அக்கணமே வேதியர் போலுருவத்தை யடைந்து சாந்தரது சிஷ்யர்களுடன் கலந்து விளங்கலானார். சாந்தரும் மனோதைரியத்தை யடைந்து முகமலர்ச்சியுடன் விளங்கலானார்.

அத்தருணத்தில் அவ்வர்ஹ மதவாதிகளும், புத்த மதவாதிகளும், மற்றுமுள்ள புறச் சமயிகளனைவரும் அக்னி ஜ்வாலையினால் கொதிப்புண்ட அப்படிகளில் ஏற முடியாமலும், தமது மதச் சிறப்பை உபதேசிக்க முடியாமலும் கருகி வாடிய முகத்துடன் தலைகுனிந்து நிற்கையில் அக் கபிலாபுரீசன் சைவ சமயத்தோர்களை அப்படிகளில் ஏறும்படி கட்டளையிட்டான். அத்தருணத்தில் வேதியருருவமாய் முன்னமே தோற்றியிருந்த பரமேசன் அச்சாந்தருக்கு முன்வந்து நின்று சிவபக்தர்களால் அர்ச்சிக்கப்பட்டவராய்க் கையிலேந்திய கோசத்துடன் அப்படியில் நடந்து சென்று அங்குள்ள ஒரு பலகையில் நின்று கொண்டு முதலில் சைவ மதச் சிறப்பையும் சைவ சின்னச் சிறப்பையும் உபதேசிக்கலானார். அக்னி ஜ்வாலையினால் ஜ்வலித்துக் கொண்டிருக்கும் லோஹப் படிகளின்மீது மெதுவாய் நடந்து செல்வதைக் கண்ட புறச்சமயிகளும், அரசனும் ஆனந்தக் கண்ணீர் மல்க நின்று கைகூப்பி

அவ்வரை வந்தித்தனர். அவர்களின் சரீரத்தில் மயிர்ச் சிலிர்ப்புமுண்டாயிற்று. இச்சிவபக்தரே சிறந்தவர். இவர் கூறும் சிவ தத்துவமே சிறந்தது என்று துதி செய்யத் தொடங்கினர்.

வேதியனுருவமாய்த் தோற்றிய பரமேசன் கேளீர் பக்தர்களே! பஞ்ச பூத ஸ்வரூபியாயும், லோகேசஸ்வரூபியாயும், ஸத்ய ஸ்வரூபியாயும், வேத ஸ்வரூபியாயும் விளங்கும் கைலாசபதியே புண்ணியபுரநாதனுயும், ஐம்புலிங்க ஸ்வரூபியாயும் விளங்குகிருர். இவ்வீசனது மகிமையை முற்றிலும் அறிந்துரைக்க வேதங்களே பின் சென்றன. பரமசிவனது சின்னமாகிய விபூதி ருத்ராக்ஷத்தின் சிறப்பை யுரைக்கின்றேன் கேளீர்! விடியற் காலத்தில் சிவ த்யானத்துடன் எழுந்திருந்து புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து ஈசனிடத்தில் பக்தியை விளைவிக்கவல்ல விபூதியையும் ருத்திராக்ஷ மாலிகைகளையும் தரித்துக் கொண்டு சூரியோபாசனை செய்பவர் யாராயினும் அவர்களது பாவராசிகள் தணியும். சிவ பக்தியும், மதித் தெளிவும், செல்வப் பெருக்கு முண்டாகும். மாலை நேரத்தில் விபூதியையும் ருத்ராக்ஷ மாலையையுமணிந்து கொண்டு ஜெபம் செய்கின்றவர்கள் ஸகல பாபங்களையும் போக்கிச் சுத்தப் பிரம்மத்துடன் ஐக்கியத்தை யடைவார்கள். சைவ சின்னத்தைத் தரித்தவர்களுக்கு அக்னி பயம், சோர பயம், கரி பயம், கால பயம் முதலிய கொடுமைகள் நெருங்கா. சிவநாம கீர்த்தனையினுல் துன்பம் நீங்கும். புண்ணியம் வளர்ந்தோங்கும் என்றிவ் விதமாய் வேதிய ரூபியாய்த் தோன்றியுரைத்த பரமேசன் ஈசுவர மதத்தின் சாரத்தை அவ்வாறு உபதேசிக்கவே அங்குள்ள அரசன் முதலிய யாவரும் அவ்வந்தணரைப் பணிந்து சைவ மதத்தில் பற்றுதலை யடைந்து அவ்வர்ஹ மதத்தோரை துரத்தி விட்டார்கள். அது முதல் இவ் வுலகில் எவ்வித இடருமின்றி வாழ்ந்து வரலானுர்கள்.

## 316. பிரதம கணத்தினால் செல்வம் தூக்கிய லீலை

தியாகராஜனுடைய கடாக்ஷத்தினால் மூவுலகும் மேன்மையுடன் வாழும் நாளில் கலிங்க நாட்டுக் காட்டி லிருக்கும் சோரர்களில் ஒருவன் மற்ற சோரர்களை அன்பு டனழைத்துச் சுற்றிலும் உட்கார வைத்துக் கொண்டு ஓ! தோழர்களே! கேளீர்! இப்பொழுது சில வருஷ காலந்தொடங்கி உங்களது விருப்பம் போலவே நான் பல நாடுகளில் நுழைந்து பொருள் தேடி வந்தேன். சிற்சில நகரங்களில் நான் இரவில் பொருளைக் கவர வேண்டி நெருங்குகையில் தியாகராஜ தெய்வத்தின் பக்தியை உறுதுணையாகக் கொண்டால் அவர்கள் எவ்வித காரியங்களிலும் பயனை அடைவார்களென்று ஜனங்கள் உரைத்துக் கொண்டிருப்பதை நான் பலவாறு செவியுற்றி ருக்கிறேன். ஆதலால் நேற்று மாலை நேரத்தில் நாம் யோசனை செய்தது போலவே இக்கலிங்க நாட்டு அரசனது மாளிகையிலுள்ள பொருள்களை நாம் கவர்வதற்கு முன்னமே உலகம் ஏற்றும் அத்தியாகராஜனையே நாமும் பணிந்து வேண்டிச் செல்வோமென்றுரைத்தான். அது கேட்ட அவனது தோழரனைவரும் அவ்வாலோசனைக் கிணங்கி ஈசனைக் குறித்துத் தேங்காய் உடைத்துக் கர்ப்பூ ரார்த்திகை செய்து அவ்வனைவரும் தென்றிசை நோக்கி அத்திசைக்கும் அவ்வீசனுக்கும் வந்தனை செய்து ஓ! பரமசிவமே! நாங்கள் இன்றிரவில் அரசனது மாளிகையுள் புகுந்து அங்குள்ள பொருள்கள் யாவையுமிடரின்றிக் கவர் வோமாகில் அப்பொருளில் நான்கிலொரு பங்கு உமக்கு அளிப்போமென்று வாக்குரைத்து விட்டு அன்றிரவில் அந்நாட்டு அரசன் மாளிகையில் நுழைந்தார்கள்.

அச்சோரரனைவரும் நாம ஸங்கீர்த்தனம் செய்து திசை நோக்கிக் கும்பிட்டு எழுந்து பிரார்த்தனை செய்து கொண்டு சென்றமையால் அவர்களை நல்வழிக்கு இழுத்து வரக்

கருதிய தியாகேசர் அன்று அவர்களுடைய மனோரதம் பலிக்குமாறு கருணை புரிந்தார். அத்தகைய பரமேசனது கடாக்ஷத்தினால் அச்சோரரனைவரும் அப்பூபாலனது மாளிகையிலுள்ள நற்பொருள்கள் யாவையும் அன்றிரவே கைப்பற்றிக் கொண்டு தமதிருப்பிடமடைந்து மலைச் சாரின் ஒரு குகையினுள் அவைகளை வைத்து அக்குகையின் வாயைக் கற்பாறையினால் மூடி விட்டுத் தமது வாஸ ஸ்தலமடைந்து உண்டு வீடாய் தீர்ந்து அவ்வீசனது தயையினால் தமக்குத் துன்பமின்றிப் பொருள் கிடைத்தமையைப்பற்றி அவ்வீசனைப் பலவாறு புகழ்ந்துகொண்டே காட்டில் திரியலானார்கள். அவர்கள் இவ்வாறு தினந்தோறும் திரியுந்தருணத்தில் தியாகேசனுக்கு அளிப்பதாய் வாக்களித்த நான்கிலொரு பங்கை ஈசனிடம் சேர்க்க வேண்டும் என்னும் ஞாபகத்தையே நாளடைவில் மறந்தனர். ஜாதியின் குறைவினாலும், நாடோறும் செய்துவரும் பாபத் திரளாலும், ஞாபகக் குறைவையும், புத்தி மாறுதலையும் அடைந்த அவ்வன சோரர்களுக்கு நன்மையளிக்கக் கருதிய தியாகேசர் ஒருநாள் ஒரு வேடன் போல் உருவமெடுத்துக் கொண்டு அவர்களது எதிரில் நின்று சோதிட பலனுரைப்பவர்போல் நீங்கள் ஒரு புருஷனுக்கு ஏதோ ஒரு பொருளைக் கொடுப்பதாய் வாக்களித்து அதை அவ்வண்ணம் செலுத்த ஞாபகக் குறைவை யடைந்திருக்கிறீர்கள். அவ்விதச் செயல் உங்களுக்கு நன்மையளிக்காது என்றுரைத்த போதிலும், புத்தியின்மையால் அச்சோரர் யாவரும் ஈசனுக்கு அளிக்க வேண்டிய நான்கில் ஒரு பாகத்தை மூன்று வருஷம் வரையில் அளிக்கவேயில்லை.

நெடுநாள் வரையில் அவர்களுடைய நன்மைக்காக அவர்களது குற்றத்தை மன்னித்திருந்த போதிலும் அவர்கள் அப்பொருளை அளிக்காதபடியால் அவர்களின்மீது சினங்கொண்டு ஒரு நாள் இரவில் தனது பிரதம கணத்

தாரை ஏவி அவர்கள் அம்மலையின் குகையில் ஒளித்து வைத்திருக்கும் பொருள்கள் எல்லாவற்றையும் அன்றிரவி லேயே கவர்ந்து கொண்டார். மறுநாட் காலையில் சோரன் ஒருவன் ஏதோ ஓர் விதமாய் மனக்கவலை யடைந்து அம்மலை யின் குகையையுற்று நோக்குகையில் அங்கு அன்னியர்கள் பாதக் குறிகள் தென்பட்டன. தாங்கள் நெடுநாளாய்க் குவித்து வைத்திருக்கும் திரவிய ராசிகள் யாவும் அபகரிக்கப் பட்டிருப்பதை மற்றவர்களுக்குத் தெரிவித்து வெகு கோபத் துடன் விரைவாய் அங்குமிங்கும் தேடி ஓடி வருகையில் ஓரிடத்தில் திரவியங்களுள் ஒன்ருகிய பவழ மாலை வீழ்ந்து இருக்கக் கண்டார்கள். அவ்வழியே செல்லுகையில் மற்ருெரு ஆபரணத்தைக்கண்டு அவ்வழியே தென் திசையை நோக்கிச் செல்லுகையில் மற்ருெரு நன்மணிபாரத்தைக் கண்டார்கள். அவ்வழியைப் பற்றிக் கொண்டு அநேக நதிகளையும், வனங்களையும், பட்டணங்களையும் கடந்து முடிவில் புண்ணியபுரியை அடைந்தார்கள். அவர்கள் அவ்வாறு அந்நகரில் நுழைந்தவுடனே பரமேசனது கருணை அவர்களின்மீது விழுவே அவர்களுக்கு ஞானோதயமுண்டா யிற்று. அப்பொழுது தியாகேசனின் மகிமையை யறிந்து கொண்ட அச்சோரரனைவரும் கமலையில் நீராடி ஈசனது திருக்கோயிலை யடைந்து வலஞ்செய்து ஸன்னிதானத்தை யடைந்து எங்கள்மீது கருணை புரிந்த கற்பகமே என்று ஈசனைத் துதித்தார்கள்.

—(※)—

## 317. காட்டில் தர்சனம் காட்டிய லீலை

சோரர்களெல்லாரும் அத்திருவாரூர் நகரின் சிறப் பையும், ஈசனது திருக்கோயிலின் அழகையும், தியாகேசன் தமது செல்வத்தை அம்மலையின் குகையிலிருந்து அற்புத சக்தியினுல் கவர்ந்து ஓரிடத்தில் குவித்து வைத்திருக்கும் விமரிசையும் கண்டு வியப்படைந்தவர்களாய்த் துதித்துப்

போற்றி மெய்மறந்து பரமானந்தமடைந்து நிற்கிறார்கள் என்று இவ்விஷயத்தை அப்பொழுதே ஆகாயவாணியினால் அறிந்து கொண்ட சோழன் அத்தருணத்தில் வேட்டையை முடித்துக் கொண்டு விரைவாக ஈசனது திருக்கோயிலை அடைய வேண்டும் என்னும் ஆவலுடையவனாய்க்கொண்டு தான் ஏறிச் சென்ற குதிரையை விரைவாகத் திருப்பலானான். அவ்வாறு சோழ அரசனால் திருப்பப்பட்ட குதிரையானது வெகு வேகமாய் ஓடி வருகையில் வழியானது மாறி விட்டது. வழி மாறுதலையடைந்த அக் குதிரையும் அக்காட்டில் கிழக்கிலும், மேற்கிலும், தெற்கிலும், வடக்கிலும் இங்குமங்கும் வெகுநேரம் வரையில் ஓடியும் தாவியும், பாய்ந்து சென்ற போதிலும் புண்ணிய புரிக்குச் செல்லும் வழியானது அம்மகாராஜனுக்கு அப்பொழுது தோற்றவேயில்லை சூரிய தாபத்தினாலும் பசியின் கொடுமையினாலும், தாகத்தினாலும், வாடிய சோழன் குதிரையை இவ்வாறு அவ்வன மத்தியில் உழன்று அவ்வரசனது மனதில் அப்பொழுது பயமும் மோஹமும் உண்டாயிற்று. அதைத் தணிக்கும் பொருட்டும், தனக்கு நல்வழியை யளிக்கும்பொருட்டும் அம்மன்னவன் இவ்வாறு தியாகராஜனைத் துதி செய்யலானான்.

ஓ பரம்பொருளே! தியாகேச! தொண்டர்களின் பயத்தை நீக்கும் சுடர்மணியே! ஞான ஸ்வரூபியே! நான் வேறு கதியற்றவனாய் இப்பொழுது பாதகமலத்தையே சரணமாகப் புகுந்தேன். எனக்கு நன்மையளிப்பது உமது திருவருளுக்கழகேயாகும். உமது பாத கமலத்தைச் சரணெனப் பற்றிய பூர்வீகர் யாவரும் உமது லீலா விசேஷத்தினால் நன்மையை யடைந்ததாய்த் தொண்டர்கள் கூறும் மொழியை உண்மையாகச் செய்து இத்துன்பத்தி லிருந்து என்னைக் காத்தருள்வது உமது கடமை என்று துதிசெய்து அலறலானான். அச்சோழன் காட்டில் இவ்விதமாய் பரமேசனது பாதகமலத்தை மனத்தால் தியானித்துக்

கொண்டு துதிசெய்கையில் அவனது அழு குரலைக்கேட்டு எழுந்த தியாகேசன் அவனது எதிரில் தோன்றி ஓ சோழ பூபாலனே! நீ ஏன் அங்குச் செல்கிறாய்! இவ்வழியாய் செல்வாயாகில் நீ வெகு சீக்கிரத்தில் புண்ணியபுரியை யடைவாய்! என்றுரைத்து மறைந்தார்.

அவ்வுரையைக் கேட்ட மகாராஜன் அக்குதிரையின் மீதிருந்தவாறே அச்சொல் வந்த வழியைத் திரும்பிப் பார்க்கையில் தமது குல தெய்வமாயும், தொண்டர்களின் துன்பத்தை விலக்குவதையே விரதமாகக் கொண்டவ ராயும் விளங்கும் தியாகராஜனது திருமேனி தோற்றக் கண்டான். நம்மீது கருணை செய்த பரமேசன் நமக்கு நல்வழியைக் காட்டி நிமிஷ நேரத்துக்குள் மறைந்து விட்டாரே! இவ்வீசனது திருவுருவை நாம் உற்று நோக்க வில்லையே; ஆ! ஆ! இஃதென்ன ஆச்சரியமென்று ரைத்தான். அவ்விதமாய் அவ்வீசன் க்ஷணகாலம் தோன்றி வழியைக் காட்டிய பிறகு அவனது கண்களுக்கு மறைதலை யடைந்த போதிலும், கண்ணாடியின் எதிரிலுள்ள பொருள் போல் அவனது மனதில் சற்று வாடிய சரீரத்துடனும், அழகிய கண்களுடனும், தாமரை மலரைப் பழித்த முகத் துடனும் தோன்றலானார். அச்சோழபுரந்தரன் இவ்வண் ணமாய் தனது மனதில் தோற்றும் ஈசனைத் தர்சித்துக் கொண்டே குதிரையின் வேகத்தைச் சற்றுக் குறைத்துக் கடிவாளத்தினால் அடையாளம் செய்து அப்புரவியை வாயு மூலை வழியாய் நடத்தலானான்.

அவ்வழியை பற்றிப் பற்றிச் சென்ற அக்குதிரையும், அம்மகாராஜனை முதுகில் தரித்துக் கொண்டே முகூர்த்த காலத்துக்குள் விரைவாய்ப் பாய்ந்து ஓடித் தியாகேசனது கோபுர வாயிலில் வந்து நின்று அயர்ச்சியை யடைந்தது. அக்குதிரையிலிருந்து கீழே இறங்கிய சோழனானவன் அஞ்சலி புடத்துடன் ஈசனது சன்னிதானத்தை யடைந்து சற்று நேரத்துக்கு முன் காட்டில் தர்சனமளித்த லீலையின்

சிறப்பைப் புகழ்ந்து பணிந்து துதிசெய்கையில் தியாகேசன் சென்ற இரவில் அச்சோரர்களின் பொருளைப் பிரதம கணத்தினால் எடுப்பித்து வந்த லீலையின் சிறப்பையும் ஆகாயவாணியினால் அறிந்து கொண்டு வியப்படைந்திருக்கையில் அப்பொழுதே ஈசனருளால் நன்மதியடைந்த அச்சோரர்கள் எல்லோரும் தமது பொருளை ஈசனுக்கே அளிப்பதாக வாக்குத் தானம் செய்து அது முதல் சிவ பக்தர்களாய் விளங்கலாயினர்.

## 318. மணக்கோலம் காட்டிய லீலை

கார்த்திகை மாதத்தில் தியாக கற்பகத்தின் திருக்கோயிலில் கிருத்திகா தீபத் திருவிழாவானது சிறப்புடன் நடைபெறலாயிற்று. அத்திருவிழாவில் ஈசனைத் தர்சிக்க வேண்டுமென்று எண் திசைகளிலிருந்தும் கணக்க தொண்டர்கள் திருவாரூர் நகரில் வந்து கூடி பரமேசனது தர்சனத்தைப் பெற்று மகிழ்ந்தார்கள். அவ்வித பக்தர்கள் கூட்டமாய்க் கூடியிருக்கையில் அவர்களுக்குத் தியாகராஜனது திருக்கலியாணச் சிறப்பைப் பூர்வ புராணங்களிலிருந்து படித்துக் காட்ட வேண்டுமென்று கருதிய வேதியர் ஒருவர் ஒருநாள் தியாகராஜனது ஆலயத்திலுள்ள ஒரு மண்டபத்தில் அத்தொண்டர்கள் அனைவரையும் அழைத்துக்கொண்டு கமலநாயகி தேவியாருக்கும், தியாகராஜனுக்கும் ஆதி காலத்தில் நடந்த திருக்கலியாணச் சிறப்பை ஸாங்கோபாங்கமாய்ப் புராண வாசகங்களினாலேயே படித்துக் காட்டலானார். கல்வியினாலும், ஈசுவர பக்தியினாலும் மேன்மையடைந்த அவ்வேதியர் இவ்வாறு அங்கு வந்து கூடிய பக்தர்களுக்குத் தியாகராஜனது திருக்கலியாணச் சிறப்பை புராண படனத்தினால் உபந்யாஸம் செய்கையில் அந்தக் கதையின் ரஸத்தினால் அசைவற்ற மனம் பெற்ற ஜனங்கள் யாவரும்

எழுதிய சித்திரங்களைப் போலவே தோன்றினார்கள். அவ் வேதியரது சபையில் சோழ பூபாலனும், மந்திரிமார்களும் பக்தர்களும் நிறைந்திருக்கையில் அவ்வேதியருரைத்த தியாகேசனது கலியாண உருவத்தை ஒவ்வொருவரும் தமது ஞானக் கண்களினால் கண்டு தரிசிக்கலாயினர்.

அவ்வித ஜனங்கள் யாவரும் தனது திருக்கலியாண கதா ப்ரஸங்கத்தில் அசைவற்ற மனதுடன் அமர்ந்திருப் பதையும், அவர்களது பக்தியையும் கண்டுகளித்த தியாக ராஜன் அப்பொழுது அவர்களின் கண்களுக்குத் தனது மணக்கோலச்சிறப்பை மறுபடியும் காண்பிக்கவேண்டு மென்று கருதியவராய்க் கமலநாயகி தேவியாருடன் முன்பு திருமணம் நடந்தபொழுது எவ்வாறு அழகு தனது திரு மேனியில் தோன்றிற்றோ! அவ்வழகே மீளவும் தோற்றக் கடவதென்று சங்கற்பம் செய்துகொண்டு அவ்விதமே அங்குள்ள பக்தர்களின் கண்களுக்கு அழகிய அணிகளுட னும் ஆடையுடனும் விளங்கும் தனது மணக்கோலச் சிறப்பை ஆகாயத்தில் காட்டியருளினர். லோக தம்பதி களாகிய தியாகராஜனும், கமலநாயகி தேவியாரும் ஆதி காலத்தில் அனுபவித்த திருக்கலியாண அழகை இப்பொழுது மறுபடியும் நமது கண்களுக்கு காண்பிக்கும் இத்தியாகராஜனது அருளே திருவருள். இந்தத் தர்சனமே நமக்குச் சிறந்த செல்வம். இந்த லோகதம்பதிகளின் திருமணக்கோலச்சிறப்பை மறுபடியும் காணப்பெற்ற நமக்கு இவ்வுலகில் இனி யாது குறை? இனி நமக்குச் சன்மமே உண்டாகாது. இவ்வந்தணோத்தமர் இப்புராண வசனங்களைப் படித்து ஈசனது திருவடியினழகை நமக்கு எவ்வாறு விளக்கினரோ அவ்வண்ணமே தியாகேசனும் அம்பிகாதேவியும் நமக்கு இங்குத் தர்சனமளிக்கிறார்களே என்று இவ்விதமாய் அத்திருமணக் கோலத்தைக்கண்டு களிகூர்ந்த ஜனங்கள் யாவரும் பரமானந்தமடைந்து துதி செய்கையில் அவ்வாறு ஆகாயத்தில் தோன்றிய

தியாகேசனது திருவுருவமானது மறுபடியும் மறைந்து விடவே அவர்களெல்லோரும் ஈசனுக்கு இதுவுமோர்லீலையே என்று புகழ்ந்துகொண்டு அவ்வந்தணோத்தமரைப் பணிந்து தமது மனதிலீசனது வடிவமுந் தோற்றும்படி செய்ததற்கு கைம்மாறு யாது அளிப்போமென்று புகழ்ந்து சிலநாள் வரையில் அவ்வீசனது திருமேனியைத் தர்சித்துத் தமது மனோரதங்களையடைந்து களிப்புடன் தமதிருப்பிடம் அடைந்தார்கள்.

—(o)—

## 319 ஸத்தியஞ் செய்யப் புகுந்தவனையழித்துக்காத்த லீலை

முன்பு ஒரு சமயத்தில் ச்ராவண மாதத்தில் தியாகராஜனது திருமேனிக்குக் குளிர்ச்சியையுண்டுபண்ணத் தகுந்ததாய்ச் சிறந்ததொரு திருவிழா நடைபெறலாயிற்று. திருவாரூர் நகரிலுள்ள ஒவ்வொரு மாளிகையின் இரண்டு பக்கங்களிலும் ஸுவர்ணகும்பத்தைப் பூர்ணகும்பமாக வைத்தார்கள். பற்பல புஷ்பங்கள் நிறைந்த தோரணங்களை வீதிகளில் கட்டினார்கள். தியாகராஜன் செல்லும் வீதிகளில் புதிதாய் மலர்ந்த மலர்களைப் பரப்பினார்கள். பன்னீர்த் துளிகளை வீசி நிறைத்தார்கள். இவ்விதமாய் அந்நகர வாஸிகள் யாவரும் வெகு குதூகலத்துடன் ராஜவீதிகளை யலங்கரித்தபிறகு காகளம், பேரிகை, மிருதங்கம், பணவம், மத்தளம் முதலிய மங்கள வாத்தியத்துடனும் வேதியர்களின் வேத கோஷத்துடனும் பக்தர்களின் துதிகோஷத்துடனும், பரம்பொருளாகிய தியாகராஜமூர்த்திக்கு வீதிப் பிரதக்ஷிணத்திருவிழா நடத்துகையில் அவ்வீசனைத்தர்சிக்க வேண்டிய பரபரப்பினால் அந்நகரிலுள்ள ராஜகுமாரியின் கையிலிருந்த மோதிரமானது நழுவிப்பூமியில் வீழ்ந்தது.

அத்தருணத்தில் அதைப்பார்த்த ஒரு துஷ்டன் மெதுவாக அவ்விடத்தையணுகி அம்மோதிரத்தை எடுத்துத் தனது கையிலணிந்துகொண்டான். அம்

மோதிரமானது அத்துஷ்டனது விரலுக்குப்பொருந்திய வாறு அமைக்கப்பட்டதுபோல் விளங்கிற்று. அதனால் அவனது மனம் மாறுதலையடைந்து அப்பொருளைத் தானே அடையக்கருதியவனாய் அவ்விஷயத்தைப் பிறருக்கு அறிவிக்காமலும் அவ்விதமாய் வீதியில் செல்லும் அவ்வீசனைத் தர்சிக்காமலும் கபடத்தினால் அப்பொருளை மறைத்துச் சென்று ஒரு வைச்யனது மாளிகை வாயிலையடைந்து அம் மோதிரம் தனக்குக் கிடைத்த விஷயத்தைப்பற்றித் தனது ஜாதகபலனைப் புகழ்ந்தும் பலவாறு ஆலோசனைசெய்து கொண்டுமிருந்து அன்றிரவின்நடுவில் அயர்ந்து நித்திரையை அடைந்தான்.

பக்தர்குழாங்களின் மனோரதத்தைப் பூர்த்திசெய்து கொண்டே ராஜவீதிகளில் சென்ற தியாகராஜன் தனது திருக்கோயிலினுட்புகுந்து அக்காலத்துக்குரிய பூஜை, நைவேத்யம், துதி, கானம், மங்களமுரைத்தல் முதலிய மங்களகாரியங்களைப் பெற்றுக்கொண்டு பரஞ்சோதியாய் விளங்கியபிறகு அன்றிரவிலேயே தியாகேசன் அச்சோழ பூபாலனது கனவில் தோன்றி ஓ பூபாலனே! உனது பெண்ணின் கையிலிருந்து நழுவிய விலையற்ற நன்மணி மோதிரத்தைக் கவர்ந்த துஷ்டன் ஒரு வைச்யனது வாயிலில் படுத்துறங்குகிறான். நீ அவனை எழுப்பி அவனுக்கு நன்மதி யுரைப்பாய் என்று கட்டளையிட்டார். விடியற்காலையில் கண்விழிப்பையடைந்த பூபதியானவன் தியாகேசன் தனது கனவில் தோன்றியுரைத்ததை நினைத்துக்கொண்டு வீரர்களை அனுப்பி அத்துஷ்டனைத் தனது எதிரில் கொண்டு சேர்க்கும்படி உத்தரவளித்தான். அவ்வீரர்களும் அவ் வைச்யனது வீட்டின் வாசலினையடைந்து அங்கு படுத்துறங்கும் அத்துஷ்டனை யெழுப்பிப் பயமுறுத்தி அம் மோதிரத்தையபகரித்த சோர! வருக என்று இழுத்துக் கொண்டு அவனை ராஜனுக்கெதிரில் அழைத்துவந்தார்கள். ராஜசபையிலிருந்த மந்திரிமார்களால் விசாரணை செய்யப் பட்ட அத்துஷ்டன் அம்மோதிரம் தன்னுடையபொருளே

என்றுரைத்து அவ்வித அஸத்தியமொழியை ஊர்ஜிதப் படுத்தவும் முயன்றான்.

அத்தருணத்தில் சகல ஜனங்களின் ஆத்ம ஸ்வரூபி யாய் விளங்கும் தியாகராஜன் அவனது துர்க்குணத்தை அழிக்க விரும்பியவராய் அவன் கையில் அணிந்திருக்கும் அம்மோதிரமானது அவனது கண்களுக்குச் சற்று நேரம் மோதிரம் போலவும், சற்று நேரம் கொடிய நாகம் போல வும் தோன்றும்படி செய்தார். அது தனது விரலில் நாகமாய்த்தோற்றும் சமயத்தில் ஐயோ ! என் செய்வேன் ! எனது விரலை ஒரு கருநாகம் சுற்றுகிறதே ! என் செய்வேன் என்றுரைத்துக் கொண்டு பயந்து நடுக்கமுற்றான். அதைக் கேட்ட சபையோர் சற்று வியப்பையும் துக்கத்தையும் அடைந்தனர். அவன் சற்று நேரம் சென்ற பிறகு அந் அந்நாகமே இவ்வழகிய மோதிரமாய் விளங்குவதைப் பாருங்கள். இது என்னுடைய பொருளே யாகும் என்று ரைத்தான். இவ்வண்ணம் அவன் மாறி மாறி யுரைப்ப தைக் கேட்டிருந்த அமைச்சர் முதலியவர்கள் இவன் பொய்யுரைக்கிறான். இவனது கண்களுக்குச் சற்று நேரம் நாகம் போலவும், சற்றுநேரம் மோதிரம் போலவும், தோற் றும்படி செய்வது தியாகராஜனது சங்கற்பமாகவே யிருக் கலாம். ஆதலால் இவனை தியாகராஜமூர்த்தியின் எதிரில் நிற்கச் செய்தால் உண்மை விளங்கும் என நிச்சயித்து அவ்வாறே அவனை ஈசன் முன் பணியச் செய்யவே அவன் அவ்வீச மூர்த்தியைக் கண்களால் கண்டவுடனே அவனது மனதில் ஞானமுண்டாயிற்று. அதனால் இஃது எனது மோதிரம் அல்லவே; நான் ஏன் இதைத் தரித்துக்கொள் கிறேன் என்று அதை வீசி எறிந்த பிறகு தனது மனதுக்கு நற்பொருள் விளங்குமாறு அருள்புரிவீரென்று தியாகேசனை வேண்டித் துதி செய்யலானான். அதைக் கண்ட ராஜனும் அவனது குற்றத்தை வெளியிடச் செய்த தியாகேசனையே ஸத்திய தெய்வமென்று துதி செய்து மகிழ்ந்தான்.

## 320. சாஸ்திரார்த்தங்களை வெளியிட்ட லீலை
## 321. வேதியருக்குச் சாப சக்தியளித்த லீலை

திருவாரூரில் விளங்கும் கமலாலயக் கரையில் அப்பொழுது உண்டாகும் சூரிய க்ரஹண புண்ணிய கால ஸ்நானத்துக்காக அங்கு வந்து கூடிய அநேக மஹரிஷிகளும், வேதியர்களும், மற்றுமுள்ள வர்ணத்தார்களும் நிறைந்து விளங்குகையில் அப்புண்ணிய காலத்தில் அங்கு ஸ்நானம் செய்ய வந்த ஒரு கிழ முனிவர்போல் தோற்றிய பரமேசன் அவர்களின் மீது கருணை கூர்ந்து சாஸ்திர தத்துவங்களையும் உபதேசிக்கத் தொடங்கினர்.

கேளீர்! பரமேச பக்தர்களே! எப்பொருளானது மிகவும் கஷ்டமடைந்த போதிலும் அடையத் தக்கதல்லவோ காண்பதற்கரிதோ; வாயினால் உரைப்பதற்கு ஒவ்வாதோ; அச்சிறந்த பொருளையும் யோகத்தினாலும் தவத்தினாலும் அடையலாம். ஐம்புலன்களை வென்று நன்மை தீமைகளின் இயல்பை யறிந்து கொண்டு பர தத்துவத் தியானம் செய்பவனே இவ்வுலகில் சிறந்தவன். ஸதாசாரங்களுடன் கூடியவனாய் மகா புருஷ லக்ஷணம் நிறைந்திருப்பவனே பரம்பொருளின் தர்சனத்தை யடைவான். அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பொருள்களின் இயல்பைச் சாஸ்திரபடனத்தினால் அறிந்து கொண்டு அதுபோல் இருத்தல் வேண்டும். அவைகளில் நான்காவதாகிய மோக்ஷத்தின் சிறப்பைக் குருவின் உபதேசத்தினாலேயே நன்கு அறிந்து கொள்பவரே வேதியர் எனப்படுவர். அவர்களே புண்ணிய சீலர். குருமார்கள் நற்சிஷ்யரிடத்தில் கல்வியாகிய பயிரை வளர்க்க முயல்வார்கள். தக்க சமயங்களில் தேவர்களைப் பூஜிக்க வேண்டும். மகரிஷிகளின் அருளைப் பெறுவதற்கு முயற்சி செய்பவரே சீக்கிரமாய்ப் பர தத்துவச் சிறப்பை யறியக் கூடும். பகைக் குணமாகிய காம மோகங்களை யடக்கி மனக் கமலத்தில் சதாசிவ மூர்த்தியைத் தியானிப்பவர்கள் சூரியனெனத்

தொழப்படுவார்கள். நற்புத்தியுடையவன் தர்மத்துக்குப் பகையான வழிகளில் செல்லலாகாது. வேதங்களையும், வேதார்த்தங்களையும் கற்றறிந்து கொண்டு தர்ம முறையில் தங்கி யிருத்தல் வேண்டும். பிராம்மணர்கள் ஞான மார்க்கத்தில் நிலை பெற்றிருப்பதும், க்ஷத்திரியர் ப்ரஜா ரக்ஷண முறையிலிருப்பதும், வைச்யர் வாணிக முறையிலிருப்பதுமே வேதத்தின் கருத்து. பித்ருக்களுக்கு நன்மையளிப்பதற்காகவே புத்திரர்களை அடைய வேண்டும். காமத்தினால் எவ்வித காரியங்களையும் செய்யலாகாது. அவ்வப்பொழுது புத்தியை மீறி நேரிடும் பாவங்களுக்குப் பிராயச்சித்தம் செய்தலே தர்ம சாஸ்திர முறையாகும். குல குருவை முன்னிட்டுக் கொண்டு வேதத்திற் கூறிய கர்மாக்களை நிறைவேற்றுபவரே நற்பதவியை அடைவார்கள். யோகத்தினாலும், தவத்தினாலும், பக்தியினாலும், சதாசிவ மூர்த்தியைக் காணலாம். நான்கு வர்ணத்தோடும் தமது குல காரியங்களைமீறி நடவாமலிருத்தலே சிறந்த தவமாகும். பதிதர்களையும், துஷ்டர்களையும், பாபிகளையும், வேதத்தை பழிப்பவர்களையும் கண்டால் சூரிய தர்சனத்தையாவது, ஸ்நானத்தையாவது செய்தலே நன்மையின் பொருட்டு ஆகும்.

உபநிடதங்களின் அர்த்தங்களையும், புராணங்களையும் அவசியம் அறிதல்வேண்டும். மகாதேவனையே பரம் பொருளாகப் பஜிக்கவேண்டும். அதிதிகளையும், யாசகரையும் பங்கப்படுத்தல், கொடியபாவத்தை வளர்க்கும். சாஸ்திரஞானமே சகலபாவங்களையும் ஒழிக்கும். நிந்திக்கத் தகுந்த காரியங்களை மனதினாலும் நினைத்தலாகாது. எவ்வித காரியங்களையும் தக்ககாலத்திலேயே செய்ய வேண்டும். அகாலத்தில் செய்த காரியங்கள் யாவும் ஊஷர பூமியில் வர்ஷித்த மழைபோல் ஆகும். குருவின் உபதேசத்தைப் பெற்றுத் தத்வத்தையறிந்து அகங்காரம் முதலியவற்றை வெல்பவனே உலகில் சிறந்தவனெனப் புகழப் படுவான். சிவபக்தியை ஹாரமெனப்பூண்டு வருபவர்

களுக்குத் துன்பமே உண்டாகாது. கல்வியைக் கற்றபிறகு குருவின் விடைபெற்றுக்கொண்டே இல்லறத்திலிறங்க வேண்டும். சத்திய வாக்கியத்தை மீறுவாராகில் அதுவே அவர்களின் வினைக்கு முதல் காரணமாகும். சகல பிராணிகளிடத்திலும் சமபுத்தி வைத்தலே யோகியின் தர்மமாகும். பயத்தை யளிப்பவனுமீசனே; பயத்தை போக்குபவனும் ஈசனே; நற்கதியளிப்பவனுமீசனே; துன்பம் துடைப்பவனும் சதாசிவனே என்று இவ்விதமாய் சதாசிவ மூர்த்தியைத் தியானிப்பவர்களே வேதியர் எனப்படுவர். பாவங்களால் அற்பஜன்மமுண்டாகும். அதனால் மேன் மேலும் துன்பங்களையே அடையநேரிடும். பூர்வஜன்ம பாவராசிகளால் இவ்வுலகில் பக்ஷிஜாதியில் ஜனித்திருக்கையில் சிற்சில நற்காரியங்களைச் செய்தால் மறுஜன்மத்தில் அப் பக்ஷியின் ஆன்மாவானது மனித சண்டாள குலத்தில் ஜனிக்கும். பிறகு முறையே சூத்திர, வைச்ய, க்ஷத்திரிய, அந்தண குலத்தில் ஜனிப்பார்கள். எவ்வித ஜாதியில் ஜனித்திருந்தபோதிலும் தூய மனத்தையும், களங்கமற்ற சிவபக்தியையுமடைவாராகில் அவர்களுக்கே கைலாஸபதவி கிடைக்கும். பிராம்மணராய் ஜனித்துக் கொடிய பாவங்களைச் செய்வாராகில் அவர்களுக்குப் பிராயச்சித்தமே அரிது. ஆகையால் மிகவும் துர்லபமாகிய பிராமணத் தன்மையை முறைப்படி காப்பாற்றுவதே சிறந்த காரியமாகும். பிராம்மணர்கள் ஸர்வதேவ ஸ்வரூபியாகிறார்கள் இப்புண்ணியபுரியில் வசிக்கும் பரமேசன் இன்றுமுதல் இங்கு விளங்கும் பிராம்மணர்களுக்கும் நற்தவப்பயனுள்ள பிராம்மணர்களுக்கும் சாபசக்தியை அளிக்கப்போகிறார். தமது ஜாதிக்காவது, தமது தத்துவத்துக்காவது, தேவ தர்மத்துக்காவது துன்பம் நேரிடுமாயின் அவ்வித இடர்களை நீக்கிக்கொள்ளும் பொருட்டும் பரமேசன் சாப சக்தியை அளிக்கப்போகிறார். அகாரணமாய் அகாலத்தில் அந்தணர் யாவரேனும் அவ்வித சாபசக்தியைப் பிரயோகிப்பாராகில் அவர்களின்மீது பரமேசனது கோபாக்னி பாயும்

பாவராசிகள் வளர்ந்து அவர்களை நரகில் ஆழ்த்திவிடும். அவ்வண்ணம் நேரிடாதபடி ஐம்புலன்களை அடக்கவே யாவருக்கும் சிறந்த தவமாகும் தியாகராஜ பக்தியே உறுதுணையாகும் என்று இவ்விதமாய் அம்முனிவர் உரைத்துவிட்டுத் திடீர் என்று மறையலானார்.

அச்சூரிய கிரஹண புண்ய காலத்தில் கமலாலய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வதற்காக வந்து கூடியிருக்கும் மகரிஷிகளும் வேதியர் முதலான வர்ணத்தார்களும் அவர் அவ்வாறு கூறிய பிறகு மறைந்ததைக் கண்டும், அவர் உரைத்த சகல சாஸ்திரார்த்தங்களின் சாரத்தைக் கேட்டும் பரமானந்தத்தையும், வியப்பையும் அடைந்தவர்களாய் அவ்வாறு தோன்றியுரைத்தவர் தியாகராஜனாகவே இருக்க வேண்டுமென்று நிர்ணயம் செய்து பரமேசனைப் பலவாறு துதித்துப் பிறகு புண்ணிய கால ஸ்நானத்தைச் செய்து ஜபங்களையும், தானங்களையும் செய்து நிறைவேற்றி ஈசனை நேரில் பணிந்து மகிழ்ந்தார்கள்.

## 322. வீணாகானம் செவிகொண்ட லீலை

புண்ணியவ்ரத க்ஷேத்திரமென்னும் அத்திருவாரூர் நகரின் வடபாகத்தில் காசியப தீர்த்தமென்றொரு திவ்ய ஸரஸ் உண்டு. முன்பு ஒரு ஸமயத்தில் காச்யப மகரிஷியானவர் அங்கு நிலைபெற்று வெகுகாலம் யோகநிலையில் அமர்ந்திருந்தபடியால் அந்தத்தடாகத்துக்கு காச்யப ஸரஸ் என்று பெயர் உண்டாயிற்று. அவ்வித காச்யப ஸரஸில் ஒருநாள் தேவலோகத்திலிருந்து விமானமேறி வந்த சில தேவமாதர்கள் அதில் ஸ்நானம் செய்து பதுமம் போன்ற இரு கரங்களையும் கூப்பித் தியாகராஜனது திருக்கோயிலைப் பணிந்து அவ்வீசனது திவ்யமூர்த்தியைத் தமது மனத்தில் தியானம் செய்துகொண்டே மீளவும் விமானமேறிச் செல்லு

லாயினர். அவர்களது விமானம் ஆகாயத்தில் சென்று கொண்டிருக்கையில் நாரத மாமுனிவர் அவ்வழியில் குறுக்கிடுவதைக்கண்ட அவர்கள் அவரைப்பணிந்து அப் புண்ணியபுரியின் மேன்மையையும், அதில் விளங்கும் தியாக ராஜனது திவ்ய குணங்களையும் எமக்கு உபதேசிப்பீரென்று வேண்டி நின்றனர்.

அம்மாதர்களது மொழியைக்கேட்ட முனிவரும் நீங்கள் இன்றுமுதல் தினந்தோறும் தியாகராஜனது விமானத்துக்கெதிரில் நின்றுகொண்டு வீணாகானம் செய்வீ ராகில் உங்களது கான ரஸத்தைக்கேட்டுக் களிப்படைந்து அப்பரமேசன் உங்கள்மீது அருள்புரிவார். அப்பொழுது சகல தத்துவங்களும் கையில் கனிபோல உங்கள் மனத்தில் விளங்கும் என்று சுருக்கமாய் உபதேசம் செய்துவிட்டு விரைவாய் வருணலோகத்தைக் குறித்துச் செல்லலானார். நாரதமாமுனிவரிடமிருந்து அவ்வாறு உபதேசிக்கப்பெற்ற அத்தெய்வமாதர்கள் அன்று மாலை நேரத்தில் தேவ லோகத்திலிருந்து மறுபடியும் பூலோகத்தையடைந்து தியாகராஜனது திருக்கோயிலின் விமானத்துக்கு நேராக ஆகாயத்தில் நின்றுகொண்டு வீணையினால் ஈசனது திவ்ய குணங்களைக் கீர்த்தனை செய்யலாயினர். இவ்விதமாய் அத்தெய்வப்பெண்கள் அனைவரும் தினந்தோறும் மாலை நேரத்திலங்குத்தோன்றி இரண்டு முகூர்த்தகாலம் வரையில் இனிய தேவகானத்தினால் வீணையினால் பாடி ஆனந்த நர்த்தனம் செய்து விமானத்தை வலஞ்செய்து செல்ல லாயினர்.

அத்தெய்வப்பெண்களின் இனிய வீணாகானத்தை நெடுநாளாய் கேட்ட தியாகராஜன் ஒருநாள் அவர்களுக்கு அருள் செய்ய எண்ணி ஒரு கந்தருவன்போல் உருவம் எடுத்துக்கொண்டு அவர்கள் வீணாகானம் செய்துகொண்டு இருக்கும் தருணத்தில் அவர்கள் முன் நின்று ஓ சுவர்க்க லோக மாதர்களே! நீங்கள் இந்நாள் வரையில் ஈசனது

திவ்ய குணங்களைக் கீர்த்தனை செய்து வருவதினால் தியாக ராஜனது மனமும், கமலநாயகி தேவியாரின் மனமும் களிப்பை அடைந்தது. அதனால் பரமேசன் நீங்கள் முன்பு நாரதரிடத்தில் விரும்பியது போலவே உங்களது மனத்தில் தியாகராஜ தத்துவமும் இந்த க்ஷேத்திரத்தின் மகிமையும் விளங்குமாறு அருள்புரிவார். மேலும் நீங்கள் இந்நகரின் சிறப்பைக் கண்டு இந்நகரில் மானுஷ மாதர்களாய் ஜனிக்க விரும்புகிறீர்கள் ஆதலால் உங்களது மனக் கருத்துப் போலவே நீங்கள் இப்புண்ணிய பூமியில் ராஜ வம்சத்தில் மானுஷப் பெண்களாய் உதித்து இந்நகருக்கு அதிபதி யாகிய சோழ பூபாலனது அந்தப்புரத்தையடைந்து இத் தியாகராஜனது கலியாணத் திருமேனியை நிரந்தரமாய்த் தரிசித்து மகிழ்வு அடைந்து சில காலம் சென்ற பிறகு மறுபடியும் தெய்வ சரீரத்துடனே ஈசன் அருளால் பொன் னுலகில் வாழ்வீர்கள். உங்கள்மீது தியாகராஜன் இவ்வாறு அருள்புரியப் போகிறார் என்றுரைத்து மறையலானார்.

அவ்வாறு ஒரு திவ்ய புருஷன்போல் தமது எதிரில் தோன்றித் தமது மனக் கருத்து யாவையும் அறிந்து கொண்டு பதிலுரைத்த அப்புருஷன் இவ்விமானத்துக்குள் விளங்கும் தியாகராஜனாகவே இருக்க வேண்டும் என்று நினைத்துக் கற்பக மலர்களால் அவ்வீசனது பாதமலரை அர்ச்சித்துத் திவ்விய லோகத்தை அடைந்த இவ்விஷ யத்தை அங்குள்ளோர்களுக்கு அறிவித்துச் சில வருஷம் செல்வதற்குள் அம்மாதர் அனைவரும் ஈசன் அருளால் பூவுலகில் ராஜகுமாரிகளாய் ஜனித்துச் சிறந்த யௌவ னத்தையடைந்து சோழ சக்ரவர்த்தியின் மார்பை அணைந்து தியாகேச பக்தி நிறைந்த மனமுடையவர்களாய் அத்திருவாரூர் நகரில் வாஸம் செய்யலாயினர்.



## 323. இருபத்து நான்கு மூர்த்தியாய்த் தோற்றிய லீலை.

மற்றொரு சமயத்தில் சூத முனிவரைக் கண்டு பணிந்த நைமிசாரண்ய வாஸிகள் அனைவரும் ஓ முனிச்ரேஷ்டரே ! இதுவரையில் தியாகராஜனது லீலையைக் கேட்டு மகிழ்ந்தோம். கைலாஸ பதியாகிய தியாகராஜன் தக்ஷிண தேசங்களில் பற்பல புண்ணிய க்ஷேத்திரங்களில் பற்பல மூர்த்திகளாய் நின்று விளங்கும் சிறப்பையும் உமது கருணையினால் அறியப் பெற்றோம். திரிலோக நாயகனென்றும், வேதாந்தச் சுடர் என்றும் பசுபதி என்றும் விளங்கும் கைலாஸபதியானவர் ஆரியாவர்த்த தேசங்களில் பற்பல புண்ணிய க்ஷேத்திரங்களில் பற்பல மூர்த்திகளாய் நின்று தோன்றி விளங்கும் சிறப்பை யறிய விருப்பம் கொண்டிருக்கும் எங்களுக்கு உரைக்க வேண்டும் என்று வேண்டி நின்றனர்.

சூத முனிவர் அவர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கிக் கிழக்கு முகமாய் நின்று ஆசமனம் செய்து பிராண தாரணையைச் செய்து சற்றுநேரம் தியாகராஜனது பாதமலரை மனத்தில் தியானித்தார். அத்தருணத்தில் தயாநிதியாகிய தியாகராஜன் அச்சூத முனிவர்மீது தனது கருணையைப் பெருக்கித் தான் முன்பு ஒரு சமயத்தில் ஆரியாவர்த்த பாகத்தில் பற்பல புண்ணிய க்ஷேத்திரங்களில் இருபத்து நான்கு மகாலிங்க மூர்த்தியாய் விளங்கிய தத்துவ ஞானத்தை அளித்தார். தியாகேசனால் பூர்வ ஞானத்தைப் பெற்று மகிழ்ந்த சூத முனிவர் அம் மகரிஷிகளை நோக்கி யுரைக்கலானார். கேளீர் மகரிஷிகளே ! உங்களது விருப்பம் போலவே பரமேசன் ஆர்யாவர்த்த பூமியில் பற்பல லிங்க மூர்த்தியாய் விளங்குவதை நான் ஈசனருளால் உரைக்கின்றேன். அசைவற்ற மனத்துடன் கேட்பீராகில் பரமானந்தம் உண்டாகும். பரமேச மூர்த்தியின் திருவடியும் மனத்தில் விளங்கும்.

(1) புண்ணிய க்ஷேத்திரங்களுள் முதன்மையாகிய காசி நகரில் மகாதேவ லிங்கமூர்த்தியாய்க் கைலாஸபதி விளங்குகிறுர். இந்த லிங்கமூர்த்திக்குக் கங்கை ஜலத்திஞல் அபிஷேகம் செய்துவைக்கும் தொண்டர்கள் இம்மையில் நற்செல்வத்தை அடைந்து மறுமையில் கைவல்லிய பதவியில் விளங்குவார்.

(2) கைலாஸபதி என்னும் தியாகராஜனே கயா க்ஷேத்திரத்தில் பிரபிதா மஹாலிங்க மூர்த்தியாய் விளங்குகிறுர். இம்மூர்த்திக்குத் தொண்டு செய்பவர் பித்ருலோக மேன்மையை யடைந்து நற்புத்திரச் செல்வத்துடன் வாழ்வார்கள்.

(3) புண்ணியபுர நாதஞகிய தியாகராஜனே குரு க்ஷேத்திரத்தில் ஸ்தாணு லிங்க மூர்த்தியாய் ஜ்வலிக்கிறுர். இம்மூர்த்தியைத் தியானிப்பவர் சகல தர்ம பலனேயும் அடைந்து ஈசனருள் பெற்று மேன்மை எய்துவார்கள்.

(4) தியாகராஜனே பிரபாஸ தீர்த்தத்தில் சசிசேகர லிங்க மூர்த்தியாய் விளங்குகிறுர். இவ்வீசனருளால் தொண்டர்களுக்கு ஸர்வ தீர்த்த ஸ்நான பலனுண்டாகும். பாவங்களை நீக்கி வையகமாண்டு வாழ்வார்கள்.

(5) புஷ்கர க்ஷேத்திரத்தில் தியாகராஜனே அறுசக்ர கோணத்தில் அஜகந்தலிங்க மூர்த்தியாய் விளங்குகிறுர். இவ்வீசனது தர்சனத்திஞல் பூமி பிரதக்ஷிண பலனும் கங்கா ஸ்நானம் முதலான புண்ணிய தீர்த்தங்களின் ஸ்நான பலனும் உண்டாகும்.

(6) மகேந்திர மலையில் கைலாஸபதியானவர் மகா விரதலிங்க ஸ்வரூபியாய் விளங்குகிறுர். இம்மூர்த்தியின் தர்சனத்திஞல் நரக பாவங்கள் நீங்கும்.

(7) ஹேமகூட கிரியில் விருபாக்ஷ லிங்க மூர்த்தியாய் விளங்கும் கைலாஸபதியின் தர்சனத்தை அடையும் தொண்டர்கள் இடரின்றி வாழ்வார்கள்,

(8) கந்தமாதன மலையில் புவர்லோக லிங்க ஸ்வரூபி யாய்ப் பிரகாசிக்கும் வேதப்பொருளை பணிய வல்லார் சிறந்த செல்வத்துடன் பூமியில் வாழ்ந்து கைலாய பதவியில் வானோருடன் வீற்றிருப்பார்கள்.

(9) விந்திய மலையின் சிகரத்தில் ஹரிஹர மூர்த் தியாய் விளங்கும் பரஞ்சுடரைக் காணவல்லோர் விண்ணு லகில் வானோர் தொழ இன்பம் எய்துவார்கள்.

(10) கர்ணிகார பர்வதத்தின் சிகரத்தில் கஜாஸுர ஸம்ஹார லிங்க மூர்த்தியாய் விளங்கும் சங்கரனைத் தரிசிப் பவர் இடரின்றி மண்ணுலகில் வாழ்வார்கள்.

(11) கைலாஸத்தில் கிராத மூர்த்தியாய் விளங்கும் பரமசிவனைத் தர்சிப்பவர் சிறந்த செல்வத்தை அடைந்து வானோர் தொழ வாழ்வு எய்துவார்கள். கைலாஸ பீடத்தில் ஜோதிர் மயமாய் விளங்கும் பரஞ்சோதி லிங்க மூர்த்தியைத் தொழுவார்கள்; மேன்மையடைவார்கள்.

(12) நேபாள க்ஷேத்திரத்தில் பசுபதி லிங்க ஸ்வரூபி யாய் விளங்கும் தியாகராஜனைத் தர்சிப்பவர்கள் கனகாபர ணங்களை அணிந்தவர்களாய்ச் சிறப்புடன் வாழ்வார்கள்.

(13) கங்காஸாகர க்ஷேத்திரத்தில் தியாகராஜனே தேவலிங்க ஸ்வரூபியாய் விளங்குகிறார். இவ்வீசனைத் தர்சிப்பவர்கள் உலகில் நற்கீர்த்தியுடனும், மெஞ்ஞானச் சிறப்புடனும் விளங்குவார்கள்.

(14) நாகராஜேசுவர க்ஷேத்திரத்தில் சுயம்பூ லிங்கமாய் விளங்கும் பரமேசனைப் பக்தியுடன் பணிபவர் யாவரும் பாவமின்றி நற்செல்வத்துடன் விளங்குவார்கள்.

(15) ஹரிச்சந்திர க்ஷேத்திரத்தில் ஹரஸ்வரூபியாய் விளங்கும் புவனேசனைத் தொழுவார் மங்களத்துடன் வாழ் வார்கள்.

(16) அம்பிகாபுரத்தில் உமாபதி லிங்க மூர்த்தியாய் விளங்கும் புண்ணியபுரிநாதனைப் பணியவல்லார் மங்கள மெய்திச் சிறந்த சிவ பக்திபுடன் சிறந்து வாழ்வார்கள்.

(17) பிரமாகை க்ஷேத்திரத்தில் உமாமகேசுவர லிங்க மூர்த்தியாய் விளங்கும் சந்திரசேகரனைத் துதி செய்ய வல்லார்கள் சிறந்த சிவ பக்தியையும் பரமேசன் அருளையும் பெற்று உயர் பதவியில் வாழ்வார்கள்.

(18) பரிசுத்த க்ஷேத்திரங்களுள் முதன்மையாக இந்த நைமிசாரணியத்தில் தேவ தேவ லிங்க மூர்த்தியாய் விளங்கும் பரம்பொருளைத் தொழுது ஏத்த வல்லவர் பகைவர் பயமின்றி வாழ்வார்கள்.

(19) மஹாகூடத்தில் விளங்கும் மஹாலிங்க மூர்த்தியை நமஸ்கரிப்பார் யாவரும் எவ்வித பயமுமின்றி நற் புகழுடன் சிறப்பை அடைவார்கள்.

(20) கேதார க்ஷேத்திரத்தில் ஈசான லிங்க மூர்த்தியாய் விளங்கும் பரமசிவனைப் பணிய வல்லார் துக்கமின்றி வாழ்வார்கள்.

(21) கிரிராஜனாகிய இமாலயத்தில் உருத்திரலிங்க மூர்த்தியாய் விளங்கும் தியாகராஜனைத் தரிசிப்பவர் வானுளார் தொழ வையகமாண்டு ஆனந்த பதவியிலமர்ந்து விளங்குவார்கள்.

(22) தேவதாரு வனத்தில் ஸித்த லிங்க ஸ்வரூபியாய் விளங்கும் பரமேசனைத் தியானிக்க வல்லவர் வையக மாண்டு வானோர் பதமடைந்து மகிழ்வார்கள்.

(23) ஸித்தர்கள் தொழுதேத்தும் ஸித்தேசுவர க்ஷேத்திரத்தில் த்வனிலிங்க ஸ்வரூபியாய் விளங்கும் பவானி பதியைப் பணிய வல்லார் நற்பதவியில் வானோர் தொழ வீற்றிருப்பார்கள்.

(24) குமாரவன க்ஷேத்திரத்தில் குமாரலிங்க ஸ்வரூபியாய் விளங்கும் பரமேசனது ஸன்னிதானத்தில் பணிய வல்லோர் பாவங்களைக் களைந்து மன்னர் பதவியில் வாழ்வார்கள். பரம்பொருளாகிய தியாகராஜர் ஆரியாவர்த்த தேசத்தில் இவ்விதமாய் இருபத்து நான்கு முக்கிய லிங்க ஸ்வரூபியாய் விளங்குகிறார், இதுவுமன்றிச் சந்திரசேகர மூர்த்தியாயும், கங்காதர மூர்த்தியாயும், ஸோமாஸ்கந்த மூர்த்தியாயும், மகாருத்ர ஸ்வரூபியாயும், ஏகாதச ருத்திர ஸ்வரூபியாயும், திரிபுராந்தக ஸ்வரூபியாயும், பாணலிங்க ஸ்வரூபியாயும், வாரணாஸி க்ஷேத்திரத்தில் ஸஹஸ்ரலிங்க ஸ்வரூபியாயும் விளங்குவதை நான் உங்களுக்குச் சொன்னேன். தக்ஷிணபதத்தில் விளங்கும் மகாலிங்கமூர்த்திகளின் ஸ்வரூபத்தையும் குற்றமறக் கூறினேன். அசைவற்ற சிவபக்தியுடன் இந்த லீலையை உபாசிப்போர் ஜய லக்ஷ்மியுடனும் அஷ்டலக்ஷ்மியுடனும் அமர்ந்து வாழ்ந்து தியாகேசனருளால் கைவல்ய பதவியையுமடைவார்கள்.

* * *
* * *

## 324. உபசரித்தவனுக்கு உதவி செய்த லீலை.

அம்பிகாபுரியில் சந்தோதேவர் என்னும் பிராம்ம ச்ரேஷ்டர் ஒருவர் இருந்தார். அவர் குருகுல வாஸம் செய்து ஸகல சாஸ்திரார்த்தங்களையுமறிந்து ஸகல பிராணிகளிடத்திலும் ஸமபுத்தியை வைத்து யோகி போல் விளங்கிப் பரோபகாரத்தில் ஆழ்ந்தவராய்ச் சிவபக்தியுடனும் நற்கீர்த்தியுடனும் இல்லறத்தில் வாழ்ந்திருந்தார். அவ்வந்தணரது அந்தக்கரண சுத்தியையும் அவர் செய்து வரும் பரோபகாரச் சிறப்பையும் தியாகராஜர் நன்றாய் அறிந்தவராய் இருந்தபோதிலும் மற்றொருகால் அவரது மனத்தைப் பரீக்ஷை செய்யக் கருதியவராய் ஒரு கிழப் பிராமணன்போல் உருவமெடுத்துக்கொண்டு அவ்வம்பிகா புரத்தின் வீதியில் செல்லலானார்.

அவ்வித பரமேசன் தனது திவ்ய சக்தியினுல் தனது சரீரத்தில் அநேக கொப்பளங்களை உண்டுபண்ணிக் கொண்டு அவைகளிலிருந்து சீயும், உதிரமும், துர்நாற்றமும் பாயப்பெற்று மிகவும் அழுக்குள்ள சரீரத்துடன் அந் நகரின் வீதியில் மெதுவாய் நடந்து செல்லலானுர். அவ் வாறு ஒரு புருஷன் மிகவும் அசுசியாய் துர்நாற்றமும், சிரங்கும், காயமும் நிறைந்த சரீரத்துடன் நடந்துவரு வதைக்கண்டவர்களில் சிலர் இக்கிழவர் ஏன் இங்கு வருகிருர்? இவரை அரண்யத்தில் ஓரிடத்தில் அமர்த்தி வைப்பதே நலமென்று உரைத்தார்கள். மற்றும் சிலர் விகார உருவமுள்ள இக்கிழ அந்தணரை நாம் இவ்வாறு தூஷணை செய்யலாகாது. இவர் முன் ஜன்மத்தில் செய்த பாபத் திரளால் இச்சன்மத்தில் இவ்வித நோய்களைப் பெற்று நரக வேதனையை யடைகிருர். இவருக்கு இதுவே தண்டனை போலும். ஆதலால் இவரது சரீரநோய் மற் ருேரிடம் தொடராவண்ணம் இவருக்குத் தனியாய் ஒரு வாசஸ்தலத்தை யளித்துத் தினந்தோறும் அன்னமளிப் பதே நலமென்று உரைத்தார்கள். சிலர் அவ்வந்தணரது அருகையடையும்பொழுது அவரது சரீர துர்நாற்றத்தை ஸஹிக்க மனம் எழும்பாதவர்களாய்த் திரும்பலாயினர்.

இவ்விதமாய் அந்நகரிலுள்ளவர் பெரும்பாலும் அக் கிழப் பிராம்மணரது உருவத்தை நிந்தித்துப் பலவாறு கூறி வருகையில் பரோபகாரத்தையே முக்கிய காரியமாய்க் கொண்ட சந்தோ தேவர் என்னும் அப்பிராம்மணோத்தமர் அக்கிழவரருகை யடைந்து அவரது பாதத்தில் வணங்கி வந்தித்த பிறகு ஓ கிழ வேதியரே! நீர் பயப்படவேண்டாம். நீர் இருப்பது எவ்விடம்? எங்குச் செல்லுகிறீர்? பசியினு லும், உமது சரீரத்திலுள்ள கொப்பளங்களின் நோயாலும் நீர் இப்பொழுது மிகவும் வாட்டத்தை யடைந்தவராய்க் காணுகின்றீர். நான் உமக்குச் சற்று ஆறுதல் செய்ய விரும்புகிறேன் என்று உரைத்துக்கொண்டே மெதுவாய்

அவரது கையைப்பற்றி அழைத்துக்கொண்டு தனது இல்லத்தை யடைந்து அவரது சரீரக் கொப்பளத்திலிருந்து வெளியாகும் சீயையும், உதிரத்தையும் துடைத்து அவ் விடங்களைச் சுத்தம் செய்து வைத்து அவருக்கு உணவையு மீந்து உபசரிக்கலானார்.

சந்தோஷதேவர் என்னும் அவ்வந்தணோத்தமர் மன விகாரமின்றி அக்கிழ வேதியரது சரீரத்துக்கு அன்புடன் இவ்வாறு உபசரணை செய்து வருவதைக் கண்டு அவ்வூரி லுள்ளவர் அனைவரும் வியப்புடன் பார்த்துக்கொண்டு இருக்கையில் அக்கிழவர் திடீரென்று மறைந்தார். அவ் வாறு மறையும்பொழுது ஓ சந்தோஷதேவனே! நீர் என்னிடத் தில் வைத்த பக்தியே சிறந்த பக்தியாகும். நீர் விரும்புவது போலவே உமக்கு மறுஜன்மத்தில் ஸாயுஜ்யம் உமக்கு உண் டாகக் கடவதென்று நான் சங்கற்பித்துவிட்டேன். எனது ஊர் திருவாரூராகும் என்று உரைத்துக்கொண்டே மறைந்த மையால் அவ்வுரையைச் செவியுற்ற அவ்வந்தணரும், அந் நகரவாஸிகளும் அவ்விதம் கிழவர் போல் தோற்றியவர் திருவாரூர் நாதனாகிய தியாகராஜனே என்பதற்குச் சற்றே னும் சந்தேகமில்லை என்று உரைத்து அவருக்கு அவ்வாறு உபசரணை செய்த அவ்வந்தணரைப் புகழ்ந்தும் அவர்மீது தாங்கள் தூஷணையாகப் பேசியதைப்பற்றித் தம்மை இகழ்ந்துகொண்டும் அவ்வித நிந்தனை செய்ததினால் தமக்கு நேரிட்ட பாவத்தையும் நீக்கக் கருதியவர்களாய் அந்நகர வாஸிகள் யாவரும் திருவாரூரை யடைந்து தியாகேசனைக் கண்டு தரிசித்துக் களிப்புடன் வாழலானார்கள்.

## 325. மானஸபூஜை பெற்ற லீலை

ஹரிகேளிபுரியில் சிவபக்த வேதியர் ஒருவர் இருந்தார். அவர் பாலப் பிராயம் முதல் பரமசிவத்தின் தத்துவச் சிறப்பையும் சிவபக்தியின் சிறப்பையும் பெரியோர்களிட

மிருந்து உபதேசமாய் அறிந்தவரானபடியால் மூவுலகுக்கும் காவலனாகிய சிவமூர்த்தியின் பாதபக்தியே உறுதுணை என்று நம்பி சிவபூஜை செய்துவரலானார். இல்லற தர்மத்தில் வாழும் அவ்வந்தணோத்தமர் அழகிய செடிகளையும், நதிகளையும், மலைகளையும் மலர்களையும், தேனுக்களையும், பிராமணர்களையும் கமலப் பொய்கைகளையும் காணும் பொழுது இவைகளெல்லாம் ஈசனது அம்சமல்லவா! என்று நினைத்து அவைகளின் குணங்களைப் புகழ்ந்து பேசுவார். உலகிலுள்ள ஒவ்வொரு பொருளும் சுத்தசிவ ஸ்வரூபமேயாகும். சகல ஜீவராசிகளும் பரசிவ ஸ்வரூபமேயாகும். ஈசனது கருணையினாலேயே சூரியன் உதிக்கின்றான். வாயுவும் வீசுகின்றது. ஸகல ஜீவராசிகளும் ஈசனது சங்கற்பத்தினாலேயே உயிர் பெறுவதையும், இங்குமங்கும் உலாவுவதையும், சுகமடைவதையும், துக்கமடைவதையம், புண்ணிய காரியங்களிலாழ்வதையும், பாவத் தொழிலில் இறங்குவதையும், ஞானத்தை யடைவதையும், அஞ்ஞானத்தை யடைவதையும், தர்மத்தை யடைவதையும், மற்றுமுள்ள சேஷ்டைகளையும் இன்ப துன்பங்களையும் அடைந்து வருகிறார்கள். ஈசனது சங்கற்பம் இல்லாவிடில் இவ்வுலகில் எவ்வித யோகங்களுக்கும் எவ்வித வானவருக்கும் எக்காரியமும் நிறைவேறாது என்று இவ்விதமாய்ச் சங்கரனது குணச்சிறப்பைத் தொண்டர்களுக்கு விவரித்துக் கொண்டே அச்சிவபக்தர் தேசாடனம் செய்யலானார்.

ஒருநாள் அச்சிவபக்தர் சில சிஷ்யருடனும் தனது மனைவி மக்களுடனும் மற்றொரு தேசத்துக்குச் செல்லுகையில் அவரது வழியில் கொடியதொரு அரண்ய மார்க்கம் தோன்றிற்று. அவ்வழியாய் நடந்துசெல்லும் அச்சிவபக்தர் காலை நேரத்திலிருந்து பகலோன் நடுவானம் செல்லுமளவும் நடந்தபோதிலும் அவரது வழியில் மனுஷ்ய ஸஞ்சாரமே தோற்றவில்லை. கனி மரங்களும் புஷ்பச் செடி

களும் தோற்றவில்லை. குளிர்ந்த தண்ணீரும் தென்பட வில்லை. அவ்வாறு வழிநடையினால் வாட்டத்தையடைந்து அவர் மனக்கவலையடைந்தவராய் ஹா! ஹா! இஃதென்ன ஓர் கொடிய காடு. இவ்வனத்தில் எவ்வளவு தூரம் நடந்த போதிலும் புனலும் நற்கொடியும், நன்மரமும் தோற்ற வில்லையே. ஈசுவர ஸ்வரூபமாகிய இச்சிஷ்யர்களும் பசியினாலும் தாகத்தினாலும் வாட்டத்தையடைகிறார்களே. இந்நாள் வரையில் தடையின்றிச் செய்துவந்த சிவபூஜைக்கு இன்று தடையேற்படும்போல் தோற்றுகிறதே ஈசா! சம்போ! என் செய்வேன் இக்கொடிய வனத்தில் ஈசுவர பூஜைக்காகக் கனிகளும் கிடைக்கவில்லையே; மலர்களும் கிடைக்கவில்லையே என் செய்வேன் என்று இவ்வாறு ஒரு முகூர்த்தகாலம் வரையில் மனத்துயரை யடைந்தார்.

அவர் ஒருவாறு மனத்தெளிவை யடைந்து ஈசுவர பூஜைக்கு எவ்வித பொருளும் கிடைக்கவில்லை யென்பதற்கு அப்பரமனே சாக்ஷியாகையால் நான் இப்பொழுது மந்திர ஸ்நானம் செய்து ஈசனுக்கு மானஸ பூஜையையே செய் வேன். வேறு கதியில்லை என்று யோஜித்து அவ்வண்ணமே முதலில் அச்சிவ பக்தர் மந்திர ஸ்நானம் செய்து சதாசிவ மூர்த்தியை மனத்தில் தியானம் செய்து அர்க்கியம், பாத் தியம், மதுபர்க்கம், நைவேத்தியம் முதலிய சகல உபசா ரங்களையும் மந்திரங்களைச் சொல்லி மனத்தினாலேயே ஈசனுக்கு அளிக்கலானார். பூஜாத் திரவியமற்ற அத் தொண்டர் அங்கு அவ்வாறு மந்திரத்தையே யுரைத்து மானஸ பூஜை செய்கையில் தியாகேசன் அவரது மனத்தில் தோன்றி "நீர் மனத்தினால் அளித்த மானஸ பூஜையை நான் ஸாங்கமாய் பெற்றுக்கொண்டேன். நீங்கள் இவ்வழியில் நடந்து சிறிது தூரம் செல்வீராகில் இவ்வன மார்க்கம் முடிந்துவிடும். அங்கு எதிரில் புலப்படும் வேதபுரியை யடைந்து அங்கு விளங்கும் எனது மகேசுவர லிங்க தர்சனத்தை யடைவீர்கள். உமக்கும் உமது சிஷ்யர்களுக்

கும் அவ்வேத புரியில் சிறந்த உபசரணை நடக்கும்" என்று உரைத்து மறைந்தார். அவ்வந்தணர் இவ்வாறு மானஸ பூஜையை நிறைவேற்றிய பிறகு தனது மனத்தில் ஈசன் தோன்றியுரைத்ததை சிஷ்யர்களுக்கறிவித்துத் தியாகராஜர் காண்பித்த வழியைப்பற்றிக் கொண்டே வேதபுரியை அடையலானார்.



## 326. பாம்பாட்டியாய்த் தோற்றிய லீலை.

கதம்பவனத்தில் வஸித்துவந்த முஜ்ஜகன் என்னும் அசுரன் ஒருவன் அகத்திய மாமுனிவரது சாபத்தினால் கொடிய நாகமாய் மாறி அவ்வனத்திலேயே நெடுநாளாய் வஸித்து வரலானான். அவ்வசுரன் ரிஷி சாபத்தினால் அவ்வாறு சர்ப்ப ஜாதியாய் மாறிபபோதிலும் பூர்வ ஜன்மக் கொடுந் தொழிலாகிய அசுரத் தொழிலானது அச்சர்ப்ப ஜன்மத்திலும் பின் தொடரலாயிற்று. அப்படிப்பட்ட அசுரத்தன்மையினால் அச்சர்ப்பமானது சிலசமயத்தில் சிறிய ஸர்ப்பம் போலவும், சில சமயத்தில் பெரியதொரு மலைப்பாம்பு போலவும், சில சமயத்தில் மறைந்தும், சில சமயத்தில் தாவிப் பாய்ந்தும் இவ்வாறு அசுரத்தொழிலால் அவ்வனத்தில் ஸஞ்சரிக்கும் மகரிஷிகளையும். பிராம்மணர்களையும், மான், பசு முதலிய ஜீவராசிகளையும் கவர்ந்து ஜீவஹிம்ஸை செய்து வரலாயிற்று. அதனால் ஜீவஹானி நேரிடக்கூடிய வனமென்று அறிந்துகொண்டவரனைவரும் பயத்தை யடைந்து அதன் ஸமீபத்திலேயே போகாமலேயே இருக்கலாயினர். சிற்சில ஞானியரும், மஹரிஷிகளும் அக்கதம்ப வனத்தின் நடுவில் விளங்கும் பரமேசலிங்க மூர்த்தியைத் தமது மனத்தில் தியானித்துக்கொண்டு அவ்வனத்திற்குச் செல்லாமலேயே வேறு வழியாகச் செல்லலாயினர்.

இத்தகைய தருணத்தில் ஒருநாள் அகஸ்திய முனிவர் தமது சிஷ்யர்களுடன் பொதியமலையிலிருந்து வடதிசை

நோக்கி வருகையில் அக்கதம்ப வனத்தின் அருகிலுள்ள காட்டிலிருக்கும் சில வேடர்கள் அம்மகரிஷியின் மகிமையை அறிந்துகொள்ளாதவர்களாய் ஓ ரிஷியே! நீர் இவர்களுடன் இக்கதம்ப வனத்தில் புகவேண்டாம் அங்குள்ள அபாயத்திலிருந்து நீங்கள் மீண்டு செல்லுதல் அரிதாகும் என்றுரைத்தார்கள். அவ்வுரையைச் செவியினால் பற்றிய மகரிஷியும் அவ்வேடர்களின் மனப்பான்மையை யறிந்து சந்தோஷித்து அவர்களுக்கு ஆசி அளித்துவிட்டு, அக்கதம்ப வனத்தில் புகுகையில் அங்கிருக்கும் சர்ப்ப விஷவேகத்தினால் சில மரங்கள் எரிந்திருப்பதையும், சில கொடிகள் வாடியிருப்பதையும், அவ்வசுர நாகத்தினால் வதைக்கப்பட்ட ஜீவராசிகளின் குவியல்களையும் கண்டு மனக்கொதிப்பை யடைந்தவராய் அப்பொழுது தனது தபோமகிமையினால் அக்கொடிய நாகத்தை அழிக்க நினைத்தார். சற்றுநேரம் ஆலோசனை செய்த பிறகு தியாகபுரந்தரனையே இந்நாகத்தை யழிக்கும்படி வேண்டுவோம் என்று நினைத்துக்கொண்டு தியாகேசனது பாதகமலத் தியானத்தினால் இழுக்கப்பட்டவராய் அவ்வகத்திய முனிவர் விரைவாய் புண்ணியபுரியை அடைந்து கமலாலயத்திலும், மற்றுமுள்ள புண்ணிய தீர்த்தங்களிலும் நீராடித் தியாகராஜனின் ஸன்னிதானத்தை யடைந்து பணிந்து துதிசெய்து தியாகராஜ பரம்பொருளே! லோகநாயக! வானோர் கற்பகமே! கதம்ப வனத்தில் இருக்கும் அக்கொடிய நாகத்தை நீரழிப்பீராகில் அவ்வனத்தில் விளங்கும் மகேசுவரலிங்க மூர்த்தியின் தர்சனத்தைப் பக்தர்களடைந்து சிறப்பெய்துவார்கள். முன்பு முஞ்ஜலோமனென்னும் அசுரன் அவ்வனத்தில் நிலைபெற்று எனது ஆச்ரமத்தை யழிக்க முயன்றபோது நானே அவ்வசுரனைச் சர்ப்பமாக மாறக் கடவாயென்று சாபமளித்தேன். அவ்வசுரன் சர்ப்ப ஜன்மத்திலும் இவ்வாறு ஜீவராசிகளுக்குச் செய்துவரும் துன்பம் நீங்கும் வண்ணம் நீரே கருணை புரியவேண்டுமென்று துதி செய்யலானார்.

அகத்திய மாமுனிவர் இவ்வாறு துதிசெய்ததைக் கேட்ட தியாகராஜன் மறுநாட் காலையில் ஒரு பாம்பாட்டி போல் உருவமெடுத்துக்கொண்டு அக்கதம்ப வனத்தில் நுழைந்து அக்கொடிய சர்ப்பமானது மோகத்தையடையக் கூடியதாய் மூங்கிற் குழலூதினர். அதைக் கேட்டுச் சீறிக்கொண்டும் குகைபோன்ற வாயைத் திறந்து கொண்டும் மூச்சுக் காற்றினால் கொடிய விஷத்தைக் கக்கிக்கொண்டும் அச்சர்ப்பமானது விரைவாய் எதிர்த்து வருகையில் பாம்பாட்டிபோல் சென்ற தியாகராஜன் அப்பொழுது தனது திவ்ய சக்தியினால் அக்கொடிய நாகத்தின் கண்களிரண்டையும் அழித்து அதை வதைக்க முயலுகையில்......



## 327. பசுக்களுக்கு நன்மையளித்ததை யுரைத்த லீலை.

காங்கேயபுரியின் அருகிலுள்ள காட்டில் இடையன் ஒருவன் இருந்தான். அவன் தனது வம்சத் தொழிலுக்கு ஏற்றவாறு பசுக்களை மேய்க்கும் தொழிலில் நிலைபெற்று அப்பசுக்கள் யாவும் சிவ ஸ்வரூபி என்றே நினைத்து அன்புடனும், பக்தியுடனும் அவைகளுக்குப் புல், தண்ணீர் முதலியவற்றை அளித்து அவைகள் பசியாறிய பிறகே தான் போஜனம் செய்வான். இரவில் அப்பசுக்கள் அசை போடத்தொடங்கிய பிறகே தான் உறங்கச் செல்வான். அவ்விடையன் அப்பசுக்களைத் தனது தாயாகவும், தந்தையாகவும், சுற்றமாகவும், மக்களாகவும், தெய்வமாகவும், தேவர்களாகவும் நினைத்து வெகு அன்புடன் வளர்த்து வரலானான். அவ்விடையன் சிற்சில சமயங்களில் அவ்வரண்ய வழியாகச் செல்லும் வழிப்போக்கர்களுக்கு நறு நெய், தயிர், பால், வெண்ணெய்,அளித்து அப்பசுக்களின் சாதி மேன்மையை யவர்களுக்குரைத்து அவர்களது விடாயை ஆற்றுவான். அவ்விடையன் சிற்சில ஸமயங்களில் அவ்வாவின் பாலைக் கறந்து குடத்தில் கொட்டி

ஈசனது லிங்காபிஷேகத்திற்கே இவை என்று அப்பால் குடங்களை யாத்திரைக்காரர் மூலமாய் அனுப்புவான். இவ்வண்ணமாய் நடந்து வருகையில் அவ்விடையனுக்குச் சிறந்த சிவபக்தி உண்டாயிற்று.

ஒருநாள் அவ்விடையன் பசுக்களை மேய்த்து நீரூட்டி நிழலில் படுக்கச் செய்த பிறகு தானும் ஒரு மரத்தின் நிழலில் உட்கார்ந்துகொண்டு சற்று நேரம் வரையில் சிவநாம ஸங்கீர்த்தனம் செய்யலானான். ஓ பரமசிவமே! ஞான மற்ற நான் உமது மகிமையையும் உமது அம்சமாய் விளங்கும் இப்பசுக்களின் மகிமையையும் அறியமாட்டேன். ஆதலால் என்மீது கருணை செய்து இப்பசுக்களின் மகிமையை யான் அறியுமாறு அருள்புரிவீர் என்று மன முருக்கத்துடன் சிற்சில பாடல்களால் ஈசனைத் துதி செய்யலானான். பசுக்களுடன் சேர்க்கையினாலும், பூர்வபுண்ணியத்தினாலும், தூயமனத்தைப் பெற்ற அவ்விடையன் இவ்வாறு அழகிய பாடல்களால் தனது நாமங்களைக் கூப்பிட்டு வேண்டுகையில் அவனிடத்தில் அன்பு செய்யக் கருதி தியாகேசன் தானும் ஒரு கோபாலகன் போல் உருவமெடுத்துக்கொண்டு அந்தக் காங்கேயாரண்யத்தில் தோன்றி அவனது அருகை யடைந்தார். அவ்வாறு எதிர் நோக்கி வரும் மற்றோரிடையனைக் கண்ட அவ்விடையன் அன்புடனழைத்து விடாய் தணியச் செய்து நீ யார்? எங்குச் செல்லுகிறாய்? இப்பசுக்களின் மேன்மையை நீ யறிவாயோ? இப்பசுக்களுக்கு இவ்வுலகில் எக்காலத்திலும் நன்மை குலையாவண்ணம் செய்வதற்கு நல்வழி யாது? அதை நீ யறிவாயா என்று வினவினான்.

அவ்வுரையைக் கேட்ட பரமேசனாகிய இடையன் கேளாய் தோழனே! நான் தென்திசையில் விளங்கும் புண்ணிய புரியில் நிலைபெற்றவன். முன்பு ஒரு சமயத்தில் பசுக்களின் மகிமையைப் பற்றிப் பரமேசன் கூறி யிருப்பதை உன்பொருட்டு நான் மறுபடியும் உரைக்க விரும்பு

கிறேன். நிலைபெற்ற மனதுடன் கேளாய்! வேதத்தில் கூறியிருக்கும் சகல கல்விகளுக்கும் ஸ்வாஹாகாரத்துக்கும் வஷட்காரத்துக்கும் மூலகாரணம் இப் பசுக்களேயாகும். பசுக்களே யாகங்களின் பயனை யளிக்கின்றன. யாகத்தினாலேயே ஸோம முண்டாகும். அவ்வித ஸோமமும் இப் பசுக்களின் கூட்டத்திலேயே நிலைபெற்று விளங்குகிறது. பசுக்கள் இருக்குமிடத்தில் ஈசுவர லிங்கமூர்த்தியும், தேவர்களும் வாஸம் செய்ய விரும்புவார்கள். புண்ணியத்தில் விருப்பமுள்ள மனிதர் யாவரும் பசுக்களை ஸ்மரித்துக் கொண்டே படுக்கையிலிருந்து எழுந்திருத்தல் வேண்டும். பசுக்களின் தர்சனமும், பசுக்களின் மூத்திர புரீஷங்களும் பாவத்தைப் போக்கி நன்மை பயக்கும். தானங்களுக்குள் கோதானமே சிறந்ததாகும். பசுக்களைப் பூஜிப்பவர்கள் இவ்வுலகில் நிகரற்ற செல்வத்திலமர்ந்திருந்து மறுமையில் நற்பதவியைப் பெறுவார்கள் பசுக்கள் நடந்து செல்லும் பூமிக்குப் பரிசுத்தி யுண்டாகும். இவ்வித பசுக்கள் யாவும் காமதேனுவின் கருவிலுதித்தவைகளானபடியால் இவைகளே நற்பயனை யளிக்கும் உறுதுணை என்றும் இவைகளே சிறந்த செல்வமென்றும் இவ்வித பசுக்களே எக்காலத்திலும் எவ்வுலகிலும் சிறப்பை யடையுமென்றும் வேதத்தின் கருத்தாகும். பஞ்சகவ்யங்களுக்கும் காரணமாகிய இப் பசுக்களே ஈசுவர ஸ்வரூபி என்று இவ்வண்ணமாய் அவ்விடையன் உரைக்குந் தருணத்தில் அதைக்கேட்ட மானுஷ இடையன் வியப்புடனிருக்கையில் அவ்வாறு உரைக்கும் புருஷன் பரம்பொருள் என்றறிந்துகொண்ட பசுக்கள் யாவும் அவ்வீசனது அருகையடைந்து அவரை வலஞ்செய்து சூழ்ந்துகொண்டன. அத் தருணத்தில் பரமேசன் அவ் விடையனுக்குத் தனது நிஜ ஸ்வரூபத்தை காண்பித்து அவைகளையு மன்புடன் நோக்கி மறைந்தார். அத் தருணத்திலேயே அங்குப் பல முனிவர் வந்து கூடி அவ்வாறு தர்சனம் அளித்தவரே உலகக் காரணப் பொருள் என்றுரைத்து அவ்விடையனுக்குப் பரதத்துவோபதேசம்

செய்யலாயினர். அது முதல் அவ்விடையனும் ஆனந்த பரவசனாய் ஈசனைத் துதித்து நின்றான்.

—*—

## 328. யானைக்கெதிர் வந்த தீயை யழித்த லீலை.

புவனேச்வரவனம் என்று ஒரு அரண்யமுண்டு. அவ்வனமானது அநேக யோஜனை நீளமும், அநேக யோஜனை யகலமுமுள்ளதாயும் ஒரு பக்கத்தில் யானை மான் முதலிய வனஜந்துக்களுக்கும் சக்ரவாகம் ஹம்சம் முதலிய சகல பக்ஷிகளுக்கும், மயில், குயில் முதலிய சோலைப் பக்ஷிகளுக்கும் சுகத்தை யளிக்கும் வளப்பத்தைப் பெற்றதாயும் மற்றொரு பக்கத்தில் புலி, சிங்கம், கரடி, முதலிய துஷ்ட ஜந்துக்களின் வாஸஸ்தானமாகிய புதர்கள் சூழப்பட்டதாயும், சில விடத்தில் அழகிய மணல் பூமியைப் பெற்றதாயும், சில விடத்தில் மலையருவியின் பெருக்குள்ள பூமியினால் சூழப்பட்டதாயும், சகல சத்வங்களுக்கும் உணவை அளிக்கக்கூடிய வளப்பம் பொருந்தியதாயும் இருந்தது. அவ்வித புவனேசாரணியத்தில் நெடுநாளாய் பத்ர மென்னும் சிறந்த ஜாதியில் ஜனித்த யானைகளின் கூட்டம் வளர்ந்து வந்தது. அவ்வித யானைகளுள் திக்கஜத்துக்கு நிகரான மகா பத்மம் என்னும் ஒரு சிறந்த யானையானது ஒரு நாள் அவ் வனத்திலுள்ள செடிகொடிகளின் அழகைக் கண்டு களித்துக்கொண்டே வெகு தூரம் செல்லுகையில் அந்த கஜராஜனுக்குச் சற்று புத்தி மயங்கி விட்டது. அதனால் அந்த யானையானது நேராய்ச்செல்லும் மார்க்கத்திலிருந்து வேறொரு கொடிய வழியை யடைந்தது. அவ்வழியிலேயே சென்ற அவ்வாரண ராஜன் வெகுதூரம் அவ் வனத்தில் செல்லுகையில் ஓர் மலைச்சாரலில் காட்டுத் தீயானது பற்றிக்கொண்டு அந்த யானையின் எதிரில் தோன்றிற்று.

எதிரில் ஜ்வலிக்கும் காட்டுத்தீயைக் கண்டு மதி கலங்கிய அவ்வாரணமானது இனி இங்குச் செல்லலாகாது

என்று நினைத்துக்கொண்டு திரும்பி வருகையில் அவ் யானை சென்று கொண்டிருக்கும் நான்கு புறங்களிலும் நிமிஷ நேரத்தில் பரவி விட்டது. அதைக்கண்டு நடுங்கிய வாரணமானது அம் மலைச்சாரலின் கிழக்கிலும், மேற்கிலும், தெற்கிலும் வடக்கிலும் ஓடிச்சென்று பார்க்கையில் நான்கு புறங்களிலும் காட்டுத்தீ ஜ்வலிப்பதைக் கண்டது. அத்தீயின் கொடுமையினால் அங்குள்ள செடிகளும் கொடிகளும் எரிந்து கருகின. அவ்வித காட்டுத்தீ பரவுவதற்குள் அவ்விடத்தில் வாஸம் செய்திருந்த பறவைகள் யாவும் விரைவாய் வானத்தில் பறந்து சென்றன. மற்றப் பிராணிகளில் சில பயந்தோடின. சில ஜந்துக்கள் அக்னி ஜ்வாலைக்கு இரையாயின.

இவ்விதமாய் அக் காட்டுத் தீயானது அவ்வாரணத்தைச் சுற்றிக்கொண்டு நான்கு புறத்திலும் விளங்கும் சகல பொருள்களிலும் பரவி அவைகளை எரித்துக்கொண்டு நெருங்கி வருகையில் அதைக் கண்ட யானையானது சற்று நேரம் வரையில் ஒன்றும் தோன்றாமல் திகைத்திருந்து பிறகு ஆலோசனை செய்து ஸகல லோக நாயகனாகிய பரமசிவனைச் சரணமடைவது நலம். இக் கொடிய துன்பத்திலிருந்து அவன் காப்பாற்றாவிடில் வேறு யாரால் ரக்ஷிக்க முடியும். என்றிவ்விதமாய் உறுதி செய்துகொண்டு ஓ பரமேசா! கைலாசபதியே! கதியற்றவர்களுக்கு நற்கதி அளிக்கும் கற்பகமே! இத் தருணத்தில் என்னைக் காப்பாற்றுவதே உமது தயையின் சிறப்பாகும் என்று இவ்விதமாய் முறையிட்டுக் கதறுவதையும், காட்டுத்தீ அவ் யானையின் சமீபத்தை அடைவதையும் கண்ட தியாகராஜன் மழை பொழியும்படி செய்தார். கஜராஜனும் தியாகராஜனைத் துதிசெய்து நிற்கையில் திடீரென்று மழை பெய்ய ஆரம்பித்தது. மழை பெய்ததினால் காட்டுத்தீ தணிந்தது இதைக் கண்ட யானையானது லோகநாதனது அருளில்லாவிடில் இப்பொழுது இம்மேகம் வர்ஷிக்குமா? பரமேசனது

திருவருளே தனது துன்பத்தை நீக்கித் தனக்கு உயிர் பிக்ஷை யளித்ததென்று களிப்புடன் விரைவாய் தனதிருப் பிடம் வந்து சேர்ந்து தனது இனத்துடன் வஸிக்கலாயிற்று.

## 329. தலையையுமுடலையும் சேர்த்த லீலை.

காந்தாரதேச மஹாராஜன் ஒருநாள் தனது மாளிகை யில் படுத்துறங்குகையில் தயாநிதியாகிய தியாகராஜன் அவ்வரசனது கனவில் ஒரு திவ்ய புருஷன்போல் தோன்றி ஓ பூபதியே! மூன்று மாத காலம் செல்லுவதற்குள் உனது பட்ட மகிஷியானவள் பரமேசனருளால் கர்ப் பத்தை யடையப்போகிருள். நீயும் உனது பட்ட மகிஷியும் பூர்வ ஜன்மத்தில் செய்த பாவத்திஞல் அந்தக் கர்ப்ப மானது பத்தாவது மாதம் முடிந்தவுடன் தலை ஒருபாக மாகவும், உடல் ஒரு பாகமாகவும் ஜனிக்கும். அதைக் கண்டவுடன் நீங்கள் சற்றேனும் அஞ்சவேண்டாம் அவ் விருபாகங்களையும் பரமேசனே ஒன்று சேர்த்து வைத்து நற்குமரனைச் செய்து அருள்புரிவார். சில நாட்களுக்கு முன் உனது தேசத்திலுள்ள பாரீயாத்திர மலையின் சார்பில் காட்டுத் தீயிஞல் சூழப்பட்ட ஒருவாரணமானது மிகத் துன்புற்று ஈசனை வேண்டுகையில் பரமேசனது அருளால் அங்குத் திடீரென்று தோன்றிய ஒரு மேகம் வர்ஷிக்கவே காட்டுத்தீ பயத்தை யொழித்து உனது தேசத்திலேயே ஆனந்தத்துடன் வாழ்கிறது அந்த யானை யானது உனது குமாரன் உதிக்கும் தருணத்தில் உனது ராஜ சபையை யடையும். அவ்வாறு ஈசுவர பக்தியிஞல் இழுக்கப் பட்டு அங்குத் தோன்றும் அவ்வாரணமானது உனது மாளிகை வாயிலை யடைந்தவுடன் நீ சற்றேனும் கவலையை அடையாமல் உடல் வேருகவும், தலைவேருகவும் ஜனித் திருக்கும் உனது குமாரனை அவ்வாரணத்தின் மத்தகத்தின் மீது ஏற்றிவைத்துப் பரிஜனங்களுடன் புண்ணிய க்ஷேத்திர

யாத்திரையாய் அனுப்பிவிடுவாயாகில் அந்த யானையானது எவ்விடத்தில் வந்து அசைவற்று நிற்குமோ ? அத்தலத்தீசனே உனது குமாரனது உடலையும் உடம்பையும் ஒன்று சேர்த்து வைப்பார். இதுவே ஈசுவர ஸங்கல்பமாகும் என்றிவ்வண்ணமாய் உரைத்து மறையலானார்.

கண் விழிப்பை யடைந்த காந்தார மகாராஜன் அப்பொழுதே அந் நகரில் விளங்கும் ஞானியரை அமைச்சர் மூலமாய் வரவழைத்து அவர்களது பாதத்தில் வணங்கித் தனது கனவில் தோன்றிய புருஷன் உரைத்ததை வியப்புடனுரைக்கலானான். அது கேட்ட அம்மெய் ஞானியரும் ஓ பூபாலனே ! உமது கனவில் தோற்றியவர் தக்ஷிண கங்கை எனப்படும் காவிரி சூழ்ந்த நாட்டில் புண்ணிய புரியில் விளங்கும் தியாகராஜனே. எவ்வண்ணமிருந்தபோதிலும் காட்டுத் தீயிலிருந்து யானையைக் காத்த பரமசிவனே உமக்கு நற்சந்தானத்தை யளிப்பார் என்பதில் ஐயமில்லை என்றிவ்வாறு ஈசுவர மகிமைகளை யுரைத்துக்கொண்டே அவர்களெல்லோரும் அன்றிரவைக் கழித்தார்கள். பிறகு மனக்களிப்பை யடைந்த காந்தார தேசாதிபதியானவன் மனு நீதி முறைப்படி உயிர்களைக் காத்து வருகையில் அவனது பட்ட மகிஷியானவள் சிறந்ததொரு கர்ப்பத்தை தரிக்கலானாள். அவளிடத்தில் விளங்கும் கர்ப்பமானது தியாகேசனருளால் நாடோறும் சிறப்புடன் வளர்ந்து வருவதைக்கண்டு மனக்களிப்புற்ற அப்பூபாலன் தனது குல குருவையும், வேதியர்களையும் பூசித்து அவர்கள் மூலமாய்க் கர்ப்பத்தின் நன்மையைக் கோரி அப்பட்ட மகிஷிக்குச் சீமந்தம் முதலிய சுபகாரியங்களைச் சுப காலத்தில் நிறைவேற்றி வைத்துப் பரமேசனது கருணையையே எதிர் நோக்கி யிருந்தான்.

அவ்விதமாய் அப்பட்ட மகிஷிக்குப் பத்து மாத காலமும் சென்ற பிறகு ஒரு நாளிரவில் சிறந்ததொரு சுப முகூர்த்தத்தில் ஈசன் கூறியவாறே இருபிளவாய் ஒரு

குமாரனுதித்தான். தலையொருபாகமும் உடல் தனியாகவும் இவ்வாறு இரண்டு கூறுகளாய் விகாரமுள்ளதாய் அக் குமரன் தோற்றியபோதிலும் ஈசனருளால் அவ்வித குழவிக்கும் நன்மையுண்டாகுமென்று நம்பிய ராஜ பத்தினி யும் மற்றுமுள்ள அரண்மனை மாதரும் நற்குமரனைக் கண்டது போலவே வெகு சந்தோஷத்துடன் அக் குழந்தையை எடுத்துக்கொண்டு ஈசுவர நாமஸங்கீர்த்தனை யுடன் ராஜ ஸபைக்கு வந்தார்கள். அத் தருணத்திலேயே ஈசனருளால் காட்டுத் தியிலிருந்து உயிர் பிழைத்தெழுந்த அவ்வாரணமும் பரமேச பக்தியினுலிழுக்கப்பட்ட மன முடையதாய்க் கொண்டு அக்காட்டிலிருந்து அப் பூபாலனது சபையின் முன் புறத்தில் வந்து நின்றது இவ்வித சம்பவங்களையெல்லாம் அறிந்த பூபாலன் சங்கரனை காப்பாற்ற வேண்டுமென்று நினைத்து அவ் யானையின் மத்தகத்தில் சிறந்ததொரு பட்டாடையைப் பரப்பி அதில் அவ்வுடலையும் தலையையும் வைத்து வீரர்களும் அமைச்சர்களும் புடைசூழ, தான் பாதசாரியாய் அவ் வாரணத்துடன் க்ஷேத்திராடனம் செய்யப் புறப்பட்டான். உடல்வேறாகவும் தலைவேறாகவும் ஜனித்த தனது குமார னுக்கு நன்மையை யடைவிக்கக் கருதிய பூபாலன் அவ் வாரணத்துடன் புண்ணிய க்ஷேத்திர தர்சனத்துக்காகப் புறப்படுகையில் அநேக வேதியரும் பூபாலனைப் பின்பற்ற லாயினர்.

அவர்களெல்லோரும் இவ்விதமாய்ப் பூமிப் பிரதக்ஷிண மாய் வரத் தொடங்கிப் பரமேச மூர்த்திகளும், புண்ணிய தீர்த்தங்களும் விளங்கும் ஒவ்வொரு க்ஷேத்திரங்களுக்கும் சென்று தானம் செய்து அங்குள்ள லிங்க மூர்த்திகளின் தர்சனத்தைப் பெற்றுக்கொண்டு சோழ நாட்டில் காவிரி யின் தென்கரையில் விளங்கும் புண்ணிய புரத்தின் அருகில் செல்லுகையில் அவர்களது வழியில் சிற்சில சுப சகுனங் கள் உண்டாயின. அதைக்கண்டு களிப்புற்ற காந்தார பூபாலன் திருவாரூர் நகரில் புகுகையில் அச்சோழ பூபனுல்

எதிர் கொள்ளப்பட்டவனாய் அங்குள்ள புண்ணிய தீர்த்தங்களில் நீராடித் தியாகராஜனது ஸன்னிதானத்தில் நின்று ஈசனைத் தர்சிக்கையில் மகாபத்மம் என்னும் அவ்வாரணமானது சற்றுநேரம் அங்கு நிலைபெற்று நின்றது. அவ்வண்ணம் அசைவற்று நின்று ஆனந்தக் கண்ணீர் மல்கும்படி ஈசனைத் துதி செய்த பிறகு தனது மத்தகத்திலிருக்கும் அந்த ராஜகுமாரனைத் துதிக்கையினால் இறக்கிப் பூமியில் விட்டவுடனே அக்குறைக் குமரன்மீது தியாகராஜன் அருள் பாய்ந்தது. பரமேசனது கடாக்ஷம் பாயப்பெற்ற அவ்வுடலும் சென்னியும் சற்றுநேரம் வேகமாய்ச் சுற்றிச் சுழன்ற பிறகு அவைகளே ஒன்றுக்கொன்று முறைப்படி சேர்ந்து ஒட்டிக்கொண்டவுடனே அது அழகு வாய்ந்த குமாரனாய் அழத்தொடங்கியது. அதைக்கண்டவர் அனைவரும் இச் சம்பவங்கள் யாவும் தியாகராஜனது திருவிளையாடலே என்று ஈசனைத் துதித்து மகிழ்ந்தார்கள்.

## 330. மந்திரசக்தியினால் உள் நோயளித்த லீலை.

மதுராபுரியில் மருகாந்தன் என்னும் புத்த மதத்தோன் ஒருவன் அந்நகரில் வந்து கூடும் சிவ பக்தர்களுடைய மனத்தைப் பற்பல கலஹப் பேச்சினால் கலக்கி, அவர்கள் தனது புத்த மதம் சிறந்ததென்று நம்பும் வண்ணம் உபந்யாஸம் செய்து வரலானான். அவனது பேச்சின் திறமையினால் மோகத்தையடைந்த சில சிவ பக்தர்கள் அவர்களது மதத்தில் புகுந்து சில காலம் சென்ற பிறகு மனக்கொதிப்பை யடைந்து அப் புத்த மதத்தை இகழ்ந்து தமது சத்திய மதமாகிய சிவமத தத்துவமே சீவனுக்கு நன்மை அளிக்க வல்லதென்று நம்பிப் பரமேசனது ஸன்னிதானங்களை அடைந்து இனி தமது புத்தி மாறாவண்ணம் அருள் புரிவீர் என்று வேண்டி வரலாயினர். அவ்வித சிவபக்தர்களுள் சுத்தவேதன் என்னும் வேதியரொருவர் ஒவ்வொரு

திவ்ய க்ஷேத்திரத்தையுமடைந்து அங்கு விளங்கும் மஹேசுவர மூர்த்திகளைத் தர்சித்துக்கொண்டே ஒருநாள் திருவாரூர் நகரையடைந்து சங்கற்பம் செய்துகொண்டு கமலாலய தீர்த்தத்தில் நீராடி விபூதி ருத்திராக்ஷமாலைகளை அணிந்து சூரியோபாஸனை ருத்ரஜபம் முதலியவைகளை ஸாங்கமாய் முடித்துத் தியாகராஜனது ஸன்னிதானத்தை வலஞ்செய்து பணிந்து துதி செய்யலானார்.

"ஓ தியாகராஜ பரம்பொருளே! வேத விளக்கே வேதாந்த மணியே! தொண்டர் கற்பகமே! எனது பூர்வ தந்தையர் காலம் முதல் உமது பாதபக்தியும் உமது நற் தத்துவமுமே எங்களுக்குக் குலதனமாய் விளங்கி வந்தது. நானும் பால்ய வயதிலேயே குருகுலத்தையணுகிக் குருமார் களின் கருணையினால் சாஸ்திரங்களைப் பயின்று உமது பாத பக்தியும்பெற்று நெடுநாளாக வாழ்ந்துவரும் சமயத்தில், மதுராபுரியில் மருகாந்தன் என்னும் பௌத்தனொருவன் எனது மனதைக் கலக்கித் தனது பொய் மதத்தில் எனது மனம் நிலைபெறும்படி செய்துவிட்டான். பாவக் குவியலால் மதிமாறிய நான் அப்புத்தமதப் பொய்க் கொள்கை களிலேயே நெடுநாள் உழன்றுகொண்டிருக்கையில் எனது பெரியோர்கள் செய்த புண்ணியவசத்தினால் எனது கனவில் ஒருநாள் ஒரு திவ்ய புருஷன் தோன்றி நீ இப்பொழுதே இப்புத்தமதத்தின் பொய்ச் சங்கேதங்களையிகழ்ந்து நீங்கிக் கமலையில் நீராடி ஜபம் செய்வாய் என்று மறைந்தார். கண்விழிப்பையடைந்த யானும் அவ்வாறே அப்புத்த மதத்தை விட்டுவிட்டு உமது ஸத்யமதமாகிய சிவமதத்தைத் தழுவிநின்று களிப்பெய்தினேன். உமது அருள் பெற்ற பிறகு இப்பொழுது என் மனத்துக்குத் தெளிவும் களிப்பும் உண்டாகிறது. 'திருக்கோயிலை வலஞ்செய்து உமது திருமேனியைத் தர்சிக்கும்பொழுது நீரே அன்றிரவில் எனது கனவில் தோன்றியுரைத்த புண்ணியமூர்த்தியாகத் தோன்றுகிறீர். ஆகையால் நீரே ஸத்திய தெய்வமாய்

இருப்பீராகில் சிவமதத்தோரின் மனதைக் கவரும் அம் மருகாந்தன் அழியும்வண்ணம் கருணைபுரிவீர். நீரே எனது மனத்தை உமது பாதத்தில் நிலைநிற்கச் செய்வீர். உமது பாதபங்கயமே சரண்" என்று துதி செய்யலானார்.

சுத்தவேதன் என்னும் அவ்வந்தணர் இவ்விதமாய்த் தியாகராஜனைத் துதிக்கையில் தயாநிதியாகிய தியாக ராஜன் அப்பொழுது அவரது வேண்டுகோளின்படியே அப் புத்தமதப் பாவியை அழிக்க நினைத்தவராய் ஒரு ஆகாய வாணியை ஏவி அவ்வந்தணருக்குத் தைரியத்தைக் கூறிய பிறகு தான் ஒரு மந்திரவாதிபோல் உருவமெடுத்துக் கொண்டு மதுராபுரியில் இருக்கும் அப்புத்த மதத்தோனது எதிரில் தோன்றலானார். அவ்வாறு தனது எதிரில் யோகி போல் தோன்றி நிற்கும் பரமேசனைக் கண்ட மருகாந்தன் ஓ யோகியே நீ யார்? இங்கு எதற்காக வந்தீர்? உமக்கு எவ்வித சாஸ்திரத்தில் ஞானமுண்டு? உமது மதம் யாது என்று பலவாறு வினவலானான். அவனது மனக்கருத்தை முன்னமே அறிந்த பரமேசன் ஓ புத்த குருவே! நான் ஒரு மந்திரயோகி. மந்திர சாஸ்திரத்தில் கரைகண்டவன் என்று என்னைப் புலவர்கள் புகழ்வார்கள். எனக்குக் கணக்கற்ற சிஷ்யர்கள் இருக்கிறார்கள். நீ என்னுடன் மந்திர சாஸ்திரத்தில் வாதம் செய்வாயாகில் என்னை நீ மந்திர சக்தியினால் கட்டுப்படுத்துவாயாகில் நானும் கணக்கற்ற எனது சிஷ்யர்களும் உனது மதத்தையே சிறந்த தென்று மதித்து அதைப் பற்றுவோம் என்றுரைத்தார்.

அவ்வுரையைக் கேட்ட புத்த குருவும் தனது அற்ப ஞானத்தினால் அடங்காக் கர்வத்தை அடைந்தவனாய்த் தனது சிஷ்யர்களைச் சுற்றிலும் உட்காரவைத்துக்கொண்டு மந்திர சக்தியினால் ஒருவரையொருவர் ஸ்தம்பித்துக் கட்டுப் படுத்தத் தான் சம்மதம் கொண்டவனாய் அந்த யோகீச னுக்கு அறிவித்துத் தான் கற்ற சிற்சில மந்திரங்களை அந்த யோகியின்மீது ஏவி வேதங்களையும் வேதங்களின் தத்துவச்

சிறப்புக்களையும் மகரிஷிகளின் மனக் கருத்துக்களையும் பலவாறு நிந்திக்கலானான். அவனது துஷ்டச் செயலைக் கண்ட பரமேசனாகிய யோகியானவர் அவனது கர்வத்தை யும் கொழுப்பையும் அடக்கக் கருதியவராய்த் தனது திவ்ய மந்திர சக்தியை ஏவி வேதங்களைப் பழித்த உன் வாய் அழியக்கடவது. வேதாந்தப் பொருளை நிந்தனைசெய்த உனது நாவில் கொதிப்பு உண்டாகக்கடவது என்று சாப மிட்டவுடனே அவனது சரீரத்தக்குள் வெப்பநோய் உண்டாகி அவனது ஆன்மாவைப் பலவாறு தபிக்கத் தொடங்கியது. அவ்வித தாபத்தையும் அவன் சற்றுநேரம் வரையில் பொறுத்துக்கொண்டிருந்து அந்த யோகியை எவ்விதத்திலாவது அழிக்க வேண்டுமென்று கருதியவனாய் தான் கற்ற கொடிய மந்திரங்களை அவர்மீது மீளவும் பிரயோகித்தான். அவ்வித மந்திரங்கள் யாவும் ஒன்று சேர்ந்து பரமேசனது பெருஞ்சடையை யழிக்கச் சக்தி யற்றவைகளாய் அழியலாயின. தான் ஏவிய மந்திரங்கள் யாவும் அந்த யோகியினிடத்தில் சென்று வீணாயின என்று அறிந்துகொண்ட அம்மருகாந்தன் தனது குலதெய்வங் களின் பெயரைப் பலவாறு கூப்பிட்டு அழைத்தும் அவை கள் அந்த ஈசன் முன்வந்து தோற்றவேயில்லை. மீளவும் அவன் தனது குலதெய்வங்களைப் பலவாறு துதித்த போதிலும் அவனது மனத்திலுண்டாகிய கொதிப்பு நோயும் சரீரத்தினுட்பாகத்திலுண்டாகிய வெப்பநோயும் சற்றேனும் தணியவே இல்லை. அத்தருணத்தில் யோகி போல் தோன்றிய பரமேசன் திடீரென்று மறைதலை யடைந்தார்.

## 331. சங்கரனாய் அருள்செய்த லீலை

மதுரைமாநகரில் அவ்விதமாய்ப் புத்தனையழிக்கத் தோன்றிய பரமேசனாகிய மந்திரவாதி மறைந்தவுடனே மருகாந்தன் என்னும் அப்புத்த குருவின் சரீரத்துக்குள்

அக்னி ஜ்வாலைபோன்ற வெப்பம் வீசலாயிற்று. சிவமதத்தோரைக் கலைத்தும், மெய் மதத்தையும் சத்திய மதத்தையு மிகழ்ந்தும் பரமேசனையே பலவாறு பழித்தும் இருப்பதினால் அதனடியாயுண்டாகிய கொடிய பாவத்திரளால் அவனது உடம்பில் எரிப்பு உண்டாகிய தருணத்தில் அவனது நாவில் நீர்வற்றிவிட்டது. பெருமூச்சும் அதிகமாயிற்று. கண்கள் சுழன்றன. ஞாபகத் தடுமாற்றமும் நேரிட்டது. அவ்வித துன்பக் குறிகளையுற்றுநோக்கிக் கொண்டிருக்கும் அவனது சிஷ்யர் யாவரும் ஆ! ஆ! என்றலறி ஓ ஞானத்திரளே! உமது ஆன்மாவுக்கு அழிவு நேரிடும்போல் தோன்றுகிறதே; என் செய்வோம்? எமக்குக் கதியளிப்பவர் யார்? அம்மந்திரவாதி யோகியுடன் நீர் ஏன் மந்திர பரீக்ஷையிலிறங்கினீர்? அந்த யோகியின் மந்திரசக்தியோ; உமது பாவத்திரளோ உம்மை இவ்வண்ணம் வாட்டுகின்றனவே; ஓ குருநாத! நீர் அப் பரமசிவனை மனத்தில் ஸ்மரிப்பீர். நன்மையுண்டாகலாம். அம்மந்திரவாதி மறைந்தவுடனே அவருடன் பின் தொடர்ந்துவந்த சிவமதத்தோர் சிலர் ஆனந்தக்கண்ணீர்த் ததும்பக் களிகூத்தாடினர். ஆதலால் அம்மந்திரவாதி அச்சிவமத தெய்வமாகவே இருக்கவேண்டும். ஓ ஸங்க குருவே! நீர் உமது உயிரைக் காக்கும்பொருட்டு அச்சிவ ஸ்வரூபியை மனதில் போற்றி உய்வீர் என்றுரைத்தார்கள்.

அப்புத்த குருவின் சிஷ்யர்கள் யாவரும் அவ்வாறு உரைத்தபோதிலும் அவன் தனது மனத்தினால் ஈசனை நினைக்காதபடியால் பரமேசனது நிக்ரகசக்தியினால் அவன் புழுப்போல் துடித்து வாடுகையில் அவனது உயிர் வெளி நீங்கிவிட்டது. அதைக்கண்டு பயமடைந்த அச்சிஷ்யர்கள் யாவரும் அப்புத்தமதம் பொய்மதமென்று நினைத்து அதை இகழ்ந்து அக்கணமே சிவசின்னங்களை அணிந்துகொண்டு சிவபக்தருடன் சேர்ந்து ஸத்திய வாக்களித்து அவர்களுடன் கூடி புண்ணிய தேச ஸஞ்சாரம் செய்துகொண்டே

திருவாரூரையடைந்து ஈசனைத் தர்சிக்கையில் அவர்கள் ஈசனருளால் நன்மதிபெற்றுச் சிவமதத்தில் சேர்ந்ததமை யைக் கேட்டு அந்நகரவாஸிகளனைவரும் அவர்களை நன்கு மதித்துத் தியாகராஜனது லீலையின் சிறப்பை உலகில் பரவச்செய்து போற்றி விளங்கினார்கள். அதுமுதல் அச் சிவபக்தரும் அந்நகரவாஸிகளும் எவ்வித இடருமின்றி நன்மையுடன் வெகுநாள் வாழ்ந்திருக்கையில் அத்திரு வாரூர் நகரில் சூத்திரஜாதியிலுதித்துச் சிவனென்று பெயர் பூண்ட சிவபக்தன் ஒருவன் இருந்தான். அச்சிவபக்த னுக்கு இரண்டு புத்திரர்களிருந்தார்கள் அவர்களுள் மூத்த குமாரன் ஒருநாள் தனது அன்னையினால் ஏவப்பட்ட வனாய் விறகுகளை வெட்டிச் சுமையாக்கிக்கொண்டு வர வேண்டும் என்னும் கருத்துடன் அதற்குரிய ஆயுதங் களுடன் அருகிலுள்ள வனத்தையடைந்தான். முதிர்ந்த மரத்தை வெட்டி விறகு சுமை அடையக் கருதிய அக் குமாரன் அக்காட்டில் நுழைந்து வெட்டக்கூடிய மரங்கள் யாது? என்று உற்றுநோக்கிச் சென்றுகொண்டிருக்கையில் அச்சூத்ர குமாரனது எதிரில் ஒரு மான் ஓடிவந்து அவனது பாதத்தில் வணங்கி நின்றது. அதைக் கண்டவுடன் அவன் அம்மான் அவ்வாறு பயந்தோடி வருவதற்குக் காரணம் யாது என்று சிந்தித்திருக்கையில் முதலில் பெரியதோர் ஒலியும், பிறகு கடுஞ்சினங்கொண்ட புலியும் நெருங்கி வருவதைக் கண்டான்.

அப்புலி நெருங்குவதற்கு முன்னமே தனது பாத ஸமீபத்தையடைந்த அம்மானைக் கண்டு இரக்கமுற்ற சூத்ர குமாரன் வயதினால் சிறுவனாயிருந்தபோதிலும் அம் மானானது பயந்து தன்னைச் சரணமாக அடைந்ததாக நன்றாய் அறிந்துகொண்டு அதை எவ்வகையாலும் காப்பாற்றுவதாய் உறுதி செய்துகொண்டு ஓ ஹரிணமே! நீ பயப்படவேண்டாம். நான் உன்னைக் காப்பாற்றுவேன் என்று உரைத்துக்கொண்டிருக்கையில் முறு முறு சத்தத்

துடன் பூமியும், மரமும் திசையும் நடுங்கத் தக்கதாய் பாய்ந்து வரும் அப்புலி நெருங்குவதையும் கண்டான். அப்புலி தனது சமீபத்தையடைவதற்குள் அக்குமாரன் அம்மானைத் தனது தோளின்மீது தூக்கி வைத்துக்கொண்டு அருகிலுள்ள ஒரு ஐம்பூமரத்தில் ஏறிக்கொண்டு அம்மரத்தின் உறுதிக்கிளையில் அம்மானைக் கட்டித்தானும் அங்கு அசைவற்று நின்று தைரியத்தையுமடைந்து தியாகேச! இவ்விடரிலிருந்து இம்மானையும், என்னையும் காப்பது உமது கடமை நானோ சிறியவன். உமது மகிமையோ அளவிடற்கரியது. இப்படியிருக்க உமது மகிமையை யான் எவ்வாறு அறியக்கூடும். இத்தருணத்தில் எம்மைக் காத்தருள்வீர் என்று ஈசுவரத் தியானத்துடன் அம் மரத்திலேயே அன்று பகலையும் இரவையும் கழிக்கலானான். சினங்கொண்ட அப்புலியும் ஏமாற்றத்தையடைந்து அம் மரத்தைச் சுற்றிச் சுற்றி முகர்ந்து கனைத்து உறுமிக் கொண்டு அம்மரத்தின்மீது ஏறச் சக்தியற்றதாய்ச் சுழன்று வரலாயிற்று.

அஃதவ்வண்ணம் இருக்கையில் விறகு வெட்டி வருவதற்காகக் காட்டிற்குச் சென்ற தனது மூத்தகுமாரன் இம் மாலை நேரத்திலும் வரவில்லையே என்று மனம் வாடிய அவனது பிதாவானவன் சிவ! சங்கர! தியாகேச! என்று சிவநாம ஸங்கீர்த்தனம் செய்துகொண்டே தனது மூத்த குமாரனை அந்நகரமெங்கும் தேடலானான், அங்கு அவன் காட்டிலிருந்து திரும்பி வந்ததாய் எக்குறிகளும் காணப் படவில்லை. அதனால் சிவனென்னும் அந்தச் சூத்திரன் தனது குமாரன் அவ்வனத்திலேயே வழி தடுமாறுகிறானோ; துஷ்ட ஜந்துக்களால் கபளீகரிக்கப்பட்டானோ; விஷப் பூச்சிகளால் கொல்லப்பட்டானோ; எங்குச் சென்றானோ; திரும்பி வரவில்லையே என்செய்வேன்? தியாகராஜ கற்பகமே என்று அழுதுகொண்டு அவன் அன்றிரவு நேரத்தில் காட்டுக்குள் செல்லலானான். அக்காட்டுக்குள் நுழைந்து

தனது குமாரனைத் தேடக் கருதி அக்ரூத்ர பக்தன் அவ்வாறு செல்லும்பொழுது அவனது மனைவியும், அவனது சிறு குமாரனும் அவனைப் பின்தொடர்ந்து செல்லலாயினர். இவ்விதமாய் அம்மூவரும் அன்றிரவில் மதிகலங்கியவர்களாய் அன்பார்ந்த மனத்தினால் தியாகராஜனது பாத கமலங்களை ஸ்பர்சித்துக்கொண்டு ஈசுவர நாமங்களை இடையில் வாக்கினால் ஓதிக்கொண்டு அக்காட்டை நோக்கிச் செல்லுகையில் பரமேசனது நாமோச்சாரண சக்தியினால் அப்புலியானது பயத்தையடைந்து வழியிலிருந்து விலகி நின்றது. அத்தருணத்தில் அம்மரத்தடியை அடைந்த அப்பக்தன் ஈசனருளால் தடுக்கப்பட்ட நடையையுடையவனாய் அங்குச் சற்று நிற்கையில் மரத்தடியில் தன்னைக் குறித்து அழுதுகொண்டு நிற்கும் பிதாவைக் கண்ட அக்குமாரன் அன்புடன் தந்தையைக் கூப்பிட்டு அங்கு நடந்த வரலாற்றைக் கூறி அம்மானையும் காண்பித்தான்.

அவ்விஷயத்தை அறிந்துகொண்ட அப்பக்தன் அப்புலியின் அருகில் சென்று ஓ புலியரசே! நீ இம்மானை விட்டுவிடுவாயாகில் அம்மானுக்குப் பதிலாக நான் என் சரீர மாம்ஸத்தை உனக்கு அளிக்க விரும்புகிறேன். இவ்விரு விஷயங்களில் உனக்கு எது சம்மதமாகும்? ஓ புலியே! உனக்கு இருவருடைய மாம்ஸமும் போதாவிடில் நீ என் மனைவியின் மாம்ஸத்தையும் எனது மற்றொரு குமாரனது சரீர மாம்ஸத்தையும் உனக்கு அன்புடன் அளிக்கவல்லோம். இவ்விஷயத்துக்காவது உனக்குச் சம்மதமா? நீ அம்மானை விடுவாயா? பயந்து சரணம் அடைந்த அம்மானைக் காப்பாற்றுவதற்காக நாங்கள் இவ்வாறு முயற்சி செய்வதற்கு ஸத்திய தெய்வமாகிய தியாகராஜனே சாக்ஷியாக விளங்குவாரென்றுரைக்கையில் அச்சிவபக்தரது நீதியும் சத்தியமும் நிறைந்த நற்சொற்களைச் செவியினால்பற்றிய அப்புலியானது சற்றுநேரம் ஆலோசனைசெய்து திகைத்து நிற்கையில் தயாநிதியாகிய

தியாகராஜன் அங்கு ஒரு ஆகாயவாணியை ஏவி அப்புலி யானது முன் ஜன்மத்தில் ஒரு கந்தர்வனாயிருந்து சத்தி யத்தை மீறிய குற்றத்தினால் புலஸ்திய மஹாரிஷியினால் புலியாகுக என்று சபிக்கப்பட்டவனாயும் அப்புலி ஜன்மத் தில் எப்பொழுது உனது காதில் நீதிமொழிகளும் சிவநாம ஸங்கீர்த்தனமும் வீழ்கிறதோ அத்தருணத்தில் உனக்காக வும், அவ்வாறு நீதிமொழிகளைக் கூறும் பக்தர்களுக்காக வும் தர்சனமளிக்கும் பரமசிவனது ஸ்வரூபத்தையடைந்த சாபசரீரமாகிய புலி ஜன்மத்தை நீக்கி மீண்டும் அழகிய கந்தர்வ சரீரத்தைப்பெற்றுச் சுகமாய் வாழக்கடவாய் என்று ரிஷி உரைத்த சாபத்தின் விஷயத்தையும் அவர் களுக்கறிவித்த தியாகேசன் அத்தருணத்தில் அச்சிவ பக்தனது குணச் சிறப்புக்காக உளமகிழ்வையடைந்து அங்கு நித்யபிரகாச ஸ்வரூபியாய் அவர்களுக்குத் தர்சனம் அளிக்கலானார்.

## 332. தந்தை தாயின் மகிமையை ஆணையினால் வெளியிட்ட லீலை.

அக்காட்டின் நடுவில் நள்ளிரவில் கோடிசூரியப்ரகாசம் பொருந்திய தனது திருமேனியைத் தியாகராஜன் காண் பிக்கும்பொழுது சிவனென்னும் பக்தனும் அவனது மனைவி யும் இருகுமாரர்களும், அவ்வீசனது திருவடியைக் கண்டு பணிந்து வியப்படைந்து வலஞ்செய்து துதிசெய்யலாயினர். அத்தருணத்திலேயே அப்புலியும் தனது மிருக சரீரத்தை விட்டு கந்தர்வ சரீரத்தையடைந்து விமானமேறி ஈசனது சென்னியில் மலர்மாரி பொழிந்து சாபத்தை யொழித்துத் தர்சனமளித்த பரம்பொருளைத் துதித்துத் தன்னுலகை யடைந்தான். அப்பரமேசனும் அவர்களுக்கு ஞானத்தை யளித்துத் தனது திவ்யவொளியை மறைத்துக்கொண்டு மூலதலத்தையடையலானார்.

இவ்வித அற்புதங்களையெல்லாம் கண்டுகளித்த அத் தொண்டர் நால்வரும் அம்மானின் உயிரைக் காப்பாற்றி அவ்வனத்திலேயே இஷ்டம்போல் செல்லவிட்டு அங்கு நடந்த பரமேசனது திவ்ய லீலையின் சிறப்பைப்பற்றிப் புகழ்ந்துகொண்டே மறுநாள் உதயகால சமீபத்தில் அவர்கள் திருவாரூர் நகரையணுகி வருகையில் அவர்களது எதிரில் ஒரு ஆமையானது குறுக்கிட்டுச் செல்லலாயிற்று. அதைக்கண்ட அச்சிவபக்தர் யாவரும் மனம் மாறுதலை யடைந்தும், சற்றுப் பயத்தையடைந்தும் தியாகராஜ! லோகநாத! ஸகல மந்திர ஸ்வரூபியே! எங்களது வழியில் குறுக்காகச் செல்லும் இவ்வாமையைக் கண்டு எங்களது மனம் நடுக்கத்தையடைகிறதே; என்செய்வோம் என்று ஈசனது நாமஸங்கீர்த்தனம்செய்து நிற்கலாயினர். அத் தருணத்தில் அந்த ஆமையானது அச்சிவபக்தர்களை வலஞ் செய்து தனது ஆமையின் சரீரத்தைப் பூமியில் தள்ளிவிட்டு மற்றொரு திவ்ய சரீரத்தைப்பெற்று ஆகாயத்தில் நின்று கொண்டு ஓ புண்ணியசீலர்களே! சிவபக்தர்களே! சரண மடைந்த மானைக் காப்பாற்றிய புண்ணியசீலர்களே! தாய் தந்தையரிடத்தில் பக்திபெற்ற ஓ சிவகுமார! நான் பூர்வ ஜன்மத்தில் மனுஷ்ய ஜாதியில் வைச்ய குமாரனாய் உதித் திருந்தும் மோஹத்தினால் தாய் தந்தையரை நிந்தனைசெய்த படியால் எனக்கு இந்த ஆமை ஜன்மம் உண்டாயிற்று. காட்டில் புலியினிடமிருந்து பயந்துவந்த மானைக் காப் பாற்றிய ஓ சிவகுமாரனே! நான் இவ்வித ஆமை சரீரத் துடன் இந்தப் புண்ணியபுரியில் வடதிசையில் ஓர் மடுவில் நெடுநாள் வஸித்திருந்தேன். சிற்சில ஸமயத்தில் நான் வாஸஞ்செய்யும் ஸரஸின் வழியில் செல்லும் முனிவரும் ஞானியரும் தாய் தந்தையரை இகழ்ச்சி செய்கிறவர் நரகத் தில் தலைகீழாகத் தொங்குவார்கள். அவ்வாறு கொடிய நரக வேதனைகளை யனுபவித்த பிறகு மறுஜன்மத்தில் கழுதையாயும், பிறகு கிளியாயும், பிறகு ஆமையாயும், பிறகு நாயாயும், பிறகு மனுஷ்ய ஜாதியில் ஹீனனாயும்,

பிறகு நற்குலத்தையும் அடைவார்கள் என்று தாய் தந்தை குருக்களின் மேன்மையைச் சொல்லக் கேட்டபடியாலும், அவர்களின் தர்சன பலத்தினாலும் உங்களது தர்சன பலத்தினாலும் எனக்கு இந்தச் சாப ஜன்மம் நீங்கி நான் இப்பொழுதே சுவர்க்கம் செல்லுகிறேன். இந்தத் தியாக ராஜனது மேன்மையை உரைப்பவர்களும் கேட்பவர்களும் சிறந்த மேன்மையையடைவார்கள் என்று சொல்லி ஆமையானது சென்றது. அப்பக்தர்களும் ஸதாஸர்வகாலமும் தியாகராஜனது பாதாரவிந்தத்தையே நினைத்துக்கொண்டு வாழ்ந்துவரலானார்கள்.



### 333. நன்மையுபதேசித்த லீலை

நீர்வளம் நிலவளம் பொருந்திய வயல் சூழ்ந்த சோழ நாட்டில் அழகிய சரத்காலம் தோற்றியபொழுது நதிகளின் ஜலமும், தடாகங்களின் ஜலமும் முனிவர் மனம்போல் தெளிவையடைந்தன. மேகங்களின் மறை சஞ்சாரமற்ற வானத்தில் வெண்குடைபோன்ற சந்திரமண்டலமும் முத்துக்கள்போன்ற நக்ஷத்திரங்களும் விளங்கின. தியாக ராஜனது திவ்ய குணங்கள்போல் குளிர்ந்த காற்றானது அந்நாடெங்கும் உலாவி சாதுக்களின் மனத்தில் சந்தோஷத்தையளித்தது. ஹம்ஸபக்ஷிகளும் பரமஹம்ஸமென்னும் முனிவர்களும் களிப்புடன் தேசமெங்கும் ஸஞ்சரிக்கலாயின. அச்சோழ பூபாலனது மாளிகை வாயலில் ஜயபேரிகை முழங்கலாயின. அழகிய சம்பாப் பயிர்கள் சுவர்ணக் கதிர்போன்ற நெற்கதிர்களைக் காண்பித்தன. மலர்ந்த வெண்டாமரை மலர்களில் பருகிய தேனையுண்ட வண்டுகள் தியாகேசனைத் துதிசெய்வதுபோல் அழகிய ராகங்களைப் பாடின. சாரிகைப் பறவைகளும், கிளிகளும் சில்லிகைப் பறவைகளும் கூட்டமாய் வானத்தில் பறந்து சென்று மாலை நேரத்தில் தியாகராஜனது விமானத்தின்மீது பந்தல் விரித்தனபோல் விளங்கலாயின.

இத்தகைய சமயத்தில் தியாகராஜனுக்குச் சரத்கால உற்சவமென்னும் சிறந்ததொரு நிலாத் திருவிழா நடைபெறலாயிற்று. களங்கமற்ற நிலாவெள்ளம் பாயப்பெற்ற முற்றங்களையும் மண்டபங்களையும் அங்கணங்களையுமுடைய திருக்கோயிலில் பக்தப் பிரியனாகிய தியாகராஜனுக்குப் பூபாலன் முதலிய தொண்டர்கள் அத்தருணத்தில் நிலாத் திருவிழாவைச் சிறப்புடன் நிறைவேற்றி வைத்தார்கள். அத்திருவிழாச் சமயத்தில் கமலநாயகியம்பாளின் திருமேனியையும் தியாகராஜாவின் திருமேனியையும் தர்சிக்க எண்ணி அங்குவந்து கூடிய கணக்கற்ற தொண்டர் குழாம் ஈசனைப் பணிந்து துதிசெய்து நிற்கையில் அவர்களின்மீது கருணைசெய்த தியாகேசன் அசரீரி வாக்கினால் உரைக்கலானார்.

கேளீர் சிவத்தியான சீலர்களே! பரமேசுவரனது சங்கற்பத்துக்கு ஏற்றவாறு சதுர்முகனால் ஸ்ருஷ்டிக்கப்பட்டு வளர்ந்து ஓங்கிவரும் இவ்வுலகத்தில் இம்மை மறுமைப் பலனைக் கருதிச் சத்பாத்திரத்தில் தானம் செய்தலே உறுதுணையாகும். தானஞ்செய்து நற்புகழ் பெற்ற பெரியோர்கள் சிவபதவியில் விளங்குகிறார்கள். தானத்தின் சிறப்பை எக்காலத்திலும் எவ்விதத்திலும் யாராலும் பூர்த்தியாய் உரைக்க முடியாது. களங்கமற்ற மனதுடனும், முகமலர்ச்சியுடனும் தானஞ்செய்து சிறந்த புண்ணியத்தைப் பெற்றவர்கள் வானோர்புகழ அரசாண்டும் ஈசுவர பக்தியுடனும் விளங்குவார்கள் இக்கலியுகத்தில் பரமேசனது அற்புத சரித்திரங்களைப் பக்தியுடன் கேட்பதே நற்பயன் அளிக்கும் ஸகல பாவங்களையும் நீக்கி உயர்பதமேறுவதற்குப் பரமேசுவர சரித்திர ச்ரவணமே ஏணியாகும். ஈசுவரனது திவ்யலீலைக் கதைகளைப் பக்தியுடன் கேட்பவர்கள் யாகஞ்செய்த பலனையும், பூமி ப்ரதக்ஷிணஞ்செய்த பலனையும், கங்காஸ்நான பலனையும் பெற்றுக் கைலாஸத்தில் நிலைபெறுவார்கள். பரமேசன்

அருளால் மெய்ஞ்ஞானம் பெற்ற மஹரிஷிகள் கூறும் புராணக் கதைகள் யாவும் ஸத்தியக் கதைகளென்றே நம்பிக்கையுடன் ச்ரவணம் செய்பவர்களே புண்ணியசாலிகள். ஈசனது அருளுக்கு முதற்பாத்திரமாய் விளங்கி இன்பமெய்துவார்கள். இதுபோலவே தத்தமது ஞானத்துக்கேற்றவாறு பரமேசனது திவ்ய கதைகளையும் நாமச் சிறப்பையும் புகழ்ந்து பாடுவதே நற்பதவியையளிக்கும். மலைகளின் உச்சியிலும் புண்ணிய வனங்களிலும் விளங்கும் மஹேசுவரலிங்க மூர்த்திகளுக்கு ஜலாபிஷேகம் செய்து வைத்தலும், சந்தனக் காப்பளித்தலும், வஸ்திரமளித்தலும், நைவேத்தியப் பொருள்களை அர்ப்பணம் செய்தலுமே நன்மையளிக்கும். பரமேசன் அவர்களுக்கு இம்மையில் நன்மையளித்து மறுமையில் உயர்பதவியையுமளிப்பார். பரமேசனது குணங்களைப் புகழ்ந்து பேசும் பக்தர்களிடத்தில் அன்புவைப்பவரும், அவர்களது மூர்த்தியைத் தர்சிப்பவரும், அவர்களுக்குத் தொண்டு செய்பவர்களும் நன்மையைப்பெற்று விளங்குவார்கள். அவைகளெல்லாம் ஈசனது மனக்களிப்பின் பொருட்டேயாகும். வேதங்களையும், சாஸ்திரங்களையும், புராணங்களையும் தெய்வமென்றே நம்புகின்றவர்களுக்குத் துன்பமே உண்டாகாது. பாவராசிகள் குன்றிவிடும். மஹேசன் அருளால் சிறந்த செல்வம் சிறந்தோங்கும் என்று இவ்விதமாய் அத்திருக்கோயிலின் நிலாத்தோற்று மண்டபத்தினருகில் உண்டாகிய ஆகாயவாணியைக் கேட்டவர் அனைவரும் பரமானந்தமடைந்து இவ்வுரையைத் தியாகராஜனே ஏவியிருக்க வேண்டுமென்று நினைத்து அத்திருவிழாவின் முடிவில் ஈசுவர கதாச்ரவணம், ஈசுவர நாமஸங்கீர்த்தனம், ஈசுவரனது மூர்த்தி தர்சனம், ஈசுவர பக்தர்களது பாதஸேவை என்பவைகளின் மேன்மையை அறிந்துகொண்டு தியாகேசனைப் பலவாறு துதிசெய்து களித்தார்கள். அப்பொழுது பூபாலன் முதலிய தொண்டரனைவரும் தியாகராஜனது திருமேனியை மீளவும் தேவவேதிகையின் அருகிலுள்ள பள்ளிக்கட்டிலில்

வீற்றிருக்கச்செய்து உபசாரங்களினுல் அர்ச்சித்து மேன்மையுடன் தமதிருப்பிடமடைந்தார்கள்.

## 334 சாகரந்தைக்கருள்செய்த லீலை

ஒருசமயம் திருவாரூர்ச் செல்வனுகிய தியாகராஜன் தன் பாதகமலத்தில் பக்திவைத்திருப்பவர்களின் மனத்தை பரீக்ஷிக்க விருப்பங்கொண்டவராய் ஒருநாள் காலையில் கோலூன்றிய கிழ அந்தணராய்த் தளர்நடையுடன் தோன்றி அச்சோழ நாட்டிலுள்ள சாகரபுரியின் வட திசையில் மெதுவாய் நடந்துசெல்லலானுர். அவ்வாறு தோன்றிய பரமேசன் முன்னமே அங்குச் சென்றுகொண் டிருக்கும் சில வழிப்போக்கர்களை அன்புடன் கூப்பிட்டு ஓ வழிப்போக்கர்களே! நான் நடந்துசெல்லும் இவ்வழி யானது எனது தளர்நடைக்கு அனுகூலமாய் உளதா? அல்லது மேடு பள்ளமும், சேறும் தண்ணீரும், செடியும் கொடியும், மரமும் முட்களும் நெருங்கியதாய் நான் நடந்துசெல்வதற்கு விரோதமுடையதா? இவ்விஷயத்தை நீங்கள் அறிவீர்களாகில் எனக்கு உரைப்பீர்களென்று கேட்கலானுர்.

நாணல் புஷ்பம்போல் வெண்மையான மீசைகளை யுடையவராய், மிகவும் கிழத்தன்மையை அடைந்து நடக்க சக்தியற்றவராய்க் கையில் ஊன்றுகோலைப் பற்றியவராய் தோன்றும் அக்கிழ அந்தணர் கூறிய அம்மொழிகளைச் சிலர் அன்புடன் கேட்டு அதற்குப் பதில் உரைக்காமலே விரைவாய்ச் செல்லலானுர். மற்றும் சிலர் இவ்வழியின் பான்மையை யாம் அறியோம் என்று கூறினர். சிலர் ஓ கிழ அந்தணரே! இவ்வித தளர்நடையுடன் நீர் இங்கு நடப்பதே நியாயமன்று. நாங்கள் எதிரில் விளங்கும் சாகரபுரியில் பரமேசனது மஹோத்ஸவத்தைத் தர்சிக்க விரைவாய்ச் செல்லுகின்றேம். நீரும் மெதுவாய் அங்கு

வருவீர் என்றுரைத்தார்கள். இக்கிழ அந்தணரை இவ் வழியில் தனியாய் விட்டு நாம் செல்வது நியாயமாகுமா என்றுரைத்துக்கொண்டே சென்றார்கள். இவ்விதம் அங்கு செல்லும் வழிப்போக்கர் பெரும்பாலும் அக்கிழவருக்குத் தக்க விடையளிக்காமல் சாகரபுரீசனது திருவிழாவைத் தர்சிக்கச் செல்லலாயினர். அதைக்கண்ட பரமேசனாகிய கிழ அந்தணர் சற்றுநேரம் சென்றபிறகு அங்கிருக்கும் ஒரு சேறுள்ள வாய்க்காலைத் தாண்டிச்செல்ல சக்தியற்றவராய் தயங்கி நடைகுலைந்து சிந்தனையுடன் நின்றுகொண்டிருக்கையில், அதுகண்டு வெகுதூரத்திலிருந்து ஓடிவந்தவனாயும், சாகரந்தை என்னும் பெயருள்ளவனாயும் விளங்கும் பயிர்களைக் காக்கும் வேலைக்காரன் ஒருவன் அங்குவந்து அவரது தோற்றத்தைக்கண்டு வியப்படைந்து ஓ பிராமணோத்தமரே! நீர் ஏன் துன்பப்படுகிறீர்? உமது முகத்தில் வீசும் சிறந்ததொரு ஒளியானது நான் வெகுதூரத்தில் உம்மைக் கண்டபொழுதே எனது மனத்தைக் கவர்ந்துவிட்டது. அதனால் நான் உமக்குப் பணிசெய்ய விருப்பங் கொண்டவனாய்க் கேட்கிறேன். நீர் இவ்வித தளர்நடையுடன் சேறும் நீரும் நிறைந்த இவ்வாய்ககாலைத் தாண்டுவது கஷ்டமாகும். ஆதலால் நான் எனது முகத்தைப் பூமியில் வீழ்த்திக் கொண்டு கவிழ்ந்த முகமாய்ச் சற்றுநேரம் இங்கு நிலை பெறுவேன். எனது படர்ந்த முதுகின்மீது நீர் உமது திருப்பாதங்களை மெதுவாய் வைத்துக் கோலூன்றி இவ் வாய்க்காலைத் தாண்டுவீர். இதை நீர் கடந்துசெல்வதற்கு இதுவே சிறந்தது. வேறுவிதமாய் நீர் செய்யச் சொன்னாலும் நான் செய்கிறேன் என்று அவரது எதிரில் வணங்கி நின்றான்.

நெற்பயிருள்ள பூமியை ரக்ஷிக்கும் சாகரந்தை என்னும் அவன் சிறுவயது முதல் சிவபக்தர்களிடத்திலும், வேதியர்களிடத்திலும், பரமேசனிடத்திலும் ஒப்பற்ற பக்திவைத்திருந்தபடியால், அக்காவற்காரன் அன்புடன் உரைத்ததைக் கேட்ட தியாகராஜனாகிய அக்கிழ அந்தணர் அவனது

மனத் தூய்மையையும் பக்தியையும் உலகில் பரவச்செய்ய விருப்பங்கொண்டவராய் அவனுக்கு ஆசிபுரைத்து அவன் கூறியவாறே செய்வது நலமென்றுரைத்தார். அத்தருணத்தில் அவ்வேலைக்காரன் பரமேசனது பாதகமலத்தைத் தனது மனத்தில் தியானித்துக்கொண்டு சேறும் நீரும் நிறைந்த அவ்வாய்க்காலில் தான் கவிழ்ந்த முகமுடையவனாய்ப் படுத்துக்கொண்டு ஈசுவர த்யானத்துடன் மூச்சையுமடக்கிக்கொள்ளலானான். அவனது பக்தியின் மேன்மையைக் கண்டுகளித்த பரமேசனாகிய அக்கிழ அந்தணர் அப்பொழுது அவ்வண்ணமே இருபாதங்களையும் மெதுவாய்த் தூக்கி அவனது முதுகில்வைத்து நடந்து அவ்வாய்க்காலைக் கடந்தவுடனே அச்சாகரந்தனுக்குத் தனது திவ்ய தர்சனத்தைக் காண்பித்து அவனுக்குச் செல்வம் உண்டாகுக என்றுரைத்து மறைந்தார்.

அவ்விதக் கிழவர்போல் தோற்றி வழியின் பான்மையை விசாரிக்கும் ஈசனுக்கு விடையளிக்காமலே சென்ற அவ்வழிப்போக்கர்களின் மனதுக்கு அவ்விஷயங்கள் யாவும் தோற்றும்படி தியாகேசன் அச்சாகரபுரியில் ஒரு ஆகாய வாணியையும் ஏவினார். அதைக்கேட்ட அத்தொண்டர் யாவரும் அவ்வாறு கிழ அந்தணர்போல் தோற்றிய பரமேசனது தர்சனத்தைத் தாங்கள்பெற முடியவில்லையே; பாவிகள் ஆனோமே என்று மனம் குழைந்து அலறிப் புலம்பி அதுமுதல் தொண்டரிடத்திலும் ஈசனிடத்திலும் ஒப்பற்ற பக்தியைக் காட்டி அவ்வீசனது பாதபக்தியையே உறு துணையாகப்பெற்று நன்மை எய்தினார்கள்.

* * *

## 335. தென்திசைக்கு வாவென்றழைத்த லீலை

முன்பு ஒருசமயம் தூர்வாஸ முனிவரது உபதேசத்தைப் பெற்ற உத்தமன் என்னும் பூபாலன் தனது ராஜ்ய காரியத்தைத் தனது குமாரனாகிய இளவரசனிடத்திலும் அமைச்சரிடத்திலும் ஒப்படைத்துவிட்டு வைராக்கியத்தை

யணியாகப்பூண்டு கங்கைக் கரையையடைந்து ஐம்பொறிகளையும் வென்று நெடுநாள்வரையில் அஷ்டாங்க யோக முறையிலமர்ந்திருந்தான். அநேக பக்ஷங்களையும், மாதங்களையும், அயனங்களையும், நியம விரதத்தினுல் கழித்த பிறகும் யோகமுறையில் ஆழ்ந்த மனத்தைப் பரமேசனது பாதமலரில் நிலைபெறச்செய்தும் உக்கிரமாகிய பாவராசிகள் யாவும் ஞானக்கினியினுல் எரியும்படி செய்தும் நேராக ஈசனைக் காண்பதற்கு ஆவலுடன் முயற்சிசெய்யலானுன்.

முனிவர்போல் உலகச் செல்வத்தைப் பகிஷ்கரித்தும், பரமசிவ பக்தியையும், சிவ சின்னங்களையும் அணிந்துகொண்டும் புண்ணிய நதிகளில் சிறந்தவளாகிய கங்கா தேவியின் தர்சனத்தைப்பெற்றும் அருகிலுள்ள ஆச்ரமங்களில் வேதியரது வேதகானத்தைக் கேட்டும் புனிதமான பரமசிவனது கதைகளை ச்ரவணம்செய்தும் இவ்வாறு முறை முறையாய் நற்பதவியில் நிலைபெற்றுவரும் அவ்வுத்தமராஜனது மனத்தூய்மையைக் கண்டுகளித்த தியாகேசன் ஒருநாள் அவனுக்குத் தர்சனத்தையளித்து உனக்கு என்ன வரம் வேண்டும்? அதையளிப்பேன் என்றுரைத்தார். முனிவர் மனம் தேடியும் காண்டற்கரியவனுகிய அத்தியாகராஜனது திவ்ய தர்சனத்தை யோகக் கண்களால் கண்டுகொண்ட அம்மன்னவன் ஈசனை நோக்கி ஓ பரம்பொருளே! மூல காரணமே! சதாசிவ ஸ்வரூபியே! இவ்வுலகிலுள்ள செல்வங்களை வெறுத்து யோகத்திலமர்ந்திருக்கும் என் மனம் களிக்குமாறு இம்மையில் எனக்கு நீர் உமது திருமேனியின் தர்சனத்தையளித்தும் மறுமையில் உமது பாதத்தில் ஐக்கியச் செல்வத்தையும் அளிக்கவேண்டுமென்று வேண்டினுன்.

பாஞ்சால தேசத்தரசனுகிய அவ்வுத்தம பூபாலன் இவ்விதமாய்ப் பரமேசனிடத்தில் வரங்கேட்கையில் அவனது பக்தியின் மேன்மைக்கு ஈடுபட்ட பரமேசுவரன் ஓ பாஞ்சால பூபாலனே! நான் உனக்கு அவ்வண்ணமே

தர்சனமளிப்பேன். நான் உதிக்கும் திசையாகிய தென திசைக்கு நீ வருவாயாகில் உனது மநோரதம் நிறைவேறும் என்றுரைத்து மறைந்தார். அவ்வண்ணமே ஈசனிடமிருந்து வரம்பெற்ற பாஞ்சால பூபாலன் மனக்களிப்பையடைந்து கூப்பிய கையுடன் எண்திசைகளையும் நோக்கி இவைகள் யாவும் பரமேசனருளாலேயே நிலைபெற்று விளங்குகின்றன என்றுரைத்துக்கொண்டே அருகிலுள்ளவர் அனைவரையும் கூப்பிட்டு நீங்கள் தென்திசையையடைவீராகில் அங்கு உங்கள் மனத்தில் வேதாந்தப்பொருள் விளங்கும். பாவ ராசிகள் குன்றிவிடும். இம்மையிலும் மறுமையிலும் இன்பப்பெருக்கம் உண்டாகும் என்று நன்மனத்துடன் பிறருக்கும் ஈசுவரபக்தியை புகட்டிக்கொண்டே தென் திசையில் செல்லலானான். அநேக நதிகளையும் வனங்களை யும் அப்பூபாலன் கால்நடையினாலேயே தாண்டிச்செல்லத் துணிந்துநிற்கையில் அவனது பக்தியின் சிறப்பைக்கண்ட தேசயாத்திரைக்காரரும் ஈசபக்தர்களும் அவனைப் பின்பற்றலாயினர்.

## 336. கற்றோர் கப்பத்தை அழித்த லீலை

தியாகரர்ஜனது கருணையினால் மூவுலகும் செழித்து ஓங்கி விளங்குகையில் கொங்கண தேசத்தில் வசித்துவந்த சில புத்தர்கள் தமது பொய் மதங்களை நாடெங்கும் பரவச் செய்து பற்பல இன்னல்களை விளைவிக்கக்கூடிய பேச்சினால் அந்தந்த பூபாலர்களுடைய மனத்தையும் கவர்ந்து கொண்டு தென்திசையில் விளங்கும் சைவமதப் புலவர் களும், இலக்கியப் புலவர்களும், இலக்கணப் புலவர்களும், புராணம் படிப்பவர்களும், வேதம் ஓதுவாரும், உபநிடதப் பொருள் கூறுவாரும் மற்றுமுள்ள புலவர்கள் யாவரும் வருடத்திற்கு ஒருமுறை தமது முதல் குருவாகிய சங்காராம தீர்த்த குருவுக்குக் கப்பம் அளிக்கவேண்டும் என்று

கொங்குமண்டல பூபாலன் மூலமாய் இவ்விதக் கட்டளையை நாடெங்கும் பரவச்செய்தார்கள். அக்காலத்தில் எங்கும் பரவிய அப்புத்தமதத்தின் பொய்ச் சிறப்பைக் கொண்டும், அப்புத்த குருமாரின் கலகப் பேச்சைக் கேட்டும் மதிமயக்கத்தை அடைந்த சில பூபாலரும் அப்புத்த குருவுக்கு மற்ற புலவர் யாவரும் கப்பமளிக்க வேண்டுமென்று கட்டளையிட்டபடியால் ஆவ்விதப் புலவர் யாவரும் அரசரது கட்டளைக்கு உட்பட்டு நெடுநாள் வரையில் கப்பமளித்து வரலாயினர்.

சிவமத குருமாரிடத்திலிருந்தும், சிவதத்துவம் விளக்கும் மெய்ஞ்ஞானியரிடமிருந்தும் மற்றுமுள்ள புலவர்களிடத்திலிருந்தும் கப்பம் பெற்றுவரும் அப்புத்தகுருவுக்கு நாளடைவில் அடங்காக் கர்வமுண்டாகவே அதனடியாய் அவன் மெய்ஞ்ஞானியரையும், அவர்கள் உரைக்கும் பொருள்களையும் இகழ்ந்தும், சிவபக்தர்களைப் பழித்தும், சதாசிவ சொரூபியின் மேன்மையை மறைத்தும், நீதி முறைகளையும் சத்திய முறைகளையும் அழித்துவருகையில் சோழநாட்டில் உள்ள வேதியர் ஒருவர் ஒருநாள் திருவாரூர் நகரை அடைந்து கமலையில் நீராடி ஜபமுறைகளை முடித்துக் கொண்டு பக்தியுடன் தியாகேசனைப் பணிந்து துதித்துத் திரும்புகையில் சில வருஷகாலமாய் அவ்வேதியர் அப்புத்த குருவுக்குக் கப்டம் அளித்து வாராமையாலும், அப்புத்த குருவின் புகழைப் புகழ்ந்து பேசாமையாலும் கடுஞ்சினம் கொண்ட கொங்க பூபாலனது கட்டளையைச் சென்னியில் தாங்கிவந்த சில வீரர்கள் அவ்வந்தணரை வலுவில் அழைத்துச்செல்லலாயினர். வேதச்சுடர் என்னும் பெயர் பூண்ட அவ்வேதியர் அநியாயத் துறையில் இறங்கிய வீரர்களால் அவ்வாறு இழுக்கப்பட்டுச் செல்லுகையில் சற்று மனச்சோர்வை அடைந்தவராயும் தளர்நடையை உடையவராயும் ஈசனை மனத்தில் தியானித்துக்கொண்டு லோகநாத! தியாகேச! பரம்பொருளே! உமது பாத பக்தி நிறையப்பெற்று மெய்ஞ்ஞானம் நிறைந்த புலவர் யாவரும்

அப்புத்த குருவுக்கு இவ்வாறு கப்பம் அளித்துவருவது நியாயமா! அவ்வற்பனைத் துதித்துப் புகழ்வதும் முறையாகுமா! உமது நற்புகழையே பாடிய எனது வாயினால் இனி யாரையும் துதி செய்யமாட்டேன். அவ்வரசனாகிலும், அக்குருவாகிலும் எனது சரீரத்தை எவ்வண்ணம் செய்வாராயினும் நான் அதற்கு அஞ்சேன். உமது பாத பக்தியையும், தத்துவச் சிறப்பையும் நான் இனி மறவேன் என்று இவ்வாறு அழுத கண்ணீருடன் வெகுதூரம் வழிநடந்து செல்லுகையில் இரவுவந்தது. அந்த இராஜ வீரர்களும், அவ்வந்தணரும் அன்று மாலை நேரத்தில் அருகிலுள்ள ஒரு தடாகத்தின் கரையை அடைந்து கனிகளை உண்டு அங்கு உள்ள ஓர் மரத்தடியில் படுக்கலாயினர்.

வேதங்களைக் கற்றவரும், சிவபக்தி நிறைந்த மனமுள்ளவரும், அநேக நற்குணங்களுக்கு இருப்பிடமாயுள்ள வேதச்சுடர் என்னும் அவ்வந்தண உத்தமரைச் சிறையிலிட்டுத் தண்டிப்பதற்காக வீரர்கள் அவரைக் கட்டி இழுத்துச் செல்லும்பொழுது அவ்வந்தணர் மனம் கலங்குவதை அறிந்துகொண்ட தியாகராஜர் அன்றுமுதல் அவ்வந்தணர்க்கும், மற்றுமுள்ள புலவர்களுக்கும் நற்சிறப்பை அளிக்கக்கருதியவராய் அன்று இரவிலேயே அநேக அரசர்களுடைய கனவில் ரிஷிபோல் தோன்றி ஓ அரசர்களே! நீங்கள் அதர்ம முறையில் இறங்கவேண்டாம். சத்திய வழியைக் கைவிடாதீர்கள். இனி நீங்கள் சிறந்த சிவ தத்துவச் சிறப்பை அழிக்க முயல்வீராகில் உங்கள் குலமே அழியும். மெய்ஞானப்புலவர் யாவரும் அப்பொய்மதப் புத்த குருவுக்குக் கப்பம் அளிக்கும்படி செய்து வருவதினால் உங்கள் நாட்டில் அதர்மமும் பாபமுமே வளர்ந்துவருகின்றன. இதைத் தணிக்க முயல்வீர்கள். இதுவே பரமேசரது நற்சொல். இதையும் நீங்கள் இனி இகழ்வீராகில் தியாகராஜனது நிக்ரக சக்திக்கும் பாத்திரர்களாவீர் என்று உரைத்து மறைந்தார்.

கருணைக் கடலாகிய தியாகராஜர் அன்று இரவில் பாண்டிய நாட்டுப் பூபாலன் கனவிலும், கேரள நாட்டுப் பூபாலன் கனவிலும், கொங்குநாட்டுப் பூபாலன் கனவிலும் மகதநாட்டு அரசன் கனவிலும், கலிங்கநாட்டு அரசன் கனவிலும், காந்தாரநாட்டு அரசன் கனவிலும், சமகாலத்தில் தோன்றி இவ்வாறு உரைத்து மறைந்த பிறகு கண் விழிப்பை அடைந்த அப்பூபாலர் யாவரும் பயந்து நடுக்கமுற்றுப் புண்யபுரீச! தியாகேச! நாங்கள் செய்த குற்றத்தை உமது பெருங்கருணையினால் மன்னித்துக் காப்பாற்றுவீர். சகல தானவர்க்கும், வானவர்க்கும், முனிவருக்கும், உலகங்களுக்கும் ஆதிப்பொருளாகிய பரமேச! நாங்கள் அக்ஞானத்தால் செய்த குற்றத்தை மன்னித்துக்காப்பாற்றுவீர். மெய்ஞானம் நிறைந்த புலவர்களிடத்தில் நாங்கள் செய்த குற்றத்தினால் எங்களுக்கு உண்டாகிய பாபமும் நீங்குமாறு அருள் புரிவீராக என்று வணங்கி உடம்பு பதறி அன்று இரவைப் பரமேச்சுர நாம சங்கீர்த்தனத்தினால் கழித்து மறுநாட் காலையில் தமது குதிரை வீரர்களை அனுப்பிக் கனவில் ரிஷி போல் தோன்றிப் பரமேசன் உரைத்ததை வெளியிட்டு அக்கணமுதல் அப்புத்த மண்டலத்தோர் தமது நாட்டில் இருக்கக்கூடாதென்றும் கட்டளையிட்டுப் புலவர்களைப் பணிந்து பூசிக்கத் தொடங்கினார்கள். அவ்விதப் புலவர்களும் தாம் செலுத்திவந்த கப்பத்தை ஒழித்து ஈச்வர பக்தியினால் சிறப்புடன் விளங்கலாயினர்.



## 337. கனியளித்தவளுக்குப் பயனீந்த லீலை

ஒருசமயம் பசுபதிபுரியில் பார்வதி என்னும் பிராம்மண குமாரி ஒருத்தியிருந்தாள். அவள் ஜாதியினால் நற்குணங்களினாலும் பார்வதிதேவிக்கு நிகராக வளர்ந்து வந்தபடியால் அவளது குணச்சிறப்பைக்கண்ட ஞானியரே

அவளைப் பார்வதிதேவியின் அம்சமோ என்றும் பெயரினால் பார்வதியென்றும் வழங்கலாயினர். அவ்வித நற்குணங்களுக்கு இருப்பிடமாகிய அப்பிராம்மண கன்னியை அக்கி கோத்ரத்தில் உதித்த ப்ரதசாகன் என்னும் அந்தணர் அக்னியை முன்னிட்டுக்கொண்டு முறைப்படி வேதியர் பாதங்களை வணங்கி விவாஹமும் செய்துகொண்டார். சில வருடங்கள் சென்றபிறகு அவ்வந்தணர் தனது மனைவியை யழைத்துக்கொண்டு தனது ஜன்மபூமியாகிய திருவலம்புரிக்குத் திரும்பிவருகையில் நடுவழியில் விளங்கும் புண்ணியனைப் பணிந்து வலஞ்செய்து துதித்துப் போற்றிய பிறகு தியாகேசனுடைய திவ்யகுணச் சிறப்பைத் தனது மனைவியுடன் கூறிக்கொண்டே தனதில்லம் புகுந்தார்.

அதுமுதல் பார்வதி என்னும் அவ்வந்தண மாதும் தனது கணவன் திருமுகத்திலிருந்து பெருகிய தியாகேச குணங்களின் பெருமையை நினைந்து மெய்சிலிர்ப்பெய்திக் கண்களில் ஆனந்தக் கண்ணீர் மல்க நின்று அத்திசையை நோக்கி அஞ்சலி செய்வாள். அற்புத குணாதார! பக்தர் விருப்பங்களையளிக்கும் கற்பகமே! மாசற்ற மணியே! வேதியர்குல தெய்வமே! முனிவரின் ஞானச்சுடரே! உமது திருவுருவங்களே எனது கண்களில் காணப்படுகின்றன. உமது திவ்விய மேனியை நான் கண்டதுமுதல் எண்திசைகளிலும், வீதிகளிலும், வீடுகளிலும், தடாகக் கரையிலும், நதியின் வெள்ளத்திலும், பூஞ்சோலைகளிலும் உமது திருவுருவங்களே எனது கண்களில் காணப்படுகின்றன. உமது திவ்ய மேனியை நான் கண்களால் கண்டபிறகு உலகப் பொருள் யாவும் என் மனத்தைக் கவரவில்லையே. இந்த ஜன்மத்தில் நான் உமது திருமேனியையே காணும்படி அருள்புரிவீர். மறுமையிலும் எனக்கும் எனது கணவனுக்கும் நற்பதவி தந்தருள்வீர். ஈச! தேவ தேவ! மகாதேவ! புண்ணியபுரீ தேவ! எமது பாவச் சரீரத்தைப் புனிதமாக்கி உமது தொண்டு தொழிலில் பதியவைப்பீர்.

பரம்பொருளே! எனது பேதமையை நீக்கி ஞானச்சுடர் அளிப்பாய் என்றிவ்விதமாய் முக்காலத்திலும் முக்கண்ணனையே முழுமனதினாலும் போற்றிவரலானாள்.

இவ்விதமாய்த் தியாகராஜ தியானத்தில் ஆழ்ந்து மெய்மறந்து அவரது பாதமலரில் பக்தி மாலையைக் கட்டித் துதிசெய்து களித்துவரும் அப்பார்வதி என்னும் மனைவியுடன் ப்ரதுசாகன் என்னும் அவ்வேதியரும் அக்னி காரிய முறையையும், விருந்தளிக்கும் முறைமையையும், பக்தி செய்யும் வகுப்பையும், வேதமோதும் பான்மையையும், குறைவின்றி நடத்திவருகையில் அப்பிராம்மண மாதின் நற்குணங்களையும் பக்தியையும் கண்டுகளித்த தியாகேசன் அவள் உரைப்பதுபோலவே யாவும் ஸத்தியமாக விளங்கும்படி அருள்புரிந்தார். அவ்வீசனது சங்கற்பம்போலவே மறுநாட்காலைமுதல் அவள் தனது வாக்கினால் எவ்வுரையையுரைக்கிறாளோ, அஃது அப்பொழுதே அவ்வண்ணமே ஸத்தியமாக நிறைவேறலாயிற்று. பால்ய வயது முதல் சிறந்த நற்குணங்களையுடையவளாயும், மாதர் நீதி முறைப்படி கணவனது பாதசேவை செய்துவருபவளாயும் தியாகராஜன் அருள்பெற்றவளாயும் விளங்கும் அம்மாதின் வாயிலிருந்து வெளியாகும் சகல மொழிகளும் முனிவர் மொழிபோலவே சத்தியப்பொருளாக மாறத்தொடங்கியது முதல் அப்பார்வதியாரின் வீட்டையணுகி அவளது பாதத்தில் பணிந்த ஜனங்களில் சிலர் தமது நோய் தணிய வேண்டுமாறு மொழியுரைப்பாய் என்றும், சிலர் தமது மக்களுக்கு ஞானம் வளரும்வண்ணம் அருள்புரிவாய் என்றும், மற்றும் சிலர் தமது துன்பம் நீங்கி ஈசபக்தி வளரும்படி கருணைபுரிவாய் என்றும் இவ்வண்ணமாய்ப் பலவாறு தமது மனக்குறைகளை மாற்றும்படி வேண்டி நிற்கையில், அவளும் அஞ்சலியினால் தியாகராஜனை வணங்கி அவரது ஆதாரபீடத் தத்துவச் சிறப்பை மனதில் சற்றுத் தியானித்திருந்து சம்போ! சங்கர! சந்திர மௌளியே! உமது பக்த ஜனங்களின் பிணி நீங்கும்

வண்ணம் அருள்புரிவீர் என்று துதித்தபிறகு அவர்களை அன்புடன் நோக்கி அவர்களது விருப்பம்போலவே சொல்லலானுள். அம்மொழியும் அப்பொழுதே பயன் அளிக்கலாயிற்று.

இவ்விதமாய் அம்மாதின் மொழியினுல் அந்நாட்டில் உள்ளவர் பெரும்பாலும் தமது விருப்பங்களையடைந்து களித்துவருகையில் ஒரு நாள் திருவாரூர்ச் செல்வனுகிய தியாகராஜன் அம்மாதின் மனக்கருத்தையறியவேண்டும் என்றும் அவளது நற்புகழை உலகில் பரவச்செய்ய வேண்டும் என்றும் விருப்பங்கொண்டவராய் ஒரு கிழவி போல் உருவமெடுத்துக்கொண்டு அம்மாதின் வாயலில் தோன்றினுர். பரமேசன் அவ்வாறு தோன்றும்பொழுதே அம்மாது தனக்கு ஒரு கனி அளிப்பாளாகில் தானும் அவளுக்குச் சிறந்த நன்மையளிப்பதாக நினைத்துக் கொண்டே அவளது முன் தோன்றி நின்று நற்குண நிதியாகிய ஓ வேதிய மாதரசியே! நிமிஷ நேரத்துக்குமுன் எனது மனதில் தோற்றிய பொருள் யாது? அதை நீ உரைத்த அவ்வண்ணமே அதை நீ எனக்கு அளிப்பாயாகில் உன்னிடத்தில் ஈசன் அருள்புரிவார் என்றுரைத்தார். அவ்வுரையைக்கேட்ட அம்மாது தனது திருக்கரங்களைச் சென்னியில் வைத்துத் திசையை நோக்கித் தியாகேச! ஞானச்சுடரே! என்று ஈசனது திவ்ய நாமங்களை மனத்தில் நினைத்துச் சற்று நேரம் ஆலோசித்துப் பார்த்தாள். தனது எதிரில் நிற்கும் கிழமாது முதலில் பரமேசன்போலவும், பிறகு உலக மாதாவாகிய பார்வதிதேவிபோலவும் இவ்வாறு மாறிமாறித் தோற்றியபடியால் மனதுக்கு மெய் யுருவம் தோற்ருமையைக் கண்டு நடுங்கிய அம்மாது ஓ தியாகராச! உமது கருணையினுல் இதுவரையில் நிலைபெற்ற என் மனம் இப்பொழுது அலைபோல் அசைதலையடைந்து உண்மை ஸ்வரூபத்தைக் காணவில்லையே; என் செய்வேன் நீயே கதி என்று பூமியில் வீழ்ந்து பணிந்தாள். அவ்வாறு

தூயமனமுடைய அம்மாதின் நமஸ்காரத்தைப்பெற்ற பரமேசனும் அவள் மீது அருள்புரியவெண்ணுகையில் அப்பொழுதே அவளது மனதில் ஞானோதயமுண்டாயிற்று. அவ்வித ஞானக்கண்களால் கண்டறிந்த, அம்மாதா வானவள் கிழமாதுபோல் தோற்றிய தியாக கற்பகமே! நீர் நிமிஷ நேரத்துக்குமுன் விரும்பியதுபோலவே இக்கனியை அளிக்கிறேன். கருணையினால் அங்கீகரிப்பீரென்று வைத்துக்கொண்டே அவ்வாறு தோற்றிய ஈசனை வலம் செய்து வந்து திவ்விய வாக்கினால் துதித்த பிறகு தனது திருக்கையினால் ஒரு பிடி மண்ணைக் குவித்து இம்மண் ருசியுள்ள மாங்கனியாக மாறுக என்றுரைத்தாள். கற்பு, தூய்மை, தெய்வபக்தி முதலிய நற்குணங்கள் நிறைந்த அம்மாது அவ்வாறு பரமேசனை நினைத்துக்கொண்டே அம்மண்ணைப் பிடித்துத் தொடுகையில் அவளது கரஸ்பரிச மகிமையினால் அம்மண் அப்பொழுது ருசியுள்ள கனியாக மாறிவிட்டது. அதைக் கண்டுகளித்த பரமேசனாகிய அக்கிழ மாதும் அப்பார்வதியின் நற்குணங்களை அருகில் உள்ளவர்களுடன் சற்றுநேரம் புகழ்ந்துபேசி, அவளது கண் களிக்கும்படி தனது திவ்ய தர்சனத்தையுமளித்து உனது மனவிருப்பங்கள் யாவும் நிறைவேறுமாறு அருள் புரிந்தேன் என்றுரைத்துக்கொண்டே திடீரென்று மறைதலையடைந்தார். இவ்விஷயங்களையெல்லாம் கண்டு கொண்டிருந்த அந்நகர வாசிகளனைவரும் மண்ணால் கனி யளித்த அம்மாதின் உத்தம பக்தி முதலிய குணங்களைப் புகழ்ந்து கொண்டாடி அவளது உபதேசம்போலவே தியாகராஜ தர்சனத்தையே முக்கிய துணை என்று நம்பி நன்மையடைந்து விளங்கினார்கள்.



## 338. புண்ணிய விமானப் பெருமையை விளக்கிய லீலை

## 339. அபிஷேக ஜலத்தின் மகிமையை வெளியிட்ட லீலை

ஒரு சமயம் சோழநாட்டுக்கு நன்மையளிப்பதற்காகவும், தியாகராஜனது அருளைப் பக்தர்களின்மீது பாயச் செய்வதற்காகவும், எவ்வுயிர்க்கும் நலம் பெருக்கவல்ல வர்ஷாகாலம் தோன்றிப் பூமிக்குச் சிறப்பையளித்த பிறகு சரத்கால ஆரம்பதினமாகிய துலாமாதத்தில் புண்ணியபுரி நாதனென்றும், வீதிவிடங்கனென்றும், பக்தரின் தெய்வமென்றும் மூவுலகும் வந்தனை செய்யும் தியாகராஜனுக்குத் துலா சங்கிராந்தி புண்ணிய காலத்தில் சிறந்ததோர் அபிஷேகத்தை நிறைவேற்றிவைத்த தொண்டர்கள் யாவரும் ஈசனது எதிரில் நின்று போற்றிக்களிக்கையில் அத்தொண்டருக்குத் தனது புண்ணிய விமானச் சிறப்பையும் தனது அபிஷேக ஜலத்தின் மேன்மையையும், சொல்லக் கருதிய தியாகராஜன் ஒரு முனிவர்போல் அவர்களது எதிரில் வந்து தோன்றிக் கேளீர் பக்தர்களே ! இவ்வீசனது அபிஷேகச் சிறப்பைக் கண்டுகளித்த நீங்களே புண்ணிய சீலர்கள். இவ்வீசனது புண்ணிய விமானமானது முன்பு கிருதயுகத்தில் திருமாலினாலும். திரேதா யுகத்தில் சதுர் முகனாலும், துவாபரயுகத்தில் இந்திரன் முதலிய திக்பாலகர்களாலும் ஸப்தரிஷிகளாலும், அஷ்டவஸுக்களாலும், குபேரனாலும், நாரதர், காச்யபர், தூர்வாஸர், வஸிஷ்டர் முதலிய தேவரிஷிகணங்களாலும், சாஸ்திர முறைப்படி பூஜிக்கப்பட்டதாய் இப்பூமியின் பாக்கியத்தினாலிங்குத் தேவவேதிகையுடன் கூடிவிளங்குகிறது. இவ்விதபுண்ணிய விமானத்தின்கீழ் இருபத்துநான்கு தத்துவாதார சக்தி பீடத்துடன் விளங்கும் இந்தத் தேவவேதிகையானது ஷட் சக்கிரங்களையுடையதாய், சக்திஸ்வரூபியாய், ஸ்வயம்பு ஸ்வரூபியாய்க் காலையிலும், மாலையிலும் தேவர்களால் வணங்கப்பெற்றதாய், சூர்யோதய காந்தியையடைந்ததாய்

ஊர்த்துவ கஜப்ருஷ்டத்துடனும், கிண்கிணிகளுடனும், நவரத்தின ஸோபானங்களுடனும் கூடியதாய் விளங்குகிறது.

இந்தத் தேவவேதிகையின்மீதும், இந்தப் புண்ணிய விமானத்தின் கீழுமாய் விளங்கும் தியாகராஜனே துன்பம் துடைக்கும் சுடர். இவரே வேதக்கொழுந்து. வேதாந்த தீபம். இப்பரஞ்சுடருடன் கூடிவிளங்கும் இப்புண்ணிய விமானத்தைத் தர்சிப்பவர் யாரேனும் அவர்கள் பாபிஷ்டர்களாயினும், ரோகிகளாயினும், தனஹீநராயினும் அவ்வித பாபங்களையெல்லாம் ஒழித்துவிட்டுத் திவ்ய சரீரத்துடன் கைலாஸபதியையடைவார்கள். ஆதாரபீடத்தில் தேவவேதிகையையும், நடுவில் வேதாந்தப்பொருளையும் பெற்றும் ஸுவர்ணமயமாயும், ஸர்வசக்திஸ்வரூபியாயும் விளங்கும் இப்புண்ணிய விமானமானது பக்தர்களின் விருப்பங்களையளிக்கும். துன்பங்களையழிக்கும். நற்பயனை வளர்க்கும். கற்பத்தரு மலர்களால் வானவரும், தானவரும், யக்ஷரும், கந்தர்வரும், முனிவரும், வேதியரும், யோகிகளும் அன்புடன் பூசைசெய்யப்பெற்று உதயகிரிபோல் ஒளியுடன் விளங்கும் இவ்விமானத்தைக்கண்டு அஞ்சலி செய்பவர்களுக்கு நரகமே ஏற்படாது. சகல புண்ணியநதி ஸ்நான பலனுமுண்டாகும்.

இப்படிப்பட்ட புண்ணிய விமானத்தின் கீழ் பகலோன் ஒளியைப்பழிக்கவல்ல காந்திவீசப்பெற்ற திருமேனியையுடையவராய்த் தேவவேதிகையின்மீது விளங்கும் இப்பரமேசனைக்கண்டு பணிந்தவர்களுக்கு மறுஜன்மமுண்டாகாது. இவ்வித பக்தர்களுக்குத் தியாகேசர் செல்வத்தையளிப்பார். இந்தத் தியாகராஜமூர்த்திக்கு இப்பொழுது நிறைவேறிய அபிஷேக மஹோத்ஸவத்தைக் கண்டுகளித்தவர் யாவரும் தேவரென விளங்குவார்கள். இவ்வீசனுடைய அபிஷேக தீர்த்தத்தைச் சென்னியில் கொண்டவர் யாவரும் ஸப்தரிஷி மண்டலத்தையடைந்தும்,

வானுலகையடைந்தும், சுகமாய் யோகத்திலமர்ந்தும் விளங்குவார்கள் சின்மயானந்தஸ்வரூபியாகி இப்பரமேச னுடைய அபிஷேக ஜலம் பட்ட இடமெல்லாம் நன்றாகவே விளங்கும். இந்த அபிஷேக ஜலம் பட்டநாடுகளில் வசிக் கின்ற சகல ஜீவராசிகளுக்கும் எவ்வித துன்பமும் உண்டாகாது. பரமேசனது அபிஷேக தீர்த்தத் துளியைச் சென்னியில் தரிப்போர் இந்திரனாக விளங்குவார்கள். அவர்களே கற்பக மலரால் அர்ச்சிக்கப்படுவார்கள், ஸ்வயம்புலிங்க மூர்த்தியின் அபிஷேக ஜலத்தையும், தியாக ராஜனது அபிஷேக ஜலத்தையும் சென்னியில் தாங்குபவர் கள் கங்காஸ்நான பயனையும், காவிரிஸ்நான பயனையும் அடைவார்கள். இந்தத் தியாகராஜனது திவ்ய விமானத் தைக்கண்டும், ஈசனைப் பணிந்தும், அபிஷேக ஜலத்தைச் சென்னியில் அணிந்துகொண்டும் பஞ்சாக்ஷர ஜபம் செய்பவர் மானிடராயினும் வானவரேயாவார்கள். இந்தப் புண்ணிய விமானத்தின் தர்சனத்தைப் பெற்றவர்களும், தியாகராஜனது அபிஷேக தீர்த்தத்தைப் பெற்றவரும் நாலுவித பயனை அடைவார்கள். தூயமனதுடன் நாம சங்கீர்த்தனை செய்பவரும், யோகத்தில் ஆழ்ந்திருப்பவரும், தவம் செய்பவரும், அமரராய் உதித்தவரும் என்ன நற் பயனை அடைவார்களோ; அவ்வித நற்பயன் தியாகராஜ விமானத்தைத் தர்சிப்போர்களுக்கு உண்டாகும் என்று இவ்விதமாய் ஒரு முனிவர் உரைக்கும் மொழிகளைக்கேட்ட தொண்டர் யாவரும் அதன் மகிமையை அறிந்துகொண்டு சற்றுநேரம் வரையில் ஆனந்தபரவசர்களாய்த் திகைத்து நிற்கையில் அம்முனிவராகிய பரமேசன் மறைந்தார். அதைக்கண்ட பக்தர்கள் யாவரும் வியப்படைந்து அவ்வாறு முனிவர்போல் தோன்றி இந்தப் புண்ணிய விமானத்தின் மேன்மையையும், அபிஷேக ஜலத்தின் மேன்மையையும் உரைத்து மறைந்தவர் பரமேசனாகவே இருக்கவேண்டு மென்று ஊகித்து அஞ்சலியினால் ஈசனையும், அத்தெய்வ விமானத்தையும் பணிந்து அபிஷேக ஜலத்தை வாரிக்

கொண்டும் பரமானந்தமடைந்தவர்களாய்த் துதிசெய்து தமதிருப்பிடம் சென்றார்கள். அதுமுதல் அந்நாட்டில் எவ்வித ஜீவன்களுக்கும் நன்மை உண்டாயிற்று. பூமி செழுப்படைந்தது. அந்தணர் முதலிய வர்ணத்தோர் நால்வரும் தமது குலாசாரத்தில் நிலைபெறும்படி அரசர்கள் ஆட்சி செய்தார்கள். மாதர்களின் கற்புச் சிறப்பும், அந்தணர்களின் யாகவேள்வியும் முனிவர்களின் தவ முறையும் இடையூறின்றி வளர்ந்தோங்கின. உலகிலுள்ள சகல ஜீவராசிகளும் தியாகராஜன் அருள்பெற்றுச் சிறப்புடன் வாழ்ந்தார்கள்.

## 340. பக்தர் பாடலுக்கு அருள்செய்த லீலை.

புண்ணிய ஸ்தலங்களுள் முதன்மையாகிய ராமேசுவர க்ஷேத்திரத்தில் சிவயோகி ஒருவர் இருந்தார். அவரது ஸன்னிதானத்தையடைந்து ஈசுவர தத்துவங்களை அவர் கூறக்கேட்டு உய்யும் வகையறிந்த பக்தர்களுள் கிரிதாமன், சிவஞானி, நந்திமுனி என்னும் மூன்று சீடர்கள் தமது பால்ய வயதிலேயே அச்சிவயோகியின் சமீபத்தையடைந்து பணிந்து தாங்கள் பாவத்தினால் சனனம் முதல் குருடர்களாகச்சனித்த கொடுமையையறிவித்து அநேக வருஷங்கள் செல்லுமளவும் அவரருகில் தங்கியிருந்து, அவரது அருளால் சிவதத்துவத்தையறிந்துகொண்டு அச்சிவயோகியுடனே தேசாடனம் செய்துகொண்டு அங்கங்குப் புண்ணிய க்ஷேத்திரங்களில் பிரகாசிக்கும் ஈசமூர்த்திகளைத் தர்சித்து வரலாயினர்.

அவ்விதமாய் அச்சிவபக்தர் மூவரும் அவர்களது குருவாகிய சிவயோகியுடன் தேசாடனம் செய்துகொண்டு ஒருநாள் காலையில் திருவாரூர் நகரையடைந்து கமலாலயத்தில் நீராடித் தியாகராஜனது திருக்கோயிலுட்புகுந்து புண்ணியபுர நாதனை வலஞ்செய்து பணிந்த பிறகு பக்தர் மூவரும் அஞ்சலியுடன் ஈசனது எதிரில் நின்றுகொண்டு

பரமேச! உமது திவ்ய குணச்சிறப்பை வேதாந்தங்களும் கூறமுடியாமல் சோர்வையடைந்திருக்கையில் நாங்கள் எவ்வாறு கூறமுடியும். எங்களது மனதில் நற்சுடர் தோற்றுமாறு அருள்புரிவீர். உமது திருமேனியின் அழகைக் கண்டுகளிப்பதற்கு நாங்கள் கண்களைப்பெறவில்லையே; என்செய்வோம் தியாகேச! சகலலோக நாயக! பரமேச! சங்கர! கண்களை இழந்த எங்களது மனதில் உமது திருவுருவம் தோற்றுமாறு அருள்புரிவீர். ஆலமுண்டவனே! தியாகேச! இந்திராதி தேவர்களும், ரிஷிகளும் வணங்கும் சிவஸ்வரூபியே! உமது திருவுருவம் எமது மனதில் விளங்குமாறு அருள்புரிவீர் என்று இவ்விதமாய் அம்மூன்று பக்தர்களும் அழகிய இசையுடன் ஈசனது குணச்சிறப்பைக் கானம் செய்ய ஆரம்பித்தனர். அம்மூவரது மனத்தூய்மையையும் பக்தியின் மேன்மையையும் கண்டுகளித்த அச்சிவயோகியானவர். ஓ சிஷ்யர்களே! இந்தத் தியாகராஜர் பரம்பொருள் பற்பல சமயங்களில் செய்துவரும் அற்புத லீலைகளின் தன்மையை உங்களுக்கு நான் கூறுகிறேன். அவைகளை உண்டபிறகு இந்தத் தியாகராஜனிடத்தில் பக்திவைத்து இவனது குணங்களை இசைகளால் பாடுவீராகில் உங்கள்மீது ஈசன் அருள் ஏற்படும். அதனால் நீங்கள் ஜீவமேன்மையை அடைவீர்கள், என்றுரைத்தார்.

இவ்வாறு அச்சிவயோகி சொல்லும்பொழுது அவரது உபதேசத்தை சென்னியில் தாங்கிக்கொண்ட அம்மூன்று பக்தர்களும் அக்குருவைப் பணிந்த பிறகு அதுமுதல் அந்த க்ஷேத்திரத்திலேயே ஒருபக்ஷம் செல்லுமளவும் தங்கியிருந்து அச்சிவயோகி கூறிய லீலைகளைக்கேட்டு மனமுருகிக் கண்ணீர்மல்க நின்று தினந்தோறும் மாலை நேரத்தில் அழகிய பாடல்களால் ஈசனைத் துதிசெய்யத் தொடங்கினார்கள். அவ்வாறு அவ்வந்தக பக்தர்கள் மூவரும் ஒரு நாள் மாலை நேரத்தில் இசை தாளங்களுடன் தியாகராஜனது நற்புகழை இனிய கானத்தினால் கானம் செய்கையில் அவர்களது பக்தியின் சிறப்பைக்கண்ட

தொண்டர்கள் யாவரும் மனமுருகி வாடுகையில் அக் கோயிலின் நான்கு திசைகளிலும் நற்குறி தோற்றுகையில் அச்சிவயோகியின் மனமும் தெளிவை அடைகையில் தேவர் களின் குழாமும் புஷ்பமாரி பெய்வதற்காக வானத்தில் தோன்றி சகல உலக நாயகனான தியாகராஜன் அவ்வந்தக பக்தர்கள் தனது குணச்சிறப்பைப் புகழ்ந்து பாடும் பாடலைக்கேட்டு உருகிய மனமுடையவராய்க் கமலநாயகி தேவியாரால் தூண்டப்பட்டவராய்த் தனது பெருங்கருணை வெள்ளத்தை அவர்களின்மீது பரவச்செய்தார். அத் தருணத்திலேயே ஞானக்கண்களின் வழியாய் அவர்களது மனதில் தியாகராஜனுடைய திருவடிவம் தோன்றலாயிற்று. அமுதக்கடல்போன்ற அவ்வீசனுடைய திருவடியை ஞானக் கண்களால் காணப்பெற்ற அம்மூவரும் மிகவும் உள மகிழ்வை அடைந்தவர்களாய்க்கொண்டு ஈசனது திரு மேனியை அழகிய காதைகளினல் வர்ணித்தப்பாடலாயினர் தியாகேச! சராசரங்களுக்கு மூலகாரணமே! அந்தகராகிய எமது மனத்தில் உமது அருளின் மேன்மையினாலேயே உமது திருஉருவம் விளங்குகிறது. அகிலாண்டங்களையும் சிருஷ்டித்துக் காப்பாற்றி அழிக்கவல்ல மூலகாரணமே! விலையற்ற மணியே! அஞ்ஞான இருளுக்குச் சூரிய உதயம் போன்ற உமது திருஉருவம் தோன்றுகின்றபடியால் நாங்கள் அஞ்ஞான இருளையும் ஒழித்து, உமது தத்துவச் சிறப்பையும் கண்டு தெளிந்த புத்தியுடையவர்களானோம். இனி எமக்கு யாதொரு குறைபும் இல்லை. இவ்வண்ணமே உமது திருஉருவம் ஒவ்வொரு பக்தர்களின் மனதிலும் விளங்குமாறு அருள்புரிவீர். உமது மெய்யருள் ஜீவனிடத் தில் பரவுமேயாகில் அவன் உமது பதவியையே அடைவான். மகரிஷியாகவும் தபோதனராகவும் ஜனித்து உமது பரதத்துவச் சிறப்பை அறிந்து பரமானந்தக் களிகூறிய பிறகு உமது சிறந்த பதவியில் ஐக்கியச் செல்வத்தை அடைவான் என்று இவ்வண்ணமாய் ஈசனைக்கண்டு பரமானந்தமடைந்து பாடத்தொடங்கினர்.

அத்தருணத்திலேயே தியாகராஜனது ஏவலினால் ஆகாயத்தில் உண்டாகிய அசரீரியானது புலவர்களே! இப்பரமேசனது நற்குணங்களை இசையுடன் பாடுவாரும் இவரது பொற்கோயிலை வலம் செய்வாரும் சிறந்த தவப்பயனையும் ஈசன் அருளையும் பெற்று மகிழ்வுடன் விளங்குவார்கள். அரியமந்திர ஜபங்களைக் காட்டிலும், புண்ணிய க்ஷேத்திர யாத்திரையைக் காட்டிலும், புண்ணிய தீர்த்த ஸ்நானத்தைக் காட்டிலும், தவம் செய்வதைக் காட்டிலும், யோகமுயற்சியைக் காட்டிலும், தானம் செய்வதைக் காட்டிலும் தியாகராஜனது நற்குணங்களை அன்பு நிறைந்த மனதினாலும், வாயாலும் பாடுதலே அதிக பயனை அளிக்கும்; நன்மையைப் புகட்டும்; தீமையை ஒழிக்கும்; புகழ்ச்சியை வளர்க்கும் என்று உண்டாகிய ஆகாய வாணியைக்கேட்டு அனைவரும் பரமானந்தமடைந்து பக்தர் மூவருடைய பாடலைக்கேட்டு மகிழ்ந்து இதுவும் ஒரு தியாகராஜ லீலையாகவே இருக்கும் என்று நினைத்து அப்பக்தர்களையும், அவர்களால் புகழப்படும் பரமேசனையும் ப மேன்மை அடையலாயினர்.

## 341. விஷங்கலந்த சோற்றை ஜீர்ணிப்பித்த லீலை.

ஒரு சமயத்தில் தேவர்கள் புடை சூழ தேவேந்திரன் சுதர்மையில் வீற்றிருக்கையில் ஒரு நாள் சப்தரிஷிகளும் அஷ்ட வசுக்களும், நவகிரகங்களும், நாரதர் முதலிய தேவ ரிஷிகளும் மற்றுமுள்ள திக்பாலர்களும், கின்னரர்களும் கிம்புருடர்களும் அவ்விந்திரனது சபைக்கு வந்து சேர்ந்தனர். அவ்வாறு வந்து கூடும் முனிவர் முதலியவர்களுக்கு இந்திரனது கட்டளையினால் முறைப்படி உபசாரங்கள் நிறைவேறிய பிறகு இந்திரன் அவர்களது பாதத்தில் வணங்கி அவர்களது ஆசியைப் பெற்று தவசியில் வீற்றிருந்தான். அப்பொழுது ஒருவருக்கொருவர் தந் தமது யோகத்தைப் பற்றியும், தவங்களைப் பற்றியும், க்ஷேமங்

களைப் பற்றியும், ஆரோக்கியங்களைப் பற்றியும், சம்பாசனை களைப் பேசிக்கொண்டு சற்று நேரம் ஆனந்தமாய் மனக் களிப்புடன் வீற்றிருக்கையில் அச் சபையிலிருந்து சில தேவர்கள் நவக்கிரஹங்களின் குணத்தைக் கூறி முடிவில் ராகுவின் குணத்தைப் பற்றிப் பலவாறு புகழ்ந்து பேசிய பிறகு இப்படிப்பட்ட ராகு கிரகத்தின் கொடிய பார்வை யானது அமிர்தமுண்ட தேவர்கள் மீது பாயுமாயின் இத் தேவர்களும். பல துன்பங்களில் உழன்று மனம் வாடி முக பங்கத்தை அடைவார்கள் இப்படியிருக்கையில் பூவுலகில் பாபத்திரளாய்ப் புழுப்போல் துள்ளிக் கொண்டிருக்கும் மனிதர்மீது இந்த ராகு கிரகத்தின் கொடிய பார்வை வீழு மாயின் அவர்களது நாமமே நசித்துவிடும் என்று உரைத்து தேவர்களையும், ராகுவையும் புகழ்ந்தும் மனிதர்களை இகழ்ந்தும் பேசலாயினர்.

இவ்விதமாய் தேவ சபையில் சில தேவர்கள் கூறு வதைச் செவியினால் பற்றிய நாரத முனிவர் தனது இரு கைகளையும் தூக்கிக்கொண்டு ஓ தேவர்களே! நீங்கள் அவ்வாறு உரைக்க வேண்டாம். பூவுலகில் ஜனித்த மனி தரும் கைலாசபதவியாகிய தியாகராஜனது பாதாரவிந்தத் தில் அசைவற்ற பக்தியைப் பெற்று விளங்குவாராகில் அவ்வித புண்ணிய சீலர்களின் மீது இந்த ராகு கிரஹத்தின் கொடியதொரு பார்வை வீழுமாயின் அப் பார்வையினால் அவர்களுக்கு எவ்விதத் துன்பமும் உண்டாகாது. சிற் சில துன்பங்கள் உண்டாயினும் ஈசனது அருளினாலும் அவர்களது பக்தியின் சிறப்பினாலும் அவைகள் நசித்து விடும். இவ் விஷயத்தில் யாதொரு சந்தேகமுமில்லை. உங்களுக்கு விருப்பமிருக்குமாயின் அவ்விதத் தியாகராஜ பக்தியுடன் விளங்கும் புண்ணிய சீலர்கள் பலர் பூவுலகில் வசிக்கிறார்கள். அவர்களின் விஷயத்தில் நீங்கள் ஈசன் அருளின் சிறப்பைக் கண்டுகொள்வீர் என்று உரைத்து விட்டு அப்பொழுதே அம் முனிவர் இந்திரனிடமிருந்து

விடை பெற்றுக்கொண்டு மற்றோர் உலகத்திற்கும் சென்று விட்டார்.

நாரதர் விரைவாய்ச் சென்றபிறகு அவர் கூறிய உரையில் சந்தேகத்தை அடைந்த அத்தேவர்கள் ராகுவின் சமீபத்தை அணுகி அவனை மீளவும் புகழ்ந்து பூவுலகில் உள்ள அவ்விதச் சிவதொண்டர்மீது உமது கொடிய கடாக்ஷத்தைச் செலுத்தி நாரதரது மொழியைப் பொய் யாக்குவீரென்று கூறினார்கள். அவ்வாறு தேவர்களின் கலகப்பேச்சினால் மாறுபட்ட மனமுடைய ராகுவானவன் பரமேசனது அருளின் மகிமையையும் சிவபக்தரின் சிறப்பை யும் முற்றிலும் மறந்து தனது கொடிய நோக்கத்தினால் ஒரு சிவபக்தரை அழிக்கக் கருதினார். அத்தகைய தருணத்தில் திருமறைக்காடு நகரிலிருக்கும் சிவபக்தரொருவர் தியாக ராஜனது தரிசனத்தைப் பெறவேண்டுமென்று விருப்பங் கொண்டவராய்த் தனது மனைவியுடன் கூடியவராய் திருவாரூர் நகருக்குப் புறப்படலானார். அவர் தனது இல்லத்திலிருந்து புறப்படுகையில் புண்ய புரீச! தியாகேச! சங்கர! சம்போ! சந்திரசேகர! என் துன்பத்தை நீக்காய். உமது தத்துவம் எனது மனதில் பதியுமாறு அருள்புரிவீர். ஈசனே! உமது பாதபங்கயமே சரணம் என்று வைத்துக் கொண்டும் ராம ஸங்கீர்த்தனம் செய்துகொண்டும் செல்லலானார். அவ்வாறு புறப்பட்ட அவ்வந்தண உத்தமர் அன்று பகல் நேரத்தில் நடுவழியில் விளங்குமொரு அக்ர காரத்தில் ஒரு வேதியருடைய பசுவின் தொழுவத்தை உறைவிடமாக அடைந்து அதில் தனது மனைவியினால் சமைக்கப்பட்ட அமுதை ஈசனுக்கு நைவேத்யம் செய்து பிறகு தானும் தனது மகனும் உண்பதற்காக அமர்ந் தார்கள். அச்சமயத்தில் அவ்விஷயத்தை அறிந்துகொண்ட ராகுவானவன் தனது அம்சமாகிய ஒரு நாகத்தை ஏவி அவ்வந்தணர் உண்ணும் சோற்றில் விஷத்தைக் கக்குவா யென்று உரைத்தனுப்பலானான். ராகுவின் விருப்பம் போலவே மறைந்து மறைந்து வந்து தோன்றிய அந்நாகமும்

அப்பிராமணி சமைத்திருக்கும் அன்ன பாத்திரத்தை அணுகி அதில் தனது வாயிலிருந்து கொடிய விஷத்தைக் கக்கி மறைந்து சென்றது. அவ்வந்தணர் உண்பதற்கு முன்பே அவ்வாறு சோற்றில் விஷக்கலப்பைச் சேர்த்து வைத்தும் அதை உண்ணும்பொழுதே அவ்வந்தணரும் அவரது மகனும் மாளப்போகிறார்கள் என்னும் விஷயத்தைப்பற்றி ஆலோசனை செய்துகொண்டும் அதனடியாய்த் தனது நோக்குக்கு மேன்மையும் நாரதருரைக்கு இகழ்ச்சியுமுண்டாகப்போகிறதென்றும் மகிழ்வடைந்திருக்கும் ராகுவானவன் அத்தேவர்களுடன் ஆகாயத்தில் தோன்றி மறைந்து நிலைபெற்றிருந்தான்.

தேவ சபையில் நடந்த விஷயத்திற்காக இவ்வாறு அவ்வந்தணருண்ணும் சோற்றில் விஷத்தைக் கலக்கச் செய்த ராகு தோஷித்திருக்கையில் அதை யறியாத அவ்வந்தணியானவள் அவ்வமுதைத் தனது மகனுக்கும் தனது கணவனுக்கும் அளித்தாள். சிவ பக்தியினால் சிறந்த மனமுள்ள அவ்வந்தணர் அப்பொழுது மந்திரத்தை உச்சரித்து அவ்வன்னத்தைச் சுற்றிலும் தீர்த்தத்தினால் பரிசேஷணம் செய்து தியாகேச! தியாகேச! தியாகேச! என்றும் ஓம் ஹ்ரீம் சுவாய ஸ்வாஹா என்றும் சிவ சக்தி ஆதார மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு பிடிப் பிடியாய் அச் சோற்றை உண்ணலானார். அத் தருணத்தில் அவர் கூறிய மந்திர சக்தியினாலும் அவர் தனது பாத கமலத்தில் வைத்திருக்கும் ஒப்பற்ற பக்தியின் சிறப்பினாலும் மனக் களிப்பை அடைந்த தயாநிதியாகிய தியாகராஜன் அவ் விஷத்திலிருந்து அவ்வந்தணரைக் காக்கக் கருதியவராய்த் தனது திவ்ய சக்தியை ஏவி அவ்வேதியரது உதரத்தை அடைந்த விஷங்கலந்த சோறானது நற்சோறுபோல் அவரது வயிற்றிலேயே ஜீரணமாகக் கடவது அவ்விஷ வேகத்தினால் அவ்வந்தணரது குடும்பத்தாருக்கு எவ்விதத் துன்பமும் உண்டாகக் கூடாதென்றும் சங்கற்பித்தார்.

பரமேசன் அவர் மீது கருணை செய்து அவ்வாறு விஷங் கலந்த சோற்றை ஜீரணமாகச் செய்ய நினைத்தமையால் அஃதறியாத அந்தணர் முறைப்படி அவ்வமுதை உண்டு வாய்க்கு ஜலம் ஊற்றித் கைகால்களைச் சுத்தி செய்து ஆசமனம் செய்து தாம்பூலமருந்திச் சற்று நேரம் வழி நடை விடாயை நீக்கிய பிறகு முன்போல் தனது மனைவி மகனுடன் புறப்பட்டு அன்று மாலை நேரத்தில் திருவாரூர் திருப்பதியை அணுகி ஈசனது தேவாலய ஸமீபத்தில் வரும் பொழுது அங்கு ஒரு ஆகாயவாணி உண்டாயிற்று-தேவீர் பக்தர்களே! தேவ சபையில் நாரதருரைத்த சத்திய மொழியைப் பொய்யாக்க நினைத்த ராகுவானவன் இவ் வந்தணருண்ணும் சோற்றில் விஷத்தைச் சேர்த்து வைத் தான். தியாகேச பக்தி நிறைந்த இவ்வந்தணரும் அச் சோற்றை உண்ணும்பொழுது ஈச்வர நாம சங்கீர்த்தனம் செய்தார். அவ்வித மந்திர சக்தியினால் அவ்விஷச் சோறும் அமிர்தச் சோறுபோல் ஜீரணமாகிவிட்டது. அப்படிப் பட்ட மேன்மை வாய்ந்த இவ்வந்தணோத்தமர் இங்கு தியாகேசனைப்பணிய வருகிறார் பாருங்கள் என்றுரைத்த அசரீரி வாக்கைக்கேட்ட தொண்டர் யாவரும் வியப் படைந்து நிற்கையில் அங்குதோன்றிய நாரதமாமுனிவரால் அவ்வந்தணர் ஈசனது மகிமையை முற்றிலுமறிந்துகொண்ட வராய்ப் பணிந்து துதிசெய்தார். அச்சமயத்தில் அத்தேவர் களும் ராகுவும் வெட்கத்தை அடைந்து ஈசனது பாதத்தில் வணங்கி நாங்கள் அச்சிவ பக்தர் விஷயமாய்ச் செய்த பெருங்குற்றத்தை மன்னித்துக் காத்தருள்வீரென்று துதி செய்து சென்றனர். நாரத முனிவரும் தியாகராஜனது இந்த லீலையின் சிறப்பைப் பூமியில் பரவச்செய்த பிறகு தனது விருப்பம்போல் ஸத்தியலோகம் செல்லலானார்.



## 342. பூசைதருமா என்றுரைத்தானுக்கு அருள் செய்த லீலை.

முன்பு ஒரு சமயத்தில் பில்வ வனத்தில் வேதாந்தங்களைக் கற்றுணர்ந்த பிராம்மணோத்தமர் ஒருவர் இல்லறத்தில் அமர்ந்துவந்தபோதிலும் துறவறம் பூண்டவர்போல் சிறந்த வைராக்யத்தையே ஆரமெனப்பூண்டு பரதத்துவ சிந்தனை செய்திருக்கலானார். ஆனால் சிற்சில சமயங்களில் அவ்வந்தணரும் அவரது மனைவியும் புத்திரரும் எவ்வித உணவுமின்றிப் பட்டினியாய் நாட்களை நீக்கும்படி நேரிடலாயிற்று. அவ்விதமாய் உலகிலுள்ள பொருள்களை இகழ்ந்துவிட்டு பரதத்துவ சிந்தனையையும், ஈசனது நாம ஸங்கீர்த்தனத்தையுமே ஜீவனாதாரப் பொருளாகக் கைக்கொண்ட அவ்வேதியர் இல்லறத்தில் வாழுநாளில் குத்தாலரென்னுமவ்வேதியர் ஒரு நாள் சில மகரிஷிகளின் முகத்திலிருந்து தியாகராஜனது மகிமையைக் கேட்டு அவ்வீசனை நேரில் தர்சிக்க விருப்பங்கொண்டவராய்த் தனது மனைவியையும் புத்திரர்களையும் அழைத்துக்கொண்டு அனேக நதிகளையும் வனங்களையும் மேடுபள்ள வழிகளையும் கடந்து காவிரி சூழ்ந்த நாட்டில் நுழைந்தார்.

குத்தாலரென்னுமவ்வந்தணர் அனேக நாள் துவங்கி நல்லுணவில்லாமையாலும் கொடிய வழி நடையினாலும் சரீரவாட்டத்தை அடைந்து அவ்வாறு வழியில் செல்லுகையில் யாரிடத்தில் எவ்விதப் பொருளையும் அவர் யாசிக்க விருப்பங்கொள்ளவில்லை. தனது புத்திரரும் மனைவியும் பசியினாலும் தாகத்தினாலும் சோர்ந்து வீழ்வதைக் கண்டிருந்தபோதிலும் அவர்களின் பசியை தீர்க்கவல்ல உணவுப் பொருள்களை ஸம்பாதிக்காமல் ஒப்பற்ற சிவ பக்தியினால் தியாகராஜ என்று ஈசனது நாமத்தை ஸங்கீர்த்தனை செய்துகொண்டே செல்லலானார். அவ்வாறு செல்லுகையில் அவ்வந்தணரது சரீரம் மேன்மேலும் தளர்ச்சியை அடைந்து நடக்கவும் சக்தியை இழக்கவே

அவர்களது வழியானது நீண்டதாகக் காணப்பட்டது. அத்தகைய தருணத்தில் சரீரவாட்டத்துடன் அவ்வேதியர் மெல்ல நடந்து செல்லும்பொழுது அந்த மாலை நேரம் மாறி இரவு நேரமுண்டாகுந் தருணத்தில் அவ்வந்தண குடும்பத்தார் மெதுவாய் நடந்துசென்று அத்திருவாரூர் நகரின் எல்லையை அணுகினார்கள்.

அத்தருணத்தில் தியாகராஜனது திருக்கோயிலில் பரமேசனுக்கு முதல் யாம நைவேத்ய சமயம் நேரிட்ட படியால் அங்குள்ள தொண்டர்களால் அளிக்கப்பட்ட அமுதைத் தியாகராஜன் நைவேத்யமாகப் பற்றுகையில் ஈசனது திருக்கோயிலின்று மணியின் சத்தமானது எண் திசைகளிலும் பரவலாயிற்று. அத்தகைய கண்ட நாதத்தைச் செவியினால் பற்றிய அவ்வந்தணர் மனைவி யானவள் அந்த மணி சத்தமானது தியாகராஜனது நைவேத்யகால கண்ட நாதமாகவே இருக்கலாமென்று நினைத்து ஓ தியாகேச! பரம்பொருளே! லோக நாத! உமது பாதங்களில் சிறந்த பக்தி வைத்தவராயும் எனது கணவனுமாகிய அந்தணோத்தமர் இப்பொழுது வழி நடைத் தளர்ச்சியினாலும் பசியினாலும் இவ்வண்ணம் வாடுகிறாரே. உமது பக்தரும் குமாரரும் பசியின் கொடுமையினால் உயிரை இழப்பார்போல் காணப் படுகிறார்களே உமது பக்தர் இப்படி அடிக்கடி மூர்ச்சை அடைகிறாரே இத் தருணத்தில் நீர் மிகவும் மனக்களிப்புடன் நைவேத்ய முறைகளை கண்டாநாத விமரிசையுடன் ஆதரிப்பது உமது கருணைக்கு அழகாகுமா? பக்தரைக் காப்பதற்காக இவ் வுலகில் விளங்கும் உமது தரிசனத்தையே வேண்டிவந்த நாம் இவ்விதக் கஷ்டத்தில் ஆழ்ந்திருக்கையில் நீர் எங்களை மறந்துவிட்டு இவ்வண்ணம் அமுது வகைகளை அங்கீகரிக் கலாமா? ஆகா என்ன செய்வோம். ஈச! எங்களது கால்கள் வழியில் நடையை இழக்கின்றனவே. கண்களும் பார்வையை இழந்தனவே. நாவில் நீரும் சுரக்கவில்லையே எனது குமாரர்களும் எனது அக்னி வல்லபனாகிய உமது

தொண்டரும் இவ்வண்ணம் மூர்ச்சையடைந்து இருக்கிறீர்களே! உமது பாதமே துணையென்று உரைத்து அழுது மனம் வாடலானாள். உத்தமி மாதர்களுள் சிறந்தவளாயும், கொடிய துன்பத்தில் ஆழ்ந்தவளாயும், தனது பாத கமலத்தையே சரணெனப் பற்றியவளாயும் உள்ள அவ் வந்தணர் மாது இவ்வாறு புலம்புவதைக் கண்ட தியாகராஜன் அப்பொழுதே ஒரு ஆகாயவாணியை ஏவித் தனது பக்தராகிய அச்சதுர்வேதி அந்தணரும், அவரது குடும்பத்தாரும் நள்ளிருளில் திருவாரூரின் எல்லையில் வழி தடுமாறி வாடும் விஷயத்தை அறிவித்து அவர்களுக்குத் தனது தரிசனத்தை அளிக்கும்படியும் தொண்டர்களுக்கு உரைக்கலானார். அவ்வித ஆகாயவாணியைக் கேட்ட தொண்டர் பலர் ஒன்று கூடிக் கையில் ஏற்றிய தீவட்டிகளுடன் அந்நகரின் வடதிசையை அடைந்து தேடிப் பார்க்கையில் தியாகராஜன் ஏவிய ஆகாயவாணி கூறியவாறே ஒரு வேதியரும் அவரது மனைவி மக்களும் வழி சிதறுண்டு வாடும் துயரத்தைக் கண்டு மனச் சோர்வை அடைந்தவர்களாய் அவர்களது அருகில் சென்று தைரிய மொழி கூறி அவரது பாதத்தில் வணங்கித் தியாகராஜன் ஏவிய அசரீரியும் உரைத்து அவரை அழைத்துக்கொண்டு சென்று ஈசனது பொற்கோயிலுள்ள நுழையவைத்து பரமேசனது திவ்ய தரிசனத்தையும் செய்து வைத்தார்கள். அவ்வாறு புண்ணியபுரி பக்தர்களால் எதிர்கொண்டழைக்கப்பட்ட அவ்வேதியர் ஈசனது சந்நிதானத்தை அடைந்து தியாகேசனது திவ்ய வடிவைக் கண்ணாரக் கண்டு களித்துத் துதி செய்து அவ்வீசனது நைவேத்ய சேஷத்தை அருந்தி அதனால் பஞ்சபூதங்களின் ஆதாரத்தை அடைந்து தியாகேச லீலா வைபவங்களை உரைத்துக்கொண்டே அன்றிரவைக் கழித்து அது முதல் அப்புண்ணியபுரியிலேயே வெகு காலம் வாசம் செய்து கொண்டிருந்தார். தியாகராஜன் ஏவிய ஆகாயவாணியை அறிந்த தொண்டர்கள் யாவரும் அவ் வேதியன் மாது வாடி வேண்டுகையில் அவள் மீதும் அவள்

கணவன் மீதும் ஈசன் செய்த கருணைச் சிறப்பு லீலையை. புகழ்ந்து அது முதல் உலகில் பரவச் செய்தார்கள்.

### 343. பத்மகிரிலிங்க மகிமையை வெளியிட்ட லீலை.

மற்றொரு சமயத்தில் கலிங்க நாட்டின் வட திசையிலிருக்கும் பத்மகிரியின் சார்பில் வேட்டையாடும் பொருட்டுக் களிங்க பூபதியானவன் பரிவார வீரர்களால் சூழப்பட்டவனும் அக்காட்டில் நுழைந்தான். வில்லில் வாளி தொடுத்த சில வீரர்கள் மான்களை எய்தார்கள். சில வீரர்கள் காட்டு யானைகளை நாணொலியினால் பயமுறுத்தினார்கள். சில வீரர்கள் சிங்கங்களைத் தமது சிங்கநாதத்தில் மல்ல யுத்தத்துக்கு அழைத்தனர். சிலர் காட்டுப் பன்றிகளை பயமுறுத்தினார்கள். சிலர் பறவைகளை ஓட்டினர். சிலர் முறுமுறு சத்தம் செய்யும் புலிகளைக் கொன்று அவைகளின் தோலை ஆடையாக உடுத்திக் கொண்டனர். சிலர் மான்களை வஞ்சிக்கும் பொருட்டு வலைவிரித்துக் குழியில் மறைந்து இனிய ராகங்களைப் பாடினர். சில வீரர்கள் கள்ளையுண்டு ஒருவர்மீதொருவர் கடுஞ்சினங் கொண்டவர்போல் பொய்ச்சண்டை செய்யத் தொடங்கினர். சில வீரர்கள் வன ஜந்துக்களின் காலடி வைப்புக்களைக்கண்டு அவ்வழியைப்பற்றி அவைகளின் வசிப்பிடங்களை அடையலாயினர். சில வீரர்கள் தோள் தட்டித்குதித்து எழும்பி அங்குள்ள வன சோரர்களைப் பிடித்துச் சிறை வலையைக் கட்டினார்கள்.

இவ்விதமாய் அந்தக் களிங்க பூபாலன் வீரர் படை அவ்வனத்தை அடைந்து வெகுநேரம் வேட்டையாடித் திரும்புகையில் திருவாரூர்ச் செல்வனாகிய தியாகராஜன் அப்பூபாலனது எதிரில் ஒரு வேடன்போல் தோன்றி ஓ களிங்க மன்னவனே! நீ இப்பொழுது இவ்விதமாய் வேட்டையாடி வருகையில் உனது வில்லிலிருந்து

வெளி நீங்கிய ஓரம்பு இவ்வனத்தின் மேல்திசையிலிருக்கும் பத்மகிரியினடிவாரத்தில் விளங்கும் பாணலிங்க மூர்த்தியின் சென்னியில் பாய்ந்தது. அதனாலந்த லிங்கமூர்த்தியின் சென்னியிலிருந்து உதிர வெள்ளம் பெருகிவருகிறது பார். நீ இவ்விதமாய்த் தேடிய பாவத்தைத் தீர்ப்பதற்கு தென் திசையில் காவிரி நாட்டில் விளங்கும் கமலாலயத்தில் ஸ்நானம் செய்தும், தியாகேசனைப் பணிந்தும், இந்தப் பாணலிங்க மூர்த்திக்கு க்ஷீராபிஷேகம் செய்துவைத்தும் பணிந்து போற்றுவாயாகில் உனக்கு நன்மையுண்டாகும். பாவமும் தணியுமென்றுரைத்து மறையலானார். அவ்வாறு கூறிய வேடன் திடீரென்று மறைந்த பிறகு அவ்வுரையைக் கேட்டு மதிகலங்கிய களிங்க பூபாலன் அருகிலுள்ள வீரர்களை ஏவி அவ்வனத்தில் விளங்கும் லிங்கமூர்த்தியின் ஸன்னிதானத்தைத் தேடும்படி கட்டளையிட்டுத் தானும் குதிரையின் மீது ஏறிக்கொண்டு அப்பத்மகிரியின் அடிவாரத்தை நோக்கிச் சென்றான். விரைவாய் அத்தலத்தை அடைந்த பூபாலனும் அம்மலையினடிவாரத்திலுள்ள ஒரு தேவதாரு மரத்தின் அடியை அடைந்து அங்கு உற்று நோக்குகையில் எதிரில் பாணலிங்கமூர்த்தியும், தனது அம்பும் அவ்வம்பின் பிளவிலிருந்து உதிரவெள்ளம் பாய்வதையும் கண்டு மனப்பிளவையடைந்து பூமியில் இறங்கி அந்த லிங்கமூர்த்தியை வலஞ்செய்து பணிந்து அஞ்சலிபந்தத்துடன் ஓ பரம்பொருளே! மஹாதேவ! பாணலிங்க ஸ்வரூபியே! உமது திருமேனியில் நான் விட்ட அம்பு பாயும்படி நேர்ந்ததே; இதனாலுண்டான பாவ ராசியை நான் எவ்வாறு தணிப்பேன்; பாவியேனாகி விட்டேனே! என் செய்வேன் என்றுரைத்துக்கொண்டே தனது தோளில் தொங்கும் மேல்வஸ்திரத்தை இரு துண்டுகளாகக் கிழித்து அதை அச்சிவலிங்க மூர்த்தியின் சென்னியில் தன் அம்பின் பாச்சலாலுண்டாகிய உதிர வெள்ளத்தைக் கண்டு நடுங்கிய அப்பூபாலன் அவ்வாறு துணியினால் கட்டுப்படுத்தவே அவ்வுதிர வெள்ளம்

தணிதலை அடைந்தது. அத்தருணத்திலேயே அங்கு பல முனிவர்களும் அந்தணர்களும் வந்து தோன்றி அப்பாண லிங்கமூர்த்தியின் மகிமையைக்கண்டு வியப்படைந்து அவ்வரசனுக்குச் சிவதத்துவோபதேசம் செய்து அவன் மூலமாய் அந்த லிங்கமூர்த்திக்கு திவ்யாலயத்தையும் செய்து வைத்துப் புண்ணிய நதி ஜலப்பிரோக்ஷணமும் செய்து வைத்துத் துதி செய்கையில் அவ்வரசன்றான் அம்பைப் பாய்ச்சியதால் உண்டாகிய தோஷத்தை மன்னித்துக் காத்தருளவேண்டும் என்று நமஸ்காரஞ் செய்து நிற்கையில் அப்பொழுது ஒரு மெய்ஞான முனிவர் தனது ஞான திருஷ்டியினால் அங்குநடந்த சம்பவங்களை அறிந்துகொண்டு ஓ பூபாலனே! நீ மனத்துன்பத்தை அடையவேண்டாம். இந்த பக்தர்களின் சொல்போலவே நீ இந்த மஹேசலிங்க மூர்த்திக்கு ஆலயப்பிரதிஷ்டை செய்துவைத்தபடியால் உனது பாவங்கள் யாவும் தீயில் தூசிபோல் நசித்து விட்டன. சில நாட்களுக்குமுன் உனது அம்புக்குறியை விட்டு விலகி இச்சிவலிங்க மூர்த்தியின்மீது வீழ்கையில் உனது எதிரில் ஒரு வேடன்போல் தோன்றி இச்சிவலிங்க மூர்த்தியின் சென்னியிலிருந்து உதிரம் பாய்வதாய் உரைத்தவர் திருவாரூர்த் தியாகராஜனேயாவர். அவருரைத்தது போலவே நீ அவரது புண்யபுரியை அடைந்து கமலையில் நீராடித் தியாகேசனைத் தரிசிப்பாயாகில் உனது பாவமும் குற்றமும் தணியும். உனக்கு நற்குமாரனுமுதிப்பான். அத்தியாகேசனே இந்த பத்மகிரிபாண லிங்கமூர்த்தியாவர். இவரே அத்தியாகேசனாவார். ஆதலால் அஞ்ஞானத்தில் உனக்கு உண்டாகிய சிவாபசாரத்தை நீ தியாகராஜனது ஸன்னிதானத்தில் நீக்கிக்கொள்வாய் என்றுரைத்தார். அதைக்கேட்ட அப்பூபாலனும் அம்முனிவரது சொற்படியே தனது புரோகிதரை முன்னிட்டுக்கொண்டு புண்யபுரியை அடைந்து கமலாலயத்தில் நீராடி நானதானங்களை முறைப்படி செய்து தியாகராஜனது தரிசனத்தைப்பெற்று வாழுநாளில் அவ்வரசனுக்கு நற்குமாரனுதித்தான். அது

முதல் அக்காளிங்க பூபாலனுடைய வம்சமானது பரமேசனருள் பெற்றுச் சிறப்புடனும் சிவ பக்தியுடனும் உலகில் வாழலாயிற்று. தேவர்களின் அருளும் பிராம்மணர் களின் ஆசியும் அப்பூபாலன் மீது பாயவே அவனது ராஜ்யமும் பிரஜைகளும் நன்மையுடன் விளங்கலாயினர்.

---

## 344-345. தலைகுனிந்து மாலை பெற்ற லீலை

முன்பு ஒரு ஸமயத்தில் அத்திருவாரூர் நகரில் மாலைக் காரனொருவனிருந்தான். அவன் தினந்தோறும் விடியற் காலையில் சிவத்யானத்துடனே எழுந்திருந்து புஷ்பத் தோட்டத்தில் நுழைந்து பக்தியுடன் மலர்களைக் கொய்து அவைகளை அழகிய மாலைகளாகக் கட்டிக்கொண்டு ஈசனது திருக்கோயிலை அடைந்து இது சண்டேச மூர்த்தியின் மாலை, இது பவானி தேவியின் மாலை, இது வால்மீகேசனது மாலை, இது தக்ஷிணாமூர்த்தியின் மாலை என்று இவ்விதமாய் மாலைகளைக் குறிப்பிட்டு கணக்கிட்டுத் தினந்தோறும் அளித்து வரலானான். அந்த மாலைக்காரன் இவ்வண்ணம் நெடுநாளாய்ச் செய்து வருகையில் தினந்தோறும் பரமேசனது ஸன்னிதானத்தில் தொண்டர்கள் கூறும் லீலைகளின் சிறப்பையும் தியாகராஜனது திருவிழா வைபவங்களையும் கண்டிருந்தபடியால் அவ்வீசனிடத்தில் நாள்தோறும் அவனுக்குப் பக்தி வளர ஆரம்பித்தது. வளர்பிறைச் சந்திரக்கலைபோல் நாள் தோறும் வளர்ந்து வந்த பக்தியினால் அம்மாலை கட்டுவோன் சிற்சில ஸமயங் களில் ஈசனது திருவிழாச் சிறப்பைக்கண்டு கைகூப்பி மெய் மறந்து நிற்பான். சில ஸமயங்களில் தியாகராஜனது அழகிய வடிவைத் தனது மனதில் தியானித்திருப்பான். சில ஸமயத்தில் வேதாந்த பொருளாகிய இவ்வீசனுக்கு நான் மாலை கட்டும் பணியை பக்தியுடன் செய்து வருகிறேனே; எனது பக்தியையும் இவ்வீசனே அறிவார். இப்படி இருக்கையில் இவ்வீசன் என் மீது எப்பொழுது

கருணை புரிவாரோ; எனக்கு மறு ஜன்ம முண்டாகா வண்ணம் அருள் புரிவது எந்நாளோ: எனது அன்பார்ந்த தொண்டை இவ்வீசன் அங்கீகரிப்பது ஸத்யமாகில் என் கண்முன் திவ்ய தரிசனம் தரலாகாதா? முனிவர்களின் மனச்சுடராகிய தியாகராஜ பரம்பொருளை நான் தரிசிக்கப் பெற்றேனே என்று தனக்குள் ஆனந்தமடைவான்.

இவ்வண்ணமாய் அம்மாலைக்கார பக்தன் தியாகராஜ தியானத்துடன் வாழ் நாட்களைக் கழித்து வருகையில் ஒரு நாள் அவன் அழகிய புஷ்பங்களினால் சிறந்ததொரு மாலையைக் கட்டிக் கையிலேந்திக்கொண்டு ஈசனது திருக் கோயிலை அணுகுகையில் அவன் ஈசனிடத்தில் வைத்த அளவற்ற பக்தியினால் அவனது மனதில் இவ்வாறு ஆலோசனை உண்டாயிற்று. ஓ பரமசிவ ஸ்வரூபியே! பார்வதி பாகனே! தியாகேச! நான் அனேக கால வருடந் துடங்கி உமக்கு மாலை கட்டும் தொண்டிலமர்ந்து உமது பாத பக்தியுடன் நான் மாலை அளித்து வருவது உண்மை யானால் இன்று என் கண்முன் தோன்றுவீர். எனது சன்மம் உய்யும்வகை அருள் புரிவீர். இன்று நானே உமது திருக்கழுத்தில் இம்மாலையை அணிவிக்க விரும்புகிறேன். ஓ நாத! சிவசக்தி சொரூபியே! என்று அழைக்கலானான். அத்தொண்டனது அவ்வித உரையைக் கேட்ட தியாகேசன் அவனது பக்தியையும் மனப்பான்மையையும் கண்டு களிப்பெய்தியவராய்க் கொண்டு நேராகவேதான் அவனது எதிரில் தோன்றி ஓ தொண்டனே! உனது மனத் தூய்மையையும் பக்தியின் சிறப்பையுங் கண்டு களித்தேன் நீ விரும்புவது போலவே எனது கழுத்தில் மாலையை அளிப் பாய் என்றுரைத்துக்கொண்டே எதிர் தோன்றி நின்றார். அவ்வீசனது சுடர் வீசும் வடிவத்தைக்கண்டு களிப் படைந்த அம்மாலைக்காரன் ஓ முனிவர் மனக்கொழுந்தே! தியாகேச! பரஞ்சுடரே! உமது திவ்ய மூர்த்தியை நான் கண்டவுடனே எனது அஞ்ஞானம் குறைந்து போயிற்று.

உமது அருளால் எனது மனத்தில் தத்துவச் செழுப்பும் உண்டாகிறது. இனி எனக்கு இவ்வுலகில் குறை யாது மில்லை நானே பாக்யம் நிறைந்த தொண்டனென்று இவ்வாறு துதித்து வலம் செய்து தனது கையிலிருக்கும் மாலையை ஈசனது திருக்கழுத்தில் அணியச் செய்ய முயன்றான். அதைக்கண்ட பரமேசன் சற்றுத் தனது சென்னியை குனியச்செய்து அவனது கையிலிருக்கும் மாலை யானது தனது கழுத்தில் படியும்படி வணங்கி நின்றார். பக்தர்களின் மனக்கருத்துப் போலவே நடந்து கொள்ளும் தியாகராஜன் அப்பொழுது அவ்வாறு தலை குனிந்து நிற்கையில் அத்தொண்டனும் தனது கையில் விளங்கும் நறு மலர்மாலையை ஈசனது தோள்களில் பதியுமாறு அளித்தான். பரமேசனும் அம்மாலையைப் பெற்றுக்கொண்டு சற்றுநேரம் வரையில் அவனுக்குத் தரிசனமளித்துப் பின்பு மறைந்தார்.

இவ்விதமாய்ப் பரமேசனாகிய தியாகராஜன் அம் மாலைக்காரத் தொண்டனது மனவிருப்பம் போலவே அம்மாலை நேரத்தில் அவனது எதிரில் தோன்றி அம் மாலையைப் பெற்றுக்கொண்ட விஷயத்தையும் அவ்வீசனை அப்பக்தன் போற்றித் துதிக்கும் விஷயத்தையும் கண்டிருந்த தேவாலயாதிகாரிகளும் வியப்படைந்தார்கள். இவ்விஷயத்தை அறிந்துகொண்ட சோழ பூபாலனும் அம் மாலை நேரத்தில் அத்தொண்டனளித்த அழகிய மாலையுடன் விளங்கும் தியாகராஜனது திருமேனியைத் தரிசிக்கையில் பக்தனது வேண்டுகோளுக்கு இணங்கித் தலைகுனிந்து மாலை பெற்ற தியாகராஜ கற்பமே! காத்தருள்வாய் என்று தொண்டரும் துதி செய்யத் தொடங்கினர்.

## 346. மூவாயிரம் ஜனங்களை எழுப்பிய லீலை.

சோழ நாட்டில் ஒரு சமயத்தில் வருஷா காலமும் தோன்றி எண் திசைகளிலும் மேகங்களை ஏவி நல்லுயிர்களுக்கு சிறப்பு வாய்க்கும்படி பொழியச் செய்த பிறகு அவ்வித மழை காலம் நீங்கிய பிறகு கால முறைப்படி சரத் காலமானது சோழ நாட்டில் ஆரம்பமாயிற்று. அப்பொழுது காவிரி நதியின் வெள்ளமானது சிவ பக்தர்களின் மனம்போல் தெளிவடைந்தது. வழிகளில் உள்ள வாவிகளில் அரவிந்தங்கள் மலர்ந்தன. மேக படலங்களை நீக்கிய வானத்தில் கதிரவன் கிரணம் பரவலாயிற்று. தானிய ராசிகளும் கனி ராசிகளும் அங்கங்கு அழகாய்க் காணப்பட்டன. மேகங்கள் வர்ஷித்தது போலவே பசுக்களும் பாலை வர்ஷிக்கலாயின. இவ்விதமாய் பூமிதேவியின் செழுமையைக் காண்பிக்கவல்ல சரத்காலம் என்னும் துலா மாதகாலமானது தோற்றியபொழுது அந்நாட்டுக்கு ஆரமென விளங்கும் காவிரி நதியில் ஸ்நானம் செய்வோர்களுக்கு நன்மை அளிப்பதற்காக சங்கற்பம் செய்துகொண்ட தியாகராஜன் பிராம்ம முகூர்த்தம் விடியற்காலத்தில் அத் திருவாரூர் நகரவாசிகளை எழுப்பிக் காவிரி நதிக்கு ஸ்நானம் செய்ய வாருங்கள் என்று அழைக்க விருப்பம் கொண்டவராய் அன்று இரவில் சகல ஜீவராசிகளும் நித்திரையைத் தழுவி இருக்கையில் தனது திருக்கோயிலில் இருந்து ஒரு கிழ முனிவர்போல் வெளிக்கிளம்பிய தியாகராஜன் முதலில் ஒரு வீதியில் புகுந்து பிராம்மணர் முதலிய வர்ணத்தோர்களே! நீங்கள் ஏன் இன்னம் உறங்குகிறீர்கள். பிராம்ம முகூர்த்தம் என்னும் விடியற்காலம் தோன்றி விட்டதே! அழகிய சந்திரமண்டலமும் அஸ்தமய சிகரத்தை அணுகிவிட்டானே. பிராம்மண குமாரர்களின் வேத கோஷமும் மலர்ந்த தாமரை மலரின் நடுவில் கீதம்பாடும் வண்டினங்கள் ஒலியும் உங்கள் காதில் புகவில்லையா? நீங்கள் இத்தகைய தியாகராஜ தியானத்

துடன் எழுந்து தக்ஷிண கங்கை என்னும் காவிரியை அடைந்து சங்கற்பம் செய்துகொண்டு உங்களுக்குச் சிறந்த பயனுண்டாகுமே! தியாகராஜன் அருள் வெள்ளத்தினுல் சிறந்த நன்மைகளும் இம்மாதிரியே துலா மாதத்தின் முப்பது நாட்கள் செல்லுமளவும் நியமத்துடன் காவிரி நதியில் நீராடுவீராகில் நீங்களே புண்ணியசாலியாகி விளங்குவீர்கள்! கால விளம்பமின்றி எழுந்திருப்பீர்கள் என்று எழுப்பினுர். பிறகு வீதியில் புகுந்து அங்குள்ள ஜனங்களையும் இவ்வாறு எழுப்பலானுர்.

இவ்விதமாய் பரம் பொருளாகிய தியாகராஜன் அன்று விடியற்காலையில் ஒரே காலத்தில் அந்நகரிலுள்ள மூவாயிரம் வேதியர்கள் வீட்டை அடைந்து அவர்களை எழுப்பியும் பிறகு ராஜவர்க்கத்தாரையும் பிறகு வைசிய வர்க்கத்தாரையும் பிறகு சூத்திரர் முதலிய வருணத்தாரை யும் தனது கம்பீரத் தொனியினுல் கூப்பிட்டு அழைத்து நீங்கள் யாவரும் விரைவாய் இத்துலா மாதப் புண்ணிய காலத்தில் காவிரி நதியில் நீராடி தியாகேசன் அருள் பெற்று நன்மையுடன் வருவீர்கள் என்று உரைத்தார். அன்று விடியற் காலத்தில் அத்திருவாரூர் நகரில் இவ்வித மாய் ஒரு கிழ முனிவர்போல் தோற்றிய பரமேசன் மூவாயிரவரையும், மற்று முள்ளவரையும் கூப்பிட்டு எழுப்புகையில் விரைவாய் நித்திரையை நீக்கிய ஜனங்கள் யாவரும் சங்கரனே! தியாகராஜ! சந்திர சேகரனே! பார்வதீசனே என்று ஈச்வர நாம சங்கீர்த்தனையுடன் எழுந்திருந்து ஒவ்வொரு வீதிகளிலும் கும்பலாய்க் கூடி அம்முனிவரை முன்னிட்டுக் கொண்டே காவிரிக் கரையை அடையலாயினர். நதியின் கரையை அடைந்த வேதியர் முதலிய வர்ணத்தார் யாவரும் காவிரியில் நீராடி துலாமாத புண்ய சமயத்தில் நாந்தி சிரார்த்தம் செய்வோரும், பிதுர் தர்ப்பணம் செய்வோரும், தானம் செய்வோரும், ஜபம் செய்வோருமாய் நின்று விளங்கினுர்கள்.

இவ்விதமாய் அத்திருவாரூர் நகரவாசிகள் அனைவரும் காவிரி நதியில் நீராடி சூரியோபாசனை செய்து திரும்புகையில் இன்று காலையில் நமது கிரக வாயிலில் முனிவர்போல் தோன்றி நம்மை எழுப்பியவர் யார்? அம்முனிவர் இப்பொழுது எங்கே இருக்கிறார் என்று ஒவ்வொருவரும் உரைத்துக்கொண்டு தேடத் தொடங்குகையில் அங்கு உண்டாகிய ஆகாயவாணியினால் அவ்வாறு முனிவர்போல் தோன்றியவர் தியாகராஜனே என்று அறிந்துகொண்டு அதுமுதல் துலாமாத ஸ்நான பலத்தையும் தியாகராஜனது திருவிளையாடலையும் நாடெங்கும் பரவச் செய்து நியமத்துடன் அந்த ஸ்நான விரதத்தை நிறைவேற்றித் தியாகராஜன் அருள் பெற்றுச் சிறப்புடன் வாழ்ந்தார்கள். அதுமுதல் அச்சோழ நாட்டில் துலா மாதத்தில் நியம ஸ்நானம் செய்யும் விரதமானது சதுர் வர்ணத்தோருக்கும் இப்போது விரதமாய் விளங்கலாயிற்று. அவ்வித சதுர் வர்ணத்தோருக்கு தியாகராஜனே நற்பயனை அளித்து மூவுலகையும் காத்து வரலானார்.

## 347. சாபிகளை எழுப்பிய லீலை.

ஒரு சமயத்தில் புண்ணிய தீர்த்தங்களுள் முதன்மையாகிய கமலாலயத்தின் கரையின் மீது புண்ணிய ஸ்நானம் செய்வதற்காக அனேக பக்தர்களும், வேதியர்களும், முனிவர்களும் ஒன்று சேர்ந்து நிறைந்திருக்கும் தருணத்தில் சிறந்ததொரு சூரியக்ரஹணம் உண்டாயிற்று. அத்தருணத்தில் ஜனங்கள் யாவரும் தியாகராஜனது திவ்ய நாம சங்கீர்த்தனையுடன் அந்தச் சூரியோபராக சமயத்தில் செய்யக்கூடிய நற்காரியங்களைச் செய்ய ஆரம்பிக்கையில் ஆகாயத்தில் ஓர் அசரீரி உண்டாயிற்று. கேளீர் தொண்டர்களே முன்பு பரமேசன் திரிபுரசம்ஹாரம் செய்த சமயத்தில் அவ்வசுரர்களுள் ஐவர் முதல்நாள் யுத்தத்தில் பரமேச

னுடன் சண்டை செய்து அபஜெயத்தை அடைந்து முறிந்த ஆயுதங்களை உடையவர்களாய் முகம் வாடி நிற்கையில் பரமேசனது திருவருளால் அவர்களது மனதில் கொஞ்சம் சிவபக்தி உண்டாயிற்று. அதனால் அவ்வசுரர் ஐவரும் மற்ற அசுரப் படையிலிருந்து விலகி அஞ்சலியுடன் பரமேசன் அருகை அடைந்து அவரது பாதாரவிந்தத்தில் பணிந்து நின்று ஓ கைலாசபதியே! அற்புத சக்திக்கு இருப்பிடமே! உமது புஜ பலத்தையும் பிநாகம் என்னும் வில்லின் வலிமையையும் பகைவர் எக்காலத்திலும் தணிக்க முடியாது. இம் மூவுலகில் இருக்கும் வானவரும், தானவரும், யக்ஷரும், உரகரும் ஒன்று சேர்ந்து போர் உளைத்த போதிலும் உமது புஜ பலத்தைத் தணிக்க முடியாது. இப்படி இருக்கையில் இவ்வசுரரால் என்ன செய்யமுடியும். ஆகிலும் இவ்வசுரரது துர்க்கமானது மிகவும் சிறந்ததாய் இருப்பதால் அவைகளின் இயல்பான பலத்தைக்கொண்டு இந்நேரம் வரை இவர்கள் உயிர் பிழைத்து இருக்கிறார்கள். இவ்வித துர்க்கங்களின் அமைப்பையும், அவைகளின் எந்திரங்களையும் முறிக்கும் வகையையும் நாங்கள் கூறுகிறோம்; கேளீர் என்று உரைக்கத் தொடங்கவே, பரமேசன் அவ்வைவரையும் தனது பக்தர்களாகவே அன்புடன் நோக்கி வந்து அவ்வசுரரது மூன்று புறங்களிலும் கனல்எரி பரப்பி அவர்களை வேருடன் மாய்த்து மூவுலருக்கு நன்மையை நிலைநாட்டினார்.

அவ்வாறு அச்சமயத்தில் ஈசனிடத்தில் சிறந்த, பக்தி பாராட்டிவந்த அவ்வசுரர் ஐவரும் பரமேச்வர நாம சங்கீர்த்தனை செய்துகொண்டே சிவ பக்தர்களுடனும், முனிவர்களுடனும் கூடிப்பேசி வெகுநாள் வரையில் சத்திய வழியில் நிலை பெற்றுக் காலம் கழித்து வந்தார்கள். ஒரு நாள் அவ்வசுரர்கள் தனது சாதித் தன்மையினால் சற்று மாறிய மனமுடையவர்களாய்க்கொண்டு புலஸ்திய மாமுனிவரது ஆச்ரம வாயிலிலுள்ள மரங்களை முறித்தும்,

மான்களைத் துரத்தியும் முனி கன்னியரை அபகரித்தும் ஆச்ரம ஸ்தானங்களுக்குப் பலவாறு தீங்கிழைக்கத் தொடங்கினார்கள். அதைக்கண்டு கடுஞ்சினம் கொண்ட புலஸ்தியன் அவர்களது புஜவேகத்தைத் தனது மந்திர சக்தியினால் ஸ்தம்பித்துத் தடுத்து நீங்கள் மீன்களாக மாறக்கடவீர்கள் என்று சாபமளித்தார். அவ்வித சாபத்தைப் பெற்றுக் கொண்டவுடனே அவ்வசுரர் ஐவருக்கும் நன்மதி உண்டாயிற்று. ஓ மகரிஷியே! நாங்கள் வேதாந்த பொருளாகிய கைலாசபதியின் பாதகமலத்தில் பக்திவைத்து உமது ஆச்ரமம் முதலிய புண்ய ஸ்தலங்களில் மனக்களிப்புடன் வாசஞ் செய்து வந்தோம். எங்களது சாதித் தன்மையினாலும் பாபப் பெருக்கினாலும் நாங்கள் இப்பொழுது உமது ஆச்ரமத்தை நாசம் செய்தோம். எங்களது குற்றத்தை மன்னிக்கவேண்டும். எங்களது சாபத்தின் முடிவானது ஈச தரிசனத்தினாலேயே ஏற்படும்படி அருள் புரிவீர். நாங்கள் மீனாக மாறியபோதிலும் பரமேசன் வாசம் செய்யும் புண்ய தலத்தில் இருக்கும்படி அருள் புரிவீர் என்று வேண்டினார்கள்.

அவர்களது அவ்வுரையைக் கேட்ட புலஸ்திய முனிவரும் அவ்வாறே ஆதக என்று சாபமும் வரமும் அளித்தமையினால் அன்று முதல் இன்று வரையில் பதினாயிர வருஷ காலத்தைக் கழித்த அவ்வசுரர் அனைவரும் ஐந்து மீன்களாக மாறி இக்கமலாலயத்தில் வசிக்கிறார்கள். இப் புண்ணியகாலத்தில் அவர்களின் மீது கருணை செய்த தியாகராஜன் ஒரு செம்படவன்போல் தோன்றி கையில் பிடித்த வலையுடன் அவ்வைந்து மீன்களையும் இப்பொழுது கரை சேர்க்கப்போகிறார். அப்படிப்பட்ட மீன்கள் ஈசன் அருளால் சில நாழிகைக்குள் திவ்ய சரீரத்தை அடைந்து சிவ பக்தராக மாறி விளங்கப் போகிறார்கள். இவ்வதிசயங்களையும் ஈசனது திருவிளையாடலையும் கண்டு களிப்பீரென்று இவ்வாறு உரைத்த அசரீரி மொழியைக்கேட்ட தொண்டர்

யாவரும் ஈசனது வரவை எதிர்நோக்கியிருந்தார்கள். அத்தகைய தருணத்தில் அப்புலஸ்திய முனிவரது வசனத்தைச் சத்தியமாகச் செய்ய நினைத்த தியாகராஜன் கையிலேந்திய வலையுடன் ஒரு செம்படவன்போல் தோன்றி அக்கமலாலயத்தின் கரையில் நின்று அதைச் சற்றுநேரம் உற்று நோக்கியபிறகு அக்கரையிலிருந்து வலையை வீசினுன் ஈசனுல் வீசப்பட்ட வலையானது தண்ணீரில் பரவும் பொழுது சாப முடிவுகாலத்தை அடைந்த அவ்வசுரமீன்கள் ஐந்தும் அவ்வலையில் அகப்பட்டன.

அப்பொழுது அம்மீன்களுடன் கூடிய வலையைச் செம்படவன் கரை சேர்ப்பதற்குள் தேவர்கள் ஆகாயத்தில் வந்து கூடி அச் செம்படவனது சென்னியில் மலர் மாரி பொழிந்தனர். அதைப்பெற்ற பரமேசனும் அப்பொழுதே மறையலாஞர். மீன்கள் ஜன்மமாகிய சாப ஜன்மத்தை நீக்கிச் சம்போ! சங்கர! தியாகேச! உமது கடாக்ஷத்தினுல் நாங்கள் அசுர சரீரத்தையும் சாப சரீரமாகிய மீன் சரீரத்தையும் ஒழித்து வானவராலும் கொண்டாடக் கூடிய இம் மனுஷ்ய சரீரத்தைப் பெற்ருேம். சகல பாபங்களையும் நீக்கி நன்மையை அளிக்கவல்ல விபூதி ருத்திராக்ஷமாலிகைகளையும் அணியப்பெற்ருேம். உமது பாத பக்தியையே உறுதுணையாகக் கைப்பற்றினோம். இனி உமது பாதமலரில் எமது மனம் நிலை பெற்றிருக்குமாறு அருள் புரிவீர் என்று துதிசெய்தார்கள். அவ்வித அற்புத சம்பவங்களை எல்லாம் நோக்கி இருக்கும் தொண்டர்கள் இவையெல்லாம் தியாகராஜனது லீலையைத்தவிர வேறிலையென்று ஈசனது நற்புகழைக் கீர்த்தனம் செய்கையில் அப்புலஸ்திய மாமுனிவரும் அனேக சிஷ்ய கணத்துடனும் அங்குவந்து கூடினுர். அம் முனிவர் அங்கு நடந்த விஷயங்களை ஞானக் கண்களால் அறிந்துகொண்டு அச்சூரிய க்ரஹண புண்ய காலத்தில் ஈசனுக்குக் காவிரி ஜலத்தினுல் அபிஷேகம் செய்து வைக்கும்படி தொண்டர்களுக்குக் கட்டளையிட்டார். அவர்களும் அவ்விஷயத்தைப் பூபாலனுக்கு அறிவித்துத்

தியாகேசனுக்குச் சகஸ்ர கும்பாபிஷேகம் என்னும் சிறந்த அபிஷேகத்தையும் அம்முனிவரை முன் வைத்துக் கொண்டே முறைப்படி நடத்திவைத்து அவ்வசுரச் சாபிகளை எழுப்பிச் சிவபக்தராக அருள்புரிந்த ஈசனைத் துதி செய்து புகழ்ந்தார்கள்.



## 348. முக்தியின் சிறப்புரைத்த லீலை.

ஒரு சமயம் தியாகராஜனது ஸன்னிதானத்தை அடைந்த வசிஷ்டர் முதலிய முனிவர் குழாமும் வேதியர் முதலாகிய வர்ணத்தோரும் துதி செய்து நிற்கையில் அச்சமயத்தில் சிவபக்தர்களின் மனதில் ஒருவித எண்ண முண்டாயிற்று. குற்றமற்ற மானுட சரீரத்தைப் பெற்றுப் பாவத்தை நீக்கிச் சிவ பக்தியை ஆரமாகப் பூண்டு இத் தியாகராஜனது திருமேனியைத் தரிசிக்கப் பெறுவோமாகில் இதைக்காட்டிலும் கைவல்ய சுகம் சிறந்ததாகுமா? என்று சிவ தொண்டர்கள் சிந்திக்கையில் அவ்விஷயத்தை அறிந்த பரமேசன் அவர்களை நோக்கித் தெய்வ வாக்கினால் உரைத்தார். அசைவற்ற மனதுடன் கேளீர் பக்தர்களே! கைவல்யம் என்னும் முக்தியின் சிறப்பை நான் கூறுகிறேன். புண்ணிய சரீரமென்னும் இம்மானுஷ சரீரத்துடன் எனது தரிசனத்தைப் பெறுதல் மிகவும் சிறந்ததாகும். அதைக் காட்டிலும் சிறந்த சிவ பக்தியுடன் எனது நாம சங்கீர்த்தனம் செய்வது மிகவும் சிறந்ததாகும். அதைக்காட்டிலும் அதிகத் தவம் செய்தல் சிறப்பை அளிக்கும் அதைக் காட்டிலும் தத்துவ ஞானத்தைப் பெறுதல் சிறப்பை அளிக்கும் அவ்விதத் தத்துவ ஞானத்தைப் பெற்ற ஞானியர் கைலாயத்தை அடைவார்கள். எனது பாத மலரில் ஒப்பற்ற பக்தியை வைப்பார்கள் அவ்விதக் கைவல்ய பதவியை அடைவார்கள் புண்ணியத்தின் பெருக்கினாலேயே தத்துவஞானம் உண்டாகும் அவ்விதத்

தத்துவ ஞானத்திஞல் எவ்விதத் துன்பமும் இன்றி விளங்கும் எனது ஐக்கிய செல்வத்தையும் அடையலாம். வேத சாகைகளில் கூறும் நித்திய நைமித்ய கருமமுறைகளை முறைப்படி அனுஷ்டிப்பவரும் வைராக்கியத்தை ஆரமாக அணிந்து, அக்ஞானத்தை அழித்து நற்பயனை விருப்பு வாரும் என்னிடத்தில் ஒப்பற்ற பக்தியைச் செலுத்து வாரும் எனது ஐக்கிய செல்வத்தை அடையலாம். மனதி ஞலும் நினைக்க ஒண்ணுததாகிய எனது பதமே முக்தி எனப்படும் கைலாசம் என்னும் எனது பதவியில் பக்தர் களின் தாபத்தைத் தீர்க்கவல்ல கங்கா நதியும் அதன் கரையில் முனிவரும், ஞானியரும், வானவரும் சித்தரும் எனது தியானத்துடன் விளங்குவார்கள். எனக்கு இருப் பிடம் முக்தி க்ஷேத்திரமென்னும் கைலாயத்தில் நவரத்தின மயமானபடிகளும், அழகிய மாளிகைகளும் அவைகளில் வேதாந்தங்களை உரைக்கும் கிளி, குயில், முதலிய பட்சிகளும் விளங்குகின்றன. அவ்விதக் கைலாய மலையில் ஆயிரக் கம்பங்கள் நிறைந்து மணிமயமான திவ்ய பீடத்தில் ஆதார சக்தி எந்திரத்தின்மேல் லோக ரக்ஷணத்துக்காக விளங்கும் எனது திவ்ய சரீரத்தை ஞானக் கண்களால் காணக் கூடும். சைவ தீக்ஷையுடனும் சம்ஸ்கார முறை யுடனும் ஆகம குணங்களுடனும். அசைவற்ற சிவ பக்தி யுடனும் கூடிய ஞானியரே எனது கைவல்ய பதவியை அடைவார்கள். வர்ணுசிரம முறைகளைத் தாண்டிச் செல் டவர் எனக்குப் பிரியராக மாட்டர்கள். அவர்கள் அரு வுருவைக் கற்ருரேனும், ஞானியரேனும், தார்மிகரேனும் எனது கைவல்ய பதவியைக் காணமாட்டார்கள். பர பிரம்மமென்றும் புண்ணிய தீர்த்தமென்றும், புண்ணிய தலமென்றும், வேதங்கள், கர்ம பயன்கள் என்றும், அஷ்டாங்க யோகங்களென்றும், யோகபயனென்றும், தலமென்றும், தானப்பயனென்றும் விளங்குவதெல்லாம் முக்தித் தலமென்னும் எனது கைவல்ய பதமேயாகும். வேதாந்த விசாரம் செய்வோரும் விருந்தளிப்போரும்

எனது கீர்த்தியைக் கானம் செய்வோரும் எனது மூர்த்தியைத் தரிசிப்போரும் நாளடைவில் தமது கரும பயனை யழித்து தத்தவ ஞானத்தைப்பெற்று எனது பரிதானந்த பதவியில் ஆழ்ந்து வாழ்வார்கள். இவ்வுலகில் துன்பத்தை விளைவிக்கக்கூடிய காரியங்களிலிருந்து விலகி எனது முக்தி தலத்தின் சிறப்பை அறிந்து இப்புண்ணியபுரியில் எனது அருளுக்கு முதல் பாத்திரமானவர்கள். எனது அம்சமாய் விளங்கும் சிவலிங்க மூர்த்திகளிடத்திலும் சிவ பக்தரிடத்திலும் குற்றம் செய்யாமல் சிவத்தியானத்துடனிருந்தாலே அருந்தவமாகும். அப்படிப்பட்ட பக்தர்களே எனது கைலாய பதவியை அடைவார்கள்.

## 349. அக்னியிடச் சம்மதித்த சோழனுக்கு அருள் செய்த லீலை.

ஒரு ஸமயத்தில் பரகேது என்னும் சோழ பூபாலன் அரசு புரிகையில் அம்மகாராஜனிடத்தில் சத்தியம், தயை, சிவபக்தி, பக்ஷ பாதமின்மை, கற்றோரிடத்தில் அன்பு, தானத்தில் அன்பு முதலிய நற்குணங்கள் நிறைந்திருந்த படியால் அப்பரகேது மகாராஜனது நற்கீர்த்தியை மகேந்திர மலையின் சாரலில் ஒரு கந்தர்வமாது பாடிக்கொண்டிருந்தாள். விரூபாக்ஷ மூர்த்தியையும் விசுவேச மூர்த்தியையும் தரிசித்துவிட்டு விமான மேறித் திரும்பிய இந்திரனும் இந்திராணியும் அம்மகேந்திர மலையின் அருகில் ஆகாயமார்க்கத்தில் செல்லுகையில் அந்தக் கந்தர்வமாதின் கீதமனது அவர்களின் மனதைக் கவர்ந்தது. கீதரஸத்தினல் வலுவில் கவரப்பட மனமுடைய இந்திரனும் அவனது தேவியும் அங்குச் சற்றுநேரம் விமானத்தை நிலைபெறச் செய்து அம்மாதின் கீதத்தைக் கேட்கையில் அவளது கீதத்தில் அப்பரகேது மகாராஜனது தானச் சிறப்பின் விசேஷம் அடங்கியதாய் அறிந்துகொண்டு அவ்விடத்தி

லிருந்து தமது இருப்பிடம் சேருமளவும் பலவாறு ஆலோசனை செய்த இந்திரன் அச்சோழ பூபாலனது தானச் சிறப்பை ஒருவாறு அழிக்கக் கருதியவனாய் உறுதி செய்துகொண்டு சுதர்மை என்னும் தனது சபையில் மற்றுமுள்ள திக்பாலகருடன் தனது மனக்கருத்தை வெளியிட்டு அவர்களால் பலவாறு தடுக்கப்பட்டபோதிலும் அடங்காப் பிடிவாதம் கொண்டவனாய்த் தேவர்கோன் ஒரு முனிவர் போல் உருவமெடுத்துக்கொண்டு அப்புண்ணிய புரியை அடைந்து அப்பூபாலனது சபையின் முன் நின்றான்.

அச்சோழ பூபாலனது கீர்த்தியை அழிக்கவேண்டுமென்று கருதிய இந்திரன் அவ்வாறு முனிவர்போல் தோற்றுகையில் அவனைக் கண்ட அரசன் விநயத்துடன் எதிர்கொண்டு அர்க்கியம், பாத்தியம் முதலியவைகளால் பூஜித்து ஆசனமளித்து விசாரித்து ஓ முனிவரே நீர் யார்? எனது தொண்டினால் உமக்கு நிறைவேற வேண்டிய காரியம் இருக்குமாயின் அதை விளம்புவீராகில் நான் கால விளம்பமின்றி அதைச் செய்து முடித்து உமது மனதைக் களிக்கச் செய்வேன் என்று இயம்பினான். அச்சோழ பூபாலன் கம்பீரமாய் உரைப்பதைக் கேட்ட இந்திரன் ஓ பூபாலனே! உனது தானச் சிறப்பைக் கேட்டு நான் உன்னிடத்தில் ஒரு யாசகம் செய்ய வந்தேன் என்றுரைத்தான். அவ்வுரையைக் கேட்ட பூபாலன் முகமலர்ச்சியுடன் அம்முனிவரது பாதத்தில் வணங்கி ஓ முனிவரே! நீர் யாசித்ததை நான் அளித்தேன்! உமக்கு எப்பொருள் தேவை? அதை உரைப்பீரென்று உரைத்தான். இந்திரனாகிய அம்முனிவர் ஓ பரகேசரி பூபாலனே! நான் ஒரு சிறந்த யாகத்தைச் செய்யப்போகிறேன். அதற்குப் பூர்வாங்கமாய் ஒரு ஹோமம் செய்யவேண்டும். அவ்வித ஹோமத்தைச் செய்வதற்குத் தக்கவாறு சக்தி பெற்ற தலத்தை நான் எங்கும் அடையவில்லை. தானம் செய்து சிறப்பெய்திய உனது வலது கையில் நான் அந்த ஹோமத்

தைச் செய்ய விரும்புகிறேன். நீ உனது வலது கையை ஒரு முகூர்த்தகாலம் செல்லுமளவு அளிப்பாயாகில் எனது ஹோமம் நிறைவேறும் நான் ஹோமம் செய்வதற்காக உனது கையை எனக்குத் தானம் செய்வாய் என்று உரைத்தான்.

அவ்வாறு முனிவர் உரைத்ததைக் கேட்ட சோழ பூபாலன் உளமகிழ்வை அடைந்து ஓ முனிவரே எனது வலதுகையை இப்பொழுதே உதக பூர்வமாய் அளித்து விட்டேன் இதில் நீர் விரும்பியவாறு ஹோமம் செய்து கொள்வீர் என்றுரைத்துக்கொண்டே தியாகராஜனது பாதமலரை மனதில் தியானித்தான் கையை நீட்டினான். அச்சோழனது மனதைப் பரீக்ஷை செய்வதற்காகக் கொடிய சித்தம் உடையவன்போல் வந்து தோன்றிய இந்திரனாகிய முனிவரும் அந்த ஹோமத்துக்காகப் பூர்வாங்கமாய்ச் செய்யவேண்டிய ப்ராணதாரணம் சங்கற்பம் முதலிய அங்கங்களை நிறைவேற்றி ஸமித்து என்னும் விறகுக் கட்டைகளை அப்பூபாலனது கையில் பரப்பி அதில் தீயை வளர்த்து அதில் சுவாஹாகாரம் முதலிய சில மந்திரங்களை உச்சரித்துக்கொண்டே ஹோமம் செய்யலானார். அப் பொழுது சோழன் சற்றேனும் மன மாறுதலை அடையாமல் தியாகேச! மணி விளக்கே! தொண்டர் துன்பத்தை ஒழிக்கும் தெய்வமே! உமது பாதத்தில் எனது மனம் பற்றியிருப்பது சத்தியமாயின் எனது கையைப்பற்றி எரியும் இவ்வக்கினியானது என்னைச் சுடாவண்ணம் அருள் புரிவாய் என்று மனதில் ஈசனைத் தியானித்துக் கொண்டே தனது தக்ஷிண பாணியை ஹோமத்துக்காகக் காட்டி நின்றான். இவ்விதமாய் அப்பூபாலன் அக்னி மேடையின் அருகில் தனது கையை நீட்டி அக்கையில் அம்முனிவர் தீயிடச் சம்மதித்தும் ஹோமங்களைச் செய்யவும் சம்மதித்து முகமலர்ச்சியுடன் விளங்குவதைக் கண்ட யாவரும் இவ் வரசன் தெய்வத்தன்மை வாய்ந்தவனோ? சத்திய

தேவதையோ? தான் கூறிய சத்திய வாக்கைத் தவரு வண்மை இவ்வாறு தனது கையில் அக்னியிடச் சம்மதித் தானே இதைக்காட்டிலும் அற்புதக்காட்சி வேறுண்டோ? இவ்வரசன் செய்துவரும் தானச் சிறப்பினாலும் இவனது சத்திய முறையினாலும் இவன் தியாகேசனிடத்தில் வைத் திருக்கும் ஒப்பற்ற பக்தியினாலும் இவனது கையைப் பற்றிச் ஜொலிக்கும் அக்னிதேவனும் இவனை வாட்டாமல் இருக்கிறான்போலும் என்று இவ்வண்ணமாய் அங்குள்ள சபையோர் வியப்புடன் உரைக்கையில் முனிவர்போல் தோற்றிய தேவேந்திரனும் அப்பூபாலனது மனதின் பான்மையைக் கண்டு மனக்களிப்பை அடைந்தவனாய்த் திடீரென்று ஆகாயத்தில் மறைந்து ஓ சோழ பூபனே! உன்னைப்போன்ற சத்திய சீலர் சிலரே இருப்பார்கள். உனது தானச் சிறப்பும் ஒப்பற்ற சிவபக்தியுமே இச்சமயத் தில் உன்னைக் காப்பாற்றி உனக்கு நற்புகழை விளைவித்தது. தியாகராஜ பக்தியினால் விளங்கும் உன்னை இனி நான் பரீக்ஷிக்க விருப்பமடையவில்லை. உனது இஷ்டங்கள் யாவும் நிறைவேறும் வண்ணம் நான் வரமளித்தேன். பரம்பொருளாகிய தியாகேசனே உன்னைக் காக்கக் கண் விழித்திருக்கையில் இந்திரனாகிய யான் உனக்கு அளிக்கும் பயன் யாது. ஜயத்துடனும் சிறப்புடனும் விளங்குவாய் என்றுரைத்து அற்புத ரசத்தை அடைந்தவனுமாய் வானுலகை அடைந்தான். பக்த ரக்ஷகனாகிய தியாகராஜன் இவ்விதமாய்த் தனது கையில் அக்னியிடச் சம்மதித்த சோழ பூபாலனைக் காப்பாற்றி அவனைக்கண்டு வானோர் களிக்கும்படி செய்துவைத்த பான்மையைக் கேட்டவர் யார் ஆச்சரியத்தை அடையமாட்டார்கள்? ஒப்பற்ற தியாகேச பக்தியினால் எவ்வித துன்பங்களையும் நீக்கி நற் புகழைப் பெற்று விளங்கலாம் என்பதற்கு இவ்லீலையே முதல் உதாரணமாக விளங்குகிறதென்று ஞானியர் உரைக்கலாயினர்.

## 350. திருப்பணி செய்தோனுக்கருள் செய்த லீலை.

சத்தியமும் சித்த சுத்தியும், சிவபக்தியும் நிறைபப் பெற்ற கணக்கற்ற வேதியர்கள் நிறைந்து வாழும் கனக புரியில் வீரகனென்னும் வைசியரொருவர் இருந்தார். அவர் பூசுரர்களிடத்திலும் முனிவர்களிடத்திலும் ஒப்பற்ற பக்தி வைத்து அவர்களின் முகத்திலிருந்து சிவமதச் சிறப்பையும், சிவலிங்க மூர்த்திகளின் தர்சன பலத்தையும் சிவபக்தர்களின் அற்புதச் சக்தியையும் சாங்கமாய்க் கேட்டிருந்தபடியால் அவருக்குப் பரமேசனிடத்தில் அளவற்ற பக்தி உண்டாயிற்று ஒரு நாள் அவ்வைசியன் திருவாரூர் நகருக்குச் செல்லும் சில தொண்டர்களுடன் கூடிப் புண்ணியபுரியை அடைந்து அங்கு விளங்கும் புண்ணிய தீர்த்தங்களில் நீராடித் தியாகராஜனது ஸன்னிதானத்தை அடைந்து பணிந்து ஈசனது திருமேனியைக் கண்ணாரக் கண்டு துதிசெய்து பிராகாரங்களின் வழியாய்ப் பிரதக்ஷிணம் செய்து வருகையில் அங்கு ஒரு முனிவர் நிலைபெற்று விளங்கக் கண்டான். அம்முனிவரது ஜபம் முடிந்ததும் அவரது பாதத்தில் பணிந்தெழுந்த அவ்வீரகனென்னும் வைசியோத்தமன் புண்ணிய புருஷேத்திர மகிமையையும் ஆதி காலம் முதல் தியாகேசன் பக்தர்களின் நன்மைக்காகவே செய்து வந்த திருவிளையாடல்களின் சிறப்பையும் அம்முனிவருரைக்கக் கேட்டு பரமானந்தத்தை அடைந்து அங்குச் சில காலம் வசித்திருந்து அவரிடம் விடைபெற்றுக் கொண்டு கனகபுரிக்குச் செல்லும் தருணத்தில் மீளவும் அவரது பாதத்தில் வணங்கி நின்று முனிவரே! எனது செல்வத்தை எவ்வழியில் விநியோகத்தால் நன்மை வாய்க்கும். தியாகராஜனது மனமும் களி கூறும் இதை யுரைப்பீரென்று கூறி வணங்கி நின்றான்.

ஞானத்தில் சிறந்தவராகிய அம்முனிவர் அதைக் கேட்டுச் சற்று ஆலோசனை செய்து பிறகு ஓ சிவபக்தனே!

தான சாஸ்திரங்களில் கூறிய முறைபோல் செய்யும் பல தானங்களுக்கும் மேன்மை அளிக்கும் சக்தியுண்டு. அவ் விதத் தானங்களைத் தூய மனத்துடன் செய்தாரேனும் அவைகளெல்லாம் பரமேசனது மனக்களிப்பின் பொருட்டேயாகும். ஆகிலும் அவ்வாறு தானம் செய் வதைக் காட்டிலும் அங்கங்குப் புண்ணிய தலங்களில் ஆலயமற்று விளங்கும் சிவலிங்க மூர்த்திகளுக்கு ஆலயம் எடுப்பித்துக் கும்பாபிஷேகம் செய்து வைப்பதே சிறந்த தாகும் என்றுரைத்தார். அம் முனிவர் கூறிய மொழியை யும் ஆசியையும் பெற்றுக்கொண்டு திரும்பிய வீரகன் கனக புரியை அடைந்து அது முதல் ஆலயமற்றும் விளங்கும் சிவலிங்க மூர்த்திகளுக்குத் தேவாலய நிர்மாணம் செய்து வைக்க விருப்பம் கொண்டவனாய்ச் சங்கற்பம் கொண்டு தனது திரவியங்களை வாரி எடுத்துக்கொண்டு வேதியர் களையும், குல குருவையும் சிற்ப சாஸ்திர மறிந்த வேலைக் காரர்களையும் வைத்துக்கொண்டு பிரம்மவனம், வேத வனம், கபிலகிரி, தேவதாருவனம், கடம்பவனம் முதலான புண்ணிய க்ஷேத்திரங்களில் விளங்கும் பரமேசனது ஆலயங் கள் சிகரங்களினின்று நிலை குலைந்து அழகற்றிருப்பதைக் கண்டு மனமுருகித் தனது அளவற்ற செல்வத்தினால் கர்ப்பக்கிருஹம் – படி நிலை – ஆதாரபீடம் - கோமுகம்- சிகரம் - ஸ்தூபி – நாண்வட்டம் – மண்டபம் – பலிபீடம்– நந்திபீடம்–பிராகாரம் முதலியவைகளை ஜீரணோத்தாரணம் செய்து வைத்தும் தேஜினிவனம் முதலான திவ்ய ஸ்தானங் களில் தேவாலய நிர்மாணத்தையும், சிவலிங்கப் பிரதிஷ்டை யும் செய்து வைத்துச் சிவபக்தி மார்க்கத்தில் நிலைபெற்று நன்மையுடன் விளங்கலானான்.

சாஸ்திரங்களின் கரைகண்ட வேதியர்களின் உப தேசத்தினால் அவ்வுத்தமன் இவ்வாறு தேவாலயத்தொண்டு செய்து கொண்டே மற்றொரு சமயத்தில் திருவாரூருக்கு வந்து பரமேசனைத் தரிசிக்கையில் தியாகராஜன் ஒரு ஆகாச வாணியை ஏவி உரைத்ததாவது – கேளாய் வைசிய பக்

தனே! அங்கங்குப் புண்ணிய க்ஷேத்திரங்களில் நீ செய்து வரும் ஆலய நிர்மாணச் சிறப்பைக் கண்டு நான் களிப் படைந்தேன். இக் கலியுகத்தில் தேவாலய ஸ்தாபனமே நன்மையின் பொருட்டாகும். உனது சுத்த மனப் பான்மையையும், சிவபக்தியையும் தொண்டின் மேன்மை யையுங் கண்டு களிப்படைந்த நான் உனக்குச் சகல நன்மை களும் உண்டாகுமாறு அருள் புரிந்தேன். இது முதல் இவ்வுலகில் உன்னை திருஷ்டாந்தமாகக் கருதி தொண்டர் யாவரும் தேவாலயப் பணியைச் செய்து வைத்து எனதருள் பெற்று நீடாழி சூழ்ந்த வையகத்தில் வாழ்வார்கள். எனது கடாக்ஷத்தைப் பெறுவதற்கு நல்வழிகள் பல உள. எனது அம்சமான லிங்கமூர்த்திகளுக்கு அபிஷேகம் செய்து வைப் பதும் லிங்க மூர்த்திகளின் எதிரில் தீபாரோபணம் செய்து வைப்பதும் திருவிழாச் செய்து வைப்பதும், ஸத்புருஷர் களுக்குத் தானம் செய்வதும் ஏழைகளுக்கன்னமிடுவதும் நற்பயனையே அளிக்கும். ஆகிலும் அவைகளிலெல்லாம் இவ் வாலய நிர்மாணமே மிகவும் சிறந்ததாகும். பரமேச்வர லிங்க மூர்த்திகளுக்கு ஆலயம் நிர்மாணம் செய்யும் பக்தர் கள் ஸகல பாவங்களையும் நீக்கி எனது சிறந்த அருளைப் பெற்றுப் பரமானந்தமாகிய கைலாயபதியில் வானோருடன் ஒன்றி விளங்குவார்களென்று உரைத்ததைக் கேட்டு வீரகன் முதலாய தொண்டர்கள் ஆனந்தமடைந்தார்கள். ஈசனைப் பலவாறு துதித்தார்கள் திருவாரூர் முதலாய திவ்ய க்ஷேத்திரங்களில் விளங்கும் ஈச்வர மூர்த்திகளின் தரிசனத்தைப் பெற்றும், மனோரதங்கள் நிறைவேறப் பெற்று மகிழ்ந்தார்கள். தேவாலய நிர்மாண பலன் விஷய மாய்த் தியாகேசன் உரைத்ததைப் பல தொண்டர்களுக்கு அறிவித்து அவர்களுக்கும் சிவபக்தியை ஊட்டி சிறப் பெய்தச் செய்தார்கள். அது முதல் உலகமெங்கும் சிவ பக்தியும் அதனடியாய் ஆலய நிர்மாண தர்ம சிந்தையும் உயர்ந்தோங்கி வளரலாயிற்று. காசி முதலிய தேசங்களில் விளங்கும் தேவாலயங்களில் மங்கள வாத்ய கோஷமும்

வேதியர்களின் வேத ஒலியும் பூமியைப் பரிசுத்தம் செய்து வைத்துச் சகல ஜீவராசிகளுக்கும் பரமானந்தத்தை அளிக்கலாயின.

## 351. வாளாய் நுழைந்து தத்துவமுரைத்த லீலை.

குமாரபுரியில் வைச்யகுலத்தில் அசுராம்சமாய் ஜனித்த குமாரபாலன் என்னும் துஷ்டன் ஒருவன் இருந்தான். பூர்வஜன்ம பாவத்திரளால் அவனுக்குத் துர்புத்தி வளர்ந்து வரலாயிற்று. அதனால் அவன் சாதுஜனங்களைப் பலவாறு பழிக்கலானான். சிவபக்தரின் மேன்மையை இகழ்ந்து பரமேசனது மகிமையை மறைக்கவும் முயன்றான். துஷ்டர்களுடன் கூடி பொய்யுரைத்தல், கள்ளுண்ணல், சூதாடுதல், கற்புள்ள மாதர்களையிகழ்தல், பரமேசனை வணங்காதிருத்தல், சாதிகர்மங்களையழித்தல் முதலிய துராசாரங்களைக் கையாளத் தொடங்கினான். தனது மூதாதை நாள்முதல் வளர்ந்தோங்கிவரும் செல்வப் பெருக்கைக்கண்டு மகிழ்ந்து அடங்காத கர்வத்துடன் துர்மார்க்கங்களிலிறங்கிப் பாவ ராசிகளைத் தேடிவரலானான். சிற்சில சமயங்களில் அவ்வைச்யன் மோஹத்தையடைந்து கொடிய நரகங்களையளிக்கவல்ல தீமைகளையும் செய்யலானான். பூபாலனது கட்டளையையும் க்ஷத்திய வழியையும் மீறிவந்தான். அதனால் அவன் நாளடைவில் ஜனங்களின் நிந்தனையையும் அபகீர்த்தியையும், வேதியரது சாபங்களையும் அடையப் பெற்று ஆத்மஞானமற்றவனாய்ச் சிறந்த வாழ்நாட்களைத் துர்மார்க்க மூலமாய் வீணில் கழித்துவரலானான்.

குமாரபாலனென்னும் அவ்வைச்யனானவன் இவ்விதமாய்த் துஷ்டத்தன்மையிலாழ்ந்து வருகையில் ஒருநாள் குதிரையின்மீது ஏறிக்கொண்டு நகரின் வெளியில் செல்லுகையில் அங்கு அவனது எதிர்முகமாய் நடந்துவந்த ஒரு பிராம்மணோத்தமரைக்கண்டு வணக்கமுள்ளவன்போல்

க்ஷேமவுரைகள் கூறித் திருவாரூருக்கு இவ்வழியையே பற்றிச் செல்ல வேண்டுமென்று ஒரு கள்ளவழியைக் காண்பித்தான். அவ்வித பொய்யுரையை மெய்யுரை என்று நம்பிய அவ்வேதியனும் தனது மனைவி மக்களுடன் அவ்வழியில் சற்றுநேரம் நடந்துசெல்லுகையில் அக்கள்ள வழியானது அவர்களை ஒரு கொடிய காட்டில் கொண்டு போய்விட்டது. அக்காட்டில் திசை தடுமாறுதலையடைந்து வழியைவிட்டு விலகி முட்கள் நிறைந்த மரங்களைக் கண்டும், கொடிய மிருகங்களின் சப்தத்தைக் கேட்டும் பயந்தும், பசியினாலும் தாகத்தினாலும் சோர்வை அடைந்தவராயு முள்ள அவ்வேதியர் பரமேசனை மனதில் தியானித்துத் துதித்து அவரது அருளால் அன்று மாலைநேரத்தில் ஒரு வேடனால் காண்பிக்கப்பட்டதொரு நல்வழியைப் பற்றிக் கொண்டு சிவநாம ஸங்கீர்த்தனையுடன் திருவாரூரை அடைந்து ஈசனைத் தர்சித்து மகிழ்ந்தார்.

இவ்விதமாய் அவ்வைச்யன் சாதுக்களுக்கு தீங்கிழைத் துக்கொண்டும், சிவபக்தரை யிகழ்ந்துகொண்டும் பிறருக்கு நேரிட்ட துன்பத்தைக்கண்டு தான் அளவற்ற ஸந்தோஷ மடைந்தும் வரும்நாளில் அத்துஷ்டனது துர்க்குணத்தை வேருடன் அழித்து நற்புத்தியளிக்க வேண்டுமென்று சங்கற்பம் செய்துகொண்ட பரமேசன் ஒருநாள் அவ் வைச்யன் தனது மாளிகையில் கட்டிலின்கண் நித்திரை செய்துகொண்டிருக்கையில் கூர்மையுள்ள வாளாய் உருவ மெடுத்துக்கொண்டு அவனது அருகையடைந்தார். அத் தருணத்தில் ஈசனது திவ்ய சக்தியினால் அவன் படுத்து உறங்கும் அறையின் கதவுகள் யாவும் உறுதியாய் மூடப்பட்டன. அத்தருணத்தில் தியாகேசன் அங்கு ஒரு ஆகாயவாணியை ஏவி உரைத்ததாவது :— ஓ வைச்யனே ! நீ நெடுநாளாகத் துர்ப்புத்தியையடைந்து ஸத்தியமார்க்கங் களை மீறிச் செய்துவரும் துஷ்ட காரியங்களை எல்லாம் ஈசன் அறிந்திருக்கிறார். அப்பரமேசனே இப்பொழுது ஒரு வாள்

உருவத்துடன் உனது அருகையடைந்து நிற்கிறார். இப்பொழுது நீ துர்க்குணங்களை முற்றிலுமொழித்து ஈசனிடத்தில் பக்திசெய்யாவிடில் நீ செய்த பாவத்திரளின் பயனாக இவ்வாளே உனது தலையை இருபிளவாகப் பிளந்துவிடும் என்று உண்டாகிய மொழியைக் கேட்டுக் குமாரபாலன் என்னும் அவ்வைச்யன் அகாலத்தில் கண்விழிப்பையடைந்தவனாய் எண்திசைகளையும் உற்றுநோக்கினான். தனதருகில் யமஸ்வரூபிபோல் நிலைபெற்று ஒளிவீசும் அவ்வாளைக்கண்டு நடுக்கமுற்றான். ஹா! ஹா! என் செய்வேன் என்று அலறினான். ஐயோ! துணையற்ற நான் இப்பொழுது என் செய்வேன். இக்கொடிய வாளானது கொஞ்சம் கொஞ்சமாய் எனது அருகை அணுகுகிறதே. எனது சென்னியை வெட்டிவிடும்போல் காணப்படுகிறதே; காப்பாற்றுவார் யாருமிலரே என்றுரைத்துக் கதறி அழுதான்.

இவ்விதமாய் அவன் சற்றுநேரம் மதி தடுமாறி உயிர் காக்கும் வழியை அறியாதவனாய் அலைந்து பெருமூச்செறிந்து பிறகு பரமேசனையாவது தியானம்செய்வேன். அவரது அருளினாலாவது இத்துன்பம் தணியுமா என்று ஆலோசனைசெய்து சம்போ! சங்கர! பார்வதீ பாகனே! எனது உயிரைக் காத்தருள்வீர். இனி நான் எவ்வித துர்மார்க்கங்களிலும் இறங்கிப் பாவராசியைத் தேடாவண்ணம் என்னைக் காத்தருள்வீரென்று சிவத்தியானத்துடன் கைகூப்பினான். அத்தருணத்தில் அவ்வாளானது அவனைவிட்டு விலகி வெகுதூரம் சென்றது. அப்போது பரமேசனருளால் அவ்வைச்யனுக்கு ஞானோதயமுண்டாயிற்று. அதனால் அவன் சென்னியில் அஞ்சலி செய்துகொண்டு சிவஸ்வரூபமே! எனது துர்க்குணங்களைகளையாய் பார்வதீகனே பாவியேனாகிய என் மனதில் உமது பாதபக்தியையளிப்பீர். பிநாகபாணியே! உமது பாதத்துக்கே தொண்டுபூண்ட என்னை இவ்விடத்திலிருந்து காப்பாற்றுவாய் என்று மனமுருகித் துதி செய்யலானான்.

அப்பொழுது அவ்வாளாய்த் தோன்றிய பரமேசன் மறைந்து நீ செய்த பாவங்கள் தொலைய புண்ணியபுரியில் விளங்கும் கமலாலயத்தில் ஸ்நானம் செய்வாய். உய்யும் வகையை அளிக்கவல்ல சிவபக்தியை அடைவதற்காகத் தியாகராஜனது திருமேனியைத் தர்சிப்பாய் என்றுரைத்துப் பிறகு தனது ஆதார சக்திபீடத்தில் விளங்கலானார். ஈசனருளால் அவ்வைசியனது துர்க்குணங்களும் அஞ்ஞான மும் ஒய்ந்ததுபோலவே அன்றிரவும் கழியவே மறுநாட் காலையில் கீழ்த்திசையில் கதிரவனுதித்தவுடனே அச்சயன சாலையிலிருந்து வெளிக்கிளம்பிய குமாரபாலன் தனது குல குருவையும், சுற்றத்தாரையும், வேதியர்களையும் அன்புடன் வரவழைத்துப் பணிந்து அன்றிரவில் தனக்கு நேரிட்ட பயத்தையும், அவ்வாறு பயமளித்த வாளானது சிவத்தி யானச் சிறப்பினுல் மறைந்து சென்ற முறையையும் பரமேசன் தன்னிடத்தில் அருள்செய்து ஞானோதயத்தை அளித்து உபதேசம் செய்த மேன்மையையுமுரைத்து அவர் களுடன் புண்ணியபுரியை அடைந்து கமலையில் நீராடிப் பாவங்களை நீக்கித் தியாகராஜனது திவ்யதர்சனத்தைப் பெற்று அவரது பாதமலரில் அதுமுதல் அசைவற்ற பக்தியைக் காட்டித் தனது செல்வத்தையும் நல்வழியில் விநியோகித்துச் சிவபக்தியினுல் சிறப்புடன் விளங்கலா னுன். இவ்விதமாய் நாடோறும் வளர்ந்து வந்த தியாக புரந்தரனுடைய லீலையின் சிறப்பைக் கேட்ட தொண்டர் யாவரும் பரமானந்தமடைந்து அவ்வித சிவபக்தியினுல் சகல இடர்களையும் நீக்கி நற்செல்வத்தினுல் விளங்கலாயினர்.

## 352. பாலனூட்டிய சோற்றை உண்ட லீலை.

சிறந்த செல்வம் மல்கி வாழும் திருவாரூர் நகரில் புண்ணியத்திரள் என விளங்கும் தியாகராஜனது அற்புத லீலா ரஸத்தினுல் சந்தோஷத்தையும், சிவபக்தியையும்

அடைந்த பாலர்களும், மாதரும், கிழவரும் தியாகராஜனே நற்தெய்வம். தியாகராஜனே குல தெய்வம் தியாகராஜனே உற்ற துணையாயும், அறுசுவைப் பயனும் நன்மணி விளக்காயும் ஆரணவொளியாயும் வேதப் பொருளாயும் வேதாந்தக் கருத்தாயும் ஓதும் தெய்வமாக விளங்குகிறார். இவ்வீசனது கருணையினாலேயே நாம் மகிழ்ந்து வாழ்கிறோம். இவ்வீசனது கருணை வெள்ளம் பாயாவிடில் தேவலோகமும் கானகமாகிவிடும் கடலும் வற்றி விடும் என்று இவ்விதமாய் அல்லும் பகலும் எவ்விடத்திலும் ஈசனது நற்புகழைப் புகழ்ந்து வருகையில் சோழ பூபாலன் மந்திரியின் மாளிகையிலுள்ளோரும் இவ்வாறு புகழ்ந்து வரவே அதைக் கேட்டிருந்த அவனது பாலகன் பாலுண்ணும் வயது முதல் தியாகேசனது குணங்களைப் பரிவுடனே தானும் மழலைச் சொல்லால் புகழலானான்.

இவ்வண்ணமாய் அம்மந்திரி பாலகன் தான் உண்ணும் சமயத்திலும், உறங்கும் சமயத்திலும், விளையாடும் தருணத்திலும் தியாகராஜனை மனதில் நினைத்தும் கும்பிட்டும், அணைத்தும் பேசியும், அன்பு பாராட்டியும் வருகையில் ஒருநாள் அம்மந்திரி பாலகன் இவ்வித இளமைப் பருவம் முதல் தன்னிடத்தில் வைத்திருக்கும் அன்பைக் கண்டு மனக்களிப்படைந்த தியாகராஜன் அச் சிறுவனிடத்தில் அருள் காக்கவேண்டுமென்று சங்கற்பம் செய்துகொண்டார். பூர்வசன்மப் புண்ணியச் சிறப்பை அடைந்த அம்மந்திரிச் சிறுவன் தியாகேசன் அவ்வாறு சங்கற்பம் செய்துகொண்ட தருணத்திலேயே தான் உண்ணும் உணவை நற் தெய்வமாகிய பரமேசனுக்கு அளிக்கவேண்டி ஈச! நான் அன்புடன் அளிக்கும் உணவை நீர் அங்கீகரிக்கவேண்டுமென்று வேண்டலானான். அம் மந்திரிச் சிறுவன் மாளிகையில் அவ்வாறு வேண்டுகையில் அப்பொழுதே பரமேசனது திருக்கோயிலில் ஒரு ஆகாய வாணி உண்டாயிற்று. பக்தர்களே! நீங்கள் இன்று

நீங்கள் எனக்குக் காலநேர நைவேத்யங்களைக் கவனிக்க வேண்டாம். இத்தருணத்திலேயே மந்திரிச் சிறுவன் எனக்கு அன்புடன் உணவு அளித்தபடியால் அச்சிறுவனது தோழமையையும் மனக் கருத்தையும் கண்டுகளித்த நான் அவ்வுணவையே முதலில் புசித்துவிட்டேன். யாகம் முதலிய வேள்விகளில் வேதியர்களும் முனிவர்களும் தேவர்களும் தூய்மையான வாக்கினால் மந்திர பூர்வகமாய் அளிக்கும் அவிஸ்ஸுகளையும் ஹோமங்களையும் நான் அருந்திச் சந்தோஷமடைந்ததைக் காட்டிலும் பதின்பங்கு அதிகமானதை மந்திரி குமாரன் எனக்கு உண்டுபண்ணினான். ஆதலால் நான் என்னிடத்தில் அன்பு பூண்டவர்கள் பாலராயினும், விருத்தராயினும், மாதராயினும், ஈனசாதியினராயினும் பக்ஷபாதமின்றி அவர்களின் சிறந்த பக்தி—அன்பு—ஸத்தியம் முதலிய நற்குணங்களுக்கு ஈடுபட்டவனாய் விளங்குவதை இன்று உலகில் வெளிப்படுத்துவதற்காகவே நான் இப்பொழுது உங்களது நைவேத்யத்தைத் தடுக்கிறேன். இதுமுதல் அம்மந்திரி பாலகன் எனது திருவருளைப் பெற்றவனாய்ச் சிறந்த நன்மையுடன் விளங்குவான். அம்மந்திரி பாலகன் எனக்கு அன்பார்ந்த மனத்தினால் ஊட்டிய உணவை உட்கொண்டு உளமகிழ்வடைந்தேன். என்னிடத்தில் ஒப்பற்ற அன்பு வைத்தவர்களுக்கே நான் சுவாதீனமானவன். எனது மெய்யன்பர் கூறும் மொழிகளை நான் மீறி நடக்கமாட்டேன். எனது தொண்டர்களுக்கு நான் தொண்டு வேலையையும் செய்வேன். வேதாந்தங்களில் எனக்குக் கூறியிருக்கும் வைபவங்களை நான் எனது தொண்டர்கள் விஷயத்தில் காண்பிக்க விருப்பமடைய மாட்டேன். எனது மெய்யன்பர் வேண்டுவாராகில் அவ்வித அற்புதச் சக்திகளையும் திவ்ய குணங்களையும் வெளிக்காட்டுவேன். தொண்டர்களின் இடரை நீக்கும்பொருட்டே நான் இந்தத் தேவ வேதிகையின்மீது விளங்குகிறேன்" என்று இவ்விதமாய்த் தியாகராஜன் ஏவிய ஆகாயவாணியைக் கேட்ட சோழ

ராஜன், மந்திரி முதலிய தொண்டரனைவரும் பரமானந்தம் அடைந்து அவ்விஷயத்தை அனைவருக்கும் அறிவித்து அம் மந்திரிச் சிறுவனை ஈசனது ஸந்நிதானத்தில் பணியச்செய்து மேன்மையடைவித்தார்கள். அதுமுதல் அன்புடன் பாலனூட்டிய சோற்றையுண்ட சுருதித் தெய்வமாகிய தியாகராஜனே நமது குலதெய்வம், தியாகராஜனே நமது பெருஞ்செல்வம் என்றுரைத்துக்கொண்டே ஸகல ஜனங்களும் ஆனந்தக்கடலில் ஆழ்ந்து தியாகராஜ பக்தியுடன் விளங்கலாயினர்.



## 353. கல்வியைக் கக்குவித்த லீலை.

முன்பு ஒரு ஸமயத்தில் தான்ய நகரில் மித்ராச்வ னென்னும் ஜைன குரு ஒருவரிருந்தார். அவர் ஜைன மதத்தில் ஆழ்ந்தவராயிருந்தபோதிலும் சைவ சித்தாந்தத்திலும், சைவாகமங்களிலும் சிறந்த ஞானம் பெற்றவர். தர்க்கம் முதலான சாஸ்திரங்களிலும் தேர்ச்சியை அடைந்தவர். பதினெண் புராணங்களையும், வேதாந்தங்களையும் லக்ஷண பூர்வமாய் அறிந்தவராயிருந்தபடியால் அவரது ஜைனமதக் கோட்பாட்டைக் கவனிக்காமல் அக்குருவின் ஞானச் சிறப்பைக் கண்ட வேதியர் பலரும் சிவபக்தர் பலரும் அவரிடத்தில் சிஷ்யராகச் சேர்ந்து அவருக்குத் தொண்டு, தொழில் செய்து அவரது முகத்திலிருந்து வெளி வரும் சாஸ்திரார்த்தங்களையும் வேத விசாரங்களையும் சிவமத தத்துவங்களையும் உபதேசமாகப் பெற்று வரலாயினர். அவ்விதச் சிஷ்யர்களுக்குள் சிவ தாஸனென்னும் சிவபக்தரொருவர் அச்ஜைன குருவினிடமிருந்து வெகு விரைவாய்ப் பற்பல சாஸ்திரார்த்தங்களை அறிந்து கொண்டும் அக்குருவினது ஆசியைப் பெற்றுக் கொண்டும் தான் அடைந்த ஞானத்திரளால் பரமேசனது அற்புதக் குணங்களை நன்குய் அறிந்துகொண்டு ஒவ்வொரு தேசத்

திலும் சென்று அங்குள்ள ஜனங்களுக்கு சிவமதச் சிறப்பைக் கூறி அவர்களது மனம் பரமேசனது பாதார விந்தத்தில் நிலைபெற்று நிற்கும்படி செய்து வந்தார்.

சிவதாஸர் என்னும் அவ்வந்தணோத்தமர் இவ்விதமாய் அங்கங்கு நாடுகளில் சென்று சிவமதத்தைச் சிறப்பிக்கச் செய்வதுடன் ஸகல ஜனங்களுக்கும் சிவபக்தராக மாறி விடும்படிச் செய்து வருகையில் அதைக்கண்டு கடுஞ்சினங் கொண்ட சில ஜைனர்கள் மித்ராச்வனென்னும் அச்ஜைன குருவின் அருகில் பணிந்து ஓ! குருநாதா! உம்மிடமிருந்து சிவதத்துவப் பொருளை அறிந்துகொண்ட சிவதாஸ னென்னும் உமது சிஷ்ன் இப்பொழுது அங்கங்கு நாடு களில் சென்று உமது நன் மதத்துக்கு விரோதக் கொள்கை களை விவரித்து நமது சங்காராம குருக்களையும் ஜிந தேவனை யும் அழித்திடுவதுபோல் உபந்யாஸம் செய்து வருகிறார். இனி இவ்வுலகில் நமது மதத்தை ஆதரிப்பார் யாருமில்லை எனவே சொல்லும் வண்ணம் உமது சிஷ்ன் செய்துவரும் முயற்சியை நீர் தகையாவிடில் நமது ஜன்மமே வீணாகும் என்றிவ்விதமாய் பற்பல கலகப் பேச்சுக்களினால் அக் குருவின் மனதைக் குழப்பிவிட்டனர். இவ்வாறு ஜைனர் களால் மாறுபடுத்தப்பட்ட மனமுடைய மித்ராச்வ னென்னும் அக்குருவும் கருகிய முகமுடையவனாய்க் கொண்டு தமது சிஷர் மூலமாய் வந்த சிவதாஸரைத் தனதருகில் வரச் செய்து ஓ சிட! நீ எனது கட்டளையைத் தாண்டியவனாய்ப் புலப்படுகிறாய். நீ இனி இவ்வாறு செய்து வருவாயாகில் எனது சாபத்துக்கும் பாத்திரனாகக் கடவாய் என்று சிவந்த கண்களுடன் புண்பளிக்கும் மொழிகளைப் பகன்றான்.

குருவினது பாதத்தருகில் பக்தியினால் வணங்கி நின்ற அச்சிவதாஸனும் இவ்வித மொழிகளைக் கேட்டு ஆச்சரியம் அடைந்து குருநாத! நான் உமது கட்டளைக்கு விரோதமாய் எவ்விதக் காரியங்களிலும் முயலவில்லையே; என் மீது

உண்டாகும் கோபத்தைத் தணித்து அருள்புரிவீர். உமது கருணையினால் நான் அறிந்துகொண்ட சிவதத்துவச் சிறப்புக்களை உலகில் பரவச்செய்யத் துணிந்தேன். உம் மதத்தின்மீது நான் பழி கூறவில்லையே. எனது ஸத்திய மதத்தை நான் நிலைநாட்டுவதே தர்மக்கொடிக்கு உறுதுணையாகும். தேவர்கள் மகிழ்வார்கள். நான் செய்துவரும் இத்தகைய காரியங்கள் நீதிக்கு விரோதமாகுமா என்று நவின்றார். அதற்கு எவ்வித மறுமொழியும் கூறுவதற்குச் சக்தியற்றவனாகிய அச்ஜைன குருவானவர் மிகவும் வெகுண்டெழுந்து ஓ சிவதாஸ! நீ என்னிடம் கற்றுணர்ந்த கல்விகள் யாவும் இக்கணமே வெளிவரும்படி உன் நாவிநிந்து நீ கக்குவிக்கக் கடவாய் இல்லாவிடில் நீ எனது சாபத்துக்கும் பாத்திரனாகக் கடவாய் என்றுரைத்தான். அதைக்கேட்ட சிவதாஸனும் மிகவும் மனம் வாடுதலையடைந்து ஹா! ஹா! இஃது என்ன அநியாய காரியம்! பரமேச! சிவஸ்வரூபியே! கைலாசபதியே! வேதாந்தப் பொருளே! நான் புன்மார்ந்த மனதினால் பக்தியுடன் கற்றறிந்த கல்வி யாவையும் வெளியில் கக்கும்படி இக்குரு மொழிகிறாரே; நான் என் செய்வேன். குருவின் மொழிக்கு துரோகம் செய்யவும் என் மனம் துணியவில்லையே; கல்வியைக் கக்குவேனாகில் ஞானமற்றவனாயுள்ள எனது சன்மமும் வீணாகுமே என்செய்வேன் பசுபதியே! மேரு வில்லியே! அற்புதக்கூத்த ஆனந்தச் சுடரே! இத்தருணத்தில் எனது துயரை நீக்கி என்னை ஆண்டருள்வாய் என வேண்டித் துதிசெய்து நின்றான்.

அவ்வண்ணமாய் சிவதாஸன் என்னும் அந்தணனேத் தமர் ஈசனை வேண்டுகையில் அவர்மீது கருணைசெய்து அக்குருவை அழிக்கக் கருதிய தியாகராஜன் ஓர் ஆகாயவாணியை ஏவி ஓ தொண்டனே! நான் உனக்கு அபயம் அளித்துவிட்டேன். நீ பயப்பட வேண்டாம். அக்குருவை அழிப்பதற்காக நீ இப்பொழுது கல்வியைக் கக்குவா

யாகிலும் புண்யபுரியில் விளங்கும் எனது ஸன்னிதானத்தை நீ அடைந்தால் அக்கல்விகள் யாவும் மீளவும் உனது நாவில் விளங்கும் என்று தைரியமொழி அறிவித்தார் தியாகேசன் ஏவிய அசரீரி வாக்கு என்னும் தெய்வச் சொல்லைக் கேட்ட அந்தச் சிவதாஸனும் அப்பொழுது ஒரு ஆசமனஞ்செய்து பிராணாயாமத்தையும் நிறைவேற்றித் தியாகராஜனது பாத மலரை மனதில் தியானித்துக்கொண்டே தான் கற்ற கல்வி வெளியாகுக என்று உரைத்துக்கொண்டே தனது பரிசுத்த முள்ள வாயைத் திறந்தார். அத்தருணத்தில் ஈசனருளால் அவ்வேதியரது வாயிலிருந்து அக்னி ரூபமாய் வெளிநீங்கிய கல்வியானது அவ்வந்தணரை வலஞ்செய்துவிட்டு அச் ஜைன குருவின் அருகையடைந்து அவனது சரீரத்தில் கொதிப்பை உண்டுபண்ணத் தொடங்கியது. அவ்வதிச யத்தைப் பார்த்துக்கொண்டிருந்த அக்குருவின் சிஷ்யர் யாவரும் அவ்வேதியரது ஸத்திய தன்மையையும் ஞானச் சிறப்பையும் ஒப்பற்ற சிவபக்தியையும் கண்டு அவரைப் புகழத் தொடங்குகையில் தேக தாபத்தை அடைந்த மித்திராச்வன் அத்தருணத்தில் ஹா! ஹா! என்று அலறலானான்.

அத்தருணத்தில் அச்சிவதாஸன் ஆகாயவாணி உரைத்தது போலவே திருவாரூர் நகரை நாடி கமலையில் நீராடித் தியாகேசனைத் தரிசித்தார். அப்பொழுது ஈச னருளால் அவரது நாவில் மீளவும் கலைமகளின் நர்த்தன ஒலிபோன்ற நற்சொற்களின் ஒலியுண்டாகவே அம்மொழி மாலையினால் அவ்வந்தணோத்தமர் ஈசனைத் துதிக்கலானார். அதைக் கேள்வியுற்ற ஜைன குருவும் திருவாரூர் திருப் பதியை அடைந்து கமலையில் நீராடி ஈசனைப் பணிந்து துதித்தான். மதி கலக்க முடையவனாய் அச்சிவதாஸ அந்தணோத்தமர் விஷயத்தில் செய்த குற்றத்தை மன்னித்துக் காத்தருள்வீரென்று ஈசனை வேண்டி நிற்கை யில் அவனது வேண்டுகோளின்படியே ஈசனருளானது

குருவின் மீதும் பாயவே அதனால் அவன் தேகபாதத்தை ஒழித்துக் சுகமடைந்து அதுமுதல் தியாகராஜ பாதத்தில் ஒப்பற்ற பக்தியை வைத்துத் தனது மதத்தையுமிழந்து சிறப்புடன் சிவபக்தராகவே விளங்கலானார்.

---

## 354. கனவில் பாடிய லீலை.

ஒரு சமயம் மாயூர புரியில் வேத்திரவதி என்னும் ருத்திரகன்னிகை ஒருத்தி இருந்தாள். அவள் தனது தாயுடன் தினந்தோறும் காலையிலும், மாலையிலும் பரமேசுவரனது தேவாலயத்தையடைந்து ஈசனது சன்னிதானத்துக்கு எதிரில் கோசாணத்தினால் மெழுகிக் கோலம் போட்டும் மாலைகளினால் மண்டபங்களை யலங்கரித்தும், கற்பூரத்தட்டு அலங்கரித்தும் ஈசனது தீபாராதனையில் பதுமத்தை உபயோகித்தும் அழகிய மாலை நேரங்களில் ஈசனது மனம் குளிரும்படி பக்தியினால் பாடல்களைக் கானம் செய்தும் ஈசனது திருக்கோயிலை வலஞ்செய்தும், பிராம்மணோத்தமர்களைப் பணிந்தும், சிவபக்தரிடத்தில் தொண்டு செய்தும் காலத்தைக் கழித்து வரலானாள். அக்கன்னிகை இவ்விதமாய் ஈசனுக்குச் செய்து வரும் நற்செய்கைகளினால் ஈசனருளால் சிறப்பெய்தி வளர்ந்து வரும் வேத்திரவதியானவள் சங்கீதப் பயிற்சியை அடைந்து விளங்கலானாள். பலவித ராகங்களையும், தானங்களையும், இசையையும் குருவினிடமிருந்து முறைப்படி கற்றுணர்ந்த வேத்திரவதி என்னும் அம்மாது ஒரு நாள் கான விசேஷத்தினால் ஈசனது புகழை பாடுகையில் அவரது இனிய ராகச் சிறப்பைக்கேட்டு நாரத மஹரிஷியும், கந்தர்வரும், நாககன்னிகையரும் வியப்படைந்தார்கள்.

இவ்விதமாய் ஞானிகளால் புகழப்பட்டு விளங்கும் அக்கன்னிகையின் அருகில் ஒரு நாள் ஒரு முனிவர் வந்தார். அர்க்கியம், பாத்தியம் முதலிய உபசாரங்களினால் முறைப்படி பூசிக்கப்பெற்ற அம்முனிவர் அக்கன்னிகைக்கு ஆசி

கூறிய பிறகு உலகிலுள்ள கல்வி கேள்விகளுள் சங்கீதமே சிறந்ததென்றும் அவ்வித சங்கீதத்தினால் பரமேசனும் உமாதேவியாரும் களிப்பெய்துவார்கள் என்னும் பூர்வ கதையையும் கூறிக் கருணைக்கடலாகிய பரமேசனிடமிருந்து தெய்வலோக சங்கீதத்தையும் அடையப்போகிறாய் என்று பூர்வஞானத்தினால் அறிந்துரைத்துச் சென்றார். அம் முனிவர் திடீரென்று தனது வீட்டில் தோற்றியதையும், அவர் மொழிந்த விஷயத்தையும் அடிக்கடி நினைத்துப் பரமானந்த மெய்திய வேத்திரவதியானவள் பூர்வ சன்ம புண்ணியச் சிறப்பினால் தான் அடையப்போகும் பரமேசனது கடாக்ஷத்தைப் பெறுவதற்காக அல்லும் பகலும் ஈசனது நற்புகழையே கானம் செய்து வரலானாள். அவ்வீசனது பிம்பத்தைச் சித்திரத்திலெழுதி வில்வ பத்திரங்களினால் பூசிக்கலானாள். பரமேசனது பாதமலரில் தனது மனம் நிலைபெற்று நிற்கும்படியும், ஐம்புலங்களின் ஓட்டத்தையடக்கி ஈசனைக்குறித்து வேண்டினாள். பரமேச! கருணைக்கடலே! என்மீது அருள்புரிவாய். முன்பு கைலாஸ மலையில் உமது ஆனந்தச் சபையில் நந்திதேவர், நாரதர், கின்னரர், கிம்புருஷர் முதலானோர் வீற்றிருக்கையில் உமது முகார விந்தத்திலிருந்து வெளியில் பரவிய எத்தகைய ஸங்கீத ரஸத்தை முதலில் நந்திதேவனும் பிறகு நாரதாதிகளும் பெற்று உலகில் பரவச்செய்தார்களோ: அத்தகைய ஸங்கீதத்தை எனக்கு அருள் புரிவீர். எனது கிருஹத்தை அடைந்த முனீந்திரர் முன்பு கூறியதுபோலவே அருள் புரிவீர். நான் இவ்வுலக வாழ்க்கையை விட்டுத் தெய்வீக சங்கீதத்தினால் உமது மனதைக் களிக்கச் செய்வதையும், உமது நற்புகழைப் பாடுவதையுமே விரதமாகக் கொண்டேன். நான் உணவையும், உறக்கத்தையும் விலக்கி உமது பாதமலரையே சிந்தித்திருப்பது ஸத்தியமாகில் என்பால் அருள்புரிவீர் என்று அக்கன்னிகை மூன்றுமாத காலம் கழியும் வரையில் ஈசனது நற்புகழைப் பஜனை செய்து வரலானாள்.

வேத்திரவதீ என்னும் அவ்விலைமாது இவ்வண்ணம் நெடுநாளாய்ப் பரமேசனது திவ்ய குணங்களை இனிய கானத்தினுல் பாடிப் புகழ்ந்து நோன்புநூற்று வருகையில் கானப் பிரியனும் வேதக் கொழுந்தாயும் விளங்கும் புண்ணியபுரிநாதன் ஒருநாள் அவளது மனத்தூய்மைக் கண்டு களிப்பெய்தியவராய் அவளது விருப்பத்தை நிறை வேற்றக் கருதியவராய் அன்றிரவில் அவளுக்கு நெடிய உறக்கத்தையுண்டுபண்ணி அவளது மனம் களிக்குமாறு அவளது கனவில் தனது பரஞ்ஜோதி ஸ்வரூபத்துடன் தோன்றித் தனது ஆனந்த நர்த்தனத்துக்குத் துணையாகிய இனிய தேவகானத்தை அவளது செவிகள் பற்றுமாறு பாடி மறைந்தார். அவ்வாறு பரமேசன் பாடிய திவ்ய கீதத்தைக் கேட்டு களிப்பெய்திய வேத்திரவதீ என்னும் அம்மாது கண்விழிப்படைந்து இன்றே நான் பரமேசனது திவ்ய ஸ்வரூபத்தைக் கண்டுகொண்டேன். இப்பரமேசனே கருணாநிதி. பக்தர்கள் காவலன். எனது விருப்பம் போலவே மனதில் தெய்வகீதம் நிலைபெறுமாறு கைலாஸபதி பாடி மறைந்தார். தியாகராஜனே எனது கனவில் தோன்றினார்போலும் என்றுரைத்துக்கொண்டே சென்னி யில் கைகூப்பியவளாய்க் காணிக்கைப் பொருளையும் வேதியர்களையும் முன்னிட்டுக்கொண்டு மறுநாட் காலையில் திருவாரூர் நகரையடைந்து தியாகராஜனைப் பணிந்து துதி செய்து அவ்வீசன் தனது கனவில் பாடியவாறே அம்மாது பாடுகையில் தியாகராஜன் ஓர் ஆகாயவாணியை ஏவி ஓ வேத்திரவதியே! ஒரு தடவை யுரைத்ததைக் கற்கவல்லவள் நீயே! நீ ஈசனிடத்தில் வைத்திருக்கும் பக்தியின் சிறப்பைக் கண்டு களித்த பரமேசன் நேற்றிரவில் உனது கனவில் தோன்றித் திவ்ய கானத்தைப் பாடியதுபோலவே நீயும் இப்போது அக்கானத்தை முறைப்படி பாடிய படியால் உனது கானத்தைக் கேட்டு உளமகிழ்வடைந்த பரமேசன் உனது விருப்பங்கள் யாவும் நிறைவேறும் வண்ணம் அருள் புரிந்தார் என்றுரைத்ததைக் கேட்டவரெல்லோரும்

ஆனந்தமடைந்து அம்மாதின் பக்தியைக் கண்டு வியப் படைந்தார்கள். அதுமுதல் அவ்வேத்திரவதி என்னும் அக்கன்னிகையும் பக்தி மார்க்கத்திலேயே அமர்ந்திருந்து ஐக்கியச் செல்வத்தையடைந்தாள்.

### 355. மனதைச் சோதிக்க மறைந்திருந்த லீலை.

முன்பு ஒரு சமயத்தில் ஒருநாளிரவில் கமலநாயகி தேவியாரும், தியாகராஜனும் விருஷபத்தின்மீது ஏறி ஆகாயத்தில் சஞ்சரித்துக்கொண்டு வருகையில் வைத்திய நாதபுரியில் ஒரு வேதியர் கிருஹத்தில் அவரும் அவரது மனைவியும் தர்க்கித்துக் கொண்டிருப்பதைப் பரமேசன் கேட்டார் வேதியர் தன் மனைவியைப் பார்த்து உன் மனம் ஏன் அற்பசாரத்தில் விருப்பத்தையடைகிறது. இவ்வுலகில் தோற்றும் சுகங்கள் யாவும் அழியும் சுகங்களேயாகும். இவ்வுலகச் செல்வத்தை நாம் அடைவோமாகில் அச் செல்வம் நமது நற்கதியையழிக்கவும் முயலும். பரமானந்த பொருளாகிய கைலாஸபதி என்னும் நற்செல்வத்தை நாம் அடைவதற்காக முயற்சி செய்து வருகையில் இவ்வற்ப செல்வத்தையும் சுகத்தையும் நீ விரும்பாதே. ஏழை என்று நம்மீது பிறர் சாற்றும் இகழ்ச்சியை நாம் வரவேற்போம். நீ உனது மனதைப் பரமேசனது பாதமலரில் நிலைபெறச் செய்து மோஹத்தை நீக்கி நன்மையை யடைவாய் என்றுரைக்கலானார்.

அவ்வார்த்தையைக் கேட்ட அவள் கேளிர் நாதா! வெகுகாலமாக உமது பாதமலரில் பக்தியைச் செலுத்தியும், பரமேசனது பாதாரவிந்தத்தை மனதில் தியானித்துக் கொண்டும் உமது கட்டளையை நிறைவேற்றிவந்த எனக்கு இவ்வுலகச் செல்வத்தின்மீது விருப்பமுண்டாகவேயில்லை. ஆகிலும் உமது மக்களாகிய இச்சிறுவர் பதினொருவரும் பசியினால் தினந்தோறும் வாடுகிறார்களே இவர்களுக்கு

ஆடையும் இல்லையே; இந்தச் சிசுக்களைக் காப்பாற்றும் பொருட்டே நான் செல்வத்தை விரும்புகிறேன். நமது வீட்டில் இன்று சமையல் செய்ய அரிசியேயில்லையே; மற்றுமுள்ள விஞ்சனக் கூறுகளும் ஆகிவிட்டனவே; இவ் விதமாய் வெகுநாளாய் உணவுப்பொருள் குறைவே காலப் பசியினால் வாடியும் மூர்ச்சையை யடையும் இச்சிசுக்களின் க்ஷேமத்தை நீர் சிந்திக்கலாகாதா இச்சிசுக்கள் ஆரோக் கியத்துடன் வளர்ந்தோங்குமாறு நீர் உமது தூய்மை மனத்தினால் ஈசனைத் துதி செய்யலாகாதா. நீர் ஈசனது ஸன்னிதானத்தையடைந்து நமது ஏழ்மை தசைக்கு அவ் வீசனையே ஸாக்ஷியாக நிறுத்தச் செய்து பக்தியினால் ஈசனை வேண்டுவீராகில் தொண்டர்கள் ரக்ஷகனாகிய சங்கரனும் உமாதேவியாரும் நமது சிசுக்களைக் காப்பாற்ற முன் நிற்க மாட்டார்களா என்றுரைத்தாள்.

இவ்விதமாய் அவ்வைத்தியநாத புரியிலுள்ள வேதியரும் அவரது மனைவியும் தமது வறுமையைப் பற்றிப் பலவாறு பேசிக்கொண்டிருந்ததைச் செவியினால் பற்றிய பரமேசனும், பார்வதியும் அவர்களின்மீது தமது கருணையைக் காட்ட விருப்பங்கொண்டவர்களாய்ச் சிறந்த ஒளிவீசும் ஒரு மாணிக்கத்தைத் தமது சரீரத்திலிருந்து அவ்வந்தணமாதின் முன்னிலையில் விழுமாறு செய்து அவர் களது மனதைச் சோதிக்க மறைந்திருந்தார்கள். வறுமை யின் காரணமாகத் தூக்கத்தையிழந்த அம்மாது இரவின் நடுவில் தனது கணவனுடன் இவ்வாறு பேசிக்கொண்டிருக் கையில் தனது முன் பாகத்தில் ஆகாயத்திலிருந்து திடீ ரென்று வீழ்ந்ததாயும் சிறந்த ஒளி வீசுகின்றதாயுமுள்ள அம்மாணிக்கத்தைக் கண்டு மிகவும் சந்தோஷத்தை அடைந்து நமது வறுமை நீங்குமாறு இஃது ஈசனளித்ததே யாகும். ஆகையால் நாம் இதைத் தனகரிடம் கொடுத்து அவர்கள் கொடுக்கும் திரவியத்தினால் நமது சிசுக்களைப் பசி ஆற ஊட்டுவோம். இவ்விஷயத்துக்கு நீர் உத்தரவு அளிப்

பீரா! என்றுரைத்தாள். அப்பொழுது அவ்வந்தணர் ஹா! ஹா! பரமேச கருணாநிதியே! இத்தருணத்தில் இவ்வணியைக் கொடுத்த நீர் அஞ்ஞானியாயும் பாவியாயும் உள்ள எனது கண்களுக்குப் புலப்படலாகாதா எமது பாவங்கள் போக உமது திவ்ய தர்சனத்தை யளிக்கலாகாதா. தேவர்களும், முனிவர்களும் ஞானியர்களும், யோகிகளும் காண்டற்கரியதாகிய உமது திருவடியை காணுமாறு அருள்புரிவது எந்நாளோ பசுபதியே சுந்தரமௌளியே! உரகபூஷண! லோக நாயக என்று துதி செய்யத் தொடங்கினர்.

## 356. விரலால் பாலூட்டிய லீலை.

முன்பு ஒரு காலத்தில் விமல சோழனென்னும் சோழ சக்கரவர்த்தியானவன் ஒரு நாள் காலை நேரத்தில் முரச வாத்தியங்கள் முழங்குகையில் வீரபடர்கள் கொடித்துணி வீசுகையில், வேட்டையாளிகள் புடை சூழ்ந்து நிற்கையில் தனது ஒப்பற்றவாளைக் கையிலேந்திக்கொண்டு அருகிலுள்ள காட்டில் புகுந்து வேட்டையாடச் சென்றான். பட்டயக்காரர், வலைக்காரர் அம்புக்காரர், குதிரைக்காரர் என்னும் பற்பல வீரர்களுடன் சமீபத்திலுள்ள வனத்தில் புகுந்த அச்சோழ பூபாலன் காட்டு எருமைகளை ஓட்டியும், கரடி புலிகளைச் சினங்கொள்ளச் செய்தும் துஷ்ட மிருகங்களை வதைத்துக்கொண்டும் வனத்தில் உலாவி வருகையில் அவ்வரசனது வில்லாளி ஒருவன் ஒரு புதரில் மறைந்திருந்த ஒரு பெண்மானைத் தன் அம்பினால் எய்தான். இரண்டு மான் குட்டிகள் பாலூட்டிக்கொண்டிருக்கும் தருணத்தில் அவ்வீரன் அப்பெண்மானை எய்தமையால் தாயையிழந்து கதியற்ற அக்குழவிகளிரண்டும் தனது தாயின் உயிர்நீங்கிய சரீரத்தை மூக்கினால் அடிக்கடி முகர்ந்தும், நாவினால் நக்கியும், சுற்றிச்சுற்றி நடந்தும் கண்களிலிருந்து நீரைச் சொரிந்தும், பசியினால் வாடி அழுதுகொண்டிருப்பதைக்

கண்ட பூபாலன் மிகவும் துக்கத்தையடைந்தவனாய் ஹா! ஹா! பாபகாரியமாக முடிந்துவிட்டதே வேட்டையாடி மிருகங்களை மாய்ப்பது க்ஷத்திரியர்களுக்குக் குலதர்ம மாயினும் முலைப்பாலளிக்கும் தாயையிழந்த இம்மான் குட்டிகளின் துக்க தசையைக்கண்டு என் மனம் பிளவு படுகிறதே; தியாகராஜ! கருணாநிதியே! இச்சிறு மான்கள் இவ்விளமைப் பருவத்தில் தாயின் பாலின்றி எவ்வண்ணம் வளரும்? பசுபதியே! லோகரக்ஷக! நீர் இவ்வுலகுக்கு முதல் நாதனாயின் இப்பொழுது இம்மான் குழவிகள் இரண்டும் உயிர் பிழைக்குமாறு அருள் புரியவேண்டும் என்று வில்லைத்துரந்து அஞ்சலிசெய்த கையுடன் திசை நோக்கி வணங்குகையில் அவ்வரசனது வேண்டுகோளையும் அம்மான் குட்டிகளின் கதியற்ற நிலைமையையும் அறிந்து கொண்ட தியாக பரமேசுவரன் அங்கு ஒரு வில்லாளிபோல் உருவமெடுத்துக்கொண்டு ஓடிவந்து அம்மான் குட்டிகளின் அருகையடைந்து அன்புடன் அவைகளைத் தழுவி யணைத்துத் தட்டிய பிறகு தனது வலதுகை விரலை ஒரு மானின் வாயிலும், இடது கைவிரலை மற்றொரு மானின் வாயிலும் நுழைத்துத் தனது திவ்ய சக்தியினால் அவ்விரல் களிலிருந்து அமிர்தத்துக்கொப்பாகிய பால் பெருக்கு உண்டாகும்படி செய்தார்.

தியாகராஜன் அவ்வாறு சங்கற்பம் செய்து கொண்டதுபோலவே அவரது விரல்களிலிருந்து பால் பெருக்கு உண்டாகவே பசியினாலும் அன்பினாலும் அடிக்கடி முட்டி முட்டி அம்மான்களிரண்டும் பாலுண்ணத் தொடங்கின. அவ்வதிசயத்தை விமல சோழ மகாராஜனும் அருகிலுள்ள அவனது வீரரும் மிகவும் வியப்படைந்தார்கள் ஆனந்தக்கண்ணீர் சொரிந்தனர். கைவிரலிலிருந்து இனிய பால் தாரையைப் பெருக்கி இம்மான் குட்டிகளுக்கு உணவு அளிக்கும் இப்புருஷன் கந்தர்வனோ; வானவனோ! தியாகேசனோ என்று நினைத்திருக்கையில் மான்களின்

பசியை ஆற்றிய பரமேசனுகிய விலை அவைகளை உற்று நோக்கியபிறகு மறையலானுர். அப்புருஷன் அவ்வாறு மறையும் தருணத்தில் அவரது இரு விரல்களிலிருந்து க்ஷீரதாரை பெருகலாயின. அதையும் கண்டுகளித்த பூபதி முதலியவர்கள் இவ்வாறு இங்குத் தோன்றிய புருஷன் புவனங்களுக்கெல்லாம் ஏக நாயகனுகிய தியாக ராஜனுகவே இருக்கவேண்டுமென்று நிச்சயம் செய்தும் வேட்டையில் ஆசையை இழந்தும் இவ்வற்புதத் தோற்றத்தைப் புண்ணியபுரி வாஸிகளுக்கு அறிவிக்க விருப்பம் கொண்டு திரும்புகையில் அவ்விரண்டு மான்குட்டிகளும் அப்பூபாலனது வழியைப் பின்பற்றி ஓடிவந்து தியாக ராஜனது பொற்கோயிலின் வாயிலில் நின்றன. வேட்டையிலிருந்து திரும்பிய சோழனையும் அம்மான் சிசுக்களையும் கண்ட நகரவாஸிகள் யாவரும் அவ்வரசனிடமிருந்து பரமேசன் மான்குட்டிகளுக்கு விரலால் பாலூட்டிய லீலையின் சிறப்பைக் கேட்டு மகிழ்வெய்தினுர்கள்.

## 357. பிரம்மசாரிக்குத் திரவியமளித்த லீலே.

முன்பு ஒரு சமயத்தில் சம்பு புரியில் சதுர் வேதங்களையும் பயின்று சிறந்த சிவபக்தி வாய்ந்தவனுமாகிய சீகண்டன் என்னும் பிராமணவடுகன் ஒருவன் இருந்தான். வேதங்களையும், அவைகளின் அங்கங்களையும் கற்றுணர்ந்த பிறகு ஆச்ரம குருவினுல் விடைகொடுக்கப்பெற்ற சீகண்டன் என்னும் பிராம்மண பிரம்மசாரியானவன் தனது ஞானச் சிறப்பினுல் இல்லறத்தின் மேன்மையை யறிந்து கொண்டவனுதலால் அவன் நற்குலத்திலுதித்ததொரு கன்னிகையை மணம் புரிய விருப்பங்கொண்டவராய்க் கிராமங்கள் தோறும் சென்று அவ்வித கன்னியின் இருப்பிடத்தைத் தேடி வரலானுன். அவ்வாறு ஆவலுடன் கன்னிகையைத் தேடிவரும் பிரம்மசாரியானவன்

புரியை யடையும்பொழுது பார்க்கவ கோத்திரத்தில் ஜனித்து அங்கு விளங்கும் திரிநயன பட்டாலகன் என்னும் வேதியர் ஒருவர் அப்பிரமசாரியின் வரவையும், அவனது விருப்பத்தையும், அவனது வட்சப் பிரசஸ்தியையும் முன்னமே யறிந்தவராயிருந்தபோதிலும் சிவபக்தி விஷயத்தில் அப்பிரமசாரியின் மனத் தூய்மையைப் பரிக்ஷிக்கக் கருதியவராய் அவன் எதிர் சென்று அர்க்கியம் பாத்தியம் முதலியவைகளினால் உபசாரணை செய்து தனதில்லத்திற்கு அழைத்துச் சென்று குசலம் விசாரித்து அவனது ஞானச் சிறப்பைக் கண்டு களிப்பெய்தினர்.

இவ்வாறு அவ்வேதியரது கிருஹத்தில் அந்தப் பிரம்மசாரிக்கு மூன்று தினங்கள் கழிந்த பிறகு அப்பிரம்மசாரியானவன் தான் கன்னிகையை நெடுநாளாய்த் தேடிவரும் விருப்பத்தை யவருக்கறிவித்துச் சுப லக்ஷணங்களுடன் கூடிய அவனது மகளைத் தனக்கு மணம் செய்து கொடுக்க வேண்டுமென்று கேட்டான். அவ்வார்த்தையைக் கேட்ட அவ்வேதியர் தனது விருப்பத்தை யவனுக்கறிவித்தார். கன்னியருக்குரிய சுப லக்ஷணங்கள் முற்றும் பெற்று விளங்கும் தனது கன்னிகையைக் கொடுப்பதற்கு முன்னமே அக்கன்னிகையின் நிறையுள்ள கனக ராசியை யளிக்கும் பிரம்மசாரிக்கே தனது மகளை மணம் செய்து கொடுப்பதாய்த் தான் விரதம் பூண்டிருப்பதாகக் கூறினர். அவ்வேதியருரையைக் கேட்ட பிரம்மசாரியானவன் முதலில் மிகவும் வியப்படைந்தவனாய்ச் சற்று நேரம் திகைத்து நின்றான். பிறகு அக்கன்னிகையின் குணங்களைக் கண்டும், அவளது தந்தையின் பந்தயக் கொடுமையைக் கேட்டும் பெருமூச்சு விட்டான் எவ்வகையிலும் தான் அக்கன்னிகையின் நிறையுள்ள சுவர்ணக்கட்டியை அடையலாமென்னும் நிச்சயம் கொண்டான். ஆறுமாத காலம் செல்வதற்குள் அவ்வாறே சுவர்ணக் கட்டியைக் கொண்டு வருவதாயும் வாக்களித்துவிட்டு அவ்வேதியரது

ஆசியையும் பெற்றுக்கொண்டு முக மலர்ச்சியுடன் செல்லலானுன்.

கன்னிகைக்காகக் கனகக் கட்டியைச் சம்பாதிக்கக் கங்கண மணிந்துகொண்ட அப்பிரமசாரியானவர் அது முதல் ஒவ்வொரு புண்ணிய க்ஷேத்திரங்களிலும் ஸ்நாடி க்ஷேத்திர ஜபங்களை நிறைவேற்றி அங்கு விளங்கும் ஈச மூர்த்திகளைத் தர்சித்துத் துதி செய்துகொண்டே புண்ணிய புரியை யடையலானுன். நாரதர், காச்யபர், வஸிஷ்டர், அகஸ்தியர், துர்வாஸர் முதலான மகரிஷிகளாலும், இந்திராதி தேவர்களாலும், கணக்கற்ற வேதியர்களாலும் புகழப்பட்டு அப்புண்ணியபுரியில் விளங்கும் கமலாலய தீர்த்தத்தில் ஸ்நாடித் தியாகராஜனது ஸன்னிதானத்தை அடைந்து வலஞ் செய்து பணிந்து தொண்டர்களின் விருப்பத்தை நிறைவேற்றும் கோவே! நான் உமது பாத கமலத்தையே துணையாக நம்பியது உண்மையாயின் நான் இல்லறத்தில் அமர்ந்து வாழும் வண்ணம் என்மீது அருள் சுரப்பாய் தியாகேச! வேதியருள் சிறந்த ஆப்பட்டாலகரது குமாரியின் நிறையுள்ள கனகராசியை எனக்களிப்பீரென்று வணங்கி நின்றுன்.

இவ்வண்ணம் அப்பிரமசாரியானவன் தெய்வ நாயகனுகிய தியாகராஜனது ஸன்னிதானத்தில் துதி செய்து நிற்கையில் அப்பிரமசாரியின் பரிசுத்தமானப் பான்மையையும் ஞானச் சிறப்பையும், தனது பாதமலரில் வைத்திருக்கும் ஒப்பற்ற பக்தியையும் கண்டு களிப்பெய்திய பரமேசன் அவனது மனோரதத்தை நிறைவேற்றிவைக்கக் கருதியவராய் ஒரு ஆகாயவாணியை ஏவி ஓ வேத சிஷ்ய! நீ எந்தக்கன்னிகையை மணக்க விருப்பங்கொண்டிருக்கிருயோ அக்கன்னிகையின் தந்தை இவ்வீசனது ஸன்னிதானத்துக்கு அழைத்து வருவாயாகில் அத்தருணத்தில் உனது மனோரதம் நிறைவேறுமாறு பரமேசன் கனகவர்ஷத்தைச் செய்வார் என்றறிவித்தார். அவ்வுரையைக் கேட்டு மனக்களிப்புடன்

ஆதிபுரிக்குத் திரும்பிய பிரமசாரியானவன் ஒரு பக்ஷ காலம் செல்வதற்குள் அத்திரி நயன பட்டாலக வேதியரையும் அவரது சுற்றத்தாருள் சிலரையும் அழைத்துக்கொண்டு புண்ணியபுரியை யடைந்து கமலையில் நீராடிக் கால ஜபங் களை முடித்துவிட்டு ஆஷாட பௌர்ணமி தினத்தின் மாலை நேரத்தில் தியாகராஜனது ஸன்னிதானத்தை யடைந்து துதி செய்து நின்றான். அத்தருணத்தில் தயாநிதியாகிய தியாகராஜன் தனது திவ்ய சக்தியினால் சங்கநிதி தேவதை களை ஏவி அளவற்ற கனகராசியை வர்ஷிக்கும்படி செய் தார். தியாகேசனது ஸன்னிதானத்தில் வர்ஷதாரைபோல் இடைவெளியின்றி உண்டாகிய கனக வர்ஷத்தைக் கண்ட பட்டாலகன், சோழன், பிரம்மசாரி முதலியவர் யாவரும் ஆனந்தமடைந்து திகைத்து நின்றார்கள்.

அத்தருணத்தில் அம்முக்கண்ணபட்டாலகன் தனது கன்னிகையை அப்பிரம்மசாரிக்கு அளிப்பதற்கு முன்னம் கனகராசியைக் காணும்படி எல்லோருக்கும் அறிவித்து அவ்வேதியனது பக்தியின் சிறப்பையும் ஞானச் சிறப்பை யும் கண்டு ஆச்சரியமடைந்து அக்கனகராசியைச் சோழ னிடமே சேர்த்துவிட்டுத் தனது கன்னிகையை அத் திருவாரூர் நகரிலேயே அவருக்கு விவாஹம் செய்து கொடுத்து வாழும்படி செய்தார். அதுமுதல் அவ்வேதி யரும் அச்சீகண்ட வேதியரும், அக்கனக வர்ஷதாரையைக் கண்டிருந்த புண்ணிய சிலர்களும் தியாகராஜனது அற்புத சக்தியைக்கண்டு ஆனந்தமடைந்து அவரது பாத பக்தியையே உறுதுணையாகப் பற்றிச் சகல பாபங்களையும் நீக்கிப் புண்ணியத்திரளுடன் வாழலானார்கள்.

## 358. சுத்தி வீழாமல் காத்த லீலை.

ஒரு சமயத்தில் முசுகுந்தபுரி என்னும் திருவாரூர்ல் காசிப கோத்திரத்தில் பிறந்த சங்கரதீக்ஷிதர் என்னும் வேதியர் ஒருவர் சிறந்த சிவபக்தியுடன் வாழுங்நாளில் சிவயோகீந்திரரொருவர் அவ்வேதியரது கிரகத்தையணுகி வருகையில் அவரை எதிர் கொண்டெழுந்து முறைப்படி பூசித்த சங்கர தீக்ஷிதர் அவரது ஆசியைப் பெற்றவுடனே பரமேசனது தொண்டின் சிறப்பைப் பற்றி வினவுகையில் அச்சிவயோகியானவர் ஈசனுக்குச் செய்ய வேண்டிய பற்பல தொண்டுகளின் பயனையும், அவைகளைச் செய்ய வேண்டிய முறையையும், சிவ தீக்ஷையின் சிறப்பையும் மேன்மையுடன் மொழியலானார். அதைக்கேட்டுப் பரமானந்தமடைந்த தீக்ஷிதரும் அச்சிவயோகிக்கு விருந்தளித்து அவரைப் பூஜித்து அனுப்பிய பிறகு தான் பரமேசனிடத்தில் வைத்திருக்கும் பக்தியை மிகவும் விசேஷமாய் வளர்த்து வரலானார்.

அதனால் அவருக்கு நாடோறும் ஈசனுக்குப் பற்பல தொண்டு செய்வதிலேயே மனம் சென்றது. உரகாபரணனென்றும், உலகநாதன் என்றும், கங்காதரன் என்றும், புகழப்பட்டு விளங்கும் தியாகராஜனுக்குத் தொண்டு செய்வதிலேயே களிப்படைந்த வேதியர் ஒவ்வொரு கிராமங்களிலும், நகரங்களிலும், தேசங்களிலும் சென்று பரமேசனது கருணையின் சிறப்பைப் பலவாறு அங்குள்ளவர்களுக்கு அறிவித்து அவர்களுக்கு ஈசுவர பக்தியைப் புகட்டி அவர்களிடமிருந்த நற்பொருளைப் பெற்றுக் கொண்டு புண்ணிய புரியையடைந்து தொண்டு செய்து வரலானார். அவ்வாறு அவ்வந்தணர் செய்து வரும் திருப்பணியின் சிறப்பானது உலகமெங்கும் பரவியபொழுது சிவ தத்துவத்தையிகழ்ந்து சிவபக்தர்களை நிந்தித்துவரும் சில சைனர்கள் அவ்வந்தணரது கருத்தையறிந்து கொண்டு அவரை மாய்க்கக்கருதியவர்களாய்க் கொண்டு அவரைக் கபட

மார்கத்தினுல் இழுத்துக் கொண்டு புத்தபுரியையடைந் தார்கள்.

அச்சைனர்களால் அவ்வாறு புத்தபுரியை அடைந்த தீக்ஷிதர் நர்மதீரத்தில் நீராடி பரமேசுவரலிங்க பூஜையை நிறைவேற்றிய பிறகு அப்புத்தபுரியில் விளங்கும் அரசனது ஸபையையணுகினுர். அதற்கு முன்னமே அச் சைனப் பாவிகளின் வஞ்சனைச் சொற்களால் மன மாற்றமடைந்த அவ்வரசன் அவர்கள் கூறியவாறே ஒரு யந்திரத்தை நிலை நாட்டி அந்த யந்திரத்தின் நடுவில் ஒரு கூர்மையான கத்தியைத் தொங்கும்படி செய்து அதன் கீழ் வைத் திருக்கும் பலகையின் மீது நடந்து செல்லும் அத்தீக்ஷிதரை கத்தியினுல் மாய்ப்பதற்கு ஆயத்தம் செய்திருந்தார்கள். அத்தருணத்தில் அவ்விதவஞ்சனையையறியாத தீக்ஷிதர் அச் சைனர்களால் சூழப்பட்டவர்களாய் அச்சபையை அடைந்தார். அவருக்கு முறைப்படி பூஜை செய்து விட்டு பூபாலன் ஓ சிவபக்த தீக்ஷிதரே! நீர் இந்த யந்திரத்தின் கீழ் விளங்கும் பலகையின் மீது நடந்துசென்று அதற்கு அப்புறத்தில் விளங்கும் கடாஹத்தைப் பற்றுவீராகில் அதில் விளங்கும் செல்வம் முழுமையும் உமது பொருளே யாகும். நீர் அவ்வண்ணம் புகுந்தருணத்தில் உமது பிராணனுக்கு ஏதேனுமழிவு நேரிடினும் அதையும் நீர் தடுப்பீராகில் அத்தருணத்தில் அங்கு விளங்கும் செல் வத்தை காட்டிலும் பதின்மடங்கு அதிகதிரவியத்தை நான் அளிக்கவல்லேன் எனவும் நவின்ருன்.

இவ்விதமாய் அப்பூபாலனுரைத்ததைச் செவியினுல் பற்றிய தீக்ஷிதர் பரமேசனது பாதாரவிந்தங்களை மனதில் தியானம் செய்துகொண்டு அவ்வித யந்திரப்பலகையை யணுகையில் நேரிடும் எவ்வித துன்பங்களுக்கும் தியாகராஜனே உறுதுணையாவார் என்றுரைத்துக் கொண்டே புண்ணியபுர நாதனே! துன்பம் துடைக்கும் காவலனே! கைலாசபதியே என்றுரைத்துக்கொண்டே

அவ்வேதியர் அந்த யந்திரத்தின் அடியில் புகுந்தருணத்தில் அவரது வேண்டுகோளையும் அவரது பக்தியின் சிறப்பையும் பக்தரது மனத் தூய்மையையும் அறிந்துகொண்ட தியாகராஜன் அவர்மீது அந்த யந்திரசக்தி விழாமல் அவரைக்காத்துத் தனது பக்தியின் சிறப்பையும், பக்தரது மேன்மையையும் வெளியிடச்சங்கற்பம் செய்துகொண்டார். அதனால் அந்தச் சங்கரதீக்ஷிதர் யந்திரத்தினடியில் புகுகையில் அவர்மீது விழக்கூடிய அவ்வாளும் ஈசனருளால் தடைபெற்று நின்றது. அதனால் எவ்வித இடருமின்றி அவ்வாயிலில் நுழைந்து அச்செல்வக் கடாகத்தை யணுகி வலஞ்செய்து துதிசெய்து ஈசுவர தியானத்துடன் திரும்பிய அவ்வந்தணரைக் கண்ட அரசன் அவரது சிவபக்தியின் மேன்மையைக்கண்டு வியப்படைந்து அவரது பாதத்தில் பணிந்து அவர்மீது தான்செய்த வஞ்சனைக் குற்றத்தை மன்னித்துக் காத்தருளும்படி வேண்டி நின்று அளவற்ற செல்வத்தையும் அப்பந்தயச் செல்வத்துடனே அவருக்கு அளித்து அவருடன் திருவாரூரையடைந்து தியாகேசனைப் பணிந்து களிப்படைந்தான். அவ்வரசன் தனக்கு வஞ்சக மொழிகளைக்கூறிய அச்சைனர்களைத்தண்டித்து அதுமுதல் தன் தேசத்தில் யாவரும் சிவபக்தியுடன் விளங்குமாறு செய்து ஈசனருளைப் பெருக்கினன். அத்தீக்ஷிதரும் இடையூறின்றி ஈசனுக்குத் தொண்டு செய்து மேன்மை யுடன் விளங்கினர்.

## 359. தன்னை வேண்டும் தையலைக்கண்டு மகிழ்ந்த லீலை

முன்பு ஒருசமயத்தில் வேதபுரியில் ஹேமாங்கி என்னும் வைச்யமாது ஒருத்தி இருந்தாள். அவள் பாலப்பிராயம் முதல் எவ்வித காரியத்தைச்செய்ய முயலுந்தருணங்களி லும் சங்கரனே நமக்குத் துணை. பரமசிவஸ்வரூபியின் கருணை பாயுமாயின் நமக்கரிய பொருள் யாது? நான் ஈசனை வேண்டியே இக்காரியத்தை நிறைவேற்ற முயலு

கிறேன் என்று உரைத்துக்கொண்டே காரியங்களைச்செய்ய ஆரம்பிப்பாள். அவளது மெய்யன்பைக் கண்டுகளித்த சிவபிரானின் அருளினால் அவளது விருப்பங்களும் நிறைவேறி விளங்கலாயின. அதனால் பரமேசனிடத்தில் மேன்மேலும் அன்பு பாராட்டி வந்த அவ்வைச்ய மாது பார்வதி தேவியையும், பரமேசனையும், முருகக் கடவுளையும், கணபதி நாதனையும் நாள்தோறும் பணிந்தும் துதித்தும் வாழுநாளில் அம்மாதுவுக்குப் புத்திரனுதிக்கவேயில்லை. அதனால் அவளது கணவன் தனது தீவினையை யிகழ்ந்து காலம் கழித்துவரலானான்.

சிவபக்தி, பெரியோர் பக்தி, குருபக்தி கற்பு பற்பல நற்குணங்களுக்கு உறைவிடமாகிய ஹேமாங்கி யானவள் தனது கணவனது துக்கத்தை நீக்கக் கருதியவளாய் ஒரு நாள் அவனது அருகை யணுகிப் பணிந்து பலவாறு தைரியமொழிகளைக் கூறிப் பரமேச னருள் நம்மீது விழுமாயின் நமக்கு யாவும் கிடைக்குமே என்று ஆறுதல் செய்து புத்ரோத்பத்திக்காக ஈசனைத் துதித்து வருகையில் தியாகேசனருளால் அம்மாதுவுக்கு ஒரு குமாரி பிறந்தாள். அவ்வைச்ய குமாரியும் சிறப்புடன் வளர்ந்து வருகையில் அவளுக்கும் அளவற்ற பக்தியுண்டா யிற்று. தனது தாயும் தந்தையும் சிவபக்தியில் ஆழ்ந்திருப் பதுபோலவே அவ்வைச்யமாதுவும் பால்யம் முதல் ஈசுவர னிடத்திலேயே மனத்தைச் செலுத்தி வந்தாள். யௌவன வயதையடைந்து விளங்கும் அவ்வைச்ய மாதானவள் தனது தாயின் முகமாய் தியாகேசச் செல்வனது திவ்ய லீலைகளைக் கேட்டுப் பரமானந்தமடைந்து தனக்குக் கணவனும் தியாக ராஜனே ஆகவேண்டும். தனக்கு உறுதுணையும் தியாக ராஜனே; என்று இவ்வண்ணம் பரமேசனை வேண்டி வர லானாள். யௌவனவயதில் விளங்கும் அத்தையல் பூலோக மானிடர்களை யிகழ்ந்து விட்டுத் தான் பட்டு அணியும் தருணத்திலும் ஆபரணம் போட்டுக்கொள்ளும் சமயத்

திலும் தியாகராஜனே தனது உயிர்க்களைகணென்றும் தனது தியானப்பெருக்கில் தோன்றும் பொருளும் தியாக பதியே என்றும் முழுமனதினாலும் இடைவிடாது சிந்தித்து வரலானாள்.

இவ்விதமாய் அவ்வணங்கு எவ்வகையிலும் தன்னையே வேண்டியும், தன்னிடத்திலேயே மனத்தைச் செலுத்தியும், உலகப் பொருள் யாவையும் இகழ்ந்து விளங்குகையில் அவளிடத்தில் அன்புபூண்ட பரமேசன் ஒருநாள் அத்தையல் தனது ஸன்னிதானத்தில் பணிந்து நிற்கையில் ஆகாய வாணி மூலமாயுரைத்ததாவது எனது பாதகமலத்தில் ஒப்பற்ற பக்தி வைத்து விளங்கும் ஓ வைச்யமாதே! பல்வகையிலும் நீ என்னையே விரும்பி வருவதைக்கண்டு நான் மகிழ்வடைந்தேன். இக்கலியுகத்தில் உன்னைப்போல் மற்ற மாதர் யாவரும் என்னை விரும்பக்கூடாது. புருஷர்களும் மாதர்களும் எச்சாதியராயினும் இக்கலியுகத்தில் என்னிடத்தில் அசைவற்ற பக்திசெய்து வருவாராயின் அதுவே அவர்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் மேன்மையை விளைவிக்கும். யோகிகளாலும், மெய்யன்பர்களாலும், முனிவர்களாலும், தேவர்களாலும் தொழப்பெற்ற நான் திக்பாலர் ஸ்வரூபியாயும், திரிமூர்த்தி ஸ்வரூபியாயும், சகல தேவஸ்வரூபியாயும் சகல தர்ம ஸ்வரூபியாயும், சகல கர்ம ஸ்வரூபியாயும் விளங்கும் நான் எனது தொண்டர் யாவருக்கும் நன்மையை அளிக்கும் பொருட்டே இவ்வுலகில் விளங்குகிறேன். இலை, தழை, மலர் முதலியவைகளை அன்பார்ந்த மனத்துடன் எனக்கு அளித்துவரும் அன்பர்மீது நான் அளவற்ற கருணை வெள்ளத்தைப் பெருக்கி எனது சிறந்த செல்வத்தையும் அளிப்பேன். பாபிகளாயினும், கர்மப்பிரஷ்டராயினும், பாலராயினும், விருத்தராயினும், ரோகியாயினும் எனது பக்தியை யணியாகப் பெறுவாராயின் நான் அவர்களது இடரை நீக்கி ஆனந்த பதவியை அளிப்பேன். என்று இவ்வண்ணமாய்த் திருக்கோயிலின் முன்னிலையில் ஆகாயவாணியைக் கேட்ட அம்மாது

முதலிய தொண்டர் யாவரும் வியப்புடன் பரத்தவப் பொருளையறிந்துகொண்டு இவ்விஷயத்தைப் பூபாலனுக்கு அறிவித்தார்கள். பரமேசன் இடத்திலேயே மனத்தைச் செலுத்திய அவ்வைச்யமாதும் அதுமுதல் தனது தாய் தந்தை, சுற்றம், பசி, அணி, செல்வம் முதலிய உலகப்பற்றுகள் யாவையும் ஒழித்துவிட்டுத் தனது மனதை ஈசனிடத்திலேயே செலுத்தி அவ்வீசனருளால் சிலகாலம் பரமானந்தப் பதவியில் விளங்கினாள். ஆதலால் அதுமுதல் இக் கலியுகத்தில் அசரீரி மொழிபகன்றது போலவே எவ்வுயிர்களுக்கும் சிறப்பு விளைவிக்கவல்லது சிவபக்தியேயாகும்.

## 360. தேவாச்ரயத்தில் விளங்கிய லீலை.

## 361. உலகு காக்கும் முறையுரைத்த லீலை.

முன்பு ஒரு சமயத்தில் கலியின் கொடுமையுலாவும் தருணத்தில் வேதியர் முதலிய வர்ணத்தார் யாவரும் தமது வர்ணத்துக்குரிய கர்மங்களைக் கைநழுவவிடத் தொடங்குகையில் வேள்விப் பயனற்ற தேவர்கள் யாவரும் இந்திரனிடம் முறையிட்டார்கள். அதனால் தெய்வவுலகுக்குச் சிறப்பு விளைவிக்கக் கருதிய தேவராஜன் தியாகராஜ பரஞ்சுடரையே சரணம் புகவிருப்ப முடையவனாய்த் தேவர்களுடன் ஆதிபுரி என்னும், புண்யபுரி என்றும் புகழப்படுகின்ற திருவாரூர் நகரையடைந்து கற்பக விருக்ஷ மலர்களால் தியாகராஜனது பொற்கோயிலைப் பூஜித்துத் துதி செய்து மூவுலகுக்கும் நன்மையளிக்கக் கருதியவனாய் ஈசனது அருகில் வணங்கி நின்றான்.

அத்தருணத்தில் நாரதர், காச்யபர் வஸிஷ்டர் முதலான தேவரிஷிகளும், கணக்கற்ற வேதியர்களும், பூபாலர்களும் பரமேசனது பொற்கோயிலின் எதிரில் வந்து தோன்றினார்கள். அவ்விதமாயீசனது பொற்கோயிலின் எதிரில் கணக்கற்ற தொண்டர்கள் அஞ்சலிபுடத்துடன்

நிற்கையில் ஐராவதமென்னும் வாரணத்தின்மீது கங்கையின் தீர்த்தத்தைக் கொண்டுவந்த வாசவன் விசுவகர்மனை அன்புடனழைத்துத் தேவாச்ரயமென்னும் அபிஷேக மேடையையும் சிறப்புற்றதோரக்னி குண்டத்தையும் அவைகளின் எதிரில் ஓம் ஹ்ரீம் வம் என்னும் மந்திர ஸ்வரூபியாய்ப் பஞ்சாக்ஷர மாத்ருகா பீஜசக்தி நிறைந்த தோராஸனத்தையும் அமைக்கும்படி கட்டளையிட்டான். சங்கற்ப சக்தியினாலேயே சகல காரியங்களையும் நிறைவேற்றவல்ல விசுவகருமனும் அக்கணத்திலேயே அவ்வாறு தேவாசிரய மண்டப மேடையையும், மற்றுமுள்ள அக்னி குண்ட ஹோம மேடைகளையும் நிர்மாணித்து முடிப்பதற்கு முன்னமே திசைமுகனும் திருமாலும் தமது களத்தாருடனும் அங்குத் தோன்றினார்கள். அத்தகைய தருணத்தில் தேவர்களும், முனிவர்களும் மனிதரும், பதினான்கு புவனங்களிலுள்ளவர்களும் ஈசனருளைப் பெறவேண்டியவர்களாய் அங்குத் தோற்றுகையில் சகல தேவ தேவனென்றும், மகாதேவனென்றும் புகழப்படும் தியாகராஜன் சகல சக்திகளுடன் கூடியவராய்த் திருமால் திசைமுகன் வாசவன் முதலிய சகல வானோர்களையும், முனிவர்களையும் மனிதரையும் ரக்ஷிக்கக் கருதியவராய் விசுவகர்மாவினால் நிர்மாணிக்கப்பட்டு முச்சுடருடன் கூடிப் பரஞ்சோதித் தலம் போலும் கைலாய பதவி போலும் விளங்கும் அத்தேவாசிரிய மேடையின்மீது திடீரென்று தோன்றி விளங்கலானார்.

அதைக்கண்ட திருமால் முதலிய பக்தரனைவரும் பரமானந்தத்துடன் தியாகேசனைப் பணிந்து சிறந்த அபிஷேகத்தைச் செய்துவைக்க முயன்றார்கள். கங்கா ஜலத்தினால் வாசவன் பரமேசனுக்கு அபிஷேகம் செய்ய முயலுகையில் ரிஷிகணங்கள் வேதமோதுகையில் மகா விஷ்ணு முதலான தொண்டர்கள் அஞ்சலியுடன் துதி செய்து நிற்கையில், மந்திரகோஷம் ஆகாயத்தில் பரவுகையில் தேவர்கள் மலர்மாரிச் சொரிகையில், தேவமாதர்

நடனம் புரிகையில் கந்தருவர் கீதம் பாடுகையில் கமல நாயகி அம்மனுடன் தேவாசிரிய மண்டபத்தின் மேடையில் தோன்றிய முழு முதற்காரணமாகிய பரமேசன் வாசவன் செய்துவைத்த அபிஷேகத்தைப் பெற்றுக் கருணையைப் பெருக்கிச் சகல தொண்டர்களின் மனவிருப்பம் யாவும் நிறைவேறக்கடவதென்று அருள் புரிந்து கூறலானார்.

கேளீர் பக்தர்களே! ஒவ்வொரு கல்பங்களிலும் ஒவ்வொரு யுகங்களிலும் உலகத்தைக்காக்கும் பொருட்டுப் பல்லுருவாய்த் தோற்றிவரும் சகலதேவர்களும் பதினன்கு புவனங்களும் எனதருளினலேயே நிலைபெற்று விளங்கு கின்றன. யாகங்களின் ஸ்வரூபியாயும் சகல மந்திர ஸ்வரூபியாயும், சகல சக்தி ஸ்வரூபியாயும் விளங்கும் நான் பக்தர்களின் குற்றங்களை மன்னித்தும், அவர்களது துன் பத்தைத் துடைத்தும் அவர்களுக்கு நற்புத்தியளித்தும் நற்குருக்களை உதிர்கச் செய்தும் சிவபக்தியின் சிறப்பைப் புகட்டியும் உலகைக் காத்து வருகிறேன். வேதமோதும் வேதியர் குற்றஞ் செய்தபோதிலும், மற்ற வர்ணத்தோர் ஜாதித் தொழிலை மீறி குற்றம் செய்தபோதிலும், அன்னை சிசுவை அடிப்பதுபோல் நான் அவர்களுக்கு சிக்ஷைவிதித்து அவர்களின் மோஹபுத்தியை நல்வழியில் மாற்றி அவர்க ளுக்குச் சிறப்பளித்து வருகிறேன். ஸத்தியத்தை விட்டவர் களும், வேதத்தைப் பழித்தவர்களும், மோகத்தினல் பற்பல தீயசெயல்களைச் செய்தவர்களும் என்னிடத்தில் அசைவற்ற பக்தி செய்வார்களாகில் நான் அவர்களது பாபராசியைக் களைந்து நற்புத்தியை யளித்து எனது தொண்டர்களாக்கி என்னிடத்தில் நிலைபெறச் செய்து வருகிறேன். தாயையும் தந்தையையும், மாமனையும், குருவையும் மகரிஷிகளையும், தேவர்களையும், சிவபக்தர்களையும், என்னையும் மோஹத்தி னல் இகழ்ந்தவராயினும் அவர்கள் எனது லிங்கஸ்வ ரூபிக்கு க்ஷீராபிஷேகம் செய்து வைப்பரேல் நான் அவர் களது பாவங்களைத் தணியச் செய்து அவர்களுக்கு நன்மை

அளித்துவருகிறேன். பொய் உரைத்தவர்களும், அஞ் ஞானத்தினால் பற்பல தீய தொழில்களைச் செய்தவர்களும் சிறை தினத்தில் எனது தர்சனத்தைப் பெறுவாரேல் நான் அவர்களுக்கு நற்பதவி யளித்துவருகிறேன். எனது பக்தியை யணியாமலும் முக்குணமாயைத் தணிக்காமலும் கலியின் கொடுமையைத் தழுவியும் மூடர்களாயுமிருப் பவர்கள் யாரேனும் எனது சிவலிங்க ஸ்வரூபத்தைத் தர்சித்தும், கமலாலயம் முதலிய புண்ணிய தீர்த்தங்களில் நீராடியும் எனது திருமேனிக்குப் பணிவிடை செய்வாரேல் நான் அவர்களுக்கும் நற்பதவி யளித்துவருகிறேன். பிராம் மணர்கள் தமது சாதித் தொழிலை விடுவாரேனும், க்ஷத் திரியர் தமது நீதித் தொழிலை யழிப்பாரேனும், வைசியர் தமது சாதித்தொழிலை மீறி வஞ்சனை செய்வாரேனும், சூத்திரர் முதலிய பல்சாதியரும் பாவத்தொழிலைப் பூண் டாரேனும் எனது பாதத்தில் அசைவற்ற பக்தியைச் செய்வாராயின் அஃதே அவர்களது பாவங்களை விலக்கி இன்பமளிக்கும். நானே திரிமூர்த்தி ஸ்வரூபியாயும் நானே சகல தேவ ஸ்வரூபியாயும், நானே சகல மந்திர ஸ்வரூபி யாயும், நானே சகல யந்திர ஸ்வரூபியாயும், நானே பஞ்ச பூத ஸ்வரூபியாயும் நானே புண்ய ஸ்வரூபியாயும், நானே தர்ம ஸ்வரூபியாயும், நானே பஞ்சாக்ஷரமாயும், நானே பஞ்சாக்ஷரப் பொருளாயும், நானே வேதாந்தமாயும், நானே வேதாந்தப்பொருளாயும், நானே தர்மமாயும், நானே பொருளாயும், நானே இன்பமாயும், நானே பற்பலப் பொருளாயும் இவ்வுலகங்கள் யாவையும் கவர்ந்துகொண்டு விளங்குகிறேன். அவரவர் புண்ணியபாப காரியங்களுக்குத் தக்கவாறு நானே நற்பயனளிக்க வல்லவனாயினும் எனது பாதத்தில் பக்தியைச் செலுத்தியவருக்கு நான் இன்பமாய் விளங்குவேன். எனது மெய்யன்பர் எவ்வித இடர் நேரினும் எனது கட்டளையைத் தாண்டிச் செல்லார். அவர்களே எனக்கு மெய்த்தோழர். நான் கைலாஸத்தில் இருந்த போதிலும், இத்தேவ வேதியிலிருந்தபோதிலும் இத்

தேவாசிரிய மேடையில் விளங்கியபோதிலும், மெய்யன்பர் மனச் சுடராய்த் தோற்றியபோதிலும் எக்கருமங்களுக்கும் நானே நற்சாக்ஷியாயிருக்கிறேன். நானே எவ்வுயிர்க்கும் நற்தெய்வமாய் நின்று விளங்குகிறேன். நானே சிற்றம்பலத்திலும், வட வனத்திலும், வில்வ வனத்திலும் மற்றுமுள்ள புண்ணிய வனங்களிலும் மணிச்சுடராய் விளங்குகிறேன் என்னும் இவ்வித தத்துவத்தையும் நானே தொண்டர்களுக்கு அளித்து வருகிறேன். இத்தகைய தத்துவ ஞானச்சிறப்பினால் எனது பக்தர் யாவரும் எக்காலத்திலும் பாவமில்லாமல் விளங்குவார்கள். அவர்களே எனது மெய்ப் பதவியைககாண வல்லவர் என்றிவ்விதமாய்த் தியாக புரந்தரன் கூறிய மொழிகளைக் கேட்டு பரமானந்த பக்தர் யாவரும் பணிந்து தொழுதேத்திப் போற்றித்தமது மனோரதம் நிறைவேறப் பெற்றார்கள்,

இவ்வண்ணமாய் ஸ்ரீ தியாகப்பரம் பொருளுக்கு வாசவன், திருமால், திசைமுகன் முதலானோர் அபிஷேகச் சிறப்பை நடத்திவைத்து ஈசன் விடையளிக்கத்தம் திடமடைந்து உலகைக் காக்கும் தொழிலிலமர்ந்து விளங்கினார்கள். அதுமுதல் சகல தொண்டர்களும் கலியின் பயமின்றி ஈசன் அருள் பெற்று மேன்மையுடன் விளங்கலாயினர் என்று ஸூதர் நைமிசவனவாசிகளுக்குச் சொல்லி முடித்தார்.

### 362. வேதியருக்கருள் செய்த லீலை.

திருவாரூர் நகரில் சிவபாதசூடி என்னும் அந்தணோத்தமர் ஒருவர் சிறந்த சிவபக்தியணிந்தவராய்ச் சாது ஜனங்களுக்கு முதல்வராய், சாந்திகுணம், ஸத்தியம், தயை முதலான நற்குணங்களுக்கு இருப்பிடமாய் விளங்கி வருகையில் அவ்வேதியர் ஒரு நாள் கமலாலயமென்னும் புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்த பிறகு விபூதி

ருத்திராக்ஷமணி மாலைகளையணிந்தவராய்க் குருவின் பாத மலரையும் தக்ஷிணாமூர்த்தியின் பாத மலரையும் மனதில் தியானித்துக்கொண்டு ஜபாசனத்தில் அமர்ந்து சப்த நாடிகளின் வேகங்களையும் ஓரிடத்தில் அடக்கிப் பிராண தாரணை செய்து மூல நாடியின் வழியாய்ப் பரமானந்தச் சுடரின் தோற்றத்தைத் தனது மனக்கமல கோசத்தில் மலர்ந்து விளங்கக்கண்டு களிப்படைந்திருக்கையில் சகல வேத கருமங்களையும் சற்குணங்களையும் ஸர்வ சக்தியையும் அழிக்கவல்லவனாகிய கலிபுருஷன் அவரது ஞானக் கண்களின் வழியில் புலப்படலானான்.

பரமாகாசமென்னும் நடு நாடியுடன் பற்றுதலை யடைந்து விளங்கும் ஞானக் கண்களின் வழியாய் அவ்வந்தணோத்தமர் கசனைத் தரிசித்தபிறகு அக்கலிபுருஷன் அவ்வண்ணம் தனக்கு எதிரில் தோற்றுவதைக் கண்டு மனம் வாடியவராய் முறைப்படி ஜப முறையை முடித்துத் தியாகேசனைப் பணிந்து எழுந்து வலஞ்செய்த பிறகு அவரது பொற்கோயிலின் முன்னிலையில், அஞ்சலிபுடத்துடன் நின்று வேண்டலானார். “வேதத்தின் சுடரே! பரமானந்த ஸ்வரூபியே! நானின்று மூல நாடியின் வழியாய் உமது திரு வடிவத்தைக் கண்டுகளித்த பிறகு கொடியவனாகிய கலிபுருஷன் உருவம் எனது கண்களில் புலப்படலாயிற்று. அப்பொழுது அவனது ஸ்வரூபத்தைக் கண்டவுடனே என் மனம் பதறுதலையடைந்தது. அப் புருஷனிடத்தில் தோற்றும் சிற்சில லக்ஷணங்கள் வேதியர் களின் கருமங்களையழிக்க வல்லனவென்றும், அஸத்தியம், அஞ்ஞானம், வஞ்சனை, பாபபுத்தி முதலிய துற்குணங்களை ஸகல ஜனங்களுக்கும் சீக்கிரமாய் அளிக்கவல்லன என்றும் எனக்குத் தோன்றியபடியால் உமது பாத மலரில் பக்தி வைத்த தொண்டர்களிடத்தில் அக்கலிபுருஷனுடைய நோக்கம் படியாவண்ணம் அருள்புரிவீரென்று நான் உமது பாதமலரில் அஞ்சலி செய்கிறேன். பரம சிவஸ்வரூபியே!

ஸர்வசக்தி ஸ்வரூபியே! கலியின் கொடுமை உமது பக்தர் மீது படியாவண்ணம் காப்பாற்றுவதற்கு உமது கருணையை யொழித்து நாங்கள் யாரைச் சரணம் அடைவோம்? பக்தரின் துன்பங்களையழிக்க தீக்ஷைபெற்று விளங்கும் தியாகேச! உமது பாத மலரில் பக்தியும், வேதியர்களின் நற்காரியங்களும், ஸத்தியமும், நற்காரியங்களில் விருப்பமும், காமம் கோபம் முதலிய துர்க்குணங்களின் அடக்கமும் நாடோறும் வளர்ந்தோங்குமாறு அருள்புரிவீர் என்று இவ்வண்ணம் ஈசனைத்துதி செய்யலானார்.

சுத்தமனதுடன் அவ்வந்தணோத்தமர் இவ்வாறு ஈசனுக்கெதிரில் துதிசெய்து நிற்கையில் கருணைக்கடலாகிய தியாகராஜன் ஓர் ஆகாயவாணியை ஏவி அவ்வந்தணர் மீது அருள் செய்துரைத்தார். கேளீர் எனது பக்தரே! நீர் லோகோபகாரத்தில் ஆழ்ந்தவராய் இவ்வாறு கலியின் கொடுமையை நீக்கும் வண்ணம் எனது ஸன்னிதானத்தில் விரும்பியவாறே நடக்கக்கடவதென்று நான் சங்கற்பம் செய்தேன். இனி வேதியர் மீதும் மற்றுமுள்ள தொண்டர்களின் மீதும் கலியின் கொடுமை படியாவண்ணம் அருள் சுரந்தேன். இனி இவ்வுலகில் நாளடைவில் பற்பல மோஹங்களினால் மதிகுறைந்து பாபராசிகள் வளருமேயாகிலும் அவ்வித ஜனங்கள் யாவரும் எனது பாதத்தில் மெய்யன்பு காட்டுவாராகில் நான் அவர்களின் துன்பத்தை யழித்து நன்மையைப் புகட்டுவேன். மற்ற யுகங்களில் சிறந்த பக்தியுடன் வெகுகாலம் செய்த தவத்தைக் காட்டிலும் யோகத்தைக் காட்டிலும் ஜபங்களைக் காட்டிலும் கலியுகத்திலுள்ள ஜனங்கள் ஒப்பற்ற பக்தியுடன் எனது முன்னிலையில் பணிவரேனும், எனது தொண்டில் ஆழ்வரேனும் எனது நாமங்களைக் கீர்த்தனை செய்வரேனும் நான் அவர்களுக்கு வானோர் வாழ்வையும் எனது கைவல்யத்தையும் அன்புடன் அளிப்பேன். என்னிடத்திலும், எனது தொண்டரிடத்திலும் பக்தி

செய்யும் மனிதர்களே எனது கருணைக்கு முதல் பாத்திரமாகி விளங்குவார்களென்று ஈசனுரைத்ததைச் செவிபற்றிய சிவரூடி முதலிய தொண்டர் யாவரும் பரமானந்தமடைந்து ஈசனைத் துதித்து இக்கலியுகத்தில் ஆன்மாவுக்கு உய்யும் வகையறிந்து களிப்பெய்தினர். அதுமுதல் பரமேசனுரைத்த மொழிகளையே தத்வோபதேசமாகப் பற்றிய தேசத்தார் யாவரும் துன்பமின்றித் தியாகராஜபக்தியினுல் இன்பமெய்தி வாழ்ந்தார்கள்.



## 363. திருவிழாவுகந்த லீலை.

தியாகராஜன் சகலபக்தர்களையும் காக்கும்பொருட்டுத் திருவாரூரில் பொற்கோயில் கொண்டு விளங்குகையில் சாதுர்வர்ணத்தோர்களும் அவ்வீசனது ஸன்னிதானத்தை யணுகிப்பணிந்து சிற்சில ஸமயங்களில் சிறந்த திருவிழாக்களைக்காண்பித்து அவ்வித தொண்டினுல் ஈசனது மனதைக் குளிரச்செய்து தமதுமிது பரமேசனது கருணை வெள்ளத்தைப் பெருக்கி வாழ்ந்துவரும் நாளில் ஒருநாள் பக்தகோடிகள் பணிந்து நிற்கையில் ஈசன் திவ்ய வாக்கினுல் மொழியலானர்.

சூரியன் மீனராசியில் விளங்கும்பொழுது தியாகேசனுக்குத் திருக்கொடியேற்றத் திருவிழாவைச் சிறப்புடன் வையகத்தில் செய்திடுவோர் பூமிப்பிரதக்ஷிண பலத்தையும் ஈசனருளையும் அடைந்து கைவல்யத்தில் விளங்குவார்கள். சூரியன் மேஷ ராசியில் விளங்கும்பொழுது பௌர்ணமி திதியில் தியாகராஜனுக்குச் சந்திரிகை விழாவைக் காண்பிப்போர்கள் பரமானந்தமடைந்து வாழ்வார்கள். சூரியன் இடப ராசியில் விளங்கும்பொழுது புண்ணியபுரி நாதனுக்கு வஸந்தத் திருவிழாவை நடத்திவைப்பவர்கள் கங்காஸ்நான பலனையும், கன்னிகாதான பலனையும் அடைவார்கள். ஜேஷ்ட மாஸத்தில் ஈசனுக்கு அபிஷேகம்

செய்வாரேல் அவர்கள் லிங்க பிரதிஷ்ட பயனையடைவார் கள். உமையின் உற்பத்தி தினத்தில் ஈசனுக்கும் உலகாம் பாளுக்கும் ஊஞ்சல் திருவிழாவை நடத்திவைப்பவரை வானோர் தொழுவார்கள். நாகபஞ்சமி தினத்தில் தியாகேசனுக்கு அபிஷேகம் செய்துவைப்பவர் மன்னர் பதவியில் விளங்கி மேன்மையடைவார்கள். வரலக்ஷ்மி விரததினத்தில் அம்பாளுக்குத் திருவிழா நடத்தித் தரிசனம் செய்வோர் வானோரினும் சிறப்பெய்துவார்கள். சிங்க ராசியில் சூரியன் நுழைந்திருக்கையில் ஆகம முறைப்படி தியாகராஜனது ஸன்னிதானத்தில் வேதபடனம், மந்திர படனம், ஹோம யாகம் செய்துவைப்பரேல் அதனால் ஈசன் மனக்களிப்படைந்து வர்ஷாகாலச் செல்வமாகிய மேகங்களை ஏவி உலகைச் செழிக்கச் செய்து நன்மை புரிவார். மஹா வியதீபாதம், ப்ரதோஷம், திருவாதிரை முதலிய பற்பல ஸமயங்களில் தியாகராஜனுக்குத் திவ்யாபிஷேகம், நறுமலர் மாலையளித்தல், தீபாராதனை காண்பித்தல், நைவேத்தியம் தர்சித்தல் முதலான ஆகமவிதிகளை நடத்திவைப்போர்கள் ஈசனருளால் நற்கீர்த்தியுடனும் நற்செல்வத்துடனும் மகிழ்ந்துவாழ்வார்கள். பரமேசமூர்த்திக்கு அன்னபிஷேகத் திருவிழாவைக் காண்பிப்போர் கைவல்யபதத்தில் விளங்கு வார்கள். மகரபுஷ்ய பௌர்ணமியில் தியாகேசனுக்கு விசேஷ பூஜை செய்யும் பக்தர் யாவரும் கைலையில் நிலை பெற்று வாழ்வார்கள். சைவாகம முறைப்படி தீக்ஷையை யடைந்த வேதியர் யாவரும் பரமேசனது அபிஷேகத்துக்குத் தீர்த்த கலசம் வகிப்பரேல் அவர்களே மறுஜன்மத்தில் வானோர்களாக விளங்குவார்கள். பரமேசனது திருவிழாச் சிறப்புக்காகப் பொருள்தேடியவரும், பொருள் ஈன்றவரும் மற்றும் பலவாறு தொண்டு பூண்டவரும் பரமேசனருள் பெற்றுத் திவ்ய பதவியையடைவார்கள். தியாகேசனது திருவிழாக் கோலத்தைக் கண்ணாரக்கண்டு துதிசெய்து வணங்கும் தொண்டர்களுக்கு எவ்வித பாவங்களும் நீங்கி நற்சிறப்புண்டாகும்”.

என்று இவ்விதமாய் ஈசனது ஸன்னிதானத்திலிருந்து வெளிக்கிளம்பி வந்த திவ்ய வாக்கியத்தை அன்புடன் செவியினால் பற்றிய தொண்டர் யாவரும் மேன்மேலும் ஈசனது பாதமலரை வணங்கி மலர்களாலும் புனலாலும் பூசித்து வேதியர் முதலிய நான்கு வர்ணத்தோரும் அது முதல் அவ்வண்ணமே மேஷாதி மாஸ முறைப்படி தியாக ராஜ மணிக்குத் திருவிழாக்களை நடத்திவைக்கத் தொடங்கினார்கள். தயாநிதியாகவும், உலகநாதனாகவும், ஸர்வ தேவஸ்வரூபியாயுமுள்ள புண்ணியபுரநாதன் அவ்வாறு பூபாலன் முதலிய தொண்டர்கள் பக்தியுடன் செய்து வைக்கும் காலத்திருவிழாக்களையுகந்து தேவவேதிகையின் மீது நிலைபெற்று விளங்கினார். அவ்விதமாய்ப் பரமேசனது திருவபிஷேகச் சிறப்பினாலும், திருவிழாச் சிறப்பினாலும் மூவுலகும் மெய்ஞானியர் மனமும் பரமானந்தமடைந்தன. அவ்வாறு வருடந்தோறும் பரமேசனுக்குத் திருவிழாக்கள் முறைப்படி நடைபெறும் உலகிலுள்ள சகல ஜீவராசிகளும் ஈசனருள்பெற்று எவ்வித துன்பமுமின்றி நன்மையுடன் விளங்கலாயின. தியாகேசனுடைய திருவருளைப்பெறுவதற்காகவே எண்திசைகளிலிருந்தும் கணக்கற்ற தொண்டர்கள் காலந்தோறும் திருவாரூர்த் திருப்பதியையடைந்து கமலாலயத்தில் ஸ்நானம் செய்து தியாகராஜ மூர்த்தியைத் தர்சித்துப் பரமானந்தமடைந்து வாழ்ந்தார்கள். இவ்வாறு தியாகேசன் தொண்டர்களிடமிருந்து திருவிழாவுகந்த லீலையையும் மூர்த்தியின் மேன்மையையும் ஈசனுக்குத் தொண்டு செய்வதினாலுண்டாகக்கூடிய நற்பயனையும் கூறினார் ஸூதர்.

## 364. பலசுருதி யுரைத்த லீலை.

*விண்ணுளார் தெய்வம் தியாகேசன்*
*மண்ணுளார் பாக்கியமாகி நின்றான்*
*எண்ணற் கரியான் நற்புகழை*
*பண்ணில் பாடி மகிழ்வோமே.*

பரிசுத்தமனமுடையவர்களாயும், தேசாடனம் செய்து ஈசுவர மூர்த்திகளைத் தர்சித்துக் களங்கமற்றவர்களாயும் ஸூதமுனிவரிடமிருந்து தியாகராஜ லீலைகளின் ரஸங்களை வெகு நாளாய்ப் பானம் செய்து பரமானந்தமடைந்தவர்களாயுமிருக்கும் நைமிசாரண்ய முனிவர்கள் யாவரும் ஒரு நாள் பெருங் கூட்டமாய்ச் சென்று ஸூதரது அருகில் பணிந்து அஞ்சலியுடன் வணங்கி அவரது முகாரவிந்தத்திலிருந்து வெளிவரும் பொருளைக் கேட்க விருப்பங்கொண்டவர்களாய் நின்றார்கள். விபூதி ருத்திராக்ஷ மணிமாலைகளை அணிந்தவர்களாயும், சிவசங்கரநாம ஸங்கீர்த்தனையினால் பரிசுத்தமுகமுடையவர்களாயும் கைலாஸபதியின் திவ்ய க்ஷேத்திரங்களின் சிறப்பைக் கேட்க விருப்பங்கொண்டவர்களாயும் விளங்கும் முனிவர்களைக்கண்ட ஸூதர் மிகவும் சந்தோஷத்தையடைந்து அவர்களுக்கு ஆசிகூறிய பிறகு அவர்களை அருகில் வீற்றிருக்கச் செய்து மீண்டும் உரைக்கலானார்.

கேளீர் சௌநகர் முதலிய முனிவர்களே! யோக தாரணையினாலும் தவச்சிறப்பினாலும், புண்ணிய க்ஷேத்திர ஸஞ்சாரத்தினாலும் மேன்மைபெற்று விளங்கும் மகரிஷிகளே! பரமேசனுடைய திவ்ய சரித்திரங்களை வெகு நாளாய்க் கேட்டுக் களிப்படைந்து பக்தியினால் உளமுருகிய நீங்களே இவ்வுலகில் சிறந்தவர்கள். இவ்வாறு உங்களுக்கு பரமேசனது லீலையைச் சொன்ன நானும் இவ்வுலகில் சிறந்தவனே. நாம் செய்த புண்ணியத்திரளால் இவ்வாறு நமக்கு ஈசுவர கதாச்ரவணமும் நேரிடலாயிற்று. உங்களது வேண்டுகோள்போலவே நான் நெடுநாளாய் உங்களுக்கு

உரைத்துவந்த தியாக லீலையின் சிறப்பை இன்று ஸாங்கமாய் உங்களுக்கு உரைக்கிறேன். இதுவும் ஒரு லீலை என்றே புகழ்வார்கள். இவ்வாறு நான் உங்களது விருப்பம் போலவே நெடுநாளாய் ஸாங்கமாயுரைத்த லீலைகளை உபாசிப்போர்களுக்கு உண்டாகக்கூடிய பலன்களை பரமேசனே முன்பு உரைத்திருக்கிறூர். பரமேசன் பல சுருதியுரைத்த லீலை என்னும் இந்த அத்தியாயத்தின் சிறப்பையும், ஈசனது திவ்ய கதையைக் கேட்பதினுல் உண்டாகக்கூடிய வைபவச்சிறப்பையும் பரமேசன் கூறிய வண்ணமே நானுரைக்கிறேன். அசைவற்ற மனதுடன் கேளீர் முனிவர்களே! முன்பு ஒரு ஸமயத்தில் ஒரு நாள் அழகிய மாலை நேரத்தில் தியாகபுரந்தரன் பிரதோஷ தீபாராதனபூசையைப்பெற்று விளங்குகையில் எதிரில் பணிந்து நின்ற தொண்டர் யாவரும் தியாகராஜ லீலையின் சிறப்பைப் புகழ்ந்துபாடுகையில் வேதியர் குழாம் வேதத்திஞல் துதிசெய்து நிற்கையில் அவர்களது பக்தியின் மேன்மையைக்கண்டு மனக்களிப்படைந்த தியாகேசன் தெய்வமொழியினுலுரைத்தார்.

தத்துவ ஞானத்தையடைவதில் ஆவல்கொண்ட தொண்டர்களே! கேளீர் நீங்கள் ஆதிகாலம்தொடங்கி எனது திவ்ய லீலைகளின் சிறப்பைப் பூர்வ ஞானமறிந்த பெரியோர்களிடமிருந்து கற்றுணரலானீர்கள். எனது திவ்ய லீலைகளை எல்லாம் உறைக்குமாறு நான் ஸூத முனிவருக்கு அருள் செய்தேன். எனது கருணையின் சிறப்பிஞல் எனது லீலைகளின் மர்மார்த்த ஸூக்ஷ்மார்த்த வைபவார்த்தங்களை நன்ருய்க் கற்றறிந்த ஸூதர் உங்களுக்கு மொழிவார். நைமிசாரணிய வாஸிமகரிஷிகளும், வானேர்களும் எனது திருவிளையாடல்களின் மகிமையைச் சூதரிடமிருந்து கேட்கப்போகிறுர்கள் என்று பரமேசன் மொழிந்தவாறே நீங்களும் இந்நாட்களில் என்னிடமிருந்து தியாகராஜ லீலையைக் கேட்டபடியால் ஈசனது அருள் பெருக்க

மானது நம்மிடத்தில் பாய்ந்து நம்மை பரிசுத்தர்களாக்கி ஈசனது பாதபக்தியையும் நமக்கு அளித்தது. ஆகையால் தியாகேசனது லீலைகளை அறிந்த நாமெல்லோரும் புனிதர்களானோம். உலகில் மிக்கசிறப்படைந்தோம் பரமானந்தத்தையுமடையப்பெற்றோம். தியாகேசனது அருள் வெள்ளம்போல் குளிர்ந்து விளங்கும் இந்த லீலைகளை அன்புடனும் பக்தியுடனும் கேட்பவர் யாவரும் பரமானந்தமடைந்து ஈசன் அருளால் வானோர் விரும்பும் பதவியையடைந்து விளங்குவார்கள். தியாகராஜன் முற்காலத்தில் கிருதயுகத்திலும், திரேதா யுகத்திலும் செய்ததாகிய தேவ லீலைகளின் சிறப்பையுணர்வோர் கங்காஸ்நான பலனையும் அச்வமேத யாகபலனையுமடைவார்கள். உத்தராயண லீலைகளின் சிறப்பையறிந்துகொள்ளும் பக்தர் யாவரும் தமது பாவங்களை நீக்கி நற்புண்ணியச் சிறப்புடன் ஈசனருள் பெற்று இம்மையிலும் மறுமையிலும் சிறப்புடன் வாழ்வார்கள். தக்ஷிணாயண லீலையின் சிறப்பைக்கேட்பவர் யாவரும் கைலாயத்தில் நற்சுகம் எய்துவார்கள். தியாகராஜ லீலையை அன்புடன் கற்றுணர்வோரனைவரும் சகல பாவங்களையும் நீக்கித்தர்ம பயனையும் தானபயனையும் பெற்றுக் கைவல்ய சுகத்தில் மன்னி வாழ்வார்கள். தியாகராஜனது திருவடியைத் தர்சிப்பவர் சுவர்க்கத்தில் வாழ்வார்கள். தியாகராஜன் திருமணம் நடத்திக்கொண்ட லீலையைக் கேட்பவர் யாவரும் இடரின்றி இல்லற சுகத்தில் நிலைபெற்று வாழ்வார்கள். ஆதிசோழனுக்கு அருள் செய்த லீலையைக் கற்றுணர்பவர் மன்னவர் பதவியையடைவார்கள். குபேரனுக்குச் செல்வமளித்த லீலையைக் கேட்டவர் யாவரும் இழந்த செல்வத்தை மீண்டும் பெற்றுச் சிறப்புடன் வாழ்வார்கள். சாமவேதத்தினல் நகருக்குச் சிறப்பளித்த லீலையைக் கற்கவல்லவர் நன்மனையில் அமர்ந்து வாழ்வார்கள். நாரதருக்கு நன்மையளித்த லீலையைக் கேட்டவர் யாவரும் ஈசனருளால் வருமிடரையும் நீக்கி மெய்ஞ்ஞானத்தையடைவார்கள். திருமாலுக்கருள் செய்த

லீலையைக் கேட்டவர்கள் பரசிவ தத்துவ ஞானத்தைப் பெற்று மகிழ்வார்கள். நவக்கிரகங்களுக்கு நிலையளித்த லீலையையறிவோர் கிரகங்களின் இடரின்றிப் பரமேசனருள் பெற்றுச் சுகமடைவார்கள். சனியின் கர்வத்தையழித்த லீலையைக் கேட்டவர் ஈசனருளால் சனியினிடரின்றி மன்னவர்பணிய வையகமாண்டு வானுலகையையும் அடைவார்கள். நாய்க்கு மேன்மையளித்த திருவிளையாடலைக் கற்பவர் நீசசன்மங்களை நீக்கி உயர்பதவியில் ஈசனருளால் மேன்மையுடன் வாழ்வார்கள். காமதேனுவின் சாபத்தை நீக்கிய லீலையைக் கற்பவர் சாபமின்றி மனோரதங்கள் நிறைவேறப்பெற்று இன்பம் எய்துவார்கள். தீயைப் பூவாக்கிய லீலையைக் கற்றுணர்வோர் பரமேசனது அற்புத சக்தியை முற்றிலும் அறிவார்கள். காற்றினால் மலையை ஓடச்செய்த லீலையையும், இரவைப்பகலாக்கிய லீலையையும் ராஜபத்தினிக்கு ஆடையளித்ததையும், தீயைத் தண்ணீராக்கியதையும், பெண்ணை ஆணாக்கிய லீலையையும், கற்றுணரவல்லோர் பரமேசனது திவ்யாற்புத குணங்களைப் பற்றி வியப்படைந்து தியாகராஜ பாதமலரில் அசைவற்ற பக்தியை வைத்து இன்பமெய்துவார்கள். தியாகராஜன் நரபலிவேதியனைக் காத்த லீலையையும், பஸ்மத்தையரசனுக்கிய லீலையையும், கலியைக்காய்ந்த லீலையையும், கற்றுணரவல்லவர் ஈசனருளால் இடரின்றி நற்பதவியில் வாழ்வார்கள். மற்றொரு சமயத்தில் தயாநிதியாகிய தியாகராஜன் வேதியனழைக்கச் சூதாடவந்த லீலையையும், மழையைத் தடுத்து யாகத்தைக்காத்த லீலையையும், நரிமுகத்தை மாற்றிய லீலையையும், ஸரஸ்வதியை ஏவிச் சிறப்பளித்த லீலையையும், கற்கவல்லவர் அஞ்ஞானத்தை அழித்துச் சிவதத்துவச் சிறப்பையறிவார்கள். கடலில் நடை கற்பித்த லீலையின் சிறப்பையும், தண்ணீரைத் தீபமாக்கிய லீலையின் சிறப்பையும், கடன்காரனைக்காத்த லீலையின் சிறப்பையும் உணர்வோரின் மனதில் சிவதத்துவ ஞானம் விளங்கும். பீஜமந்திரங்களின் சிறப்பை

உபதேசித்த லீலையையும், வேதியன் ச்ராத்தத்தையுண்ட லீலையையும், மலையைக் காண்பித்து மறைத்த லீலையையும், பௌத்தரின் கண்ணையழித்த லீலையையும், கொதிக்கும் லோஹத்தை வாய்மருத்த லீலையையும், கங்கையைக் காட்டிய லீலையையும், மண்சுமந்த லீலையையும், ஸாங்கமாய்க் கற்றவர்கள் பரமேசனது திவ்ய குணச்சிறப்பை அறியவல்லவர்களாய் மண்ணுலகில் வாழ்வு எய்துவார்கள். தேனைத் தண்ணீராக்கிய லீலையையும், கல்வாரணத்தை நடக்கச்செய்த லீலையையும், அறிந்தவர்கள் ஈசனருள் பெற்றுத் தர்ம பலனையறிந்தும் வையகமாண்டும் முக்தி அடைவார்கள். தங்கக்கிளிபெற்ற லீலையையும், தேனுவை ரக்ஷித்த லீலையையும், அறிந்தவர்கள் தானபலத்தை யடைந்து மேன்மையெய்துவார்கள். இரவில் பகலோனைக் காண்பித்த வியப்பையும், வடத்தைக் கல்லாக்கிய லீலையையும், ருத்திராக்ஷத்தை நிறைகட்டச் செய்த லீலையையும், கற்கவல்லவர் சிவசக்திஸ்வரூப ஞானத்தையறிந்து பரமேசனருள்பெற்றுக் குற்றமிலராய் வெண்குடைக்கீழ் வையகமாள்வர். மற்றொரு ஸமயத்தில் மண்ணைப் பொன்னாக்கிய லீலையையும், மந்திரியின் நேத்திரத்தை அழித்த லீலையையும், பந்துக்காகப் பலனளித்த லீலையையும் அறியவல்லார்கள். ஈசனது திவ்விய குணங்களையறிந்து கொண்டு பரமானந்தமடைவார்கள். மண் பிம்பத்தைப் பேசவைத்த லீலையையும், தேகபரிமளத்தை வெளியிட்ட லீலையையும், படியேறிய விளையாடலையும் தென்றிசைக் கழைத்த லீலையையும், புண்ணிய விமானத்தின் பெருமையை விளக்கியதையும் கற்றறிவார் ஈசனருள் பெற்று விளங்குவார்கள்.

இவ்விதமாய்த் தியாகராஜ லீலைகளின் விசேஷ பலச் சுருதியையன்புள்ள மனதுடன் கற்கவல்லார் யாவரும் இன்பமெய்துவார்கள். பிராமணர் முதலிய சதுர்வர்ணத் தோருக்கும், பூமிக்கும், பசுக்களுக்கும், பரமேசுவரபக்தர்

களுக்கும் மங்களமுண்டாகக்கடவதென்று பரமேசனருள் செய்தார். வேதம்வல்ல வேதியர்களும், நீதியில் நிலைபெற்ற மன்னவரும், மற்றுமுள்ள ஜாதியரும், சந்திரன், சூரியன், தாரகை இவையுள்ளவரையில் மங்களத்துடன் வாழக்கடவார்கள். சிவபக்தியும், சிவபக்தரும், சிவலிங்கமூர்த்திகளும், சிவஸ்வரூப விளக்கமும் குறைவின்றி மங்களத்துடன் வாழக்கடவதென்று பரமேசனருள் புரிந்தார். இந்தத் தியாகராஜலீலையையன்புடன் ஓதவல்லாருக்குத் தியாகேசன் அருளால் சுபமுண்டாகும் என்று ஸ்ரீ ஸூதர் நைமிசாரண்ய மஹாரிஷிகளுக்கு உபதேசம் செய்தார். மஹாரிஷிகளும் பரமானந்தமடைந்து தியாகராஜ பக்தர்களாய்த் திவ்ய க்ஷேத்திர ஸஞ்சாரம் செய்துகொண்டு பிராம்மணர் முதலிய வருணத்தார் யாவரும் அம்மஹாரிஷிகளின் முகத்திலிருந்துவந்த லீலையின் சிறப்பைப் பரமேசன் படிக்கக்கேட்டுப் பரமானந்தமடைந்து விளங்கினார்கள்.

தியாகராஜனே துணை.

தக்ஷிணாயன லீலை முற்றிற்று.

சுபம்.